உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

**திருஞானசம்பந்த சுவாமிகள்**

**அருளிச்செய்த**

**தேவாரத் திருப்பதிகங்கள்**

# இரண்டாம் திருமுறை

**(பண்முறை)**


*பதிப்பாசிரியர்*

**டாக்டர் இராச. வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



Enable | Enlighten | Enrich

KARPAGAM UNIVERSITY

(Under Section 3 of UGC Act 1956)

**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

## கற்பகம் பல்கலைக்கழகம்

**ஈச்சநாரி, கோவை-21.**

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய
தேவாரத் திருப்பதிகங்கள்

# இரண்டாம் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்




வாசநலம் செய்து இமையோர் நாள்தோறும் மலர் தூவ
ஈசன் எம்பெருமானனார் இனிதாக உறையுமிடம்
யோசனை போய்ப் பூக்கொணர்ந்து அங்கு ஒருநாளும் ஒழியாமே
பூசனை செய்துஇனிது இருந்தான் புள்ளிருக்கு வேளூரே.

திருஞானசம்பந்தர். (2-43.3)

## பதிப்புரை

திருஞானசம்பந்தருக்கும் நமக்கும் உள்ள வேறுபாடு என்ன? அவர் நம்மைவிட எவ்வளவு உயர்ந்தவர்? ஏன் உயர்ந்தவர்? இந்தக் கலியுகத்தில் நம்மில் ஒருவரேனும் அவர் நிலையை அடைய முடியுமா? "செயற்கரிய செய்வர் பெரியர்" என்ற திருவள்ளுவர் வாக்குக்கேற்ப அவர் நம்மால் செய்ய முடியாத பல அரிய செயல்களைச் செய்தார். அவை என்ன?

1. தந்தையார் வேள்வி செய்தற்குப் பொருள் வேண்ட, ஆவடுதுறை அரனை "இடரினும், தளரினும்" என்ற பதிகத்தால் போற்றிப் பாடிப் பொற்கிழி பெற்று வேள்வி செய்யுமாறு வேண்டிக் கொடுத்தார்.
2. திருவீழிமிழலையில் பஞ்சம் வந்தபோது "வாசி தீரவே காசு நல்குவீர்" பதிகம் பாடிப் பெருமானிடம் காசு பெற்று அடியார்களுக்குப் பறை சாற்றிச் சோறளித்தார்.
3. திருமறைக்காட்டில் நாவரசர் பாடித் திறந்த கதவை அடைப்பித்தார்.
4. திருமறைக்காட்டில் நாமெல்லாம் உய்திபெற "வேயுறு தோளி பங்கன்" பதிகம் அருளினார்.
5. மதுரையில் பாண்டியனின் வெப்பு நோயை அகற்றினார். அனல், புனல் வாதங்களால் அமணரை வென்றார். சைவத்தை நிலை நாட்டினார். "பையவே சென்று பாண்டியற்காகவே" என நெருப்பை ஏவி ஏவல் கொண்டார். பாண்டிய நாட்டில் சைவத்தைத் தழைக்கச் செய்தார்.
6. திருவோத்தூரில் ஆண் பனைகளைக் காய்க்கச் செய்தார்.
7. மயிலாப்பூரில் செட்டிப் பெண்ணை எலும்பிலிருந்து எழுந்தருளப் பண்ணினார்.
8. திருமருகலில் விடம் தீண்டி இறந்த வாலிபனை எழுப்பினார்.
9. நிறைவாக நல்லூர்ப் பெருமணத்தில் சோதியில் கலந்தார்.

மேற்கண்ட செயல்களை உற்று நோக்கும்போது, நம்மால் செய்ய முடியாத / கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத காரியங்களைச் சம்பந்தர் செய்தருளியுள்ளார். நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களை ஏவல் கொண்டார். மானுட யாக்கை மற்றும் இவ்வுலகில் உள்ள பொருட்களெல்லாம் பஞ்சபூதங்களின் சேர்க்கையே. எந்த விகிதாச்சாரத்தில் எதைச் சேர்க்க வேண்டுமென்பதுதான் திருஞானசம்பந்தர் போன்ற சாமுசித்தர்கள் அறிந்த இரகசியமாகும். சாதாரணமான சித்தர்கள் கூடுவிட்டுக் கூடு பாய்வது, சிறு தெய்வங்களை சிற்றேவல் கொண்டு சிற்சில காரியங்களைப் பொருள்பற்றி / புகழ்பற்றிச் செய்வது போன்றவற்றைச் செய்யலாம். ஆனால், திருஞானசம்பந்தர் சாமுசித்தர். சாமுசித்தர் என்பவர்கள் முற்பிறவிகளிலேயே சரியை, கிரியை, யோக, ஞான பதங்களையெல்லாம் கடந்து சாலோக, சாமீப பதவிகள் சார்ந்து, திருவருள் அனுமதியுடன் இறைவனாலேயே குறிப்பிட்ட காரணத்துக்காக இவ்வுலகத்திற்கு அனுப்பப்பட்டவர்கள். திருஞானசம்பந்தர் சைவ தாபனத்துக்காகவும், திருநீற்று மகிமையை நம் போன்றோருக்கு உணர்த்துவதற்காகவும் அனுப்பப்பட்டவர்.

1. இறந்தவர்களை எழுப்புவது.
2. தனது காலம் முடிந்தவுடன் பூமியில் உடலை விட்டுவிடாமல் பூத உடலுடன் சோதியில் கலப்பது.

இந்த இரண்டு செயல்களையும் எனது அறிவுக்கு எட்டிய அளவு இந்த 1400 ஆண்டுகளில் (நால்வருக்குப் பின்) நால்வரைத் தவிர எவரும் சாதித்ததாக வரலாறு இல்லை.

எனவேதான் திருஞானசம்பந்தர் உயர்ந்தவர். சமுதாய நலனுக்கும் தொண்டு செய்தவர். இயற்கை வளங்களைப் பாதுகாக்கத் தமது பாடல்களில் நீர்நிலைகள் – மூர்த்தி – தலம் – தீர்த்தம் – நந்தவனங்கள் இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்தவர் – தமிழைப்பற்றி வேறு எந்த ஆசிரியரும் சொல்லாத அளவு பறைசாற்றியவர் – செயற்கரிய செய்தவர்.

இப்படியொரு சாதனையாளராக அவர் விளங்கக் காரணமென்ன? அவர் செய்த பண்டைத் தவமே. பல்லூழிக்காலம் பயின்று அரனை அருச்சித்ததால் நல்லறிவு வாய்க்கப் பெற்றவர். அவர் அவதாரம் கன்மத்துக்கு ஈடாக வந்ததன்று. நாமும் இப்பிறவி முதலே, “இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்” என்று நினைத்து, சிவப்பணிகளிலேயே ஈடுபட்டு, நல்வினை, தீவினை இரண்டும் புரியாமல் பயணத்தைத் தொடர்ந்தால், என்றாவது ஒருநாள் (ஏதாவது ஒரு பிறவியில்) இந்நிலையை அடையலாம்.

ஒவ்வொரு யுகத்திலும் / பிறவியிலும் உயிர்கள் கடைத்தேறுவதற்கு ஒவ்வொரு உபாயத்தைப் பெருமான் காட்டியருளுகிறார். அவ்வழிகள் காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம் வேறுபடும். “மாற்றமாம் வையகத்தே” என்பது மாணிக்கவாசகரின் மணிவார்த்தை. சரியை, கிரியை, யோக நெறிகள் மாறலாம். ஆனால் ஞானம் மாறாது. தேவர்களும், அசுரர்களும் காடு, மலைகளில் ஒரு காலத்தில் கடுந்தவமிருந்து அருள்பெற முடிந்துள்ளது. மானுட யாக்கையுடன் நாயன்மார்கள் கொண்ட கொள்கையிலிருந்து சற்றும் வழுவாமல் சிவ வழிபாடு செய்து முத்தி அடைந்துள்ளார்கள். நமது பூவுலகம் சுனாமி எனப்படும் பல பெருவெள்ளங்களைப் பார்த்துள்ளது. ஆழிப் பேரலைகளுக்கு முதல், இடைச் சங்கங்கள் இரையானது நாமறிந்ததே.

கிரேக்கர்களுக்கு முன்பே நம்மவரில் அறுவை சிகிச்சை நிபுணர் இருந்தனர் என்று மும்பையில் 03.01.2015 அன்று கூடிய இந்திய விஞ்ஞான மகாசபைக் கூட்டத்தில் கட்டுரை வாசிக்கப்பட்டுள்ளது. “பாரதநாடு பழம்பெரும்நாடு; நீரதன் புதல்வர்; இந்நினைவு அகற்றாதீர்” என்ற பாரதியாரின் வாக்கை மனதில்கொண்டு, சிந்துசமவெளி உட்பட, பல தொன்மையான நாகரிகங்களுக்கெல்லாம் தொன்மையானது நமது சிவ

வழிபாடு. "திசையெட்டும் தோன்றுவதற்கு முன்னோ, பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளோ" என்ற திருநாவுக்கரசரின் வாக்கையும் மனதில் வாங்கிக்கொண்டு, நமக்கு இந்தத் தனு, கரண, புவன போகங்களை அளித்து, வாழ்வாங்கு வாழ வைத்துக்கொண்டிருக்கும் சிவ பரம்பொருளுக்கு நன்றி சொல்லும் விதமாக சிவப்பணிகள் செய்து அவன் அருளைப் பெறவேண்டும்.

நாம் இந்த இம்மை, மறுமை இன்னல்களிலிருந்து விடுபட சிவ பரம்பொருளைப் பற்றவேண்டும். "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்றபடி அவரைப் பற்ற நாம் என்ன செய்யவேண்டும்? எப்படி செய்ய வேண்டும்? அவருக்கு என்ன பிடிக்கும்? என்ற கேள்விகளுக்கு அம்மையார் விடையளிக்கிறார் என்பதாகத் தெய்வச் சேக்கிழார் பெரியபுராணத்தில் திருக்குறிப்புத் தொண்டர் சரிதத்தில் பதிவு செய்கிறார்.

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை என்று உரைத்தருள
அண்ணலார்தமை அருச்சனை புரிய ஆரம்பித்தார்
பெண்ணில் நல்லவளாகிய பெருந்தவக் கொழுந்து"

எவ்வளவோ ஆகமங்களில், எவ்வளவு கருத்துக்கள் சொல்லியிருந்தாலும், தாம் விரும்பும் உண்மை பூசனை என்று சிவ பரம்பொருளே சொன்னபின் நமக்கு எதற்கு வேறு சந்தேகங்கள்? அடுத்தபடி "இப்பூசனையைச் சிறப்போடு செய்வது எப்படி?" என்ற வினா எழுகிறது. பூக்கொண்டு செய்யப்படுவது பூசை. "புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" – திருமந்திரம். அருச்சனை பாட்டேயாகும். எங்கு பூசை செய்வது? எப்படிச் செய்வது? எது பாட்டு? எப்படிப் பாடுவது? இந்த வினாக்களுக்கு விடையளிப்பவைதாம் நமது தோத்திரங்களும், சாத்திரங்களும்.

பூசை அகப்பூசை, புறப்பூசை என்று பிரதானமாக இரண்டு வகைப்படும். மனதளவில் இருக்குமிடத்திலேயே மானசீகமாகவும் அகப்பூசை செய்யலாம். தகுதியான குருவிடம் தீக்கை (ஓட்டுநர்கள் வாகனம் ஓட்ட உரிமை பெறுவதுபோல) பெற்றுத் தினமும் சந்திப்பொழுதுகளில் அனுட்டானம் மேற்கொண்டு சமயதீக்கையில் அனுபவம் பெற்று, திருநீறு, திருஉருத்திராக்கம் அணிந்து, ஐந்தெழுத்தோதி பல ஆண்டுகள் சிவானுபவத்தில் தோய்ந்த பின்பு, சிவலிங்கப்படிவம் வைத்துப் பூசை செய்வதற்குக் குருவிடம் விசேட தீக்கை பெற்று, சிவலிங்க ஆன்மார்த்த மூர்த்திக்கு அபிடேக அர்ச்சனை, பூசனைகளை நிறைவு செய்து பக்குவம் அடைதலும் அகப்பூசை முறையாகும். தாம் ஞானாசிரியனைக் கண்டடையும் வரை இப்பூசனைகளில் தொடர்ந்து திளைத்திருத்தல் வேண்டும்.

புறப்பூசை என்பது சிவாலயங்களுக்குச் சென்று சிவ வழிபாடு செய்வது – திருத்தொண்டு செய்வது. எவ்வளவுதான் அகப்பூசை செய்தாலும், முத்தியே அடையும் பக்குவம் இருந்தாலும் சிவாலய வழிபாடு சிவனடியாருக்குத் தேவை. முத்தியிலும் மலவாசனை வரும். அது என்றுமே காயாத பெருங்காயம். மலவாசனையிலிருந்து தப்ப உதவுவன திருவைந்தெழுத்தும், ஆலய வழிபாடுமே என்பதில் ஐயமே இல்லை. அந்தச் சிவாலய வழிபாட்டைச் சிக்கெனப் பிடித்துக்கொள்ள வேண்டும். பாடல் பெற்றவை, பெறாதவை என்று சுவாமி நமக்காக எண்ணற்ற சிவாலயங்களைப் படைத்துள்ளார்.

"யாரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறிவார் இந்த நீளமும் அகலமும்
பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றின்
வேரறியாமை விளம்புகின்றேனே" – திருமூலர் திருமந்திரம்

புறப்பூசைக்காக சிவாலயங்களுக்குச் செல்பவர்கள் பூவும், புனலும் கொண்டு சேர்ப்பது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் சொல்மாலைகளால் இறைவனை அருச்சிப்பது. நமது திருமுறைகளை வாய் திறந்து ஆனந்தமாகப் பாட வேண்டும். ஆடவேண்டும். முடிந்த அளவு இசையோடு பாடலாம். இல்லாவிடினும் இறைவர் அந்தப் பாடல்களை ஏற்றுக் கொள்வார் என்பதைத் திருவைகாவூர் தேவாரப் பதிகத்தில் சாதாரிப் பண்ணில் திருஞானசம்பந்தர் எடுத்தியம்பியுள்ளார்.

> "கோழை மிடறாகக் கவி கோளுமிலவாக இசைகூடும் வகையில்
> ஏழை யடியாரவர்கள் யாவை சொன சொல் மகிழும் ஈசனிடமாம்"

எனவே வாயாரப் பாடவேண்டும். அடுத்தவர்களையும் பாட வைக்கவேண்டும். அவரவர் வசதிக்கேற்ப ரூ.1, ரூ.2 விலை மதிப்புள்ள சிவபுராணம், பஞ்சபுராணம் போன்ற சிறு நூல்களைப் பிரசுரித்து அவரவர் இல்லத் திருமண விழா, நாள் மங்கல விழா போன்ற நிகழ்வுகளில் வருவோர், போவோருக்குக் கொடுக்க வேண்டும். கோயில்களிலே எவ்வளவு முடியுமோ அவ்வளவு திருமுறைக் கல்வெட்டுக்களைப் பதிக்க வேண்டும்.

## தமிழகச் சிவாலயங்களின் இன்றைய நிலைமை

தமிழகத்தில் எப்படிப்பட்ட சிவாலயங்கள் உள்ளன?

1. பஞ்சபூதத் தலங்களாகிய திருவாரூர், காஞ்சி, திருச்சி, திருவண்ணாமலை, சிதம்பரம் போன்று பெரிய நகரங்களில் எல்லாப் பூசைகளுடன் சிறப்பாக விளங்குவன.
2. நான்கு வாயில்களிலும் நான்கு இராஜ கோபுரங்களைக் கொண்ட சுமார் 12 கோயில்கள் உள்ளன. திருவிடைமருதூர், மதுரை, திருக்கழுக்குன்றம், விருத்தாச்சலம் போன்ற பகுதிகளிலுள்ள கோவில்களும் சிறப்புப் பூசைகளோடு விளங்குகின்றன.
3. நகரங்கள் மற்றும் பெருநகரங்களில் பாடல் பெற்றும் பெறாமலும் சிறப்புப் பூசனையோடு விளங்குவன.
4. கிராமங்கள், குக்கிராமங்களில் பாடல்பெற்றும், பெறாதனவுமான, ஆனால் ஓரிரு கால பூசைகள் மட்டும் சிறப்பாக நடைபெறுவன.
5. கிராமங்கள், குக்கிராமங்களில் பாடல்பெற்றும், பெறாதனவுமாக அமைந்து, தினமும் கால பூசைகளே நடைபெறாத கோயில்கள். இவைகளில் நான்கு வகை உண்டு.
   - அ) கோவில் கட்டுமானமாக இருக்கும். சிவராத்திரி போன்ற விசேட தினத்தன்று மட்டும் குருக்களும் மக்களும் வருவார்கள்.
   - ஆ) கோவில் கட்டுமானமாக இருக்கும். யாரும் எப்போதும் வருவதில்லை.
   - இ) கோவில் சிதிலமடைந்த நிலையில் இருக்கும். விசேட நாட்களுக்கு மட்டும் குருக்களும், மக்களும் வருவார்கள்.
   - ஈ) கோவில் சிதலமடைந்த நிலையில் இருக்கும். எப்போதும் யாரும் வரமாட்டார்கள்.
6. கோயில் என்ற கட்டிட அமைப்பே இருக்காது. சிவலிங்கமும், மற்றையத் திருமேனிகளும் வயல்வெளிகளிலோ, கட்டாந்தரை, வெட்ட வெளியிலோ வெயிலில் காய்ந்து கொண்டும், மழையில் நனைந்துகொண்டும் வீற்றிருக்கும்.

அடியார்களாகிய நாம் நகர, பெருநகரக் கோயில்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அந்த ஆலயங்களுக்குச் செல்லலாம். வழிபடலாம். ஆனால் 1 கால பூசைக்குக் கூட வழியில்லாத 5, 6 ஆவது வகை கிராமக் கோயில்களைப் பற்றிக் கண்டிப்பாகக் கவலைப்படவேண்டும்.

நாம் ஒவ்வொருவரும் அவ்வகையான பூசை இல்லாத ஒரு கோயிலைத் தத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பிள்ளையில்லாதவர்கள் சுவீகாரம் எடுப்பது போல. அல்லது இரண்டு / மூன்று பிள்ளை பெற்றவர்கள் ஒரு பிள்ளையை அதிகமாகப் பெற்றதாக நினைத்துக்கொண்டு பொருளளவிலும், மனதளவிலும் ஒரு பாகத்தை அந்தச் சிவாலயத்துக்கு அளித்துவிடவேண்டும். கலியுகத்தில் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் யார் யாருக்கெல்லாம் ஒரு பாகச் சொத்தை அந்தச் சிவாலயத்துக்கு எழுத மனம் வருகிறதோ, யார் யாரெல்லாம் தினசரி அந்த ஆலயத்துக்குச் சென்று கரசேவைகளிலும், பிற சேவைகளிலும் ஈடுபடுகிறார்களோ, யார் யாரெல்லாம் அந்த ஆலயத்தின் நித்திய, நைமித்திக உற்சவ பூசைகளுக்கு உதவுகிறார்களோ / கலந்து கொள்கிறார்களோ, யார் யாரெல்லாம் 12 ஆண்டுகட்கு ஒருமுறை குடமுழுக்கு நடத்த உதவுகிறார்களோ, கலந்து கொள்கிறார்களோ, யார் யாரெல்லாம் தலபுராணம் மற்றும் திருமுறை நூல்களைப் பிரசுரித்து வெளியிட்டுத் தாமும் பாடியாடி மகிழ்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் வீடுபேற்றுக்கு விண்ணப்பம் கிடைப்பது நிச்சயம். நமது தேசம் எப்படிப்பட்டது? முள்ளிச் செடி முத்தி பெற்ற தேசம். மிக எளிய வழிபாடான மலர்ச்சேவை புரிந்த முருகநாயனார் முத்தியடையவில்லையா? மேற்காண் பணிகளை மனம், மொழி, மெய்களால் செய்தால் வீடுபேறு நிச்சயம்.

அவரவர் இல்லங்களுக்கருகில் உள்ள கிராமத்திலிருக்கும் சிவாலயத்தைச் சுவீகாரம் எடுத்துக்கொண்டு, முடிந்தால் தினமும் இல்லாவிடில் வாரம் ஒருமுறையாவது அங்கு சென்று வழிபாடாற்ற வேண்டும். அந்த ஆலயத்திலிருந்து மிகு தொலைவில் இருப்பவராயின், மாதம் ஒரு முறையாவது அங்கு செல்ல வேண்டும். அந்த சிவாலயங்கள் இந்த நிலைக்கு ஆளாகக் காரணமென்ன என்று ஆராய வேண்டும். அடியேன் ஆராய்ந்த அளவு கீழ்க்கண்ட காரணங்களால் என்று தெரிய வந்தன.

1. சில நூற்றாண்டுகளாகவே பல கிராமங்களில் உயர்ந்த சாதிக்காரர்களுக்கு மட்டும்தான் சிவாலயம் என்ற கருத்து ஊன்றப்பட்டுள்ளது. எனவே, மற்ற சாதிக்காரர்கள் காளி, மாரி ஆகிய தெய்வங்களுக்கு என்று தனியாகக் கோவில் அமைத்துக்கொண்டு அத்தெய்வங்களை வழிபட ஆரம்பித்தார்கள்.

2. சிவாலயத்தில் சிவபூசைக்காக அமர்த்தப்பட்ட சிவாசாரியர்கள் / குருமார்கள் காலவெள்ளத்தில் பொருள் பற்றி வாழ வேண்டிய நிலை ஏற்பட, வேறு தொழிலுக்கு மாறத் தொடங்குகிறார்கள் அல்லது நல்ல வருமானம் வருகின்ற நகர்ப்புறக் கோவில்களுக்கு மாறுகிறார்கள்.

3. இக்காலங்களில் வேத பாடசாலைகளில் பயிற்சி பெற்று வெளி நாட்டுக்கும் சென்று விடுகிறார்கள். குடமுழுக்கு, யாகங்கள், கிரக காரியங்கள் போன்றவற்றுக்குச் சென்றால் வருமானம் வரும் என்று நினைத்துச் செல்கிறார்கள்.

4. கோவிலுக்கு மக்கள் வருவதில்லை. வருமானம் இல்லை. எனவே தாங்களும் வெளியேறுகிறார்கள்.

5. சிவாசாரியார் இல்லை. நாம் போய் என்ன செய்வது என்று மக்களும் கோவிலுக்குச் செல்வதில்லை.

6. கோழம்பம், கோவிந்தப்புத்தூர் (விசயமங்கை), திருச்சோற்றுத்துறை போன்ற பாடல் பெற்ற தலங்களிலேயே சிவாசாரியார் இல்லை. 2014ல் திருவீழிமிழலை குடமுழுக்கு நடந்தது. அன்று பக்கத்து ஊரான விஷ்ணுபுரம் அக்ரஹாரத்திலிருந்து வந்திருந்த 85 வயது காமகோடி என்ற பெரியவர் என் கையைப் பிடித்துக்கொண்டு வீழிநாதருக்குப் பூசை செய்ய எப்படியாவது ஒரு

சிவாசாரியாரைக் கொண்டுவா. பரிசாதகம் எனப்படும் திருக்கோவில் நைவேத்திய ஊழியர் பூசை செய்வதைப் பார்க்க முடியவில்லை என்று அழுதார். பாடல் பெறாத அநேக சிவாலயங்களுக்கு குருக்களே இல்லை.

7. தஞ்சை மாவட்டத்தில் சில கோயில்களுக்கு டிபன் பாக்ஸ் சிவாசாரியார் என்று ஒருவர் உண்டு. 60 / 70 வயதான அவர் தமது காலைக் கடன்களை முடித்துவிட்டு ஒரு டிபன் பாக்ஸில் சிறிதளவு நைவேத்தியத்தை எடுத்துகொண்டு 8 மணியளவில் சைக்கிளில் பக்கத்திலுள்ள முதல் கிராமத்துக்குச் செல்வார். ஒரு விநாயகருக்கு 1 குடம் தண்ணீர் விட்டோ விடாமலோ நைவேத்தியத்தைப் படைத்துவிட்டு, 9 மணிக்கு அடுத்த கிராமத்திலுள்ள காளி கோவிலுக்குச் செல்வார். 10 மணிக்கு அடுத்த கிராமத்திலுள்ள மாரி கோவிலுக்குச் செல்வார். 11 மணிக்குக் கோழம்பம் போன்ற சிவாலயத்துக்குச் செல்வார். 12 மணிக்கு அடுத்த கிராமத்து ஐயப்பனைப் பார்ப்பார். 1 மணிக்கு அதே சைக்கிளில் வீடு திரும்புவார். இவ்வளவு தான் அவரால் முடிந்த நித்திய பூசை.

> "ஆற்றரு நோய்மிக்கு அவனியில் மழைகுன்றிப்
> போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
> கூற்றுதைத் தான் திருக்கோயில்களெல்லாஞ்
> சாற்றிய பூசைகள் தப்பிடினில் தானே"

என்ற திருமந்திரச் சூத்திரத்தையும் தற்கால நிலைமையையும் ஒப்பிட்டுப் பாருங்கள். இந்த நிலை மாறவேண்டும். பூவுலகில் உள்ள அனைத்து சிவாலயங்களிலும் சிவபூசை சிறப்புற நடக்கவேண்டும் என்று நாமெல்லோரும் விண்ணப்பிக்க வேண்டும். அதற்குண்டான முயற்சிகளைச் செய்யவேண்டும். ஏதாவது ஒரு வழியில் நிதியைத் திரட்டிக் குருக்களை ஏற்பாடு செய்து, ஒரு வேளை பூசைக்காவது அந்தந்தப் பகுதியில் உள்ளவர்கள் ஏற்பாடு செய்யவேண்டும். சிவாசாரியார் கிடைக்காத பட்சத்தில் நாமே முதலில் கருவறைக்குள் நுழைந்து பூசை செய்வது எப்படி என்று செய்துகாட்டி உள்ளூர் அன்பர்கள் சிலரை அந்தப் பணிக்குப் பழக்கவேண்டும். எப்படியாவது ஒரு கால பூசையை நடக்கச் செய்துவிட்டால் தெய்வீக ஒளி பிறக்கும். தினமும் அதிகாலை என் ஆத்மார்த்த படிக சிவலிங்க மூர்த்திக்குத் திருமஞ்சனமாட்டி, மலர் அருச்சனை செய்வதற்குமுன், முதல் சொம்பு நீரை இவ்வுலகில் பூசையில்லாத சிவாலயங்களில் உள்ள சிவலிங்கங்களுக்குத் திருமஞ்சனமாட்டுவதாகச் சொல்லியிடுவேன். அதற்குப் பிறகு அபிடேகத்தைத் தொடங்குவேன். தோடுடைய செவியனின் "இவன்" என்ற திருஞானசம்பந்தர் சுட்டிக்காட்டிய சிவபரம்பொருளே முழுத் திருமுறைகள். திருமுறைகளே சிவ பரம்பொருள். அந்தத் திருமுறைகளிலும், திருமுறை வழி சிவபூசைகளிலும் நாமெல்லாம் மேலும் ஈடுபாடு கொண்டு மேற்காண் நெறிகளில் கடைத்தேற இரண்டாம் திருமுறை வழிபாட்டுக் கருத்தரங்கம் கீழ்க்கண்ட நிகழ்ச்சி நிரல்படி ஏற்பாடு செய்யத் திருவருள் கூட்டுவித்துள்ளது.

நமது பன்னிருதிருமுறை ஆய்வு மையத்தின் சார்பாகப் பல ஆண்டுகளாகப் பல வழிபாட்டுக் கருத்தரங்குகளை நடத்திவந்தாலும் கடந்த டிசம்பர் 2014 முதல் வருகின்ற அக்டோபர் 2016 வரை இரண்டு மாதத்துக்கு ஒரு முறை ஒரு திருமுறையாக இரண்டு வருடங்களில் 12 திருமுறைகளை நிறைவு செய்வதற்கும் அதற்குப் பின் 28 மாதங்களில் 14 அமர்வுகளில் சிவஞான போதம், சிவஞான சித்தியார் உள்ளிட்ட 14 சாத்திர நூல்களைச் சிந்தனை செய்வதற்கும் திருவருள் கூட்ட இந்நிகழ்வுகள் நடைபெற்று வருகின்றன.

| வ.எண் | திருமுறை | அருளாளர் | பதிகங்கள் | பாடல்கள் | நிகழ்வு நாட்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | முதல் திருமுறை | திருஞானசம்பந்த சுவாமிகள் | 136 | 1469 | 27, 28/12/2014 |
| 2. | இரண்டாம் திருமுறை | திருஞானசம்பந்த சுவாமிகள் | 122 | 1331 | 21, 22/02/2015 |

இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை, ஒரு திருமுறை நூலை முழுமையாகப் படித்து ஆயிரக்கணக்கான பாடல்களில் தகுந்தவற்றைச் சேர்த்து, ஆய்ந்து, மெய்ப்புத்திருத்தம் செய்து நூலாக வெளியிடும் கடினமான பணியை எளிமையாகச் செய்து வரும் முனைவர் திருமதி. ப. தமிழரசி அவர்களைத் தலைவராகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறை மற்றும் துறைப்பேராசிரியர்கள் திரு. இரா. மதன்குமார், திருமதி. ச. கவிதா ஆகியோருக்கும், கணினி அச்சாளர்கள் திரு. மகேஷ், திரு. சசிக்குமார் ஆகியோருக்கும், செஞ்சுடர் அச்சகத்தாருக்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் வேண்டுதை இறைவன் ஈவானாக.

முழுநூலும் **http://www.panniruthirumurai.org** என்ற வலைதளத்தில் வெளியிடப்பட்டுள்ளது. மேற்காண் விலாசத்தில் மென்னூலாக அடியார்கள் படித்து இன்புற வேண்டும்.

நன்றி வணக்கம்,

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

கோவை – 21

# பன்னிரு திருமுறை ஆய்வு மையம் : கற்பகம் பல்கலைக்கழகம்

## இரண்டாம் திருமுறை - வழிபாட்டுக் கருத்தரங்கு

## பிப்ரவரி 2015 : நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு - பொருள் |
|---|---|---|---|
| 1. | 21.02.2015 சனிக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | மகாவித்துவான் மயிலம் **வே.சிவசுப்பிரமணியம்** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் இந்தளப் பண்ணில் உள்ள முதல் 19 பதிகங்கள் |
| 2. | 21.02.2015 சனிக்கிழமை நண்பகல் 11.00 மணி - 01.00 மணி | பேராசிரியர் **ம.வே. பசுபதி** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் இந்தளப் பண்ணில் மீதம் உள்ள 20 பதிகங்கள் |
| 3. | 21.02.2015 சனிக்கிழமை பிற்பகல் 02.00 மணி - 4.00 மணி | பேராசிரியர் **புரிசை நடராசன்** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் சீகாமரப் பண்ணில் உள்ள 14 பதிகங்கள் |
| 4. | 21.02.2015 சனிக்கிழமை மாலை 4.00 மணி - 07.00 மணி | முனைவர் **கோ.ப. நல்லசிவம்** அவர்கள் தஞ்சாவூர் | இரண்டாம் திருமுறை இன்னிசை - பக்க வாத்தியங்களுடன் - இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி ஒவ்வொரு பண்ணிற்கும் 1/2 மணி நேரம் |
| 5. | 22.02.2015 ஞாயிற்றுக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | **திரு. சு. குஞ்சிதபாதம்** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் காந்தாரப் பண்ணில் உள்ள முதல் 20 பதிகங்கள் |
| 6. | 22.02.2015 ஞாயிற்றுக்கிழமை நண்பகல் 11.00 - 01.00 மணி | சைவத்திரு **சிவ. காந்தி** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் பியந்தைக் காந்தாரப் பண்ணில் உள்ள 14 பதிகங்கள் |
| 7. | 22.02.2015 ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 02.00 - 04.00 மணி | திரு. **பழ. முத்தப்பன்** அவர்கள், திருச்சி | இரண்டாம் திருமுறையில் நட்டராகப் பண்ணில் உள்ள 16 பதிகங்கள் |
| 8. | 22.02.2015 ஞாயிற்றுக்கிழமை மாலை 04.00 - 06.00 மணி | முதுமுனைவர் **ந. இரா. சென்னியப்பனார்** அவர்கள் | இரண்டாம் திருமுறையில் காந்தாரப் பண்ணில் உள்ள 9 பதிகங்கள் இரண்டாம் திருமுறையில் செவ்வழிப் பண்ணில் உள்ள 10 பதிகங்கள் |

# இரண்டாம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

**1712 ஆம் ஆண்டு இந்தியாவில், தமிழகத்தில், தரங்கம்பாடியில் அச்சுக்கூடம் முத–ல் நிறுவப்பட்டது.**

**1814 ஆம் ஆண்டு திருக்குறள் முதன்முதலாக காகித நூல் வடிவில் அச்சேறியது.**

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதினப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | மறுபதிப்பு |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப்பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை காசிவாசி ஸ்ரீமத் இராமலிங்க சாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி ஸ்ரீமத் சாமிநாத சாமிகள் | |
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முக முதலியார் சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | | மூன்றாம் முறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவாரம் | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி ஸ்ரீமத் சாமிநாத சாமிகள் | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8. | 1906 | பண்முறை தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1911 | தலைமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 11. | 1917 | பண்முறை தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 12. | 1917 | தேவார வேதசாரம் | சைவ சித்தாந்த மகாசமாஜம் இலங்கை | செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரஷ்ண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 13. | 1927 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 14. | 1929 – 31 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 15. | 1931 | திருஞானசம்பந்தர் மூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் 1,2,3 திருமுறைகள் | சைவ சித்தாந்த மகாசமாஜம் இலங்கை | | நூல் | முதல் பதிப்பு |
| 16. | 1950 | திருஞானசம்பந்தர் தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | தி. பட்டுசாமி ஓதுவார் | திருப்பனந்தாள் காசிமடம் | |
| 17. | 1953 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் பதிப்பு | - | - | - |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 18. | 1954 | திருஞானசம்பந்தர் 2ம் திருமுறை | ஞானசம்பந்தம் அச்சகம் தருமபுரம் | ஸ்ரீமத் சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் பதிப்பாசிரியர் | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | விளக்கக் குறிப்புரைகளுடன் குறிப்புரை ஆசிரியர் முத்து சு. மாணிக்கவாசக முதலியார் |
| 19. | 1961 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 20. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 21. | 1971 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | இரண்டாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 22. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளை வாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 23. | 1979, 82, 92, 96 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 3, 4, 5, 6 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 24. | 1997 | மறுபதிப்பு திருஞான சம்பந்தர் இரண்டாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிகம் - காந்தளகம் மயிலாடுதுறை, சென்னை | வித்துவான் மௌன மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள். பதிப்பாசிரியர். | தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் | மூலம் 1954 - மறுபதிப்பு குறிப்புரை வித்துவான் திரு. முத்து, சு. மாணிக்கவாசகமுதலியார் பொழிப்புரை வித்துவான் வி.சா. குருசாமி தேசிகர் |
| 25. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 26. | 2001 | திருஞானசம்பந்தர் தேவாரம் வரலாற்று முறை | சிவகாசி சிவனடியார் அறக்கட்டளை | பதிப்பாசிரியர் கு. சுந்தரமூர்த்தி | | |
| 27. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 28. | 2001 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | ஏழாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 29. | 2003 | திருஞானசம்பந்தர் தேவாரம் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் ந. மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 30. | 2004, 2006 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 8, 9 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 31. | 2007 | திருஞானசம்பந்தர் சுவாமிகள் திருக்கடைக்காப்பு | கைலாஷ் அச்சகம் | | | மூலம் மட்டும் 2500 படிகள் 1,2,3 திருமுறைகள் தலமுறை |
| 32. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 33. | 2008 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | பத்தாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 34. | 2008 | பன்னிரு திருமுறை | சதுரா பதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா ஜி. ச. முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |
| 35. | 2008 | மூவர் தேவாரம் | சதுரா பதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜி. ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 36. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் ந. மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 37. | 2015 | 2ஆம் திருமுறை திருஞானசம்பந்தர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

✤ திருப்பனந்தாள் காசித் திருமடத்தினர் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.

✤ வர்த்தமானன் பதிப்பகத்தார் 12 திருமுறைகளின் மூலங்களை உரை வளத்துடன், அருட்செல்வர் ந. மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.

✤ திருமுறைகளுக்கு இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1953, 1997 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் தண்டபாணி தேசிகர், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்பு காந்தளகம் அச்சகத்தின் மூலம் வெளியிடப்பட்டுள்ளது.

✤ நமது இரண்டாம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.

# திருஞானசம்பந்தர் (638-654)

## அருள் வரலாறு

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினி லோங்கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்

### முன்னுரை

செந்தமிழும் - சிவநெறியும் நிலைகுலைந்து, தமிழ்நாட்டின் பண்பும், கலைகளும் நிலைதடுமாறி, புறச்சமய இருள் சூழ்ந்து பொல்லாங்கு பரவிய காலத்தே ஞானபானுவாய் அவதரித்து புறச்சமயத் தூறறுத்து, திருவருள் துணைகொண்டு, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய பெருந்தகை ஞானசம்பந்தப் பெருமான். மூன்றாண்டில் சிவஞானப் பாலுண்டு, தேனினும் இனிய தீந்தமிழ்ப் பாடல்களால் தெய்வீக நெறி புதுக்கி, அற்புதங்கள் பல நிகழ்த்தி அரன் நாமம், ஐந்தெழுத்து இவற்றின் பெருமைகளை விரித்துரைத்தார் சிறிய பெருந்தகையார்.

அவர் அவதாரத்தால் வேத நெறி தழைத்தது. சைவநெறி ஓங்கிற்று. பண்புகள் மலர்ந்தன. அன்புநெறி தலைஎடுத்து அவனி எலாம் விளங்கிற்று.

### திருவவதாரம்

சோழவள நாட்டிலே, தஞ்சை மாவட்டத்திலே, சீகாழிப் பதியிலே, அந்தணர் மரபிலே, கவுணியர் குலத்திலே சிவபாத இருதயரும் பகவதி அம்மையாரும் வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க இல்லறம் நடத்தி வந்தனர். அவ்விருவரது பெருந்தவத்தால் கி.பி 7-ஆம் நூற்றாண்டில் அவ்விருவருக்கும் மகவாய்த் தோன்றினார் திருஞானசம்பந்தர். அவதரித்த நாளோ சிவபெருமானுக்கு உகந்த திருவாதிரைத் திருநாள். அன்று அனைத்துக் கோள்களும் அவ்வவற்றின் உச்சத்தில் இருந்தன.

### ஞானப்பால் உண்டமை

ஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்றாண்டு நிறையப் பெற்றார். நீராடச் சென்ற தந்தையாருடன் தாமும் திருக்குளம் சார்ந்தார். சிவபாத இருதயர் மைந்தனைக் கரையில் அமரச்செய்து நீருள் மூழ்கி அகமருடன் ஜெபம் செய்தார். தந்தையைக் காணாமையாலும், முன்னைத்தவம் தலைக்கூடியதாலும் திருத்தோணிச்சிகரம் பார்த்து அம்மே! அப்பா! என்று அழைத்தருளி அழுதருளினார்.

திருத்தோணிபுரப்பெருமான் உமா தேவியாரோடு விடைமீதமர்ந்து காட்சி கொடுத்தார். உவமையிலாக் கலை ஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் கலந்த திருமுலைப்பால் ஊட்டுவாயாக எனப் பெருமான் பணித்தார். அப்படியே பெருமாட்டியும் எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி உண் அடிசில் என ஊட்டினார். ஞானம் உண்ட பிள்ளையார் சிவஞானச் செல்வராய்த் திகழ்ந்தார்.

பிரம தீர்த்தத்தில் நீராடிய சிவபாத இருதயர், பால்வழிய நின்ற பிள்ளையைப் பார்த்து யார் கொடுத்த எச்சிற்பாலை உண்டாய் எனக் கோல் கொண்டோங்கினார். உடனே ஞானசம்பந்தர் தமக்குப் பால் கொடுத்த பரம்பொருளை அடையாளங்களுடன் சுட்டித் தோடுடைய செவியன் என்ற திருப்பதிகம் பாடினார்.

## பொற்றாளம் பெறல்

சில நாள் கழித்துத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளினார். கையினால் தாளம் இட்டு மடையில் வாளை என்ற திருப்பதிகம் பாடினார். பாட்டிற்கு உருகும் பரமன் கை நோவுமென்று ஐந்தெழுத்து வரையப்பெற்ற பொற்றாளம் அளித்தருளினார். இவர் பெருமை கேட்ட மக்கள் தங்கள் தங்கள் ஊருக்கு எழுந்தருள வேண்டினர். முதலில் தமது தாய் பிறந்த ஊராகிய திருநனிபள்ளி சார்ந்தார், பிள்ளையார் பெருமையைக் கேள்வியுற்ற திருநீலகண்ட யாழ்ப்பாணர், தமது மனைவியோடு சீகாழிக்கு வந்து தரிசித்தார். அவரது பாடல்களுக்குத் தாம் யாழ் வாசித்தார். அது முதல் பிள்ளையாருடனிருந்து பிள்ளையார் பாடல்களையெல்லாம் யாழில் அமைத்து வாசித்து வரலானார்.

## முத்துச்சிவிகை முதலியன பெறல்

திருஞானசம்பந்தர், சிதம்பரம் முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்துறை சார்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார். அரத்துறைப்பெருமான் முத்துச்சிவிகை, முத்துக்குடை, சின்னம் முதலியவற்றை அருளினார்.

சோதிமுத்தின் சிவிகை சூழ்வந்துபார்
மீதுதாழ்ந்து வெண்ணீற்றொளி போற்றிநின்று
ஆதியா ரருளாதலில் அஞ்செழுத்து
ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்

அவற்றை இறையருளெனப் பெற்ற ஞானசம்பந்தர் எந்தை ஈசன் எம்பெருமான் என்ற திருப்பதிகம் பாடிப்பரவினார்.

## உபநயனம்

பிறகு உபநயனப் பருவத்தில் உலகியலுக்கேற்ப ஞானசம்பந்தருக்கு உபநயனம் நடைபெற்றது. ஓதாதே வேதம் உணர்ந்த உயர் ஞானசம்பந்தர், அங்கு வந்திருந்த மறையோர்கட்கு உள்ள ஐயங்களை அகற்றி வேத முடிபாகிய ஐந்தெழுத்தின் பெருமையைத் "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்'' என்ற திருப்பதிகம் பாடி விளக்கியருளினார்.

## முத்துப் பந்தல் பெறல்

ஞானசம்பந்தரது பெருமையைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர், ஞானசம்பந்தரைக் காண்பதற்குச் சீகாழிக்கு எழுந்தருளினார். பிள்ளையாரும் அவரை எதிர்கொண்டழைத்தார். இருவரும் அருட்கடலும் அன்புக் கடலும் ஆம் எனத் திகழ்ந்தனர். பின்னர் ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமம் பணிந்து கொல்லிமழவன் மகளைப் பிடித்து நின்ற முயலகன் என்னும் நோயைப் போக்கினார். திருச்செங்கோடு என வழங்கும் திருக்கொடிமாடச் செங்குன்றூர் சென்ற போது அடியவர்களை விஷஜுரம் பற்றியது. திருநீலகண்டத் திருப்பதிகம் பாடி அவ்விஷ நோயைப் போக்கினார். பிள்ளையார் பட்டீச்சுரத்தை அடைந்தபோது வெயில் மிகுதியாயிருந்ததால் திருவருளால் சிவபூதம் ஒன்று முத்துப்பந்தல் கொடுத்தது.

## பிற அற்புதங்கள்

பிறகு திருவாவடுதுறை சார்ந்தார். தந்தையார் வேள்வி செய்தற்குப் பொருள் வேண்டினார். ஆவடுதுறை அரனை "இடரினும் தளரினும்'' என்ற பதிகத்தால் போற்றினார். பொற்கிழி பெற்றுச்

சிவபாத இருதயரிடம் தீதுநீங்க நல்வேள்விசெய்க எனக்கொடுத்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாய் பிறந்த ஊராகிய தருமபுரம் சென்று தரிசித்தார். "மாதர்மடப் பிடியும்" என்ற பதிகத்தால் பதிக இசை யாழிலடங்காமையை விளக்கியருளினார். திருமருகல் சேர்ந்தார். கணவனாக வர இருந்த வணிகன் விஷந்தீண்டி இறந்ததால் கதறி அழுதாள் ஒரு நங்கை. அந்நங்கையின் துயரைத் துடைக்க எண்ணிச் சடையாய் எனுமால் என்ற திருப்பதிகம் பாடி வணிகனை உயிர்பெற்று எழச்செய்தார்.

### படிக்காசு பெறல்

பிறகு திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் தரிசித்தார். திருநாவுக்கரசரைக் கண்டு அவர் வாயிலாக ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச் சிறப்பைக்கேட்டு ஆரூரானைத் தொழுதார். பிறகு அப்பரும், சம்பந்தரும் திருவீழிமிழலை சேர்ந்தனர். அவ்வூர்ப்பெருமான் தோணியப்பரைப் போல் காட்சிதந்தனர். அது கண்ட இருவரும் அவ்வூரிலேயே சிலநாள் தங்கினர். அப்பொழுது நாட்டில் பஞ்சம் உண்டாயிற்று. பரமன் அளித்த படிக்காசு கொண்டு இருவரும் ஆயிரக்கணக்கான அடியார்களுக்குப் பறைசாற்றிச் சோறளித்தனர்.

### திருமறைக்காட்டில் அற்புதம்

பிறகு (வேதாரணியம்) திருமறைக்காடு சென்றனர். நேரே கும்பிட எண்ணியவர்களாய் மறைகளால் பூசித்து அடைக்கப்பட்டிருந்த கதவினைத் திருநாவுக்கரசர் பாடலால் திறக்கச்செய்து, தாம் அடைக்கப்பாடினார். அது முதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது அக்கதவு.

### பாண்டி நாட்டில் சைவம்

பாண்டி நாட்டில் நெடுமாற பாண்டியன் சமண் சமயம் சார்ந்து இருந்தமையை மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்ற இருவர் வாயிலாகத் தெரிந்து மதுரைக்குப் புறப்பட்டார். நாளும் கோளும் நலமில்லாதிருந்தும் உமையொருபாகன் உள்ளத்திருப்பத்தால் "அவை நல்ல நல்ல" என ஏகினார். பாண்டியன் வெப்பு நோய் அகற்றினார். அனல் வாதத்தாலும், புனல் வாதத்தாலும் அமணர்களை வென்றார்.

பாண்டி மன்னனையும், பாண்டி நாட்டு மக்களையும் சைவம் தழுவச்செய்தார். பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்தார். சோழநாடு மீண்டார். பிறகு பல தலங்களைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தி அடைந்தார். அப்பர் சுவாமிகள் இவரது சிவிகையைத் தாங்கியமையறிந்து உடனே கீழிறங்கி இருவரும் அளவளாவி இருந்தனர். திருஓத்தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிக் காய்க்கச் செய்தார்.

### எலும்பைப் பெண்ணுருவாக்கல்

மயிலாப்பூர் சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவை பாம்பு தீண்டி இறக்க, அவளது எலும்பைக் குடத்தில் சேமித்து வைத்தார் சிவநேசர், அதனை அறிந்த ஞானசம்பந்தர் திருக்கோயில்முன் அக்குடத்தைக் கொணர்வித்து மட்டிட்ட புன்னை என்ற பதிகம்பாடி உயிர்ப்பித்தார்.

### சோதியிற் கலத்தல்

பெற்றோர் விருப்பத்திற்கிணங்கவும், வேத நெறியில் நின்று நம்பாண்டார் நம்பிகளின் திருமகளை மணமகளாக ஏற்று இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும் அந்தமில் சிவன்தாள் சேர்வான் என்ற கருத்தமையக் கல்லூர்ப் பெருமணம் என்ற பதிகம் பாடினார். பெருமானது அசரீரியின்படி மனைவியோடும் உடன் வந்தாரோடும் வைகாசி மூல நன்னாளில் அங்குத் தோன்றிய சோதியில் கலந்தார். இவர் அருளிய திருப்பதிகங்கள் 383. இவை முதல் மூன்று திருமுறைகளாகத் திகழ்கின்றன.

# இரண்டாம் திருமுறையில் தமிழ் நலம்

தமிழுடன் தமது பெயரைச் சேர்த்து முதன் முதலில் எழுதியவர் திருஞானசம்பந்தரேயாவார். ‘‘தமிழ் ஞானசம்பந்தன்’’ என்று தம்மை 45 இடங்களில் குறிப்பிடுகிறார்.

தமிழ் விரகினன் - தமிழ் மொழியை ஆழமாக உணர்ந்தவர்

தமிழாகரர் - தமிழே உடம்பாக உடையவர்

| வ.எண். | தமிழ்நலம் | பதிக எண் |
|---|---|---|
| 1. | செந்தமிழ்கள் | 20, 29, 112 |
| 2. | அருந்தமிழ்கள் | 114 |
| 3. | ஒண்டமிழ் | 6 |
| 4. | ஒண்டமிழ் மாலை | 14 |
| 5. | ஒளிர் பூந்தமிழ் மாலை | 58 |
| 6. | குலமார் தமிழ் | 17 |
| 7. | சந்தமார்ச் சொன்ன செந்தமிழ் | 8 |
| 8. | சந்தமாலைத் தமிழ் | 121 |
| 9. | சந்துலாந்தமிழ் மாலைகள் | 109 |
| 10. | சீரின்புறுந் தமிழ் | 78 |
| 11. | செப்பரிய தண்டமிழ் | 54 |
| 12. | சொல்லார் தமிழ் மாலை | 35 |
| 13. | தமிழ் ஆரம் | 11 |
| 14. | நற்றமிழ் | 95 |
| 15. | இன்புறு தமிழ் | 78 |
| 16. | பலந்தரு தமிழ்க்கிளவி | 31 |
| 17. | பண்பொலி செந்தமிழ் மாலை | 48 |
| 18. | தமிழார் விரகன் வடவார் தமிழ் வல்லவர் | 22 |
| 19. | தமிழ்க்கிழமை ஞானன், தமிழ் வல்லார் பெரும்பிணி மருங்கற | 30 |
| 20. | தாழுமனத்தால் உரைத்த தமிழ் இவை வல்லார் | 53 |
| 21. | செறி வண்டமிழ் செய் மாலை | 63 |
| 22. | மறை வளருந் தமிழ் மாலை வல்லவர் | 67 |
| 23. | சக்கரஞ்சீர் தமிழ் விரகன் | 73 |
| 24. | ஞானசம்பந்தன் தமிழ் கற்போர் தக்கோர் தாமே | 74 |
| 25. | நல்ல கேள்வித் தமிழ் ஞானசம்பந்தன் காரோணத்து வண்டமிழ் | 116 |

# இரண்டாம் திருமுறை

## தேவாரம் பாடியவாறு அட்டவணை

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | இரண்டாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 1 | திருப்பிரமபுரம் (தோடுடைய செவியனுக்கு மறுநாள் வணங்கிப் போற்றி) | 100 | எம்பிரான் எனக் கமுதம் | 40 |
| 2. | திருநனிப்பள்ளி (ஊர் எல்லையில்) | 115 | காரைகள் கூகை | 84 |
| 3. | திருத்தலைச்சங்காடு (இறைவன் முன்) | 119 | நலச்சங்க | 55 |
| 4. | திருச்சாய்க்காடு (இறைவன் திருமுன் பின்னும்பாடி) | 122 | மண்புகார் வான் புகுவர் | 41 |
| 5. | திருச்சாய்க்காடு (பின்னும்பாடி) | 123 | நித்தலும் நியமம் | 38 |
| 6. | திருவெண்காடு (இறைவன் திருமுன்பு) | 126 | கண்காட்டு நுதலான் | 48 |
| 7. | தென்திருமுல்லைவாயில் (இறைவன் திருமுன்பு) | 126, 127 | துளிமண்டியுண்டு | 88 |
| 8. | திருச்சிரபுரம் (இறைவன் திருமுன்பு) | 128 | அன்னமென்னடை | 102 |
| 9. | திருவெண்காடு (ஊர் போலும்) | 129 | உண்டாய் நஞ்சை | 61 |
| 10. | திருக்கழிப்பாலை (இறைவன் திருமுன்) | 167 | புனலாடிய | 21 |
| 11. | திருநெல்வாயில் (திருஉச்சி) | 167 | புடையினார் புள்ளி | 26 |
| 12. | திருமுதுகுன்றம் (சிலநாள் மேவி திருமுன்) | 183 | தேவா சிறியோம் | 64 |
| 13. | திருநெல்வாயில் அரத்துறை (மாறன் பாடியில் சிவிகை பெற்றுப் பாடுதல்) | 214 | எந்தையீசன் ஏறமர் | 90 |
| 14. | திருக்கீழப்பழுவூர் | 235-37 | முத்தன் மிகு | 34 |
| 15. | திருப்புறம்பயம் | 241 | மறம்பயம் | 30 |
| 16. | திருவாழ்கொளிப்புத்தூர் | 251-2 | சாகையாயிரம் | 94 |
| 17. | திருக்கடம்பூர் | 252 | வானமர் திங்களும் | 68 |
| 18. | திருநாரையூர் | 253 | உரையினில் வந்த | 86 |
| 19. | திருக்கருப்பறியலூர் | 255 | சுற்றமொடு பற்றிவை | 31 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | இரண்டாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 20. | திருப்பூந்தராய் | 273 | செந்நெலங் கழனி | 1 |
| 21. | திருக்கொச்சைவயம் | 275 | நீலநன்மாமிடற்ற | 83 |
| 22. | திருக்கொச்சைவயம் | 275 | அறையும் பூம்புனல் | 89 |
| 23. | திருப்புகலி | 277 | முன்னியகலை | 29 |
| 24. | திருப்பிரமபுரம் | 277 | விளங்கியசீர் | 73 |
| 25. | திருப்பிரமபுரம் | 277 | பூமகனூர் | 74 |
| 26. | திருப்புள்ளிருக்கு வேளூர் | 286 | கள்ளார்ந்த | 43 |
| 27. | திருமணஞ்சேரி | 290 | அயலாரும் | 16 |
| 28. | திருக்கோடிக்கா | 292 | இன்று நன்று | 99 |
| 29. | திருமங்கலக்குடி | 294 | சீரினார் மணியும் | 10 |
| 30. | திருவையாறு | 303 | கோடல் கோங்கம் | 6 |
| 31. | திருப்பெரும்புலியூர் | 304 | மண்ணுமோர் | 67 |
| 32. | திருமழபாடி | 307 | களையும் | 9 |
| 33. | திருவடகரை மாந்துறை | 309 | செம்பொனார்திரு | 110 |
| 34. | திருநணா | 327 | பந்தார்விரல் | 72 |
| 35. | திருப்பாண்டிக்கொடுமுடி | 338 | பெண்ணமர் | 69 |
| 36. | திருக்கருவூரானிலை | 339 | தொண்டெலாம் | 28 |
| 37. | திருமுக்கீச்சரம் | 343 | சாந்தம்வெண் | 120 |
| 38. | திருவானைக்கா | 345 | மழையார் மிடறா | 23 |
| 39. | திருவெண்ணியூர் | 359 | சடையானை | 14 |
| 40. | திருநல்லூர் | 368-69 | பெண்ணமரும் | 57 |
| 41. | திருவலஞ்சுழி | 382 | விண்டெலாம்மலர் | 2 |
| 42. | திருவலஞ்சுழி | 383 | என்னபுண்ணியம் | 106 |
| 43. | இரும்பூளை | 401 | சீரார் கழலே | 36 |
| 44. | திருநாலூர் மயானம் | 403 | பாலூரும் | 46 |
| 45. | திருக்குடவாயில் | 403 | திகழும் திருமா | 22 |
| 46. | திருக்குடவாயில் | 403 | கலைவாழும் | 58 |
| 47. | திருநறையூர்ச் சித்தீச்சரம் | 403 | நேரியனாகு | 87 |
| 48. | திருஅரிசிற்கரைப்புத்தூர் | 403 | மின்னுஞ்சடைமேல் | 63 |
| 49. | திருநாகேச்சரம் | 411 | தழைகொள் | 119 |
| 50. | திருநாகேச்சரம் | 412 | பொன்னேர்தரு | 24 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | இரண்டாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 51. | திருவிடைமருதூர் | 414-5 | பொங்குநூன் | 56 |
| 52. | திருத்தென்குரங்காடுதுறை | 416 | பரவக்கெடும் | 35 |
| 53. | திருக்கோழம்பம் | 432 | நீற்றானை | 13 |
| 54. | திருவழுந்தூர் | 435 | தொழுமாறுவல்லார் | 20 |
| 55. | திருத்துருத்தி | 436 | வரைத்தலைப் பசும்பொன் | 98 |
| 56. | திருவிளநகர் | 440 | ஒளிரிளம் பிறை | 78 |
| 57. | திருக்கோட்டாறு | 459 | கருந்தடங் | 52 |
| 58. | திருநாகைக்காரோணம் | 466 | கூனல்திங்கள் | 116 |
| 59. | திருச்சிக்கல் | 467 | வானுலாவும் மதி | 8 |
| 60. | திருக்கீழ்வேளூர் | 467 | மின்னுலாவிய | 105 |
| 61. | திருமருகல் (கோயில்புறத்து மடத்தில்) | 482 | சடையாயெனுமால் | 18 |
| 62. | திருப்புகலூர் | 490 | வெங்கள் விம்மு | 115 |
| 63. | திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் | 491 | பட்டம்பால்நிற | 92 |
| 64. | திருவிற்குடி வீரட்டம் | 497 | வடிகொள் மேனியர் | 108 |
| 65. | திருவாரூர் (ஊரின் தோற்றங்கண்டு) | 499 | பருக்கையானை | 101 |
| 66. | திருவாரூர் (ஊரின்புறம் போந்து நோக்கி) | 518 | பவனமாய்ச் சோடையாய் | 79 |
| 67. | திருஅம்பர் மாகாளம் (ஊரில் தங்கி) | 532 | புல்குபொன்னிறம் | 103 |
| 68. | திருக்கடவூர் மயானம் | 535 | வரியமறையார் | 80 |
| 69. | ஆக்கூர் | 537 | அக்கிருந்த | 42 |
| 70. | திருமீயச்சூர் | 537 | காயச்செவ்வி | 62 |
| 71. | திருத்திலதைப்பதி (முற்றம்) | 549 | பொடிகள்பூசி | 118 |
| 72. | திருவாஞ்சியம் | 573 | வன்னிகொன்றை | 7 |
| 73. | திருக்காறாயில் | 574 | நீரானே நீள்சடை | 15 |
| 74. | திருத்தேவூர் | 574 | பண்ணிலாவிய | 82 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | இரண்டாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 75. | திருநெல்லிக்கா | 574 | அறத்தாலுயிர் | 19 |
| 76. | திருக்கைச்சினம் | 574 | தையலோர்கூறு | 45 |
| 77. | திருத்தெங்கூர் | 574 | புரைசெய்வல்வினை | 93 |
| 78. | திருக்கோட்டுர் | 574 | நீலமார் தரு | 109 |
| 79. | திருக்களர் | 575 | நீருளார் | 51 |
| 80. | திருமறைக்காடு (திருக்கதவம் அடைக்க) | 587 | சதுரம் மறை | 37 |
| 81. | திருமறைக்காடு (இறைவன் திருமுன்) | 575 | பொங்குவெண்மணற் | 91 |
| 82. | திருவாய்மூர் (ஊர் எல்லையில் ஆடல் காட்சிகண்டு) | 596 | தளரிள வளரென | 111 |
| 83. | திருமறைக்காடு (மறுபடியும் வந்து) பொது | 615 | வேயுறு தோளி | 85 |
| 84. | திருஅகத்தியான் பள்ளி | 622 | வாடிய வெண்டலை | 76 |
| 85. | திருக்கடிக்குளம் | 623 | பொடிகொள் மேனி | 104 |
| 86. | திருக்கழுமலம் (பதியாது என்று பாண்டியன் கேட்டபோது) | 754 | பிரமனூர் | 70 |
| 87. | திருஆலவாய் (கூன் பாண்டியனுக்கு திருநீறு பூசும்போது) அனல்வாதம் | 764 | மந்திரமாவது நீறு | 66 |
| 88. | திருக்குறும்பலா (கும்பிட்டேத்திப் பாடியது) | 886 | திருந்தமதிசூடி | 71 |
| 89. | திருக்கேதீச்சரம் (இராமேச்சரத்திலிருந்து பாடியது) | 890 | விருதுகுன்ற | 107 |
| 90. | திருவாடானை | 891 | மாதோர் கூறுகந்து | 112 |
| 91. | திருநள்ளாறு (ஊரில் வைகி) | 903 | ஏடுமலி | 33 |
| 92. | திருத்தெளிச்சேரி | 904 | பூவலர்ந்தன | 3 |
| 93. | திருவையாறு | 945 | திருத்திகழ் | 32 |
| 94. | திருப்பாதிரிப்புலியூர் | 963 | முன்ன நின்ற | 121 |
| 95. | திருஇரும்பை மாகாளம் | 964 | மண்டுகங்கை | 117 |
| 96. | திருவாமாத்தூர் (திருமுன் அடிபோற்றி) | 967 | குன்றவார் சிலை | 50 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | இரண்டாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 97. | திருவாமாத்தூர் (பின்னர் பாடியது) | 967 | துன்னம்பெய் | 44 |
| 98. | திருக்கோவலூர் வீரட்டம் | 968 | படைகொள்கூற்றம் | 100 |
| 99. | திருஅறையணிநல்லூர் | 968 | பீடினாற்பெரி | 77 |
| 100. | திருக்கச்சியேகம்பம் | 995 | மறையானை | 12 |
| 101. | திருப்பாசூர் | 1012 | சிந்தை இடையார் | 60 |
| 102. | திருக்கேதாரம் (காளத்தியில் இருந்தபடி) | 1026 | தொண்டரஞ்சு களிறு | 114 |
| 103. | திருஇந்திரநீலப் பருப்பதம் (காளத்தியில் இருந்தபடி) | 1027 | குலவுபாரிடம் | 27 |
| 104. | திருஅனகேதங்காவதம் (காளத்தியில் இருந்தபடி) | 1027 | நீடன் மேவு | 5 |
| 105. | திருமயிலாப்பூர் (கோபுர வாயிலுக்கு வெளியே எலும்பைப் பெண்ணாக்க) | 1018 | மட்டிட்ட புன்னை | 47 |
| 106. | திருவான்மியூர் (வினாவுரை) | 1123 | கரையுலாங் கடலில் | 4 |
| 107. | திருஅரசிலி | 1135 | பாடல்வண்டறை | 95 |
| 108. | திருப்புறவார் பனங்காட்டூர் | 1135 | விண்ணமர்ந்தன | 53 |
| 109. | சீகாழி | 1148 | நம்பொருள்நம் மக்கள் | 97 |
| 110. | திருப்பிரமபுரம் (போலும், போலும்) | 1154 | கறையணி வேலிலர் | 65 |
| 111. | திருவேணுபுரம் | 1154 | நிலவும் புனலும் | 17 |
| 112. | திருவேணுபுரம் | 1154 | பூதத்தின் படையினீர் | 81 |
| 113. | திருப்புகலி | 1154 | உகலி யாழ்கடல் | 25 |
| 114. | திருப்புகலி | 1154 | உருவார்ந்த | 55 |
| 115. | திருப்புகலி | 1154 | விடையதேறி | 122 |
| 116. | சீகாழி | 1154 | நல்லானை | 11 |
| 117. | சீகாழி | 1154 | பண்ணினேர் மொழி | 49 |
| 118. | சீகாழி | 1154 | நலங்கொண்முத்துமணி | 59 |
| 119. | சீகாழி | 1154 | விண்ணியங்கு மதி | 75 |
| 120. | சீகாழி | 1154 | பொங்குவெண்புரி | 96 |
| 121. | சீகாழி | 1154 | பொடியிலங்கு | 113 |
| 122. | சேத்திரக் கோவை (பொது) | 1154 | ஆரூர்தில்லை | 39 |

# இரண்டாம் திருமுறை

## பண்முறைத் தலங்கள்

### I. இந்தளம்

1. பூந்தராய்
2. வலஞ்சுழி
3. தெளிச்சேரி
4. திருவான்மியூர்
5. அனேகதங்காவதம்
6. ஐயாறு
7. திருவாஞ்சியம்
8. சிக்கல்
9. மழபாடி
10. திருமங்கலக்குடி
11. சீகாழி
12. கச்சியேகம்பம்
13. கோழம்பம்
14. வெண்ணியூர்
15. காறாயில்
16. திருமணஞ்சேரி
17. வேணுபுரம்
18. மருகல்
19. நெல்லிக்கா
20. திருவழுந்தூர்
21. கழிப்பாலை
22. குடவாயில்
23. ஆனைக்கா
24. நாகேச்சரம்
25. புகலி
26. நெல்வாயில்
27. இந்திரநீலப்பருப்பதம்
28. கருவூரானிலை
29. புகலி
30. புறம்பயம்
31. கருப்பறியலூர்
32. ஐயாறு
33. நள்ளாறு
34. பழுவூர்
35. தென்குரங்காடுதுறை
36. இரும்பூளை
37. மறைக்காடு
38. சாய்க்காடு
39. சேத்திரக்கோவை

### II. சீகாமரம்

40. பிரமபுரம்
41. சாய்க்காடு
42. ஆக்கூர் தான் தோன்றிமாடம்
43. புள்ளிருக்குவேளூர்
44. ஆமாத்தூர்
45. கைச்சினம்
46. நாலூர்மயானம்
47. மயிலாப்பூர்
48. வெண்காடு
49. சீகாழி
50. ஆமாத்தூர்
51. களர்
52. கோட்டாறு
53. புறவார் பனங்காட்டூர்

### III. காந்தாரம்

54. புகலி
55. தலைச்சங்காடு
56. இடைமருது
57. நல்லூர்
58. குடவாயில்
59. சீகாழி
60. பாசூர்
61. வெண்காடு
62. மீயச்சூர்
63. அரிசிற்கரைப்புத்தூர்
64. முதுகுன்றம்
65. பிரமபுரம்
66. ஆலவாய்
67. பெரும்புலியூர்
68. கடம்பூர்
69. கொடுமுடி
70. கழுமலம்
71. குறும்பலா
72. திருநணா
73. பிரமபுரம்
74. பிரமபுரம்
75. சீகாழி
76. அகத்தியான்பள்ளி
77. அறையணிநல்லூர்
78. விளநகர்
79. ஆரூர்
80. கடவூர்மயானம்
81. வேணுபுரம்
82. தேவூர்

### IV. பியந்தைக் காந்தாரம்

83. கொச்சைவயம்
84. நனிப்பள்ளி
85. பொது
86. நாரையூர்
87. நறையூர்ச்சித்தீச்சரம்
88. தென்திருமுல்லைவாயில்
89. கொச்சைவயம்
90. நெல்வாயிலரத்துறை
91. மறைக்காடு
92. புகலூர்வர்த்த மானீச்சரம்
93. தெங்கூர்
94. வாழ்கொளிப்புத்தூர்
95. திருவரசிலி
96. சீகாழி

### V. நட்டராகம்

97. சீகாழி
98. துருத்தி
99. கோடிக்கா
100. கோவலூர் வீரட்டம்
101. ஆரூர்
102. சிரபுரம்
103. அம்பர் மாகாளம்
104. கடிக்குளம்
105. கீழ்வேளூர்
106. வலஞ்சுழி
107. கேதீச்சரம்
108. விற்குடி
109. கோட்டூர்
110. மாந்துறை
111. திருவாய்மூர்
112. திருவாடானை

### VI. செவ்வழி

113. சீகாழி
114. கேதாரம்
115. புகலூர்
116. நாகைக்காரோணம்
117. இரும்பை மாகாளம்
118. திருத்திலதைப்பதி
119. திருநாகேச்சரம்
120. திருமூக்கீச்சரம்
121. பாதிரிப்புலியூர்
122. புகலி

## தல விளக்க அட்டவணை

இரண்டாம் திருமுறையில் 122 பதிகங்கள் 90 தலங்களில் பாடப்பட்டுள்ளன. 2 பொதுப் பதிகங்கள்.

| | | |
|---|---|---|
| காழி | - | 22 |
| ஆமாத்தூர், ஆரூர், ஐயாறு, குடவாயில், சாய்க்காடு<br>நாகேச்சரம், மறைக்காடு, வலஞ்சுழி, வெண்காடு<br>ஆகிய 9 தலங்களில் 2 பதிகங்கள் | - | 18 |
| மற்ற தலங்களில் தலா 1 பதிகம் | - | 80 |
| மற்றும் பொது - வேயுறுதோளி, சேத்திரக் கோவை | - | 2 |
| | - | **122** |

### இரண்டாந் திருமுறையில் அமைந்துள்ள அற்புதத் திருப்பதிகங்கள்

| வ. எண் | பதிக எண் | தலம் | பதிக முதற் குறிப்பு | பயன் |
|---|---|---|---|---|
| 1. | 84 | திருநனிபள்ளி | காரைகள் கூகைமுல்லை | பாலைநிலம் நெய்தல் நிலமானது |
| 2. | 90 | திருநெல்வாயில் அரத்துறை | எந்தையீசன் ஏறமர்கடவுள் | முத்துச்சிவிகை, குடை, சின்னம் பெற்றது |
| 3. | 18 | திருமருகல் | சடையாயெனுமால் | அரவுதீண்டி இறந்த வணிகனை எழுப்பியது |
| 4. | 37 | திருமறைக்காடு | சதுரம்மறை | திருக்கதவம் அடைக்கப்பாடியது |
| 5. | 85 | பொது | வேயுறுதோளி | கோளறுபதிகம் - சமணர்களை வெல்ல மதுரைக்குப் போகுமுன் பாடியது |
| 6. | 66 | ஆலவாய் | மந்திரமாவது நீறு | கூன்பாண்டியனின் வெப்புநோய் நீங்கப்பாடியது |
| 7. | 47 | மயிலாப்பூர் | மட்டிட்ட | பூம்பாவையை எழுப்பியது |

### சொல்லணியிய-ன் மூல இலக்கியம் ஞானசம்பந்தன் செந்தமிழ் (இரண்டாம் திருமுறை)

| வ. எண் | பதிக எண் | பண் / தலம் | பதிக முதற் குறிப்பு | பதிகத்தின் சிறப்பு |
|---|---|---|---|---|
| 1. | 01 | இந்தளம் / பூந்தராய் | செந்நெலங் | வினாவுரை (வினாவுதலும், விடை கூறியருள வேண்டுதலும் அமையுமாறு பாடுவது) |
| 2. | 02 | இந்தளம் / வலஞ்சுழி | விண்டெலா | வினாவுரை (வினாவுதலும், விடை கூறியருள வேண்டுதலும் அமையுமாறு பாடுவது) |

| வ. எண் | பதிக எண் | பண் / தலம் | பதிக முதற் குறிப்பு | பதிகத்தின் சிறப்பு |
|---|---|---|---|---|
| 3. | 03 | இந்தளம் தெளிச்சேரி | பூவலர்ந்தன | வினாவுரை (வினாவுதலும், விடை கூறியருள வேண்டுதலும் அமையுமாறு பாடுவது) |
| 4. | 04 | இந்தளம் திருவான்மியூர் | கரையுலா | வினாவுரை (வினாவுதலும், விடை கூறியருள வேண்டுதலும் அமையுமாறு பாடுவது) |
| 5. | 33 | இந்தளம் (நள்ளாறு) | ஏடுமலிகொன்றை | திருவிராகம் |
| 6. அ | 73 | காந்தாரம் பிரமபுரம் | விளங்கியசீர் | சக்கரமாற்று-செந்தமிழ்மாலை |
| ஆ | 70 | காந்தாரம் பிரமபுரம் | பிரமனூர் | விகற்பச் செய்யுள், 12 ஊர்ப்பெயர்களையும் உள்ளடக்கி சக்கரமாற்றாய்ப் பாடியது |
| 7. | 74 | காந்தாரம் பிரமபுரம் | பூமகனூர் | கோமூத்திரி அந்தாதி, காழியின் 12 பெயர்களை உள்ளடக்கி 12 பாடல்களில் பாடியது |
| 8. | 97 | நட்டராகம் சீகாழி | நம்பொருள் | திருவிராகம் |
| 9. | 98 | நட்டராகம் துருத்தி | வரைத்தலை | திருவிராகம் |
| 10. | 100 | நட்டராகம் திருக்கோவலூர் | படைகொள் | திருவிராகம் |
| 11. | 101 | நட்டராகம் ஆரூர் | பருக்கையானை | திருவிராகம் |

## திருவிராகம்

இராகம் என்பது விரைந்து செல்லும் ஓசை உடையது. விரைந்து செல்லும் ஓசையும் நடையும் கொண்டதாக இப்பதிகப் பாடல்கள் அமைகின்றன.

பிற்காலத்தில் கருநாடக இசையில் கூறப்படும் இராகம் என்பதற்கும் இதற்கும் தொடர்பில்லை. சம்பந்தர் காலத்தில் பண் என்றே இராகம் குறிக்கப்பட்டது. எனவே விரைந்து செல்லும் ஓசையும் நடையும் உடைய பாடல்களைக் கொண்டு அமையும் பதிகம். இலக்கியவகை என்ற பொருளிலே இராகம் என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. சேக்கிழார் இதன் தன்மையை விளக்க நடையின் முடுகு இராகம் (பெரியபுராணம் 2175) என்று விளக்கியுள்ளார். நடை ஓசையையும், முடுகு விரைந்து செல்வதையும் குறிக்கும். முடுகு என்பதால் விரைந்து அழுத்தமான தாளம் என்ற பொருளும் கிடைக்கும். இவ்வகையில் சம்பந்தர் 41 பதிகங்களைப் பாடி உள்ளார். இசை

காரணமாக இந்த இலக்கிய வகை அமைவதால் சம்பந்தருக்கு மிகவும் விருப்பமான இலக்கிய வகை இது. இலக்கிய வகைகளில் எந்த அளவிற்குப் புதுமைகளைச் செய்தாரோ அந்த அளவிற்கு இசையிலும் சம்பந்தர் ஈடுபட்டுப் பல புதுமைகளைச் செய்துள்ளார் என்பதற்குத் திருவிராகம் சான்று.

## சக்கரமாற்று

இந்த இலக்கிய வகையில் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். இரண்டும் சீகாழியைப் பற்றியது. சீகாழியில் இருந்தபோது ''விளங்கிய சீர்ப் பிரமன் ஊர்'' (சம்பந்தர் தேவாரம் 2.73) என்பதைப் பாடினார். மதுரையில் பாண்டியனுடைய வெப்பு நோயைத் தீர்ப்பதற்காக அரண்மனைக்குச் செல்கிறார். அரசன் அவரிடம் தங்கள் ஊர் யாது? என்று கேட்டபோது அவனுக்குப் பதில் சொல்லுவதாகத் ''திருக்கழுமலம் நாம் பரவும் ஊரே'' என்று விடைகூறுவதாக அமைந்த (2.70) பதிகம் மற்றது. சீகாழிக்குப் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலம் ஆகிய 12 பெயர்கள் உள்ளன. இவையாவும் சக்கரம் போலச் சுழன்று சுழன்று வருவதால் சக்கரமாற்று என்ற பெயர் பெற்றது. இதுவும் ஒருவகைச் சித்திரக்கவி. பிரமபுரத்தில் பாடிய விளங்கிய சீர் என்று தொடங்கும் பதிகத்தில் 12-ஆம் பாடலில், இச்சக்கரம் சீர்த் தமிழ் விரகன்தான் சொன்ன தமிழ் என்ற சம்பந்தர் குறித்துள்ளார். எனவே இப்புதிய இலக்கிய வகையின் பெயர் சக்கரம் என்பதையும் அவரே குறித்துள்ளார். புதிய இலக்கிய வகையை அதன் பெயருடன் அவர் குறித்துள்ளது புதுமை படைப்பதில் அவருக்கிருந்த ஈடுபாட்டைக் காட்டும். சீர்காழியின் 12 பெயர்களுக்கேற்ப இப்பதிகங்களும் 12 பாடல்களைக் கொண்டுள்ளன.

## கோமூத்திரி அந்தாதி

பிரமபுரத்தில் சம்பந்தர் பாடிய ''பூமகன் ஊர்'' (சம்பந்தர் தேவாரம் 2.74) என்னும் பதிகம் இவ்வகையில் அமைந்தது. இதிலும் 12 பாடல்கள் உள்ளன. சீர்காழியின் 12 பெயர்கள் ஒவ்வொரு பாடலிலும் இடம் பெறுமாறு பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாட்டின் இறுதிச்சொல் அடுத்த பாடலின் முதல் சொல்லாக வருமாறு அந்தாதி அமைப்பில் (ஒன்றின் அந்தம் அடுத்ததின் ஆதி) இப்பதிகம் அமைந்துள்ளது. சான்றாக முதல் பாடல் ஈற்றடியில் ''கருதும் ஊரே'' என்பது இரண்டாம் பாடலின் ''கருத்துடைய'' என்று தொடங்குகிறது. 12-ஆம் பாடலில் ''வழிமுடக்கும் ஆவின் பாச்சல்'' என்று சம்பந்தர் இதற்கு அழகான தமிழ்ப் பெயர் தந்துள்ளார். ஆவினுடைய பாய்ச்சல் வழி முடக்கி முடக்கி அமைவது போல இது அமையும். இதைப் பிற்காலத்தில் கோமூத்திரி என்று குறிப்பிட்டுள்ளனர்.

## திருப்பதிக்கோவை (க்ஷேத்திரக் கோவை)

இறைவன் வீற்றிருக்கும் பல்வேறு தலங்களை ஒரு சேரக் கோவையாகத் தொகுத்துப் பாடும் இலக்கிய வகை திருப்பதிக் கோவையாகும். தாம் வாழ்நாளில் எல்லாம் கண்டு வழிபட்டுப் பதிகம் பாடிய சம்பந்தர் இறுதி நாட்களில் சீகாழியில் ''ஆரூர் தில்லையம்பலம்'' (சம்பந்தர் தேவாரம் 2.39) என்னும் பதிகத்தை இவ்வகையில் பாடியுள்ளார். தாம் நாளும் தரிசித்த தலங்களை நினைவு கூர்ந்து கோவையாகப் பாடுகிறார். இதனை ''அமரர் பெருமான் பதியான உன்னி'' என்று 11-ஆம் பாடலில் அவரே கூறுகிறார். இறைவனுடைய பாடல் பெற்ற தலங்களும், வைப்புத் தலங்களும் (தனியான பதிகம் பெறாமல் வேறு தலத்தைக் கூறும் போது பெயர் மட்டுமாகச் சுட்டப்படுவது வைப்புத்தலமாகும்) இப்பதிகத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. தமிழில் முதன்முதலாக அமைந்த திருப்பதிக்கோவை இலக்கிய வகைக்குரிய முதல் பதிகம் இதுதான். பிற்காலத்தில் நாவுக்கரசர் உட்பட பலரும் இதைப் பாடியுள்ளனர். சம்பந்தர் ஊர்ப்பெயர்களை வரிசையாகத் தொகுக்காமல், ஊர், மலை, பள்ளி, குன்றம், குடி என்று ஊர்ப் பெயரின் இறுதிச் சொல்லின் அடிப்படையில் திருப்பதிகளைத் தொகுத்துள்ளார். அவரிடம் காணப்பட்ட கணிதப் புலமை, அதன் அடிப்படையிலான எண்ணலங்காரம், அவருடைய நினைவாற்றல் என்பன இன்றும் வியத்தற்குரியன. மூன்றாம் பாடலில்,

> ''அட்டானம் என்றுஓதிய நால் இரண்டும்
> அழகன் உறை காஅனைத்தும் துறைகள்
> எட்டுஆம் திருமூர்த்தியின் காடு ஒன்பதும்
> குளம் மூன்றும் களம் அஞ்சும் பாடி நான்கும்
> மட்டுஆர் குழலாள் மலை மங்கை பங்கன்
> மதிக்கும் இடம் ஆகிய பாழிமூன்றும்''

என்று வருவது அவருடைய கணிதப் புலமையைக் காட்டும். பின் வந்த யாரும் திருப்பதிக் கோவையை இவ்வளவு நுட்பத்துடன் பாடவில்லை. திருப்பதிக்கோவை என்னும் பெயரில் ஊர்ப்பெயர்களை இவ்வாறு தொகுத்துத் தரும் தொகை நூல் முயற்சி தமிழில் சம்பந்தரால் முதன்முதலாகத் தொடங்கி வைக்கப்படுகிறது.

# இரண்டாம் திருமுறையில் திருக்கடைக்காப்புத் தொகுப்பு

இரண்டாந் திருமுறையின் 122 பதிகங்களின் திருக்கடைக் காப்புகளும் பட்டியலிடப்பட்டு ஞானசம்பந்தர் சொன்ன பதிகப் பயன்களில் எந்தப் பதிகப் பயனுக்கு அவர் மிக அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளார் என்று ஆராயப்பட்டு தொகுத்தளிக்கப்பட்டுள்ளது.

| பதிக எண் | திருக்கடைக்காப்பு |
|---|---|
| 1. | **இந்தளம்**<br>பூந்தராய் - பரவு சொன்மாலை பத்தும் வல்லார் அகல்வர் தீவினை நல்வினை யோடுடனாவரே. |
| 2. | திருவலஞ்சுழி - ஞானசம்பந்தன் செந்தமிழ் கொண்டிசை பாடும் ஞானம் வல்லாரடி சேர்வது ஞானமே. |
| 3. | திருத்தெளிச்சேரி - பாடல்கள் பத்தும் வல்லார்கள் தடமுடித்தொக்க வானவர் சூழ விருப்பவர் சொல்லிலே. |
| 4. | திருவான்மியூர் - ஞானசம்பந்தன் சொல் நீதியால் நினைவார் நெடுவானுலகாள்வரே. |
| 5. | திருஅனேகதங்காவதம் - அல்லல் தீரவுரை செய்த அனேகதங்காவதம் சொல்ல நல்லவடையும் மடையா சுடுதுன்பமே. |
| 6. | திருவையாறு - சம்பந்த னொண்டமிழ் பத்தும் வல்லார்கள் போய் மலிகொள் விண்ணிடை மன்னிய சீர் பெறுவார்களே. |
| 7. | திருவாஞ்சியம் - ஞானசம்பந்தன் செந்தமிழ் ஒன்று முள்ள முடையார் அடைவார் உயர் வானமே. |
| 8. | திருச்சிக்கல் - பதிகத்தின் பாடல்கள் அனைத்தும் பயன் சொல்கின்றன. 1. வினையாயின நையுமே 2. அல்லல் அறுப்பாரே 3. பாவம் பறையுமே 4. வினையாவது தேய்வது திண்ணமே 5. திருநாளுந்தகையுமே 6. மதியாய் கதியாகவே 7. வினையோயவே 8. வினை யாயினவோயவே 9. பறையும் நம்பாவமே 10. பணிமின்பிணி போகவே - கடைக்காப்பு - செந்தமிழ் வல்லவர் வானிடை வெந்த நீறணியும் பெருமானடிமேவரே. |
| 9. | திருமழபாடி - திருகடைக்காப்புப் பாடல் நிறைவடையவில்லை. |
| 10. | திருமங்கலக்குடி - ஞானசம்பந்தன் சொல் முந்தியேத்த வல்லார் இமையோர் முதலாவரே. |
| 11. | சீர்காழி - ஞானசம்பந்தன் றமிழார மொழிவார்கள் மூவுலகும் பெறுவார்களே. |
| 12. | திருக்கச்சியேகம்பம் - காழியூரன் கலிக்கோவையால் சந்தமே பாட வல்ல தமிழ் ஞானசம்பந்தன் சொற்பாடியாடக் கெடும்பாவமே. |
| 13. | திருக்கோழம்பம் - கோழம்பமேவிய பத்திவை பண்கொளப் பாடவல்லார்க்கில்லை பாவமே. |

| | |
|---|---|
| 14. | திருவெண்ணியூர் - உருவாரும் ஒண்டமிழ்மாலை இவைவல்லார் யொருவாகப் புக்கிருப்பார் புவலோகத்தே. |
| 15. | திருக்காறாயில் - ஞானசம்பந்தன் சொல் வாய்ந்தவாறேத்துவார் வானுலகாள்வாரே. |
| 16. | திருமணஞ்சேரி - மணஞ்சேரி பண்ணார பாடவல்லார்க்கில்லை பாவமே. |
| 17. | திருவேணுபுரம் - நலமார்தரு ஞானசம்பந்தன் சொன்ன குலமார் தமிழ் கூறுவர் கூர்மையரே. |
| 18. | திருமருகல் - ஞானசம்பந்தன் பாடல்வல்லார் வியன் ஞாலமெல்லாம் விளங்கும் புகழே |
| 19. | திருநெல்லிக்கா - ஞானசம்பந்தன் சொன்ன பகர்வாரவர் பாவமிலாதவரே. |
| 20. | திருஅழுந்தூர் - திருஞானசம்பந்தன் செந்தமிழ்கள் உரு ஞானமுண்டாம் உணர்ந்தார் தமக்கே. |
| 21. | திருக்கழிப்பாலை - ஞானசம்பந்தன் சொல் வழிபாடிவை கொண்டடி வாழ்த்த வல்லார் கெழியாரிமையோரொடு கேடிலரே. |
| 22. | திருக்குடவாயில் - புகலித் தமிழார் விரகன் வடமார் தமிழ் வல்லவர் நல்லவரே. |
| 23. | திருவானைக்கா - பண்ணோடிவை பாடிய பத்தும் வல்லார் விண்ணோரவர் ஏத்த விரும்புவரே. |
| 24. | திருநாகேச்சரம் - நலமார் திருநாகேச்சரத்தரனைச் சொலன்மாலைகள் சொல்ல நிலாவினையே. |
| 25. | திருப்புகலி - சொல்லுமாலையீரைந்தும் வல்லவர்க்கில்லையாம் வினையிரு நிலத்துளே. |
| 26. | திருநெல்வாயில் - பண்பயன் கொளப்பாட வல்லவர் விண்பயன் கொளும் வேட்கையாளரே. |
| 27. | திருஇந்திரநீலப்பருப்பதம் - ஞானசம்பந்தன் பாடல் கொண்டோதி வாழ்மினே. |
| 28. | திருக்கருவூரானிலை - எந்தையைச் சொன்ன பத்தும் வல்லவர் சிந்தையில் துயராய தீர்வரே. |
| 29. | திருப்புகலி - பந்தனுரை செந்தமிழ்கள் பத்துமிசை கூர வந்தவண மேத்துமவர் வானமுடையாரே. |
| 30. | திருப்புறம்பயம் - புறம்பயமமர்ந்த தமிழ்வல்லார் பெரும்பிணி மருங்கற வொருங்குவர் பிறப்பே. |
| 31. | திருக்கருப்பறியலூர் - தமிழ்க்கிளவி பத்தும் இவை கற்று வலந்தரு மவர்க்கு வினை வாடலெளிதாமே. |
| 32. | திருவையாறு - பூசுரன் உரைத்ததமிழ் பத்தும் இவை வல்லார் நேசமலிபத்தரவர் நின்மலன் அடிக்கே. |
| 33. | திருநள்ளாறு - காழிவளர் பந்தனது செஞ்சொல் பாடலுடையாரை யடையா பழிகள் நோயே. |

| | |
|---|---|
| 34. | திருப்பழுவூர் - பந்தனுரை பேணி வந்தவண மேத்துமவர் வானமுடையாரே. |
| 35. | தென்குரங்காடுதுறை - தமிழ்மாலை பத்துந் தொழுதேத்த வல்லாரவர் வானவ ரோடுறைவாரே. |
| 36. | திருஇரும்பூளை - செந்தண்டமிழ் செப்பிய பத்திவை வல்லார் பந்தம் மறுந்தோங்குவர் பான்மையினாலே. |
| 37. | திருமறைக்காடு - ஈரைந்திவை வல்லார் வாழியுலகோர் தொழ வானடைவாரே. |
| 38. | திருச்சாய்க்காடு - பத்தும் ஊனமின்றி யுரைசெய வல்லார் தாம்போய் வானநாடினி தாள்வரிம் மானிலத்தோரே. |
| 39. | திருசேத்திரக்கோவை - விரும்பும் மடியார் விதியார் பிரியார் சிவன் சேவடிக்கே. |
| | **சீகாமரம்** |
| 40. | திருப்பிரமபுரம் - பத்துமிவை வல்லார் பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. |
| 41. | திருச்சாய்க்காடு - சம்பந்தன் தமிழ் பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும் எம்பந்த மெனக்கருதி யேத்துவார்க்கிடர் கெடுமே. |
| 42. | திருவாக்கூர்த் தான்தோன்றிமாடம் - பாடலிவை வல்லார்க்கு இல்லையாம் பாவமே. |
| 43. | திருப்புள்ளிருக்கு வேளூர் - காழிக்கவுணியன் சம்பந்தன் சொல்மடியாது சொல்ல வல்லார்க்கில்லையாம் மறுபிறப்பே. |
| 44. | திருவாமாத்தூர் - ஞானசம்பந்தன் பாடலிவை வல்லார்க்கில்லையாம் பாவமே. |
| 45. | திருக்கைச்சினம் - பயின்றஇவை வல்லார் விண்ணவராயோங்கி வியனுலகம் ஆள்வாரே. |
| 46. | திருநாலூர் மயானம் - நாலூர் மயானத்தைச் சீலம் புகழார் சிறந்தேத்த வல்லாருக்கேலும் புகழ்வானத் தின்பாயிருப்பாரே. |
| 47. | திருமயிலாப்பூர் - செந்தமிழான் ஞானசம்பந்தனலம் புகழ்ந்த பத்தும் வல்லார் வான சம்பந்தத்தவரோடும் வாழ்வாரே. |
| 48. | திருவெண்காடு - பாடிய பத்திவை வல்லார் மண்பொலிய வாழ்ந்தவர் போய் வான் பொலியப்புகுவாரே. |
| 49. | சீகாழி - ஞானசம்பந்தன் செந்தமிழுரை உயருமா மொழிவார் உலகத்துயர்ந்தாரே. |
| 50. | திருவாமாத்தூர் - பாடல் பத்தும் வல்லார் பரலோகஞ் சேர்வாரே. |
| 51. | திருக்களர் - ஞானசம்பந்தன் சொல்லிவை பத்தும் பாடத்தவமாமே. |
| 52. | திருக்கோட்டாறு - மாலை பத்தும் வல்லார்க் கெளிதாகும் வானகமே. |
| 53. | திருப்புறவார் பனங்காட்டூர் - ஆய்ந்த நான்மறை ஞானசம்பந்தன் செய்யுள் பாட வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. |

| | **காந்தாரம்** |
|---|---|
| 54. | திருப்புகலி - தெரிந்த பாடலிவை வல்லார் எப்பரிசில் இடர் நீங்கி இமையோருலகத்திருப்பாரே. |
| 55. | திருத்தலைச்சங்காடு - உரைத்த பாடலிவை வல்லார் மிளிருந்திரை சூழ்ந்த வையத்தார்க்கு மேலாரே. |
| 56. | திருவிடைமருதூர் - பாடலிவை பத்தும் சொல்லுவார்க்குங் கேட்பாருக்குந் துயரமில்லையே. |
| 57. | திருநல்லூர் - பயில்பாடல் சிந்தனையால் உரை செய்வார் சிவலோகஞ் சேர்ந்திருப்பாரே. |
| 58. | திருக்குடவாயில் - பாடலிவை வல்லார் தளர்வான தானொழியத்தகுசீர் வானத்திருப்பாரே. |
| 59. | சீகாழி - தமிழ்களிவை வல்லார் வாழி நீங்கா வானோருலகின் மகிழ்வாரே. |
| 60. | திருப்பாசூர் - பாடலிவை வல்லார் ஊனமிலராய் உம்பர் வானத்துறைவாரே. |
| 61. | திருவெண்காடு - ஞானசம்பந்தன் தமிழ் வல்லார்க்கு அடையா வினைகள் அமரலோகம் ஆள்வாரே. |
| 62. | திருமீயச்சூர் - தமிழீரைந்து மொழிந்துள்கி ஆடுமடியாரகல் வானுலகம் அடைவாரே. |
| 63. | திருவரிசிற்கரைப்புத்தூர் - செப்பவல்லார்கள் அறவன் கழல்சேர்ந் தன்போடின்ப மடைவாரே. |
| 64. | திருமுதுகுன்றம் - பாடவல்லார்கள் பிறையார் சடையெம் பெருமான் கழல்கள் பிரியாரே. |
| 65. | திருப்பிரமபுரம் - ஞானசம்பந்த னவின்றன பத்தும் வல்லார்கள் விண்ணவ ரோடினிதாக வீற்றிருப்பாரவர் தாமே. |
| 66. | திரு ஆலவாய் - சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லார் நல்லவர் தாமே. |
| 67. | திருப்பெரும்புலியூர் - தமிழ்மாலை வல்லவர் தந்துயர் நீங்கி நிறைவளர் நெஞ்சினராகி நீடுலகத்திருப்பாரே. |
| 68. | திருக்கடம்பூர் - பாடல் பயில்வார் பழியொடு பாவமிலாரே. |
| 69. | திருப்பாண்டிக் கொடுமுடி - பத்துஞ் சொல்ல வல்லார் துயர் தீர்ந்து நலமல்குசிந்தையராகி நன்னெறியெய்துவர் தாமே. |
| 70. | திருக்கழுமலம் - சொன்ன மேவியிசை மொழிவார் விண்ணவரின் எண்ணுதலை விருப்புளாரே. |
| 71. | திருக்குறும்பலா - பாடலிவை பத்தும் வல்லார் விரும்பிக் கேட்பார் தம்பால வினைகள் போயகல நல்வினைகள் தளராவன்றே. |
| 72. | திருநணா - ஏத்துபாடல் வல்வித்தகத்தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின் மேலே. |
| 73. | திருப்பிரமபுரம் - திருச்சக்கரமாற்று - செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுள். தமிழ் விரகன் தான் சொன்ன தமிழ் தரிப்போர் தவஞ்செய்தோரே. |

| | |
|---|---|
| 74. | திருப்பிரமபுரம் - திருக்கோ மூத்திரி அந்தாதி - ஞானசம்பந்தன் தமிழ் கற்போர் தக்கோர் தாமே. |
| 75. | சீகாழி - மூன்றுந் தமிழிற்றெரிந்திசை பாடுவார் விண்ணும் மண்ணும் விரிகின்ற தொல் புகழாளரே. |
| 76. | திருவகத்தியான்பள்ளி - தொழுதேத்திய மாலைவல்லாரவர் தங்கண் மேல் வினைமாயுமே. |
| 77. | திருவறையணிநல்லூர் - முக்கண் மூர்த்திதன் றாள் தொழக் கெழுவினாரவர் தம்மொடுங் கேடில்வாழ்பதி பெறுவரே. |
| 78. | திருவிளநகர் - இன்புறுதமிழாற் சொன்ன ஏத்துவார் வினைநீங்கிப் போய்த் துன்புறு துயரமிலர்தூநெறி பெறுவார்களே. |
| 79. | திருவாமூர் - ஈசனை ஏத்துபாடல் சொல்லவே வல்லவர் தீதிலார் ஓதநீர்வையகத்தே. |
| 80. | திருக்கடவூர்மயானம் - பந்தன் செஞ்சொன் மாலை இரவும் பகலும் பரவி நினைவார் வினைகளிலரே. |
| 81. | திருவேணுபுரம் - கடைக்காப்பு பாடல் இல்லை. |
| 82. | திருத்தேவூர் - எல்லையில் புகழ் மல்கிய வெழில்வளர் தேவூர்த் தொல்லை நம்பனைச் சொல்லியபத்தும் வல்லாரே. |
| | **பியந்தைக் காந்தாரம்** |
| 83. | திருக் கொச்சைவயம் - தமிழ்மாலை பாடுமவர் போய் அறைகழலீசன் ஆளும் நகர்மேவி என்றும் அழகா விருப்பதறிவே. |
| 84. | திருநனிபள்ளி - இசையாலுரைத்த பனுவல் நடுவிருளாடு மெந்தை நனிபள்ளியுள்க வினை கெடுதல் ஆணைநமதே. |
| 85. | பொது - ஆன சொல்மாலையோதும் அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே. |
| 86. | திருநாரையூர் - உரை மாலை பத்தும் மொழிவார் திருவளர் செம்மையாகி யருள் பேறுமிக்கதுளதென்பர் செம்மையினரே. |
| 87. | திருநறையூர்ச்சித்தீச்சரம் - உரைத்த தமிழ் மாலை பத்து நினைவார் வானநிலாவ வல்லர் நிலமெங்கு நின்று வழிபாடு செய்யுமிகவே. |
| 88. | தென்திருமுல்லைவாயில் - ஒண்டமிழ்களின் அணிகொண்ட பத்து மிசைபாடு பத்தர் அகல் வானமாள்வர் மிகவே. |
| 89. | திருக்கொச்சைவயம் - சந்தமார்ந்தழகாய தண்டமிழ் மாலை வல்லோர் போய் முந்தி வானவரோடும் புகவலர் முனைகெட வினையே. |
| 90. | திருநெல்வாயில் அரத்துறை - பாடல் மொழியும் மாந்தர் தம் வினைபோய்ப் பறையும் ஐயுறவில்லைப் பாட்டிவை பத்தும் வல்லார்க்கே. |
| 91. | திருமறைக்காடு - செந்தமிழ் பத்துஞ் சிந்தையுட் சேர்க்கவல்லார் போய்ப் பொய்யில் வானவரோடும் புகவலர் கொளவலர் புகழே. |
| 92. | திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் - தண்டமிழ்பத்தும் எங்குமேத்தவல்லார்கள் எய்துவர் இமையவருலகே. |

| | |
|---|---|
| 93. | திருத்தெங்கூர் - சந்தமாயின பாடற் றண்டமிழ் பத்தும் வல்லார்மேல் பந்தமாயின பாவம் பாறுதல் தேறுதல் பயனே. |
| 94. | திருவாழ்கொளிப்புத்தூர் - தமிழிவை வல்லார் நலங்கொள் சிந்தையராகி நன்னெறியெய்துவர் தாமே. |
| 95. | திருவரசிலி - தமிழ்பத்திவை நாளும் சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்த அமரர் தொழுதேத்த வல்லவானுலகெய்தி வைகலு மகிழ்ந்திருப்பாரே. |
| 96. | சீகாழி - திருக்கடைக்காப்பு நிறைவடையவில்லை. |
| 97. | **நட்டராகம்**<br>சீர்காழி - ஞானசம்பந்தன் உரைத்த பாடல் வல்லவர் மிக்க வின்பமெய்தி வீற்றிருந்து வாழ்தன் மெய்ம்மையே. |
| 98. | திருத்துருத்தி - பகர்ந்த சொற்களால் பெற்ற மொன்றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே குற்றமுற்று மின்மையிற் குணங்கள் வந்துகூடுமே. |
| 99. | திருக்கோடிக்கா - ஞானசம்பந்தன் தமிழ் வல்லார் பாவமான பாறுமே. |
| 100. | திருக்கோவலூர் வீரட்டம் - சொன்ன சொற் பாவ நாசமாதலால் ஏத்துமின் கோவலூர்தனுள். |
| 101. | திருவாரூர் - ஞானசம்பந்தன் நாவின் இன்னுரை வல்ல தொண்டர் வானமாளவல்லர் வாய்மையாகவே |
| 102. | திருச்சிரபுரம் - பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லவர் பரமனைப் பணிவாரே (எல்லாப் பாடல்களிலும் வினைதீர்க்கும் உண்மை) |
| 103. | திருஅம்பர்மாகாளம் - ஞானசம்பந்தன் தமிழ் மாலை கூறுவாரையுங் கேட்க வல்லாரையுங் குற்றங்கள் குறுகாவே. |
| 104. | திருக்கடிக்குளம் - கடிக்குளத் தமர்வானை இனமலிந்திசை பாடவல்லார்கள் போய் இறைவனோடு உறைவாரே. |
| 105. | கீழ்வேளூர் - சம்பந்தன் தெருண்ட பாட வல்லாரவர் சிவகதி பெறுவது திடமாமே. |
| 106. | திருவலஞ்சுழி - தமிழ்மாலை ஆதரித்திசை கற்றுவல்லார் சொலக் கேட்டு உகந்தவர் தம்மை வாதியாவினை மறுமைக் குமிம்மைக்கும் வருத்தம் வந்தடையாவே. |
| 107. | திருக்கேதீச்சரம் - பாமாலைப் பாடலாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே. |
| 108. | திருவிற்குடி வீரட்டம் - தமிழ்மாலை வலங்கொடேயிசை மொழியுமின் மொழிந்தக்கால் மற்றது வரமாமே. |
| 109. | திருக்கோட்டூர் - தமிழ் மாலைகள் வல்லவர் தாங்குவர் புகழாலே. |
| 110. | திருமாந்துறை - ஞானசம்பந்தன் நன்புறுமாலை பரவிடுந் தொழில் வல்லவர் அல்லலும்பாவமும் இலர்தாமே. |
| 111. | திருவாய்மூர் - ஞானசம்பந்தன் தமிழ்மாலை தங்கிய மனத்தினால் தொழுது எழுவார் தமர்நெறியுலகுக் கோர் தவநெறியே. |
| 112. | திருவாடானை - நாடி ஞானசம்பந்தன் செந்தமிழ் பாட நோய் பிணி பாறுமே. |

| | செவ்வழி |
|---|---|
| 113. | சீர்காழி - தமிழ் விரகன் சொன்னவிவை பாடியாடக் கெடும் வினைகளே. |
| 114. | திருக்கேதாரம் - அருந்தமிழ்கள் பத்தும் இசை வல்லவர் வேந்தராகி உலகாண்டு வீடுகதி பெறுவரே. |
| 115. | திருப்புகலூர் - ஞானசம்பந்தன் சொன்ன தமிழ்பாடி யாடக்கெடும் பாவமே. |
| 116. | திருநாகைக் காரோணம் - வல்லவாறே புனைந்தேத்தும் காரோணத்துவண்டமிழ் சொல்லுவார்க்கும் இவை கேட்பவர்க்குந் துயரில்லையே. |
| 117. | திருவிரும்பைமாகாளம் - ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் பாடவல்லார் பழிபோகுமே. |
| 118. | திருத்திலதைப்பதி - தமிழ் ஞானசம்பந்தன் மாலை பழிதீர நின்றேத்த வல்லார்கள் போய்ச் சிந்தை செய்வார் சிவன் சேவடி சேர்வது திண்ணமே. |
| 119. | திருநாகேச்சரம் - ஞானசம்பந்தன் நாவிற் பனுவல் இவை பத்தும் வல்லார்கள் போய் எந்தையீசன் இருக்கும் உலகை எய்த வல்லார்களே. |
| 120. | திருமூக்கீச்சரம் - ஞானசம்பந்தன் சொல்ல வல்லாரவர் வானுலகாளவும் வல்லரே. |
| 121. | திருப்பாதிரிப்புலியூர் - சந்தமாலைத் தமிழ் பத்திவை தரித்தார்கண்மேல் வந்து தீயவ்வடையாமையால் வினைமாயுமே. |
| 122. | திருப்புகலி - பத்துமிவை செப்பவல்லார் சிவலோகத்தில் எய்தி நல்ல இமையோர்களேத்த விருப்பார்களே. |



## திருஞானசம்பந்தரின் இரண்டாந்திருமுறைத் திருப்பதிகத் திருக்கடைக் காப்புகளின் பயன்களின் தொகுப்பு

| வ.எண் | பதிகப் பயன் | பதிக எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | வானுலகம் பெறுவர் | 36 |
| 2. | இடர், துன்பம், பாவம் கெடும் | 29 |
| 3. | சிவகெதி | 20 |
| 4. | வினை | 16 |



# திருஞானசம்பந்தரும் - திருத்தல வழிபாடுகளும்.

திருக்கோயில் வழிபாடு பற்றிய சரியையினை உள்ளடக்கிய கிரியை நிலையை உலகிற்கு எடுத்துக்காட்டி அதன் மூலம் உலகையும், உலகமக்களையும் வழிப்படுத்த வேண்டுமென்ற நோக்கில் திருஞானசம்பந்தப் பெருமான் தலங்கள் தோறும் சென்று மக்களை நெறிப்படுத்தினார். எச்செயலைச் செய்தாலும் ஐந்தெழுத்து ஓதியபின் தான் செய்தல், ஒரு தலத்தினின்று புறப்படும்போது இறைவரது அருள் விடைபெற்றுச் செல்லுதல், ஒரு தலத்தைக் குறித்து செல்லும்போது இடையிலும், மருங்கிலும் உள்ள தலங்களிலும் சென்று வணங்குதல். மாலற நேயமும், மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத் தொழுதல் என்ற மரபுகளைப் பின்பற்றியே தலப்பயணம் செய்து வந்த சம்பந்தப்பெருமான் தந்தையார் தோளிலிருந்த வண்ணமும், நின்ற, நடந்த வண்ணமுமாகவும், சிவிகையில் அமர்ந்தவண்ணமும், சுவாமியின் திருமுன்னரும், ஆலயத்திலும், சுவாமியையோ, ஆலயத்தையோ, நகரையோ வலம் வரும்போதும், தேமதுரத் தமிழால் பல்வேறுவிதமான பண்ணிசைகளால், சிவபரம்பொருளைப்பாடிப் பரவியுள்ளார்.

இன்றைய சுற்றுச்சூழல் வல்லுநர்களின் கருத்துக்களை / கண்டுபிடிப்புகளைப் பற்றி ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சொன்னவர் ஆளுடைப்பிள்ளையார் ஆவார். மரம் நடுதல், தலமரங்களைப் பாதுகாத்தல், குளம், நீர் நிலைகளை உருவாக்கிப் பராமரித்தல், அனைத்து இயற்கை வளங்களைப் பேணுதல். 84 லட்சம் யோனி பேதங்களுடன் உயிருறவு கொண்டு இன்புறுதல் என்ற கருத்துக்களுக்குப் பல பாடல்களில் முன்னுரிமை கொடுத்துள்ளார். இறைவன் அவர்மாட்டுப் பல அற்புதங்களை நிகழ்த்தினார். அவரும் மக்கள்மாட்டுப் பல அற்புதங்களை / செயற்கரிய செயல்களைச் செய்து காட்டினார். தமிழ், தமிழ் என்று அவர் சொன்னதுபோல் தமிழ்நாட்டில் தமிழ் பாடிய வேறு எந்தப் புலவரும் சொன்னதில்லை. தமிழ்கூறும் எல்லைகளுக்கு அப்பால் அவர் செல்லவில்லை. அந்த முத்தமிழ் விரகன் ஓதிய செந்தமிழ் மாலையில்தான் பரசமய நிராகரணமும், சைவ விளக்கமும், தாபனமும் நடந்தேறின. போக்குவரத்து வசதிகளில்லாத அந்தக்காலத்தில் சுமார் 220 தலங்களுக்கு அடியார் பெருமக்களுடன் யாத்திரைசெய்து 385 பதிகங்களைப் பாடி நாமெல்லாம் உய்யும் நெறி காண்பித்தார். திருஞானசம்பந்தர் என்ற ஒருவர் இல்லையானால் தமிழ், தமிழ்ப் பண்பாடு, நாகரிகம், மரபு என்பன அழிந்தே போயிருக்கும் என்பதை உணர்ந்தவரான, அறுபத்துமூன்று நாயன்மார்கள் புராணமெழுதிய சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைபாதி – புராணம்பாதி என்று சொல்லுமளவு பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் வரலாற்றை 1256 பாடல்களில் விளக்கியுள்ளார். தாம் அவதரித்த சீகாழி மிகத் தொன்மையான ஊரென்றும் அதற்குப் பிரமபுரம் முதல் கழுமலம் ஈறாக 12 பெயர்கள் உள்ளதென்றும் தமது வழிபடுதெய்வம் – ஞானம் நல்கிய தோணியப்பரை இமைப்பொழுதும் மறவாமல் பாடி வாழ்த்தியதன் மூலம் நாம் ஒவ்வொருவரும் பிறந்த ஊரையும், நாட்டையும், வழிபடு தெய்வத்தையும் எந்நிலையில் நின்றாலும் மறக்கக்கூடாது என்றதொரு அரிய கருத்தினை ஆணித்தரமாகப் பல இடங்களில் எடுத்துரைத்துள்ளார்.

ஆறுமுறை தலப்பயணம் மேற்கொண்ட அவர் ஒவ்வொரு முறையும் சீகாழியில் தொடங்கிச் சீகாழியிலேயே முடிப்பார். ஐந்தாவது தலப்பயணம் மிக நீண்டது. ஏழாவது பயணம் திருமணப்பயணமாக அமைந்தது. முருகப்பெருமானுக்கு அடுத்தபடியாகக் கல்வியில் கரைகண்ட புலவனென்று திருஞானசம்பந்தரைத்தான் சொல்லவேண்டும் என்று போற்றுமளவு தெய்வப்பண்பு, கல்வி, செல்வம், வீரம், பண்பாடு அனைத்தும் நிரம்பியிருந்தன அவருடைய திருப்பாடல்களில், துன்ப வினைகளிலிருந்து நாம் உய்திபெறச் சம்பந்தப்பெருமான் பாடல்களே போதும் : வேறு எதுவும் தேவையில்லை.

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| 1. | **முதல்தல வழிபாடு**<br>பிரமபுரம்-திருகோலக்கா, வேணுபுரம்<br>1, 6, 1998-2003 | ஐந்தெழுத்து எழுதப்பட்டு அம்மையால் ஓசை கொடுக்கப்பட்ட பொற்றாளம் பெறுதல் | தந்தையாரது தோளில் அமர்ந்து வருகிறார். |
| 2. | **இரண்டாவது தல வழிபாடு**<br>புகலி-திருநனிப்பள்ளி, தலைச்சங்காடு, திருவலம்புரம் (மேலப்பெரும்பள்ளம்) திருபல்லவனீச்சரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லைவாயில், வெங்குரு<br>7, 20, 2010 - 2025 | திருஞானசம்பந்தரின் தாயார் ஊரான திருநனிப்பள்ளியில் பாலை நிலம் நெய்தலாகப் பாடுதல். | இறைவனைப்போற்றுவோர் மண்புகார் -2020 திருநனிப்பள்ளி அந்தணர்களின் வேண்டுகோளை ஏற்று அப்பகுதிக்குச் செல்கிறார். அருளாளர்களை அழைத்து வரவேற்று உபசரிப்பதால் நன்மைகள் நடக்கும். |
| 3. | **மூன்றாவது தல வழிபாடு**<br>தோணிபுரம், திருமகேந்திரப்பள்ளி, குருகாவூர், திருமுல்லைவாயில், கலிக்காமூர், பூந்தராய்<br>4, 9, 2027-2028 | | மூன்றாவது தலவழிபாடுகள் முடிந்து காழிக்கு வந்தபின் பிறவகுப்பைச் சார்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரும், மதங்கசூளா மணியாரும் பிள்ளையாரோடு சேர்ந்து அவருடைய பாடல்களை யாழிலமைத்து இசைக்கும் வாய்ப்பையும், அவரோடு திருத்தலவழிபாடு செய்யும் பேறும் பெற்றனர். |
| 4. | **நான்காவது தல வழிபாடு**<br>சிரபுரம், தில்லை, திருவேட்களம், திருக்கழிப்பாலை, திருநெல்வாயில், எருக்கத்தம்புலியூர், திருமுதுகுன்றம், தூங்கானை மாடம், நெல்வாயில், அரத்துறை, மாறன்பாடி, கீழப்பழுவூர், திருநெல்வெண்ணெய், விசயமங்கை, வைகாவூர், புறம்பயம், சேய்ஞலூர், திருப்பனந்தாள், பந்தணைநல்லூர், வாழ்கொளிப்புத்தூர்,ஓமாம்புலியூர், திருக்கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் (தலை ஞாயிறு), புறவம்.<br>22, 49, 2040-2153 | முத்துச்சிவிகை, குடை, சின்னம் பெறுதல் | தில்லைத்திருவீதிகள் நான்குமே உயிர்களுக்கு மாதவப்பயன் தரவல்லன. அவை தொழத்தக்கன. தில்லையை உறைவிடமாகக் கொள்ளக் கூடாதென்று பிள்ளையார் திருவேட்களத்தில் தங்கினார். சிவனுக்குரிய நந்தவனங்களும் தங்கினார். சிவனுக்குரிய நந்தவனங்களும் பணிதற்குரியன - 2051. சீவன் முத்தர்களுக்கு உரியது. எப்போதும் எவ்விடத்தும் சிவானுபவம் ஒன்றேயாம். 2087 நிவாநதிக் கரையின் மேலுள்ள எருக்கத்தம்புலியூர் போன்ற தலங்களுக்கு யாழ்ப்பாணர் வேண்டுகோளுக்கிணங்கி பிள்ளையார் செல்கிறார். சிவிகை முதலான உலக அனுபோகப் பண்டங்களைச் சிவனருளிய ஆணை வழியில்லாது சிவஞானியார் கைக்கொள்ளார். நான்காவது யாத்திரை முடிவில் சீகாழியில் அவரது உபநயனச் சடங்கில் மந்திரங்களுக்கெல்லாம் முதன்மையானது திருவைந்தெழுத்தே என்று நிலைநாட்டுகிறார். அப்பருடன் முதல் சந்திப்பு நிகழ்கிறது. விகற்பச் செய்யுட்களாலாகிய மொழிமாற்று, மாலைமாற்று போன்ற 11 பதிகங்கள் பாடுகிறார். |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| 5 (1) | **ஐந்தாவது தல வழிபாடு** 5 (1)<br>சண்பைநகர், திருக்கண்ணார் கோவில்,<br>கடைமுடி,கீழைத்திருக்காட்டுப்பள்ளி, புள்ளிருக்குவேளூர், திருநின்றியூர், நீடூர், குறுக்கை, திருப்புன்கூர், திருப்பழமண்ணிப்படிக்கரை, திருஅன்னியூர், எதிர்கொள்பாடி, திருமணஞ்சேரி, திருத்துருத்தி, வேள்விக்குடி, திருக்கோடிக்கா, கஞ்சனூர், திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருவியலூர், திருந்துதேவன்குடி, இன்னம்பர், வடகுரங்காடுதுறை, பழனம்,ஐயாறு, பெரும்புலியூர், நெய்த்தானம், மழபாடி, கானூர்,அன்பிலாலந்துறை திருமாந்துறை, (வடகரை), திருப்பாச்சிலாச்சிராமம்,திருப்பைஞ்ஞீலி, ஈங்கோய்மலை, திருநணா,கொடுமுடி, கொடிமாடச்செங்குன்றூர், வெஞ்சமாகக்கூடல், கரூர், ஆநிலை, இரத்தினகிரி, பாராய்த்துறை, திருக்கற்குடி, உறையூர், திருச்சி, ஆனைக்கா, திருப்பாற்றுறை, எறும்பியூர், நெடுங்களம்<br>48, 45, 2177 - 2247 | திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் மகளுக்கு முயலகன் நோய்தீர்த்தல், திருச்செங்கோட்டில் சுர நோய் தீர்த்தல். எல்லாவளமையும், வனப்பும் வாய்ந்த ஆன்மாவாகிய முயலை ஓடவிடாமல் எது நிறுத்துகிறதோ அதுவே முயலகன் ஆகும். முயல் போல விரைந்து செல்லும் ஆற்றல் இருந்தும் செயல்பட முடியாமை. வயிற்று வலியும் + வலிப்பும் சேர்ந்த ஒரு வியாதி என்று இயற்கை மருத்துவர்கள் சொல்கின்றனர். ஆணவத்தை வலியிழக்கச் செய்ய சம்பந்தர் எழுதிய பதிகங்களில் முக்கியமானவைகளில் ஒன்று திருநீலகண்டப்பதிகம். மற்றையது நெடுங்களப்பதிகம். | திருவேள்விக்குடியில் பகலில் திருமணக்கோலமும், இரவில் துருத்தியில் இருப்பதையும் சேர்த்துப்பாடுதல். சிவவேள்விகள் மக்களுக்கு இருமைக்கும் இன்பமளிப்பன -2178, சிவன் எல்லாவுயிரினும் நிறைந்தவன். ஆயினும் சிவனை அன்றிவேறு நினையாத சிவஞானிகள் உள்ளத்தில் சிவன் வெளிப்பட நிறைந்து விளங்குவான். ஆதலின் அவர்களது வாக்குச் சிவனது வாக்காகி வெளிவரும் போதே குறித்தபயன் தந்துவெளிப்படும். பசுபோதகம் நிறைந்து நிற்கும் ஏனையோர் வாக்கு அவ்வாறு பயன் தராமைக்கும் இதுவே காரணம்-2217. திருநீலகண்டம் என்பது இறைவரது திருவாணை நிகழ்வதொரு மந்திரம்-2233. முயலக நோய் தீர்த்தல் முதலிய அருளியல் நிகழ்வுகளை நிகழ்த்தும் அருளாளர்களின் கைகால் முதலிய கருவிகள், உடம்பு முதலியன நம்முடைய உறுப்புக்களைப் போலத் தோன்றினாலும் தன்மையால் வேறுபட்டவை. அவர்தம் கருவிகரணங்கள் அருளாகவே விளங்கிக் கொண்டிருக்கும். |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| 5 (2) | **ஐந்தாவது தல வழிபாடு** 5 (2)<br>மேலைத்திருக்காட்டுப்பள்ளி, ஆலம்பொழில், பூந்துருத்தி, கண்டியூர், சோற்றுத்துறை, வேதிக்குடி, வெண்ணியூர்,சக்கரப்பள்ளி, புள்ளமங்கை,பாலைத்துறை, நல்லூர்,கருகாவூர், அவளிவணநல்லூர், பரிதிநியமம், ஆவூர், திருவலஞ்சுழி, சத்திமுற்றம்,பட்டீஸ்வரம், ஆலங்குடி, அரித்துவாரமங்கலம்,திருச்சேறை, நாலூர்,குடவாயில், நறையூர் சித்தீச்சரம், தென்திருப்புத்தூர், திருஅரிசிற்கரைப்புத்தூர், சிவபுரம், குடமூக்கு, தென்குரங்காடுதுறை, திருக்குடந்தைக்காரோணம், திருநாகேஸ்வரம், திருவிடைமருதூர், திருவாவடுதுறை, கோழம்பம், வைகல், கோனேரி ராசபுரம்.<br>37, 45, 2248-2331 | பட்டீச்சரத்தில் முத்துப்பந்தர் பெறுதல், திருவாவடுதுறையில் பசும்பொன் ஆயிரங்கொண்ட பொற்கிழியைப் பெற்றுத் தந்தையாருக்கு வேள்வி செய்ய அளித்தல். | சிவனது திருவருட்பெருமைகளை அடியார்பால் கேட்டு வினாவுரையாடுதல் அவனருளைப் பருகித் திளைக்கும் சிவஞானிகளின் பண்புகளில் ஒன்று - 2250/51. ஞாயிறு மிதுன ஓரையு சேரும் காலம் கடன்நீர்மை குன்றவேனில் மிகும் - 2282. சிவஞானிகள் பிறருக்குப் பொருள்தரவேண்டில் சிவனையன்றி வேறு ஒன்றையும் அறியாமையால் அப்பொருளையும் சிவனிடத்திலே வேண்டிப்பெறுவர்-2323,24 சிவபெருமான் திருவருளால் வரும்நிதி எடுக்க எடுக்கக் குறையாது. 2325 / 27. திருநாகேச்சுரத் திருப்பதிகத்தின் வினைக்கொள்கைகள் ஆராயப்பட வேண்டும். |
| 5 (3) | **ஐந்தாவது தல வழிபாடு** 5 (3)<br>தேரழுந்தூர், துருத்தி (குற்றாலம்), மூவலூர்,திருச்செம்பொன்பள்ளி, மயிலாடுதுறை, விளநகர், பறியலூர் வீரட்டம், திருவேட்டக்குடி, திருத்தருமபுரம்,நள்ளாறு, கோட்டாறு, சிக்கல், சாத்தமங்கை, நாகை, கீழ்வேளூர், செங்காட்டங்குடி, மருகல்,புகலூர், புகலூர், வர்த்தமானீச்சரம், விற்குடி, வீரட்டம், | திருத்தருமபுரத்தில் யாழ்முரி பாடியது. திருமருகலில் விடந்தீர்த்தது. அந்தணரான திருநீலநக்கரின் வேள்விக்குண்டத்தில் என்றும் ஆறாதிருக்கும் செந்தீ வலஞ்சுழித்து எழுந்திருக்கக் காரணம் அவர் பிற வகுப்பினரான யாழ்ப்பாணரை அக்குண்டத்துக்கு அருகில் தங்கச் சொன்னதாகும். | ஒரு கன்னிகை தான் குறித்த நாயகனை மணத்தின் முன்னர் தீண்டுதல் நமது நாட்டு மரபன்று. 2372 அரவின் விடந்தீர்க்க கருடபாவனை, இடிபாவனை முதலிய விஞ்ஞைகள் உதவுவன. அத்தகைய விஞ்ஞை வல்லோர் நம் நாட்டில் உளர். 2372 மந்திரத்தாலும், மருந்தாலும் தீராதவிடத்து சிவனிடத்து அடைக்கலம் புகுதல் மதியுடையோர் செய்கை. 2373, சாத்தமங்கையில் நீலநக்கர் உடன்சேர்கிறார். செங்காட்டங்குடியில் சிறுத்தொண்ட நாயனார் பிள்ளையாரைச் சந்தித்து அருள் பெறுகிறார். புகலூரில் முருக நாயனார் மடத்துக்கும் சென்று அவருக்கு அருளாசி வழங்குகிறார். நாவரசருடன் இரண்டாவது சந்திப்பு புகலூரில் நிகழ்கிறது. |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| | திருவாரூர், திருவாரூர் அரநெறி, வலிவலம், கோளிலி, திருப்பனையூர், இராமனதீச்சரம், புகலூர், திருஅம்பர் மாகாளம், திருஅம்பர் பெருந்திருக்கோவில், கடவூர் மயானம், கடவூர், வீரட்டம். 31, 39, 2332 - 2433 | பிள்ளையார், அரசர், பாணர், நக்கர், சிறுத்தொண்டர் ஐவரும் கலந்து உரையாடுகின்றனர். | திருக்கடவூரில் குங்கிலியக் கலயநாயனார் இல்லத்துக்கு அரசுகளுடன் எழுந்தருளுகிறார். மக்கள் தமது நாண்முறை நிகழ்ச்சிகளிலும், மனமார இறைவரை எண்ணித்தம்மை அவர்பால் ஒப்புவித்து விண்ணப்பித்தால் இறைவரே செல்லும் நல்வழிகாட்டிச் செலுத்துவார் 2457. உமாதேவியாரோடு சிவபிரான் அளித்த திருவருளின் பெருமை யாழில் அடங்காது. இசையால் தமிழ்பரவும். ஆனால் பயன் கொடுப்பது தமிழின் பொருளேயன்றி இசையன்று. 2344 மூன்றாவது முறையும் நாவரசரைப்புகலூர் முருகநாயனார் மடத்தில் சந்திக்கிறார். |
| 5 (4) | **ஐந்தாவது தல வழிபாடு** 5 (4) ஆக்கூர் தான்தோன்றிமாடம், திருமீயச்சூர், திருப்பாம்புரம், சிறுகுடி, வீழிமிழலை, பேணு பெருந்துறை திலதைப்பதி மதிமுத்தம், வீழிமிழலை, திருவாஞ்சியம், தலையாலங்காடு, சாட்டியக்குடி, பெருவேளூர், திருவிளமர், கரவீரம், காறாயில், தேவூர், நெல்லிக்கா, கைச்சின்னம், திருதெங்கூர், கொள்ளிக்காடு, கோட்டூர், வெண்துறை, சிற்றேமம், களர், தண்டலைநீள்நெறி, திருமறைக்காடு, திருவாய்மூர், அகத்தியான்பள்ளி, கோடிக்கரை குழகர், கடிக்குளம், இடும்பாவனம், உசாத்தானம், கொடுங்குன்றம். 30, 44, 2434 - 2527 | வீழிமிழலையில் பஞ்சம் போக்க படிக்காசு பெற்றது. மிழலை விண்ணிழி விமானத்தில் தோணியப்பரைக்காட்டியது. திருமறைக்காட்டில், நாவரசருடன் இணைந்து பாடி திருக்கதவம் திறந்து - அடைத்தது - கோளறு பதிகம் பாடியது. வாய்மூரில் நடனக் காட்சி காணப் பெற்றது. | உலகில் தோன்றும் பெரும்பஞ்சம், பெரும்பிணி, ஐம்பூதச் சீற்றங்கள் ஆகிய இவற்றால் சிவஞானிகள் துன்பப்பட மாட்டார்கள். எஞ்ஞான்றும் திருநீற்றுச் சார்பினோர்க்கு தீங்கு வாராது - 2462. ஒரு நாளில் இரண்டு பொழுதும் உரிய நேரத்தில் அடியார்க்கு அமுது அளிக்க வேண்டும். நாடுமுழுவதும் வழுக்கி வீழ்ந்து மயங்கினும் நல்லோர் நெறி திறம்பார். அவ்வாறு நெறி திறம்பாத ஒரு சிலரால் நாடு முழுவதும் உரிய காலத்தில் நன்னெறிப்பட்டு உய்யும். தம் நாடு தீநெறியொழுகி வீழ்ந்த நிலை காணிற் கலங்கலும் அதனைத் தீர்த்து நாட்டினை நல்வழிப்படுத்த இடைவிடாது முயல்வதும் அருளுடைய நல்லாரியல்பு - 2502, 03. திருமறைக்காட்டில் மறைகள் பூசித்துத் திருக்காப்பிட்ட திருக்கதவினைத் தமிழ் மறையே திறக்கவல்லதாயிற்று. ஒரு பூட்டினைத் திறக்க வேண்டுமானால் பூட்டிய அத்திறவுகோலால் அல்லது அதுவே போன்றதொன்றினால் ஆவதன்றி இயலாது என்பதுண்மை 2478-79. இறைவர் தமிழ்மறைத் திருவாக்கின் பயன்துய்த்து நிற்பர் - 2480. கோளறு பதிகத்தினுள் "புத்தரோடமணை வாதலழிவிக்குமண்ணல் திருநீறு செம்மைதிடமே" என்ற பின்னிகழ்ச்சியின் முற்குறிப்பாய் விளங்கும் உண்மை, சிவஞானம் முக்காலத்தையும் உணர்த்தும் என்பதைத் தெரிவிக்கிறது. தீக்கானாக்களும், துன்னிமித்தங்களும் பின்னர் வரும் கேட்டினை முன்காட்டும் குறிப்புகள் - 2531. புகலூரிலிருந்து - மறைக்காடுவரை ஞானசம்பந்தரும், நாவரசரும் இணைந்தே திருத்தலப் பயணம் செய்கின்றனர். |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| 5 (5) | **ஐந்தாவது தல வழிபாடு** 5 (5)<br>மதுரை, ஏடகம், பரங்குன்றம், ஆப்பனூர், புத்தூர், பூவணம், கானப்பேர், திருச்சுழி, குற்றாலம், குறும்பலா, திருநெல்வேலி, இராமேஸ்வரம், திருகோணமலை, திருக்கேதீச்சரம், திருவாடானை, புனவாயில், மணமேல்குடி, திருக்களர், பாதாளேச்சுரம், கொள்ளம்புதூர், நள்ளாறு, தெளிச்சேரி, கடவூர், பூந்துருத்தி, ஐயாறு, நெய்த்தானம், பழனம், காழி (உற்றுமை சேர்வது)<br>27, 46, 2528 - 2850 | மதுரையில் பாண்டியன் வெப்பு நோயைத் திருநீற்றுப் பதிகம் பாடித்தீர்த்தது. வாது செய்யத் திருவுள்ளம் கேட்டறிந்து, சுர, அனல், புனல் வாதங்களை நிகழ்த்தி, திருப்பாசுரம் பாடி பர சமயத்தை நிராகரித்து, சைவத்தை நிலைநாட்டியது. கொள்ளம்பூதூரில் பதிகம் பாடி ஒடம் செலுத்தியது. தெளிச்சேரியில் புத்தர்களை வாதில் வென்றது. | மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் வேண்டுகோளை ஏற்று பிள்ளையார் மதுரைக்கு எழுந்தருளுகிறார். பெரியோர்கள் வருவது தெரிந்தபோது நகரின்புறத்துச் சென்று வணங்கி வரவேற்றல் நன்மரபு 2553. இறைவரது பதியினையும், கோயிலின் கோபுரத்தையும் கண்டவிடத்தே நின்று வணங்குதல்முறை 2559. இறைவரைக் காணப்பெற்றபோது கண் பெற்ற பயன் இதுவே என்று கொள்ளுதல் வேண்டும் 2563. அன்பு நிறைவுடையோர் கணக்கு வரம்பின்றிப் பலமுறையும் வணங்குவர். எத்தனைமுறை வணங்கினாலும் நிறைவு பெறார். 2564 ஆலவாயிறைவரைத் தமிழின் புலவராகக் கண்டு இறைஞ்சினார் பிள்ளையார் 2565. அரசுகளும், நம்பிகளும் அவ்வாறே கண்டு வணங்கினார். பெரியோர்கள் இறைவனைக் கும்பிடத் திருக்கோயிலுக்குச் செல்லும்போது அவர்களது வழிபாட்டுக்கு இடையூறாகக் குறுக்கிட்டு அவர்களை வணங்கலாகாது - 2567. கணவரது முகம் புலர்தல் காணில் அதன் காரணம் வினவித் தீர்வு தேடுதல் மனைவியரின் கடமை - 2588-91. ஆதிமந்திரம் அஞ்செழுத்தே. அது எல்லா மந்திரங்களுக்கும் முதன்மையானது. அதை ஓதுவார்கள் நோக்கும் திசையிலும் மற்றை மந்திரங்களின் வலி வாராது. குடிகளை நீதி வழுவாது ஒழுகுவித்தல் அரசன் கடமை. பஞ்சபூதங்கள் சிவஞானிகள் சொல் கேட்கும் 2604. திருஞானசம்பந்தரென்னும் நாமமே நோய் தீர்க்கும் மந்திரம். பூந்துருத்தியில் அப்பருடன் நான்காவது சந்திப்பு. அப்பர்மடம். அப்பர் சம்பந்தரின் முத்துச் சிவிகையைத் தாங்குகிறார். |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
|---|---|---|---|
| 6. | **ஆறாவது தல வழிபாடு**<br>கொச்சை வயம், தில்லை, தினைநகர், திருமாணிகுழி, பாதிரிப்புலியூர், வடுகூர், திருவக்கரை, திருஇரும்பை, மாகாளம், திருவரசலி, திருவதிகை, திருவாமாத்தூர், திருக்கோயிலூர், அறையணி நல்லூர், திருவண்ணாமலை, திருவோத்தூர், திருமாகறல், குரங்கணில் முட்டம், கச்சித்திருவேகம்பம், கச்சி நெறிக்கரைக்காடு, திருவனேகதங்காவதம், கச்சிமேற்றளி, திருமாற்பேறு, திருவல்லம், இலம்பையங் கோட்டூர், திருவிற்கோலம், திருஊறல், பருப்பதம், இந்திரநீலப்பருப்பதம், காளத்தி, திருவொற்றியூர், திருமயிலை, திருவான்மியூர், கள்ளில், தக்கோலம், திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண்பாக்கம், கயிலாயம், காரிக்கரை, கேதாரம், கோகர்ணம், திருவான்மியூர், இடைச்சுரம், திருக்கழுக்குன்றம், அச்சிறுப்பாக்கம், திருப்புறவார் பணங்காட்டூர், தில்லை, கழுமலம்.<br>38, 62, 2858 - 3049 | திருவோத்தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கியது.<br>திருமயிலையில் எலும்பைப் பெண்ணாக்கியது. | பிரமன் படைப்பினுள் வரும் அழகுகள் எல்லாம் அழியும் தன்மையுடையன. சிவன் அருட்படைப்பின் அழகு என்றும் மாறாத பெருவளத்தன. 3007 பூதகணங்கள், பிரம்மா, விட்டுணுக்களால் தொழப்படும் தன்மை வாய்ந்தவைகள். தேவர்களுக்குப் பிறவியுண்டு. சிவபூதகணங்கள் முத்தான்மாக்கள், பிறவியற்றவை. தம்மை வழிபடுவோரை சிவன்பால் வழிபடுத்தி உய்யச்செய்யும் கருணையும், ஆற்றலையும் செய்யும், பனைகள் பிள்ளையார் அருள்பெற்ற காரணத்தால் தங்கள் காலங்கழிந்து முடிவில் சிவமாயின. |

| வ. எண் | வழிபட்ட தலங்கள், பதிகங்கள், பெரியபுராணப் பாடல் எண்கள் | நிகழ்ந்த / நிகழ்த்திய அற்புதங்கள் | பிறசெய்திகள் |
| --- | --- | --- | --- |
| 7. | **ஏழாவது தல வழிபாடு**<br>சீகாழி - நல்லூர்ப் பெருமணம் - சோதியில் கலப்பு<br>1, 1, 3095 - 3154 | தம் திருமணத்திற்கு வந்திருந்த அனைவருடனும் சிவசோதியில் கலந்தது. | "ஈனமாம் பிறவிதீர யாவரும் புகுக" என்று சிவனருள் வழியே பாவித்துத் திருக்கண்ணோக்கமும், அருளாணையும் நிகழ்த்தித் திருவைந்தெழுத்தையும் உபதேசித்ததால் அத்திருமணத்திற்கு வந்திருந்தோர் அனைவரும் முக்தித்தகுதியுடைவராகி சோதியிற் கலந்து முக்தியடைந்தனர் - 3146. மணச்சடங்குகள் ஆசாரியனால் சிவபெருமானது பாதங்களில் பொருந்தும் உள்ளத்தால் செய்யப்படவேண்டும். மந்திர முறையினால் உய்த்த எரி வளர்த்தல் மணவேள்வியின் இன்றியமையாத சடங்காகும். மணமகளை மணமகன் கைப்பற்றி வெள்ளிய நெற்பொரியை வேள்வித்தீயில் ஆகுதியாக இட்டு, ஏழுமுறை வேள்வித் தீயினை வலம்வரும்போது எரிவலமாக வரவேண்டுமென்று இறைவனை வேண்ட வேண்டும். 3138-39.<br>மணவேள்விச்சடங்கு நிறைவேறி எரிவலம் வரும் வரை மணமகள் மணமகனுக்கு வலப்பக்கத்திலிருக்க வைத்தலும் அதன்பின் இடப்பக்கத்து இருத்தலும் மரபு. இடப்பாகம் பெண்மைக்குரிய பாகம். அதில் பற்றிய நோய் எளிதில் தீரும். 3135. மணநாளுக்கு முன்னாளில் மணமகன் கையில் காப்புநாணை உரிய சடங்குகளுடன் அணிதல் வழக்கு. |

## தேவார, திருவாசக ஆசிரியர்கள் நால்வரையும் கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் போற்றிப் பரவிய நால்வர் நான்மணி மாலையில் ஆளுடைய பிள்ளையார்.

1. பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழி ஞானப்பாலுண்டு நாவான்
மறித்தெஞ் செவியமுதமாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு.

2. இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு
முலை சுரந்த அன்னையோ முன்நின்நிலைவிளம்ப
கொங்கை சுரந்த அருட்கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தாள் ஆர் சொல் எனக்கு.

3. இடுகாட்டில் மாதர் எலும்பில் புரள்மால்
சுடுகாட்டுள் ஆடுவார் சுட்டின் ஒடுகாட்டும் சம்பந்தா
என்புநின்பால் தந்தாக்கிக் கொண்டிலன் என்
கும்பந்தான் என்னும் முலைக் கொம்பு.

4. மகிழ்ச்சி மிகவுண்டு போலும் எதிர்வந்து
புகழ்ச்சியொடு நீபாடும் போது
நெகிழ்ச்சி மலர்ச் சந்தையினும் வண்டிறையும்
தண்புகலிச் சம்பந்தர் தந்தையினும்
பால்கொடுத்த தாய்க்கு.

5. பயனாகும் நல்லாண் பனைக்கு விடத்திற்கு
மயிலாகும் நோய்க்கு மருந்தாம்
உயிராகும் சிந்தும் எலும்பிற்குச்
சிரபுரத்து நாவலன் சம்பந்தன் இயம்பும் திருப்பாட்டு.

6. கொள்ளை கொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்
தள்ளும் திருஞானசம்பந்தா வெள்ளமிடும்
ஏடேறப் பால்குறைந்த தென்றமுவரே கழுகின்
காடேறப் புக்க அருகர்.

7. வானும் புகழ்புகலி மன்னன் தொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு தானும்
கரியாய் மொழியும் கரியாய் விடாமல்
எரியார் அழல் வீழ்ந் தெழுந்து.

8. தேனேறலர் சூடிச் சில்பலிக் கென்று ஊர்திரியும்
ஆனேறியாண்டு பெற்றான்கொல் நீ
தானேறும் வெள்ளைமணியென்று வினவுவோம்
வாங்கிய அப்பிள்ளையைக் காணப்பெறின்.

9. அறத்தாறிது வென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தானிடையை மறுத்தார்
சம்பந்தன் சிவிகை பறித்தார் திரிகுவர்மற்று
உந்துஞ் சிவிகையினை ஊர்ந்து.

10. வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி
நல்லாதரவுஇன்ப ஞானங்கள் எல்லாம்
திருஞானசம்பந்தன் சேவடியே என்னும்
ஒரு ஞான சம்பந்தம் உற்று.

---

## இரண்டாம் திருமுறைப் பதிகங்கள் - பண்கள் கட்டளைகள் அட்டவணை

| வ. எண் | பண் | பதிகங்கள் | பதிக எண்கள் | கட்டளைகள் | பண்களின் சுவை (அடைவு) | தற்போதைய இராகம் | கால வரையறை (நாழிகை) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | இந்தளம் | 39 | 1-39 | 4 | பெருமிதம், மருட்கை | நெளிவு பஞ்சமி | 9-12 பகல் |
| 2. | சீகாமரம் | 14 | 40-53 | 2 | அவலம், மருட்கை | நாத நாமக் கிரியை | 37½-41½ இரவு |
| 3. | காந்தாரம் | 29 | 54-82 | 3 | பெருமிதம், மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 4. | பியந்தைக் காந்தாரம் | 14 | 83-96 | 3 | மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 5. | நட்டராகம் | 16 | 97-112 | 2 | உவகை, மருட்கை | பந்து வராளி | 15-18 பகல் |
| 6. | செவ்வழி | 10 | 113-122 | 1 | மருட்கை | எதுகுல காம்போதி | பொது |

# பதிகங்கள் - பண்களின் கட்டளைகள் - யாப்பு வகைகள்

இரண்டாம் திருமுறையின் இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி என்னும் ஆறு பண்களுக்குரிய 122 திருப்பதிகங்கள் முறையே தொகுக்கப் பெற்றுள்ளன.

## 1. இந்தளம்

1 முதல் 39 முடிய அமைந்த பதிகங்கள் இந்தளப் பண்ணுக்குரியன.

**"தேவு வந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கு"** எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளை விகற்பங்கள் நான்காகும். தற்போது அவை 8 யாப்பு விகற்பங்களாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

இந்தளத்தில் பாடவேண்டிய பதிக எண்கள்

**யாப்பு – 1**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செந்நெ | லங்கழ | னிப்பழ | னத்தய | லேசெழும் | |
| தான | தானன | தானன | தானன | தானனா | 1-10 |

**யாப்பு – 2**

| | | | | |
|---|---|---|---|---|
| நல்லானை | நான்மறை | யோடிய | லாறங்கம் | |
| தேமாங்காய் | கூவிளம் | கூவிளம் | தேமாங்காய் | 11-16 |

**யாப்பு – 3**

| | | | | |
|---|---|---|---|---|
| நிலவும் | புனலும் | நிறைவா | ளரவும் | |
| தனனா | தனனா | தனனா | தனனா | 17-24 |

**யாப்பு – 4**

| | | | | |
|---|---|---|---|---|
| உகலி | யாழ்கட | லோங்கு | பாருளீர் | |
| தனன | தானன | தான | தானனா | 25-28 |

**யாப்பு – 5**

| | | | | |
|---|---|---|---|---|
| முன்னிய | கலைப்பொருளும் | மூவுலகில் | வாழ்வும் | |
| தந்தன | தனத்தனன | தானதன | தானா | 29-34 |

**யாப்பு – 6**

| | | | | |
|---|---|---|---|---|
| பரவக்கெடும் | வல்வினை | பாரிடஞ் | சூழ | |
| தனனாதன | தானன | தானன | தான | 35-37 |

**யாப்பு – 7**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நித்த | லுந்நிய | மஞ்செய்து | நீர்மலர் | தூவி | |
| தான | தானன | தானன | தானன | தானா | 38 |

**யாப்பு – 8**

ஆரூர்தில்லை யம்பலம் வல்லம் நல்லம்
வடகச்சியு மச்சிறு பாக்கம் நல்ல
தானாதன தானன தானா தானா
தனனாதன தானன தானா தான 39

இந்தளப் பண்ணில் அமைந்துள்ள 39 பதிகப் பாடல்களை பாடவேண்டிய முறைகள்

| பதிக எண் | யாப்பு விகற்பக எண் | கட்டளை எண் |
|---|---|---|
| 1-10 | 1 | 1 |
| 35-37 | 6 | 1 |
| 38 | 7 | 1 |
| 39 | 8 | 1 |
| 11-16 | 2 | 2 |
| 17-24 | 3 | 3 |
| 25-28 | 4 | 3 |
| 29-34 | 5 | 4 |

### II. சீகாமரம்

இரண்டாந் திருமுறையில் 40 முதல் 53 வரையுள்ள 14 பதிகங்கள் இப்பண்ணில் பாடப்பட்டுள்ளன.

"**தாவில் புகழ்க் காமரத்தின் தன்மை தனக் கிரண்டமைத்தார்**" என திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பதிகங்களில் அமைந்த கட்டளைகள் இரண்டு எனப் பெறப்படும்.

### கட்டளை – 1

எம்பிரான் எனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரா னாவானுந் தழலேந்து கையானும்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக் கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே.

என இவ்வாறு தரவு கொச்சகக் கலிப்பாவாக அமைந்தது சீகாமரப் பதிகங்களின் முதற் கட்டளையாகும்.

40 முதல் 48 வரையமைந்த பதிகங்கள் இதன் பாற்படுவன.

### கட்டளை – 2

பண்ணி னேர்மொழி மங்கை மார்பலர் பாடி யாடியவோசை நாடொறும்
கண்ணினே ரயலே பொலியுங் கடற்காழி
தான தானன தான தானன தான தானன தான தானனா
தானனா தனனா தனனா தனதானா

49 முதல் 53 வரை அமைந்துள்ள பதிகங்களை இக்கட்டளையில் பாடலாம்.

### III. காந்தாரம்

இரண்டாந் திருமுறையில் 54 முதல் 82 வரையுள்ள திருப்பதிகங்கள் காந்தாரப் பண்ணில் அமைந்துள்ளன.

"**காந்தாரமாகிய பியந்தையாங் கட்டளைக்கு வாய்ந்தவகை மூன்றாக்கி**" என திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இப்பண் மூன்று கட்டளைகளைப் பெறுகிறது. யாழ் நூலாசிரியா் காந்தாரப் பதிகங்களில் 10 யாப்பு விகற்பங்கள் காணப்படுகின்றன.

பாடவேண்டிய
பதிக எண்கள்

**யாப்பு – 1**

| | | | | |
|---|---|---|---|---|
| உருவார்ந்த | மெல்லியலோர் | பாக முடையீர் | அடைவோர்க்குக் | |
| தனதான | தானதனா | தான தனனா | தனதானா | 54-58 |

**யாப்பு – 2**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நலங்கொள் | முத்து | மணியு | மணியுந் | திரளோதம் | |
| தனனா | தானா | தனன | தனனா | தனதானா | 59-64 |

**யாப்பு – 3**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கறையணி | வேலிலர் | போலும் | கபாலந் | தரித்திலர் | போலும் | 65-69 |
| தனதன | தானன | தானா | தனான | தனதன | தானா | |

**யாப்பு – 4**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பிரமனூர் | வேணுபுரம் | புகலி | வெங்குருப் | பெருநீர்த் | தோணி | |
| கருவிளம் | கூவிளங்காய் | புளிமா | கூவிளம் | புளிமா | தேமா | 70-74 |

**யாப்பு – 5**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வாடிய | வெண்டலை | மாலை | சூடி | மயங்கிருள் | |
| தானன | தானன | தான | தான | தனந்தன | 75-76 |

**யாப்பு – 6**

| | | | | |
|---|---|---|---|---|
| பீடினாற்பெரி | யோர்களும் | பேதைமைகெடத் | தீதிலா | |
| தானனாதன | தானனா | தானனாதன | தானனா | 77-78 |

**யாப்பு – 7**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பவளமாய்ச் | சோடையாய் | நாவெழாப் | பஞ்சுதோய்ச் | சட்ட | வுண்டு | |
| தனதனா | தானனா | தானனா | தானனா | தான | தானா | 79 |

**யாப்பு – 8**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வரிய | மறையார் | பிறையார் | மலையோர் | சிலையா | வணக்கி | |
| தனன | தனனா | தனனா | தனனா | தனனா | தனனா | 80 |

**யாப்பு – 9**

பூதத்தின் படையினீர் பூங்கொன்றைத் தாரினீர்
நான்குகாய்ச் சீர்களால் இயன்ற தரவு கொச்சகக் கலிப்பா
ஒரோவழி விளச்சீரும் பெற்றது. 81

**யாப்பு – 10**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பண்ணி | லாவிய | மொழியுமை | பங்கனெம் | பெருமான் | |
| தான | தானன | தனதன | தானன | தனனா | 82 |

1, 4, 7, 9 ஆம் யாப்பு விகற்பங்கள் ஓசைத் திறத்தால் ஒரு கட்டளையாகவும்
2, 5 ஆம் யாப்பு விகற்பங்கள் ஓசைத் திறத்தால் ஒரு கட்டளையாகவும்
3, 6, 8, 10 ஆம் யாப்பு விகற்பங்கள் ஓசைத் திறத்தால் ஒரு கட்டளையாகவும்
கொண்டு காந்தாரப் பதிகங்களை மூன்று கட்டளையாக அடக்குதல் மரபாகும்.

## IV. பியந்தைக் காந்தாரம்

இரண்டாந் திருமுறையில் 83 முதல் 96 வரையுள்ள 14 பதிகங்கள் பியந்தைக் காந்தாரப் பண்ணில் அமைந்துள்ளன. இதற்கும் மூன்று கட்டளைகள் என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

**கட்டளை – 1**

| நீலநன் | மாமிடற்ற | னிறைவன் | சினத்த | நெடுமா | வுரித்தநிகரில் | |
|---|---|---|---|---|---|---|
| தானன | தானதத்த | தனதந் | தனத்த | தனனா | தனத்த தனனா | 83-87 |

**கட்டளை – 2**

| துளிமண்டி | யுண்டு | நிறம்வந்த | கண்டன் | நடமன்னு | துன்னு சுடரோன் | |
|---|---|---|---|---|---|---|
| தனதந்த | தந்த | தனதந்த | தந்த | தனதந்த | தந்த தனனா | 88 |

**கட்டளை – 3**

| அறையும் | பூம்புன | லோடும் | ஆடர | வச்சடை | தன்மேல் | |
|---|---|---|---|---|---|---|
| தனன | தானன | தானா | தானன | தானன | தானா | 89-96 |

## V. நட்டராகம்

இரண்டாந் திருமுறையில் 97 முதல் 112 வரை அமைந்த பதிகங்கள் நட்டராகப் பண்ணுக்கு உரியன. நட்டராகப் பதிகங்களில் இரண்டு கட்டளைகளும் நான்கு யாப்பு விகற்பகங்களும் உள்ளன.

"**வன்னட்ட ராகத்திற் கேய்ந்தவகை யிரண்டாக்கி**" என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

**யாப்பு – 1**

| நம்பொ | ருள்நம் | மக்க ளென்று | நச்சி | யிச்சை | செய்துநீர் | |
|---|---|---|---|---|---|---|
| தந்த | தந்த | தந்த தந்த | தந்த | தந்த | தந்தனா | 97-101 |

**யாப்பு – 2**

| அன்ன | மென்னடை | யரிவையொ | டினிதுறை | யமரர்தம் | பெருமானார் | |
|---|---|---|---|---|---|---|
| தந்த | தந்தன | தனதன | தனதன | தனதன | தனதானா | 102-110 |

**யாப்பு – 3**

| தளரிள | வளரென | வுமைபடாத் | தாளம் | மிடவோர் | கழல்வீசி | |
|---|---|---|---|---|---|---|
| தனதன | தனதன | தனதானா | தானா | தனனா | தனதானா | 111 |

**யாப்பு – 4**

| மாதொர் | கூறுகந்த | தேற தேறிய-ஆதி | யானுறை | யாடானை | |
|---|---|---|---|---|---|
| தான | தானன | தான தானன-தான | தானன | தானானா | 112 |

முதலாவது யாப்பு - முதற்கட்டளை

2, 3, 4வது யாப்புகள் - இரண்டாவது கட்டளையாலும் அமைக்கப்பட்டுள்ளன.

## VI. செவ்வழி

இரண்டாந் திருமுறையின் நிறைவு பண்ணான செவ்வழிப் பண்ணில் 113 முதல் 122 வரை 10 பதிகங்கள் "செவ்வழி ஒன்றாக்கி" என்ற திருமுறை கண்ட புராணத்தின்படி அமைந்துள்ளன. பத்துப் பதிகங்களும் ஒரே கட்டளையின் பாற்படுவன என்பது தெளிவாகிறது.

இப்பண்ணின் கட்டளை பின்வருமாறு

| பொடியிலங்குந் | திரு | மேனியா | ள்புலி | யதளினர் | |
|---|---|---|---|---|---|
| தனனதானா | தன | தானனா | தானன | தனதனா | 113-122 |

## இந்தளம்

மருதப் பெரும்பண்ணின் இரண்டாவது திறமான வடுகு என்ற திறத்தில் அகநிலைப் பண்ணாக 73 எண் பெற்றது. சம்பந்தர் இப்பண்ணில்தான் மிக அதிகமான 39 பதிகங்கள் பாடியிருக்கிறார். அப்பர் 3, சுந்தர் 12 ஆக 54, திருமுறைகளிலேயே இப்பண்ணுக்குத்தான் அதிகமான பதிகங்கள். இவையன்றி, பதினோராந் திருமுறையிலுள்ள காரைக்காலம்மையாரின் பதிகங்களில் இரண்டாம் பதிகம் இந்தளம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்மை இறைவன் ‘‘பித்தா’’ என்று தொடங்கிப் பாடும்படிப் பணித்தவுடன் பாடியதாகிய ‘‘பித்தா பிறைசூடிப் பெருமானே’’ என்று தொடங்கும் பதிகம் இந்தளப் பண்ணுக்குரியது. இது ஹிந்தோளகம் என்ற இராகம் என்பர். பெருமிதம், மருட்கை, வெகுளி என்றும் சுவைகளையுடையது. 36 ஆம் மேளமாகிய சலநாடா என்பதில் ஜன்னியம். இதற்குரிய இராகம் லளிதபஞ்சமி என்றும், நாதநாமக்கிரியை என்றும் சொல்வதுண்டு. இந்தளத்துக்கு யாப்பு விகற்பகங்கள் பலவாகும். சம்பந்தர் விடந்தீர்த்த பதிகமாகிய சடையாயெனுமால், சதுரம் மறைதான் என்ற மறைக்காடு கதவு அடைக்கப் பாடிய பதிகம் முதலாயின இப்பண்ணுக்குரியவை. சுந்தரர் முதல்பதிகம் இந்தப் பண்ணில் தொடங்கினார் என்பதைச் சேக்கிழார், ‘‘முறையால் வருமதுரத்துடன் மொழி இந்தளம் முதலா’’ என்று தாமே பாடுகிறார். ஏனையோருக்கு இவ்வாறு கூறவில்லை.

திருவிசைப்பாவில் திருவாலியமுதனார் கோயில் மூன்றாம் பதிகம் இந்தளப் பண்.

**இந்தளம் (இயந்தளம்) இலக்கணம்**

இயந்தளந் தளமாய் நயந்த பூவாய்
இலைமறை காய்மறை யெய்தும் நறும்பூ
பூவும் ஆகிப் பூச்சீர் பொருந்தி
அமைந்த நிற்பது இயந்தளப் பண்ணாம்

**பொருள்**

இசை கொள்ளும் ஓசையானது தளந்தளமாகவும் (அடுக்காகவும்) சான்றோர்கள் விரும்பிய பூவாகவும், இலையிலும் காயிலும் மறைந்து நிற்கும் நறும்பூவாகவும், தண்பூவாகவும் ஆகிப் பூச்சீர் பொருந்தி நிற்பது இயந்தளப் பண்ணாகும்.

## 1. திருப்பூந்தராய்

(வினாவுரை)

பண் : இந்தளம் — பதிக எண் : 1

**1470.** செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்—மை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே.

செந்நெல் விளையும் அழகிய வயல்களை உடைய சோலைகளின் அய—டங்களில் வளமையான புன்னை மரங்கள் உதிர்த்த பூக்கள், வெண்மையான துணியிற் பவளங்கள் பரப்பினாற் போல விளங்கும் திருப்பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில், நல்ல தேவர்கள் நெருங்கிவந்து, தங்களின் முடிகளைத் தோய்த்து வணங்கும் திருவடிகளை உடைய இறைவரே! பின்னிய உமது செஞ்சடையில் இளம்பிறையை அதற்குப் பகையாகிய பாம்போடு வைத்துள்ளது ஏனோ ? சொல்வீராக.

**1471.** எற்று தெண்டிரை யேறிய சங்கினொ டிப்பிகள்
பொற்றி கழ்கம லப்பழ னம்புகு பூந்தராய்ச்
சுற்றி நல்—மை யோர்தொழு பொற்கழ லீர்சொலீர்
பெற்றம் ஏறுதல் பெற்றிமை யோபெரு மானிரே.

எறிகின்ற தெளிந்த கடல் அலைகளில் ஏறிவந்த சங்குகளும் இப்பிகளும் பொன்போல் விளங்கும் தாமரைகள் மலர்ந்த வயல்களில் வந்து புகும் பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில், நல்ல தேவர்கள் சூழ்ந்து தொழும் அழகிய திருவடிகளை உடைய இறைவரே! அயிராவணம் முத—ய ஊர்திகள் இருக்க விடையேறி வருதல் உமக்கு ஏற்ற தன்மைத் தாகுமோ ? சொல்வீராக.

**1472.** சங்கு செம்பவ ளத்திரண் முத்தவை தாங்கொடு
பொங்கு தெண்டிரை வந்தலைக் கும்புனற் பூந்தராய்த்
துங்க மால்களிற் றின்னுரி போர்த்துகந் தீர்சொலீர்
மங்கை பங்கமும் அங்கத்தொ டொன்றிய மாண்பதே.

பொங்கி வரும் தெளிந்த கடல் அலைகள் சங்கு செம்பவளம் முத்து ஆகியவற்றைக் கொண்டு வந்து வீசும் நீர்வளம் சான்ற பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில் உயரிய பெரிய களிற்று யானையை உரித்து அதன் தோலைப் போர்த்து மகிழ்ந்துறையும் இறைவரே! உமது திருமேனியின் இடப்பாகமாக உமையம்மையை ஒருடம்பில் ஒன்றுவித்துள்ள மாண்பு யாதோ ? சொல்வீராக.

**1473.** சேம வன்மதில் பொன்னணி மாளிகை சேணுயர்
பூம ணங்கம ழும்பொழில் சூழ்தரு பூந்தராய்ச்
சோம னும்மர வுந்தொடர் செஞ்சடை யீர்சொலீர்
காமன் வெண்பொடி யாகக் கடைக்கண் சிவந்ததே.

பாதுகாவலாக அமைந்த வ—ய மதில்களும் பொன்னால் அழகுறுத்தப்பெற்ற அழகிய மாளிகைகளும், மிக உயர்ந்து மலர்மணம் கமழும் சோலைகளும் சூழ்ந்துள்ள பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில், திங்களும் பாம்பும் தங்கிய செஞ்சடையுடையவராய் எழுந்தருளிய இறைவரே! உயிர்கட்குப் போகத்தின் மேல் அவாவினை விளைக்கும் மன்மதன் வெண்பொடியாகுமாறு அவனைக் கடைக்கண் சிவந்து அழித்தது ஏனோ ? சொல்வீராக.

| | |
|---|---|
| **1474.** பள்ள மீனிரை தேர்ந்துழ லும்பகு வாயன<br>புள்ளு நாடொறுஞ் சேர்பொழில் சூழ்தரு பூந்தராய்த்<br>துள்ளு மான்மறி யேந்திய செங்கையி னீர்சொலீர்<br>வெள்ள நீரொரு செஞ்சடை வைத்த வியப்பதே. | நீர்ப்பள்ளங்களில் இருக்கும் மீன்களை இரையாகத் தேர்ந்து கொள்ளுதற்குத் திரியும் பிளந்த வாயை உடைய நாரைப் பறவைகள், நாள்தோறும், பல இடங்களி–ருந்தும் வந்து தங்கும் பொழில்கள் சூழ்ந்த பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில், துள்ளுகின்ற மான் கன்றை ஏந்திய செங்கையை உடைய சிவபிரானே! பெருகி வந்த கங்கை வெள்ளத்தைச் சிவந்த சடையில் தடுத்து நிறுத்தித் தாங்கிய வியத்தகு செயலுக்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| **1475.** மாதி லங்கிய மங்கைய ராட மருங்கெலாம்<br>போதி லங்கம லம்மது வார்புனற் பூந்தராய்ச்<br>சோதி யஞ்சுடர் மேனிவெண் ணீறணி வீர்சொலீர்<br>காதி லங்குழை சங்கவெண் டோடுடன் வைத்ததே. | அழகிய பெண்கள் ஆங்காங்கே நடனம் ஆடுவதும், ஊர் மருங்கெலாம் பூத்துள்ள அழகிய தாமரை மலர்கள் தம்மிடம் நிறைந்துள்ள தேனை ஒழுக விடுவதும் ஆகிய நீர்வளம் மிக்க பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில், ஒளிமிக்க அழகிய தமது திருமேனியில் வெண்ணீறு அணிந்து எழுந்தருளிய இறைவரே! காதுகள் இரண்டனுள் ஒன்றில் குழையையும் ஒரு காதில் சங்கத் தோட்டையும் அணிதற்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| **1476.** வருக்க மார்தரு வான்கடு வன்னொடு மந்திகள்<br>தருக்கொள் சோலை தருங்கனி மாந்திய பூந்தராய்த்<br>துரக்கு மால்விடை மேல்வரு வீர்அடி கேள்சொலீர்<br>அரக்கன் ஆற்றல் அழித்தருளாக்கிய ஆக்கமே. | இனங்களோடு கூடிய ஆண் குரங்குகள், பெண் குரங்குகளோடு கூடி, மரங்கள் நிறைந்துள்ள சோலைகள் தரும் கனிகளை வயிறார உண்டு மகிழும் பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில் எழுந்தருளியிருந்து, செலுத்தத்தக்க மாலாகிய இடபத்தின் மேல் காட்சிதரும் அடிகளே! இராவணனின் தருக்கினை அழித்து உடன் அவனுக்கு அருள் வழங்கிய ஆக்கத்திற்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| **1477.** வரிகொள் செங்கயல் பாய்புனல் சூழ்ந்த மருங்கெலாம்<br>புரிசை நீடுயர் மாடநி லாவிய பூந்தராய்ச்<br>சுருதி பாடிய பாணியல் தூமொழி யீர்சொலீர்<br>கரிய மால்அயன் நேடிஉமைக்கண்டி லாமையே. | மருங்கெலாம் வரிகளைக் கொண்டுள்ள செவ்விய கயல்மீன்கள் பாயும் நீர் நிலை சூழ்ந்ததும், மதில்கள் சூழ்ந்து நீண்டு உயர்ந்த மாடமாளிகைகள் விளங்குவதுமான பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில், வேதங்களைப் பாடியும், இசைப்பாடல் போன்ற இனிய மொழிகளைப் பேசியும் எழுந்தருளி விளங்கும் இறைவரே! கரிய திருமாலும் பிரமனும் உம்மைத் தேடிக் காண இயலாமைக்குரிய காரணம் யாதோ ? சொல்வீராக. |

| | |
|---|---|
| 1478. வண்ட லங்கழ னிம்மடை வாளைகள் பாய்புனற்<br>புண்ட ரீகம லர்ந்தும துத்தரு பூந்தராய்த்<br>தொண்டர் வந்தடி போற்றிசெய் தொல்கழ லீர்சொலீர்<br>குண்டர் சாக்கியர் கூறிய தாங்குறி யின்மையே. | வளம்மிக்க வண்டல் மண்ணை உடைய வயல்களின் மடைகளில் வாளை மீன்கள் பாயும் நீர் நிலைகளில் தாமரைமலர்கள் மலர்ந்து தேனைத்தரும் பூந்தராய் என்னும் சீகாழிப் பதியில், தொண்டர்கள் வந்து வணங்கும் கழல் அணிந்த பழமையான திருவடிகளை உடைய இறைவரே! சமணர்களும் சாக்கியர்களும் உம்மைக் கூறும் பொருளற்ற பழிமொழிகட்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| 1479. மகர வார்கடல் வந்தண வும்மணற் கானல்வாய்ப்<br>புக– ஞானசம் பந்தன்எ ழில்மிகு பூந்தராய்ப்<br>பகவ னாரைப்ப ரவுசொன் மாலைபத் தும்வல்லார்<br>அகல்வர் தீவினை நல்வினை யோடுட னாவரே. | சுறா மீன்களை உடைய பெரிய கடல் நீர் வந்து சேரும் மணல் நிறைந்த கடற்கரைச் சோலைகளைக் கொண்டுள்ள புக–ப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், அழகுமிக்க பூந்தராயில் எழுந்தருளிய இறைவரைப் பரவிப் பாடிய இப்பதிகப் பாடல் பத்தையும் ஓதவல்லவர் தீவினை அகல்வர். அவர்கள் நல்வினை உடையவர் ஆவர். |

## உ. திருவலஞ்சுழி

பண் : இந்தளம் (வினாவுரை) பதிக எண் : 2

| | |
|---|---|
| 1480. விண்டெ லாமல ரவ்விரை நாறுதண் டேன்விம்மி<br>வண்டெ லாம்நசை யால்இசை பாடும்வ லஞ்சுழித்<br>தொண்டெ லாம்பர வுஞ்சுடர் போல்ஒளி யீர்சொலீர்<br>பண்டெ லாம்ப– தேர்ந்தொ– பாடல்ப யின்றதே.<br><br>பிலத்தினுள் சென்றுவிட்ட காவிரி வெளிப்படும் பொருட்டு ஏரண்ட முனிவர் பிலத்தினுள் இறங்க காவிரி வெளிவந்து வலமாகச் சுழித்துக்கொண்டு மேலே சென்ற காரணத்தால் வலஞ்சுழி என்ற பெயர் வந்தது. | மலர்கள் எல்லாம் விண்டு மணம் வீசவும், அம் மலர்களில் நிறைந்துள்ள தண்ணிய தேனை உண்ணும் விருப்பினால் வண்டுகள் இசைபாடவும், விளங்கும் சோலைகள் சூழ்ந்த திருவலஞ்சுழியில் தொண்டர்கள் பரவச் செஞ்சுடர் போன்ற ஒளியினை உடையவராய் எழுந்தருளிய இறைவரே! முன்னெல்லாம் நீர் ஒ–யோடு பாடல்களைப் பாடிக்கொண்டு ப– ஏற்பதற்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| 1481. பாரல் வெண்குரு கும்பகு வாயன நாரையும்<br>வாரல் வெண்டிரை வாயிரை தேரும்வ லஞ்சுழி<br>மூரல் வெண்முறு வல்நகு மொய்யொளி யீர்சொலீர்<br>ஊரல் வெண்டலை கொண்டுல கொக்கவு ழன்றதே. | நீண்ட கழுத்தினை உடைய வெள்ளிய கொக்குகளும், பிளந்த வாயை உடைய நாரைகளும், ஓடுகின்ற தண்ணீரின் வெண்மையான அலைகளில் இரை தேடுகின்ற திருவலஞ்சுழியில் புன்னகையோடு வெள்ளிய பற்கள் விளங்க, செறிந்த ஒளிப்பிழம்பினராய் எழுந்தருளிய இறைவரே! முடியில் வெண்மையான தலை மாலை பொருந்தியவராய் உலகம் முழுவதும் சென்று திரிந்து ப– ஏற்கக் காரணம் யாதோ ? சொல்வீராக. |

| | |
|---|---|
| 1482. கிண்ண வண்ணமல ருங்கிளர் தாமரைத் தாதளாய்<br>வண்ண நுண்மணன் மேலனம் வைகும்வ லஞ்சுழிச்<br>சுண்ண வெண்பொடிக் கொண்டுமெய் பூசவல்லீர்சொலீர்<br>விண்ண வர்தொழ வெண்டலை யிற்பலி கொண்டதே. | கிண்ணம் போல் வாய் விரிந்து செவ்வண்ணம் பொருந்தியதாய் மலர்ந்து விளங்கும் தாமரை மலர்களின் தாதுகளை அளாவி அழகிய நுண்மணற் பரப்பின் மேல் அன்னங்கள் வைகும் திருவலஞ்சுழியில், உடலிற்பூசும் சுண்ணமாகத் திருநீற்றுப் பொடியை மேனிமேற் பூசுதலில் வல்லவராய் விளங்கும் இறைவரே! தேவர்கள் எல்லாம் உம்மை வந்து வணங்கும் தலைமைத்தன்மை உடையவராயிருந்தும் வெள்ளிய தலையோட்டில் பலிகொண்டு திரிதற்குக் காரணம் யாதோ? சொல்வீராக. |
| 1483. கோடெ லாநிறை யக்குவ ளைம்மல ருங்குழி<br>மாடெ லாமலி நீர்மண நாறும்வ லஞ்சுழிச்<br>சேடெ லாமுடை யீர்சிறு மான்மறி யீர்சொலீர்<br>நாடெ லாமறி யத்தலை யில்நற வேற்றதே. | கரைகளெல்லாம் நிறையுமாறு குழிகளில் பூத்த குவளை மலர்கள் எல்லா இடங்களிலும் நிறைந்திருத்தலால் அங்குள்ள தண்ணீர், குவளை மலரின் மணத்தை வீசும் திருவலஞ்சுழியில் விளங்கும் பெருமைகள் எல்லாம் உடையவரே! சிறிய மான் கன்றைக் கையில் ஏந்தியவரே! நாடறியத் தலையோட்டில் பிச்சை ஏற்றல் ஏனோ? சொல்வீராக. |
| 1484. கொல்லை வென்றபுனத் திற்குரு மாமணி கொண்டுபோய்<br>வல்லை நுண்மணன் மேலனம் வைகும்வ லஞ்சுழி<br>முல்லை வெண்முறு வன்னகை யாளொளி யீர்சொலீர்<br>சில்லை வெண்டலை யிற்பலி கொண்டுழல் செல்வமே. | முல்லை நிலத்தைப் போன்ற காடுகளில் கிடைக்கும் நிறம் பொருந்திய மணிகளை எடுத்துச் சென்று விரைவில் அன்னங்கள் நுண்ணிய மணற் பரப்பின்மேல் தங்கி வாழும் திருவலஞ்சுழியில் எழுந்தருளிய, முல்லை அரும்பு போன்ற வெண்மையான முறுவலோடு புன்சிரிப்பையுடைய உமாதேவியை ஆளும் ஒளி வடிவுடையவரே! சிறுமையைத்தரும் வெண்டலையோட்டில் பலிகொண்டுழல்வதைச் செல்வமாகக் கருதுதல் ஏனோ? சொல்வீராக. |
| 1485. பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்<br>வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழித்<br>தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீர்<br>ஏச வெண்டலை யிற்பலி கொள்வ திலாமையே. | நீர் பெருகி வரும் காவிரியில் பூச நன்னாளில் பல மலர்களோடு கூடி மணம் கமழ்ந்துவரும் நீரில் மூழ்குபவர்களின் இடர்களைத் தீர்த்தருளும் திருவலஞ்சுழித் தேசரே! அழகிய சிறிய மான்கன்றைக் கையில் ஏந்தியவரே! பலரும் இகழ வெண்டலையில் நீர் பலிகொள்வது செல்வம் இல்லாமையினாலோ? சொல்வீராக. |

| | |
|---|---|
| **1486.** கந்த மாமலர்ச் சந்தொடு காரகி லுந்தழீஇ<br>வந்த நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழி<br>அந்த நீர்முத னீர்நடு வாமடி கேள்சொலீர்<br>பந்த நீர்கரு தாதுல கிற்ப– கொள்வதே. | மணம் பொருந்திய சிறந்த மலர்களையும், சந்தன மரங்களையும், கரிய அகில் மரங்களையும் தாங்கி வந்த காவிரி நீரில் குளிப்பவர்களின் இடர்களைத் தீர்க்கும் திருவலஞ்சுழியில் எழுந்தருளி உலகிற்கு ஆதியும் நடுவும் அந்தமுமாகி விளங்கும் அடிகளே! உலகிற் பற்றை விளைப்பது என்று மக்களை போலக் கருதாமல் ப–கொள்வது ஏனோ ? சொல்வீராக. |
| **1487.** தேனுற் றநறு மாமலர்ச் சோலையில் வண்டினம்<br>வானுற் றநசை யா–சை பாடும்வ லஞ்சுழிக்<br>கானுற் றகளிற் றின்னுரி போர்க்கவல் லீர்சொலீர்<br>ஊனுற் றதலை கொண்டுல கொக்கவு ழன்றதே. | தேன் பொருந்திய பெரிய மலர்ச்சோலையில் வண்டுகள் தேனுண்ணும் நசையால் உயரிய இசையைப் பாடும் திருவலஞ்சுழியில் எழுந்தருளிக் கொல்லவந்த காட்டு யானையின் தோலை உரித்துப் போர்த்த வ–மையை உடைய இறைவரே! ஊன் பொருந்திய தலையோட்டைக் கையில் கொண்டு உலகெங்கும் உழன்றது ஏனோ ? சொல்வீராக. |
| **1488.** தீர்த்த நீர்வந் திழிபுனற் பொன்னியிற் பன்மலர்<br>வார்த்த நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழி<br>ஆர்த்து வந்தவ ரக்கனை அன்றடர்த் தீர்சொலீர்<br>சீர்த்த வெண்டலை யிற்ப– கொள்வதுஞ் சீர்மையே. | புனிதமான நீர் வந்து செல்லும் காவிரி ஆற்றில் பன் மலர்களைத் தூவி அவ்வாற்று நீரில் மூழ்குவோரது இடர்களைப் போக்கி யருள்பவராய்த் திருவலஞ்சுழியில் மேவி, தன் வ–மையைப் பெரிது எனக் கருதி ஆரவாரித்து வந்த இராவணனை அக்காலத்தில் அடர்த்தவரே! சீர்மை பொருந்திய வெள்ளிய தலையோட்டில் ப– ஏற்றுண்பது உம் பெருமைக்கு அழகோ ? சொல்வீராக. |
| **1489.** உரம னுஞ்சடை யீர்விடை யீரும தின்னருள்<br>வரம னும்பெற லாவது மெந்தைவ லஞ்சுழிப்<br>பிரம னுந்திரு மாலும ளப்பரி யீர்சொலீர்<br>சிரமெ னுங்கல னிற்ப– வேண்டிய செல்வமே. | பெருமை பொருந்திய சடையினை உடையவரே! விடையை ஊர்ந்து வருபவரே! நிலையான வரம் பெறுதற்குரிய இடமாய் உள்ள வலஞ்சுழியில் விளங்கும் எந்தையே! பிரமன் திருமால் ஆகியோரால் அளத்தற்கு அரியரானவரே, நீர் தலையோடாகிய உண் கலனில் ப–யைச் செல்வமாக ஏற்றதற்குக் காரணம் யாதோ ? சொல்வீராக. |
| **1490.** வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்<br>வாடின் ஞானமென் னாவது மெந்தைவ லஞ்சுழி<br>நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை<br>பாடும் ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே. | வீடும் அதற்கு ஏதுவாய ஞானமும் பெற விரும்புவீராயின், விரதங்களை மேற்கொண்டு உடல் வாடுவதனால் ஞானம் வந்துறுமோ ? திருவலஞ்சுழியை அடைந்து ஞானசம்பந்தர் ஓதி யருளிய செந்தமிழை இசையோடு பாடும் ஞானம் வாய்க்கப் பெற்றவர்களின் திருவடிகளை வழிபடுவதொன்றே ஞானத்தைத் தருவதாகும். |

## 3. திருத்தெளிச்சேரி

பண் : இந்தளம் (வினாவுரை) பதிக எண் : 3

| பாடல் | உரை |
|---|---|
| **1491.** பூவ லர்ந்தன கொண்டுமுப் போதுமும் பொற்கழல்<br>தேவர் வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்<br>மேவ ருந்தொழி லாளொடு கேழற்பின் வேடனாம்<br>பாவ கங்கொடு நின்றது போலுநும் பான்மையே. | அலர்ந்தனவாய் பூக்களைக் கொண்டு மூன்று வேளைகளிலும் அருச்சித்துத் தேவர்கள் வந்து வழிபடும் புகழ்மிக்க திருத் தெளிச்சேரியில் விளங்கும் இறைவரே! யாவராலும் செய்தற்கரிய செயல்களைப்புரியும் உமையம்மையோடு பன்றியின் பின் வேடனாகப் பொய் வேடந்தரித்து நின்றது உம் பெருமைக்கு ஏற்ற செயல்போலும்! |
| **1492.** விளைக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவ<br>ரேத்தவே<br>திளைக்குந் தீர்த்த மறாத திகழ்தெளிச் சேரியீர்<br>வளைக்குந் திண்சிலை மேலைந்து பாணமுந்<br>தானெய்து<br>களிக்குங் காமனை யெங்ஙன நீர்கண்ணிற்<br>காய்ந்ததே. | பக்தியை விளைத்தலால் விண்ணவரும் மண்ணவரும் உம்மை வழிபடற்பொருட்டு, திளைத்து முழுகும் தீர்த்தம் விளங்கும் திருத்தெளிச்சேரியில் எழுந்தருளிய இறைவரே! உம்மீது வளைந்த வ–ய வில்–ல் ஐந்து மலர்களைப் பாணமாக எய்து களிப்புற்ற மன்மதனை, நீர் நெற்றிக் கண்ணினால் காய்ந்தது எங்ஙனம்? |
| **1493.** வம்ப டுத்த மலர்ப்பொழில் சூழ மதிதவழ்<br>செம்ப டுத்த செழும்புரி சைத்தெளிச் சேரியீர்<br>கொம்ப டுத்ததொர் கோல விடைமிசைக்<br>கூர்மையோ<br>டம்ப டுத்தகண் ணாளொடு மேவ லழகிதே. | மணம் பொருந்திய மலர்களை உடைய பொழில்களால் சூழப் பெற்றதும், செம்பினை உருக்கி வார்த்துச் செய்த மதில்கள் சூழ்ந்து விளங்குவதுமான திருத்தெளிச்சேரியில் எழுந்தருளிய இறைவரே! கொம்புகளை உடைய அழகிய விடைமீது கூரிய அம்பு போன்ற கண்களை உடைய உமையம்மையோடு மேவி வருவது அழகுதரும் செயலோ? |
| **1494.** காரு லாங்கட –ப்பிகண் முத்தங் கரைப்பெயும்<br>தேரு லாநெடு வீதிய தார்தெளிச் சேரியீர்<br>ஏரு லாம்ப–க் கேகிட வைப்பிட மின்றியே<br>வாரு லாமுலை யாளையொர் பாகத்து வைத்ததே. | நீர் முகந்து செல்லும் மேகங்கள் உலாவும் கடல், முத்துச்சிப்பிகளையும், முத்துக்களையும் அலைகளால் கரையில் கொண்டுவந்து பெய்வதும் தேர் உலாவும் நீண்ட வீதிகளை உடையதுமான திருத்தெளிச்சேரியில் விளங்கும் இறைவரே! எழுச்சி மிக்கவராய்ப் ப–யேற்கச் செல்கின்ற நீர் கச்சணிந்த தனபாரங்களையுடைய உமையம்மையைப் பாதுகாப்பாக வைத்துச் செல்லுதற்கு இடமின்றியோ உமது திருமேனியின் ஒரு பாகமாக வைத்துக் கொண்டுள்ளீர்! |

| | |
|---|---|
| **1495.** பக்க நுந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்கும்<br>செக்கர் மாமதி சேர்மதில் சூழ்தெளிச் சேரியீர்<br>மைக்கொள் கண்ணியர் கைவளை மால்செய்து வெளவவே<br>நக்க ராயுல கெங்கும் ப–க்கு நடப்பதே. | ஒரு பாகமாக உள்ள பார்வதிதேவி உம்மைத் துதித்து, தன் உள்ளத்தே பாவித்து வழிபடுகின்ற, செம்மதிசேரும், மதில் சூழும் திருத்தெளிச் சேரியில் எழுந்தருளிய இறைவரே! ஆடையின்றிப் பல இடங்களுக்கும் நடந்து சென்று ப–யேற்றற்குக் காரணம் மைபூசப் பெற்ற இளம் பெண்களை மயக்கி அவர்களின் கை வளையல்களைக் கவர்தற்குத்தானோ? சொல்லீர். |
| **1496.** தவள வெண்பிறை தோய்தரு தாழ்பொழில் சூழநல்<br>திவள மாமணி மாடந் திகழ்தெளிச் சேரியீர்<br>குவளை போற்கண்ணி துண்ணென வந்து குறுகிய<br>கவள மால்கரி யெங்ஙன நீர்கையிற் காய்ந்ததே. | வெண்மையான பிறைதோயும் தழைகள் தாழ்ந்த பொழில்சூழ்ந்ததும், அசைகின்ற அழகிய ஒளியினையுடைய மணிகள் இழைக்கப்பட்ட மாடவீடுகள் திகழ்வதுமான திருத்தெளிச்சேரியில் உறையும் இறைவரே! குவளை மலர் போன்ற கண்களை உடைய உமையம்மை நடுங்குமாறு உம்மைக்கொல்ல வந்து அடைந்த கவளம் கொள்ளும் பெரிய யானையை எவ்வாறு நீர் கைகளால் சினந்தழித்தீர்? |
| **1497.** கோட டுத்த பொழி–ன் மிசைக்குயில் கூவிடும்<br>சேட டுத்த தொழி–ன் மிகுதெளிச் சேரியீர்<br>மாட டுத்தமலர்க் கண்ணினாள் கங்கை நங்கையைத்<br>தோட டுத்த மலர்ச்சடை யென்கொல்நீர் சூடிற்றே. | மரக்கோடுகள் நிறைந்த பொழி–ன்கண் இசை பாடும் குயில்கள் இருந்து கூவுவதும், பெருமை மிக்க தொழி–ன்கண் ஈடுபட்டோர் மிகுதியாக வாழ்வதுமான திருத்தெளிச்சேரியில் எழுந்தருளிய இறைவரே! செல்வம் நிறைந்தவளும் மலர்போலும் கண்ணினளும் ஆகிய கங்கை நங்கையை இதழ்கள் பொருந்திய கொன்றை மலர் அணிந்த சடையின்கண் சூடியது ஏனோ? கூறுவீர். |
| **1498.** கொத்தி ரைத்த மலர்க்குழ லாள்குயில் கோலஞ்சேர்<br>சித்தி ரக்கொடி மாளிகை சூழ்தெளிச் சேரியீர்<br>வித்த கப்படை வல்ல வரக்கன் விறற்றலை<br>பத்தி ரட்டிக் கரநெரித் திட்டதும் பாதமே. | வண்டுகள் விரிந்த மலர்க் கொத்துக்களைச் சூடிய கூந்த–னள் ஆகிய பார்வதிதேவி குயில் வடிவு கொண்டு வழிபட்டதும், ஓவியம் எழுதப்பட்ட கொடிகள் கட்டப்பட்ட மாளிகைகள் சூழ்ந்ததும் ஆகிய திருத்தெளிச்சேரியில் வாழும் இறைவரே! தவத்தால் பெரிய வாட் போரில் வல்லவனும் வ–ய தலைகள் பத்து, கைகள் இருபது ஆகியவற்றைக் கொண்டவனுமாகிய இராவணனைக் கால் விரலால் நெரித்தது உம் பாதம் அன்றோ? சொல்வீராக. |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1499.** காலெ டுத்த திரைக்கை கரைக்கெறி கானல்சூழ்<br>சேல டுத்த வயற்பழ னத்தெளிச் சேரியீர்<br>மால டித்தல மாமல ரான்முடி தேடியே<br>ஓல மிட்டிட வெங்ஙன மோருருக் கொண்டதே. | காற்றால் எடுத்துக்கொணரப்பெறும் கட−ன் திரைகளாகிய கைகள் கரையின்கண் வீசப் பெறுவதும், கடற்கரைச் சோலைகள் சூழ்ந்ததும், சேல் மீன்கள் தவழும் வயல்களை உடைய மருத நிலம் பொருந்தியதும் ஆகிய திருத் தெளிச்சேரியில் உறையும் இறைவரே! திருமால் அடியையும், தாமரை மலரில் உறையும் நான்முகன் முடியையும் தேட முற்பட்டுக் காணாது ஓலம் இட, நீர் எவ்வாறு ஒப்பற்ற பேருருக் கொண்டீர்? உரைப்பீராக. |
| **1500.** மந்தி ரந்தரு மாமறை யோர்கள் தவத்தவர்<br>செந்தி லங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்<br>வெந்த லாகிய சாக்கிய ரோடு சமணர்கள்<br>தந்தி றத்தன நீக்குவித் தீரோர் சதிரரே. | மந்திரங்கள் ஓதும் மறையோர்களும் தவத்தை உடையவர்களும், செந்து என்ற பண் போன்று இனிய மொழி பேசும் மகளிரும், வாழும் திருத்தெளிச்சேரியில் உறையும் ஒப்பற்ற சதுரரே! கருநிறங்கொண்ட சாக்கியர்களும் சமணர்களும் பேசும் சமய சிந்தனைகளை எவ்வாறு நீக்கியருளினீர்? |
| **1501.** திக்கு லாம்பொழில் சூழ்தெளிச் சேரியெஞ் செல்வனை<br>மிக்க காழியுண் ஞானசம் பந்தன் விளம்பிய<br>தக்க பாடல்கள் பத்தும்வல் லார்கள் தடமுடித்<br>தொக்க வானவர் சூழ விருப்பவர் சொல்−லே. | எட்டுத் திசைகளிலும் பொழில் சூழ்ந்து இலங்கும் திருத்தெளிச் சேரியில் உறையும் எம் செல்வன் மீது புகழ்மிக்க காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய தக்க பாடல்கள் பத்தையும் வேதமுறைப்படி ஓத வல்லவர்கள் அடையும் பயனைக் கூறின், பெரிய முடிகளைச் சூடிய வானவர்கள் சூழ அவர்கள் இருப்பர் எனலாம். |

## 4. திருவான்மியூர்

**பண் : இந்தளம்** (வினாவுரை) **பதிக எண் : 4**

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1502.** கரையு லாங்கட −ற்பொ− சங்கம்வெள் ளிப்பிவன்<br>றிரையு லாங்கழி மீனுக ளுந்திரு வான்மியூர்<br>உரையு லாம்பொரு ளாயுல காளுடை யீர்சொலீர்<br>வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. | கட−ன்கண் விளங்கும் சங்குகளும் வெண்ணிறமான இப்பிகளும் கரையில் வந்துலாவுமாறு அலைகள் வீசுவதும், அவ்வலைகளை உடைய கழிகளில் மீன்கள் பிறழ்வதுமான திருவான்மியூரில், எல்லோராலும் புகழப்படும் பொருளாய் உலகனைத்தையும் ஆட்சி புரிபவராய் விளங்கும் இறைவரே! மலைமாது எனப்படும் உமையம்மையை ஒருடம்பில் உடனாகக் கொண்டுள்ள மாண்பிற்குக் காரணம் யாதோ? சொல்வீராக. |

| | |
|---|---|
| **1503.** சந்து யர்ந்தெழு காரகில் தண்புனல்கொண்டுதம்<br>சிந்தை செய்தடி யார்பர வுந்திரு வான்மியூர்ச்<br>சுந்த ரக்கழன் மேற்சிலம் பார்க்கவல் லீர்சொலீர்<br>அந்தி யின்னொளி யின்னிற மாக்கிய வண்ணமே. | அடியவர்கள் சந்தனம், உயர்ந்து வளர்ந்த கரிய அகில், குளிர்ந்த நீர் ஆகியவற்றைக் கொண்டு வந்து ஆட்டித் தமது சிந்தையால் நினைந்து பரவும் திருவான்மியூரில் வலக்கா–ல் விளங்கும் அழகிய கழல், இடக்கா–ல் விளங்கும் சிலம்பு ஆகியன ஆரவாரிக்கும் திருவடிகளை உடையவரே! மாலையந்தியின் ஒளி போன்ற செவ்வண்ணத்தை உம் நிறமாகக் கொண்ட காரணம் யாதோ ? சொல்வீராக. |
| **1504.** கான யங்கிய தண்கழி சூழ்கட –ன்புறம்<br>தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு வான்மியூர்த்<br>தோன யங்கம ராடையி னீரடி கேள்சொலீர்<br>ஆனையங் கவ்வுரி போர்த்தன லாட வுகந்ததே. | காடு, பள்ளமான கழி ஆகியன சூழ்ந்த கட–ன் புறத்தே தேன் சொரியும் பசுமையான பொழில்கள் சூழ்ந்து விளங்கும் திருவான்மியூரில், பு–த்தோலை ஆடையாகக் கொண்டு எழுந்தருளிய அடிகளே, நீர், யானையின் தோலை உரித்துப் போர்த்தி அனலாடலை விரும்பியது ஏனோ ? சொல்வீராக. |
| **1505.** மஞ்சு லாவிய மாடம திற்பொ– மாளிகைச்<br>செஞ்சொ லாளர்கள் தாம்பயி லுந்திரு வான்மியூர்த்<br>துஞ்சு வஞ்சிரு ளாட லுகக்கவல் லீர்சொலீர்<br>வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள் வைத்ததே. | மேகங்கள் உலாவும் மாடங்களையும் மதில்களையும் அழகிய மாளிகைகளையும் உடையதால், இனிய சொற்களைப் பேசுவோர் வாழ்வதாய் விளங்கும் திருவான்மியூரில், எல்லோரும் உறங்கும் கரிய இருட்போதில் ஆடலை விரும்பி மேற்கொள்ளும் வன்மையை உடையவராய் இலங்கும் இறைவரே! கரிய விடத்தை நீர் உண்டு தேவர்களுக்கு இனிய அருள் வழங்கியது ஏனோ ? சொல்வீர். |
| **1506.** மண்ணி னிற்புகழ் பெற்றவர் மங்கையர் தாம்பயில்<br>திண்ணெ னப்புரி சைத்தொழி லார்திரு வான்மியூர்த்<br>துண்ணெ னத்திரி யுஞ்சரி தைத்தொழி லீர்சொலீர்<br>விண்ணி னிற்பிறை செஞ்சடை வைத்த வியப்பதே. | உலகோரால் புகழப்பெறும் குணநலங்களை உடைய மகளிரையும், உறுதியான வேலைப்பாடுகள் பொருந்திய மதில்களையும் உடைய திருவான்மியூரில் எல்லோரும் வியப்படையும் வண்ணம் ப–யேற்கும் தொழிலை மேற்கொண்டு உறைபவரே, நீர் வானத்தில் விளங்கும் வெண்பிறையை உம் செஞ்சடை மேல் வைத்துள்ள வியப்புடைச் செயலை ஏன் செய்தீர் ? சொல்வீராக. |

| | |
|---|---|
| **1507.** போது லாவிய தண்பொழில் சூழ்புரி சைப்புறம்<br>தீதி லந்தண ரோத்தொழி யாத்திரு வான்மியூர்ச்<br>சூது லாவிய கொங்கையொர் பங்குடை யீர்சொலீர்<br>மூதெ யில்லொரு மூன்றெரி யூட்டிய மொய்ம்பதே. | மலர்கள் நிறைந்த குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்ததும், மதில்களைப் புறத்தே உடையதும், குற்றமற்ற அந்தணர்கள் வேதம் ஓதுதலை இடையறாது உடையதுமாகிய திருவான்மியூரில் சூதாடு கருவி போன்ற வடிவுடைய தனங்களைக் கொண்ட உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பவரே! பழமையான முப்புரங்களை எரிசெய்து அழித்த உமது வீரச் செயலுக்கு காரணம் யாதோ? சொல்வீர். |
| **1508.** வண்டி ரைத்த தடம்பொழி –ன்னிழற் கானல்வாய்த்<br>தெண்டி ரைக்கட லோதமல் குந்திரு வான்மியூர்த்<br>தொண்டி ரைத்தெழுந் தேத்திய தொல்கழ<br>லீர்சொலீர்<br>பண்டி ருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே. | வண்டுகள் ஒ–க்கும் பெரிய சோலைகளின் நிழ–லும் கான–லும் தெளிந்த அலைகளை உடைய திருவான்மியூரில் அடியவர்கள் சிவநாமங்களைச் சொல்–த் துதிக்கும், பழமையான கழல்களை அணிந்துள்ள இறைவரே! முற்காலத்தே நீர் சிவஞானத்தைச் சனகாதியர் நால்வர்க்கு மட்டும் உபதேசித்தது ஏனோ? கூறுவீர். |
| **1509.** தக்கில் வந்த தசக்கிரி வன்றலை பத்திறத்<br>திக்கில் வந்தல றவ்வடர்த் தீர்திரு வான்மியூர்த்<br>தொக்க மாதொடும் வீற்றிருந் தீரரு ளென்சொலீர்<br>பக்க மேபல பாரிடம் பேய்கள் பயின்றதே. | தகுதியற்ற நெறியில் வந்த இராவணன் கயிலை மலையைப் பெயர்க்க முற்பட்டுத் தன் தலைகள் பத்தும் பல திசைகளிலும் வெளிப்பட்டு அவன் அலறுமாறு அவனை அடர்த்தவரே! திருவான்மியூரில் தன் திருமேனியோடு இணைந்த உமையம்மையாரோடும் வீற்றிருந்தருளியவரே! பல பூதகணங்களும், பேய்க் கணங்களும் உம்மைச் சூழ்ந்து பயிலக் காரணம் யாதோ? சொல்வீராக. |
| **1510.** பொருது வார்கட லெண்டிசை யுந்தரு வாரியால்<br>திரித ரும்புகழ் செல்வமல் குந்திரு வான்மியூர்ச்<br>சுருதி யாரிரு வர்க்கு மறிவரி யீர்சொலீர்<br>எருது மேல்கொ டுழன்றுகந் தில்ப– யேற்றதே. | பெரிய கடல் அலைகள் எட்டுத் திசைகளி–ருந்தும் கொண்டு வரும் முத்து பவளம் முத–ய வளங்களால் பரவிய புகழ், செல்வம் ஆகியன நிறைந்த திருவான்மியூரில் வேதங்களை ஓதி மகிழும் திருமால், பிரமன் ஆகிய இருவர்க்கும் அறிதற்கரியவராய் விளங்கும் இறைவரே! எருதின்மேல் ஏறி உழன்று பல இடங்கட்கும் மகிழ்வோடு சென்று ப–யேற்றற்குரிய காரணத்தைக் கூறுவீராக. |

| | |
|---|---|
| 1511. மைத ழைத்தெழு சோலையின் மாலைசேர் வண்டினம்<br>செய்த வத்தொழி லாரிசை சேர்திரு வான்மியூர்<br>மெய்த வப்பொடி பூசிய மேனியி னீர்சொலீர்<br>கைத வச்சமண் சாக்கியர் கட்டுரைக் கின்றதே. | கருநிறம் மிக்குத்தோன்றும் சோலையின்கண் மாலைக்காலத்தில் வண்டுகள் குழுமித் தவஞ்செய்யும் தொழிலையுடைய அந்தணர் ஓதும் வேதாகமம் போல் இசைபாடிச் சேர்கின்ற திருவான்மியூரில், மேனிமீது மிகுதியாக வெண்பொடியணிந்த திருமேனியை உடையவரே! வஞ்சனையை உடைய சமணர் சாக்கியர் உம்மீது பொய்யுரை கூறிப் பழித்துரைக்கக் காரணம் யாதோ ? கூறீர். |
| 1512. மாதொர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்<br>ஆதி யெம்பெரு மானருள் செய்ய வினாவுரை<br>ஓதி யன்றெழு காழியுண் ஞானசம் பந்தன்சொல்<br>நீதி யானினை வார்நெடு வானுல காள்வரே. | உமையம்மையை ஒரு கூறாக உடைய நல்ல தவத்தின் வடிவாய் திருவான்மியூரில் உறையும் ஆதியாகிய எம்பெருமான் அருள் செய்தற்பொருட்டு வினாவிய இதனை ஓதி, ஊழி முடிவாகிய அக்காலத்தே மிதந்து எழுந்த காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் சொல்லால் எழுந்த இப்பதிகத்தை முறையோடு நினைபவர் நீண்ட வானுலகை ஆள்வர். |

## 5. திருஅனேகதங்காவதம்

பண் : இந்தளம் (வடநாட்டுத் தேவாரத்தலம்) பதிக எண் : 5

| | |
|---|---|
| 1513. நீடன் மேவுநிமிர் புன்சடை மேலொர் நிலாமுளை<br>சூடன் மேவுமறை யின்முறை யாலொர் சுலாவழல்<br>ஆடன் மேவுமவர் மேயவ னேகதங் காவதம்<br>பாடன் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே.<br><br>இறைவி கௌரி என்னும் திருநாமத்தோடு தவஞ்செய்த பதியாத–ன் கௌரிகுண்டம் என்றும் சொல்லப்படும். | நீண்டுயர்ந்த சடைமுடிமீது பிறைமதியைச் சூடியவராய் வேத விதிப்படி வளர்க்கப்பெற்றுச் சுழன்றெரியும் தீயில் ஆடுதலை விரும்பும் இறைவர் உறையும் அனேகதங்காவதம் என்னும் தலத்தைப் பாடுதலை விரும்பும் மனத்தினராய பக்தர்கள் வினைகளையும் அவற்றால் விளையும் பற்றுக்களையும் அறுப்பர். |
| 1514. சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்<br>ஆல முண்டபெரு மான்ற னனேகதங் காவதம்<br>நீல முண்டதடங் கண்ணுமை பாக நிலாயதோர்<br>கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே.<br><br>கேதார யாத்திரையின் போது இத்தலத்தைத் தரிசிக்கலாம். | சூலத்தையும் மழுவையும் படைக்கலங்களாகக் கொண்டு, உலகைச் சூழ்ந்துள்ள ஆழமான கட–ல் தோன்றிய விடத்தை உண்டு உலகைக் காத்தருளிய பெருமான், அனேகதங்காவதத்தில் நீலநிறம் பொருந்திய பெரிய கண்களையுடைய உமையம்மை ஒரு பாகமாக விளங்கும் அழகினராய், அவ்வம்மையோடு குலாவும் செயல்களுக்கு அளவில்லை. |

| | | |
|---|---|---|
| 1515. | செம்பி னாருமதின் மூன்றெரி யச்சின வாயதோர்<br>அம்பி னாலெய்தருள் வில்– யனேகதங் காவதம்<br>கொம்பி னேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை<br>நம்ப னாமநவி லாதன நாவென லாகுமே. | செம்பினால் இயன்ற ஒப்பற்ற மும்மதில்களும் எரியச் சினத்தை முனையிலே உடைய ஓர் அம்பினால் எய்து தேவர்கட்கு அருள்புரிந்த வில்லாளியும், அனேகதங்காவதத்தில் பூங்கொம்பு போன்ற இடையினை உடைய உமையம்மையோடு கூடிக் கொல்லேற்றைத் தனது ஊர்தியாகக் கொண்ட நம்பனுமாகிய பெருமான் திருப்பெயரைச் சொல்லாதவை நாக்கள் எனல் ஆகுமோ? |
| 1516. | தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்<br>சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்<br>அந்த மில்லவள வில்ல வனேகதங் காவதம்<br>எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. | 'தந்தத் திந்தத் தடம்' என்ற ஒ–க்குறிப்போடு அருவிகள் பாய்ந்து சென்று ஒழுக, வெம்மையான கதிர்களை உடைய கதிரவன் ஒளியும், குற்றமற்ற திங்களின் ஒளியும் பரவ, முடிவு அற்ற அளவுபடுத்த முடியாத அனேகதங்காவதம், எந்தையாகிய, திருநீற்றைப் பூசி மகிழும் சிவபெருமானுக்கு இடமாக உள்ளது. |
| 1517. | பிறையு மாசில்கதி ரோனறி யாமைப் பெயர்ந்துபோய்<br>உறையுங் கோயில் பசும்பொன் னணியா ரசும்பார்புனல்<br>அறையு மோசை பறைபோலு மனேகதங் காவதம்<br>இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. | திங்களும் ஞாயிறும் உயர்ச்சியை அறிய முடியாது. பக்கத்தே விலகிச் சென்று உறையும் வானளாவிய கோயிலை உடையதாய்ப், பசும்பொன் போன்ற அழகிய நீர்த்துளிகளை உடையவாய்ப் பறை போன்று ஒ–த்து ஒழுகும் அருவிகளை அடுத்துள்ளது ஆகிய அனேகதங்காவதத்தை, எம் ஈசனாகிய இறைவன் தனது இடமாகக் கொண்டு உகந்தருளுகின்றான். |
| 1518. | தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்<br>ஆனை யேறுமணி சார லனேகதங் காவதம்<br>வானை யேறுநெறி சென்றுண ருந்தனை வல்–ரேல்<br>ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. | தேனை மிகுதியாகப் பெற்ற மணம் கமழும் சிறந்த மலர்களைப் பறித்து இறைவன் திருவடிகளில் சேர்ப்பிக்கும் அடியவர்களே! வீடுபேறு அடைதற்குப் பின்பற்றும் சரியை, கிரியை முதலான நெறிகளில் நின்று அவனை உணர நீவிர் வல்லீராயின் யானைகள் ஏறி உலாவும் அழகிய சாரலை உடைய அனேகதங்காவதத்துள் விளங்கும் ஆன் ஐந்தாடும் முடியானாகிய சிவபிரான் உங்கட்கு அவ்வானுலகப் பேற்றினை வழங்கியருளுவான். |

| | | |
|---|---|---|
| **1519.** | வெருவி வேழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்<br>குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்<br>அருவி பாயுமணி சாரல னேகதங் காவதம்<br>மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. | யானைகள் அஞ்சி ஓடுமாறு ஒ–த்துப் பாய்வனவும், ஒளிபொருந்திய முத்துக்கள், வெண்பளிங்கு ஆகியன நீரை ஊடுருவி வீழ்வனவும், வயிரங்களைக் கொழித்து அகில்மரங்களை உந்திக் கொண்டு வருவனவும் ஆகிய வெண்மையான அருவிகள் பாயும் அழகிய சாரலை உடைய அனேகதங்காவதத்தை அடைந்து அங்கு வாழும் பெருமான் திருவடிகளை அடைவதே மெய்ந்நெறியாகும். |
| **1520.** | ஈர மேதுமில னாகி யெழுந்த விராவணன்<br>வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்<br>ஆரம் பாம்ப தணிவான்ற னனேகதங் காவதம்<br>வார மாகிநினை வார்வினை யாயின மாயுமே. | அன்பு ஒருசிறிதும் இன்றித் தன் வ–மையைப் பெரிது என எண்ணி எழுந்த இராவணனை வீரம் அற்றவனாகச் செய்தருளிய, கயிலை மலைக்குரியவனும், ஆரமாகப் பாம்பை அணிபவனும் ஆகிய சிவபிரானின் அனேகதங்காவதத்தை அன்போடு நினைபவர் வினைகள் மாயும். |
| **1521.** | கண்ணன் வண்ணமல ரானொடுங் கூடியோர்க்<br>கையமாய்<br>எண்ணும் வண்ணமறி யாமை யெழுந்ததோ ராரழல்<br>அண்ண னண்ணுமணி சாரல னேகதங் காவதம்<br>நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. | திருமால் நான்முகனோடு கூடி அடிமுடி அறிய முற்பட்டபோது அவர்கள் அறிய முடியுமா என எண்ணி ஐயுறும் வண்ணம் அவர்கட்கு இடையே எழுந்ததோர் அழற்பிழம்பாகிய சிவபெருமான் எழுந்தருளிய அழகிய சாரலை உடைய அனேகதங்காவதத்தை நண்ணும் இயல்புடையார் வினைகள் நாசமாகும். |
| **1522.** | மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்<br>ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கள்தாம்<br>ஆப தம்மறி வீருளி ராகில னேகதங்<br>காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. | சிறந்த சிவபதத்தை அறியாதவராகிய சமண புத்தர்கள் 'ஏஏ' என இகழத்தக்கவர்களாய் இறுமாப்புடையவர்களாய் உழல்கின்றவர் ஆவர். நாம் அடையத்தக்கது ஆகிய சிவபதத்தை அறியும் அவா உடையீராயின் அனேகதங்கா வதத்துள் எழுந்தருளிய சிவபிரான் திருவடிகளை ஆராய்ந்துணர்தலே நீவிர் செய்யத்தக்க கருமம் ஆகும். |

| | |
|---|---|
| **1523.** தொல்லையூ ழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை<br>நல்லகேள் வித்தமிழ் ஞானசம் பந்தனல் லார்கண்முன்<br>அல்லல் தீரவுரை செய்த வனேகதங் காவதம்<br>சொல்ல நல்லவடை யும்மடை யாசுடு துன்பமே. | பழமையான ஊழிக்காலத்தே தோணியாய் மிதந்த காரணத்தால் அப்பெயர் பெற்ற தோணிபுரம் என்னும் சீகாழிப்பதியின் தலைவனும், நல்ல நூற்கேள்வியை உடையவனும் ஆகிய தமிழ்ஞானசம்பந்தன் நல்லோர்கள் திருமுன்னர், அல்லல்தீர உரைத்தருளிய அனேகதங்கா வதத்தைப் புகழ்ந்து போற்றின், நல்லன வந்துறும். நம்மைச் சுடும் துன்பங்கள் நம்மை அடைய மாட்டா. |

## 6. திருவையாறு

பண் : இந்தளம் பதிக எண் : 6

| | |
|---|---|
| **1524.** கோடல்கோங் கங்குளிர் கூவிள மாலை குலாயசீர்<br>ஒடுகங் கையொளி வெண்பிறை சூடு மொருவனார்<br>பாடல் வீணைமுழ வங்குழன் மொந்தைபண் ணாகவே<br>ஆடு மாறுவல் லானுமை யாறுடை யையனே. | வெண்காந்தள், கோங்கம் குளிர்ந்த வில்வ மாலை, சீர்மிகு கங்கை, ஒளி வெண்பிறை ஆகியனவற்றை முடியிற் சூடிய ஒருவனும் பாடற்குரிய வீணை, முழவம், குழல், மொந்தை ஆகியன தாளத்தோடு ஒ–க்க ஆடுத–ல் வல்லவனும் ஆகிய இறைவன் ஐயாறுடைய ஐயனாவான். |
| **1525.** தன்மை யாருமறி வாரிலை தாம்பிற ரெள்கவே<br>பின்னு முன்னுஞ்சில பேய்க்கணஞ் சூழத் திரிதர்வர்<br>துன்ன வாடை யுடுப்பர் சுடலைப்பொடி பூசுவர்<br>அன்னமா லுந்துறை யானுமை யாறுடை யையனே. | அன்னங்கள் ஒ–க்கும் ஐயாறுடைய ஐயனின் தன்மையை அறிபவர் எவரும் இல்லை. அத்தகைய இறைவர் பிறர் எள்ளுமாறு சில பேய்க்கணங்கள் பின்னும் முன்னும் சூழத் திரிவார். கந்தலான ஆடையை இடையிலே கட்டியிருப்பார். இடுகாட்டின் சாம்பலை மேனிமேல் பூசுவார். |
| **1526.** கூறு பெண்ணுடை கோவண முண்பது வெண்டலை<br>மாறி லாருங்கொள் வாரிலை மார்பில் அணிகலம்<br>ஏறு மேறித் திரி வரிமை யோர்தொழு தேத்தவே<br>ஆறு நான்குஞ்சொன் னானுமை யாறுடை யையனே. | ஐயாறுடைய ஐயன், ஒரு கூறாக உமையம்மையைக் கொண்டவர்; கோவண ஆடை உடுத்தவர்; வெள்ளிய தலையோட்டில் பிச்சையேற்று உண்பவர். மார்பில் அணிந்துள்ள அணிகலன்களோ பண்டமாற்றாகப் பிறகொள்வார் இல்லாத ஆமையோடு, பன்றிக் கொம்பு, பாம்பு முதலானவை. இடபத்தில் ஏறித் திரிபவர். தேவர் பலரும் வணங்க நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளியவர். |

| | | |
|---|---|---|
| **1527.** | பண்ணி னல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினார்<br>எண்ணி னல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினார்<br>வண்ணம் பாடிவ– பாடித்தம் வாய்மொழி பாடவே<br>அண்ணல் கேட்டுகந் தானுமை யாறுடை யையனே. | பண்ணிசையினும் இனிய மொழி பேசுபவரும், பவளம் போன்ற சிவந்த வாயினை உடையவரும், எண்ணற்ற நல்ல குணங்களை உடையவரும், வேல் இணை போன்ற விழியினரும் ஆகிய இளமகளிர், தம் தன்மைகளையும், வ–ய வீரச் செயல்களையும் தம் வாய் மொழியால் பாடி வணங்க அவற்றைக் கேட்டு உகந்தருளுபவர், ஐயாறுடைய ஐயன். |
| **1528.** | வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே<br>வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனார்<br>தேனெய் பாறயிர் தெங்கிள நீர்கரும் பின்றெளி<br>ஆனஞ் சாடுமுடி யானுமை யாறுடை யையனே. | கொடிய யானையைப் பலரும் வெருவுமாறும் உமையம்மை அஞ்சுமாறும் கொன்று, அதன் தோலை உரித்துப் போர்த்தவரும், வானத்தைக் கிழித்துச் செல்லும் மதியை முடியில் சூடிய வ–யரும், தேன், நெய், பால், தயிர், இளநீர், கரும்பின் சாறு, ஆனைந்து ஆகியவற்றை ஆடும் முடியினரும் ஆகிய பெருமைகட்கு உரியவர் ஐயாறுடைய ஐயன் ஆவார். |
| **1529.** | எங்கு மாகிநின் றானு மியல்பறி யப்படா<br>மங்கை பாகங்கொண் டானு மதிசூடு மைந்தனும்<br>பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்<br>அங்க மாறுஞ்சொன் னானுமை யாறுடை யையனே. | எங்கும் நிறைந்தவனும் பிறர் அறியவாராத இயல்பினனும், உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவனும் மதி சூடிய மைந்தனும் குற்றமற்ற பதினெண் புராணங்கள், நான்கு வேதங்கள் அவற்றை அறிதற்குதவும் ஆறு அங்கங்கள் ஆகியவற்றை உரைத்தருளியவனும் ஆய பெருமான், ஐயாறுடைய ஐயனாவான். |
| **1530.** | ஓதி யாருமறி வாரிலை யோதி யுலகெலாம்<br>சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்<br>வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்<br>ஆதி யாகிநின் றானுமை யாறுடை யையனே. | யாவராலும் ஓதி அறிதற்கு அரியவனும், உயிர்கள் தாமே அறிதற்கு இயலாதவனாயினும் அவனே ஓதுவித்தும் உணர்வித்தும் சோதியாக நிறைந்துள்ளவனும், சுடர்ச் சோதியுட் சோதியாக விளங்குபவனும், வேத வடிவினனும், விண், மண், எரி, காற்று ஆகி உலகின் முதல்வனாய் விளங்குபவனும் ஆகிய பெருமான் ஐயாறுடைய ஐயனாவான். |
| **1531.** | குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்<br>விரவு நீறணி வார்சில தொண்டர் வியப்பவே<br>பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்<br>அரவ மார்த்துகந் தானுமை யாறுடை யையனே. | ஐயாறுடைய ஐயன் அடியவர் அன்றலர்ந்த குரா மலர்களைக் கொண்டு வழிபடவும், திருநீற்றை மேனியெங்கும் விரவிப் பூசிய தொண்டர்கள் வியந்து போற்றவும், அரவாபரணனாய் எழுந்தருளியுள்ளான். நம் பாவங்கள் அவனை வழிபட நீங்குவதால், நாமும் நாளும் அவனைப் பரவி ஏத்துவோம். |

| | |
|---|---|
| **1532.** உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்<br>வரைசெய் தோளடர்த் துமதி சூடிய மைந்தனார்<br>கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்<br>அரைசெய் மேகலை யானுமை யாறுடை யையனே. | வேதங்கள் உரைத்த பழமையான நெறியை மேற்கொள்ளாத இலங்கைமன்னன் இராவணனைக் கயிலை மலைக்கீழ் அகப்படுத்தி அவனது தோள் வ–மையை அடர்த்தவரும், மதி சூடிய மைந்தரும் காவிரி வடகரையில் விளங்கும் ஐயாற்றில் மகிழ்வோடு இடையில் மேகலாபரணம் புனைந்து உறைபவரும் ஆகிய பெருமானார், ஐயாறுடைய ஐயன் ஆவார். |
| **1533.** மாலுஞ் சோதி மலரானு மறிகிலா வாய்மையான்<br>காலங் காம்பு வயிரங் கடிகையன் பொற்கழல்<br>கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்<br>ஆல நீழலு ளானுமை யாறுடை யையனே. | ஐயாறுடைய ஐயன் திருமாலும் நான்முகனும் அறிய இயலாத சத்திய வடிவானவன். அவனது கால் போலத் திரண்ட அழகிய காம்பினையும், கழல் போன்ற கொழுந்தினையும் பவளம் போன்ற பழங்களையும் ஈன்ற திரண்ட கல்லால மரநிழ–ல் எழுந்தருளியுள்ளான். |
| **1534.** கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையான்<br>மெய்யைப் போர்த்துழல் வாரு முரைப்பன மெய்யல<br>மைகொள் கண்டத்தெண்டோண்முக்க ணான்கழல் வாழ்த்தவே<br>ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை யையனே. | கையில் உணவை வாங்கி உண்டு உழலும் சமணரும், நாற்றம் அடிக்கும் துவராடையால் உடலைப் போர்த்துத் திரியும் புத்தரும் கூறும் உரைகள் மெய்யல்ல என்பதை அறிந்து, நீலகண்டமும் எண் தோளும் மூன்று கண்களும் உடைய சிவனே பரம்பொருள் எனத் தேர்ந்து அவர் திருவடி வாழ்த்த, ஐயந்தேரும் ஐயாறுடைய ஐயன் நம்மைக் காத்தருளுவான். |
| **1535.** ப–தி ரிந்துழல் பண்டங்கன் மேயவை யாற்றினைக்<br>க–க டிந்தகை யான்கடற் காழியர் காவலன்<br>ஒ–கொள் சம்பந்த னொண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்<br>ம–கொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. | ப– ஏற்று உழல்பவனாய், பாண்டரங்கக் கூத்தாடும் பெருமான் எழுந்தருளிய திருவையாற்றினை உலகில் க– வாராமல் கடியும் வேள்வி செய்தற்கு உரிமை பூண்ட திருக்கரங்களை உடைய, கடலை அடுத்துள்ள காழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் இசையொ– கூடிய சிறந்த தமிழால் பாடிய இப்பதிகப் பாடல்களை வல்லவர்கள் புகழ் ம–ந்த வானுலகில் நிலையான சிறப்பைப் பெறுவார்கள். |

## 7. திருவாஞ்சியம்

பண் : இந்தளம் | பதிக எண் : 7

| பாடல் | உரை |
|---|---|
| **1536.** வன்னி கொன்றைமத மத்த மெருக்கொடு கூவிளம்<br>பொன்னி யன்றசடை யிற்பொ– வித்தபு ராணனார்<br>தென்ன வென்றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்<br>என்னை யாளுடை யானிட மாக வுகந்ததே. | வன்னியிலை கொன்றைமலர் ஊமத்தம் மலர், எருக்கு, வில்வம் ஆகியவற்றைப் பொன் போன்ற தம் சடையில் சூடிய பழமையாளரும், என்னை அடிமையாகக் கொண்டவரும் ஆகிய சிவபிரான் தமது இருப்பிடமாகக் கொண்டு விரும்பிய ஊர், வரிவண்டுகள் 'தென்ன' என்ற ஒ–க் குறிப்போடு இசைபாடும் திருவாஞ்சியமாகும். |
| **1537.** கால காலர்கரி கானிடை மாநட மாடுவர்<br>மேலர் வேலைவிட முண்டிருள் கின்ற மிடற்றினர்<br>மாலை கோலமதி மாடமன் னுந்திரு வாஞ்சியம்<br>ஞாலம் வந்து பணியப்பொ– கோயில் நயந்ததே. | காலனுக்குக் காலர்; கரிந்த இடுகாட்டில் சிறந்த நடனம் புரிபவர்; எப்பொருட்கும் எல்லா உயிர்கட்கும் மேலானவர்; கட–டைத் தோன்றிய நஞ்சினை உண்டு இருள்கின்ற கண்டத்தை உடையவர்; அச்சிவபிரான், மாலைக்காலத்தே தோன்றும் அழகிய மதி உச்சியில் பொருந்தும் மாடவீடுகள் நிறைந்த திருவாஞ்சியத்தில் உள்ள அழகிய கோயிலை, உலகோர் வந்து தம்மைப் பணிந்து அருள் பெறுமாறு விரும்பி வீற்றிருந்தருளுகின்றார். |
| **1538.** மேவி லொன்றர் விரிவுற்ற விரண்டினர் மூன்றுமாய்<br>நாவி னாலருட லஞ்சின ராறரே ழோசையர்<br>தேவி லெட்டர்திரு வாஞ்சிய மேவிய செல்வனார்<br>பாவந் தீர்ப்பர்பழி போக்குவர் தம்மடி யார்கட்கே.<br><br>(எண்ணலங்காரப் பாடல்)<br><br>இப்பதிகத்தின் 3, 5, 6, 7, 8, 10, 11 ஆம் பாடல்களில் அடியார்கள் பெறும் பேற்றினைக் குறிப்பிடுகிறார். | விரும்பி வழிபடின் நீ நான் என்ற வேற்றுமையின்றி அந்நியம் ஆவர். ஒன்றாய் அரும்பிய அவர் பலவாய் விரியுமிடத்து, சிவம் சக்தி என இரண்டாவர். ஒன்றாய் வேறாய் உடனாய் மூன்றாவர். நாவினால் நான்கு வேதங்களை அருளியவர். பரை ஆதி இச்சை ஞானம் கிரியை என்னும் ஐவகைச் சத்தியாகிய திருவுருவை உடையவர். ஆறுகுணங்களை உடையவர். ஏழு ஓசை வடிவினர். அட்டமூர்த்தங்களாய் விளங்குபவர். இத்தகையவராய்த் திருவாஞ்சியத்தில் எழுந்தருளியுள்ள செல்வனார் தம் அடியவர்களின் பாவங்களைத் தீர்ப்பர். அவர் அடியவர்கட்கு வரும் பழியைப் போக்குபவர். |

| | |
|---|---|
| **1539.** சூல மேந்திவளர் கையினர் மெய்சுவண் டாகவே<br>சால நல்லபொடிப் பூசுவர் பேசுவர் மாமறை<br>சீல மேவுபுக ழாற்பெரு குந்திரு வாஞ்சியம்<br>ஆல முண்டவடி கள்ளிடம் ஆக வமர்ந்ததே. | சூலம் ஏந்திய நீண்ட கையினை உடையவர்; தம் திருமேனிக்குப் பொருத்தமாக நல்ல திருநீற்றை மிகுதியாகப் பூசுபவர்; சிறந்த வேத வசனங்களைப் பேசுபவர். ஆலகாலம் உண்டருளிய அவ்விறைவர், ஒழுக்கத்தால் சிறந்தோர் வாழ்வதால் புகழ்பெற்ற திருவாஞ்சியத்தை இடமாகக் கொண்டு அமர்ந்துள்ளார். |
| **1540.** கையி லங்குமறி யேந்துவர் காந்தளம் மெல்விரல்<br>தையல் பாகமுடை யாரடை யார்புரஞ் செற்றவர்<br>செய்ய மேனிக்கரி யமிடற் றார்திரு வாஞ்சியத்<br>தையர் பாதமடை வார்க்கடை யாவரு நோய்களே. | கையின்கண், விளங்கும் மான் கன்றை ஏந்தியவர்; காந்தள் இதழ் போன்ற மெல்–ய விரல்களை உடைய பார்வதிதேவியைத் தமது பாகமாகக் கொண்டவர்; பகைவராகிய திரிபுரத்து அசுரரின் முப்புரங்களை அழித்தவர்; சிவந்த திருமேனியையும் கரிய மிடற்றையும் உடையவர்; இத்தகையோராய்த் திருவாஞ்சியத்துள் எழுந்தருளிய தலைவராகிய சிவபிரான் திருவடிகளை அடைபவர்களைப் போக்கற்கு அரிய நோய்கள் எவையும் அடையா. |
| **1541.** அரவம் பூண்பரணி யுஞ்சிலம் பார்க்க வகந்தொறும்<br>இரவி னல்லப– பேணுவர் நாணிலர் நாமமே<br>பரவு வார்வினை தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்<br>மருவி யேத்தமட மாதொடு நின்றவெம் மைந்தரே. | அரவை அணிகலனாகப் பூண்பவர்; கா–ல் அணியும் சிலம்பு ஆரவாரிக்க வீடுகள் தோறும் நாணிலராய் இரவிற் சென்று நல்ல ப–யைப் பெறுபவர்; தம் திருப் பெயர்களைக் கூறிப் பரவுவார் வினைகளைத் தீர்க்கத் திருவாஞ்சியத்துள் நாம் சென்று வழிபடுமாறு உமையம்மையாரோடு எழுந்தருளியுள்ளார். |
| **1542.** விண்ணி லானபிறை சூடுவர் தாழ்ந்து விளங்கவே<br>கண்ணி னாலநங் கன்னுட லம்பொடி யாக்கினார்<br>பண்ணி லானவிசை பாடன்மல் குந்திரு வாஞ்சியத்<br>தண்ணலார் தம்மடி போற்றவல் லார்க்கில்லை<br>யல்லலே. | வானகத்தே தோன்றிய பிறைமதியைத் தம் திருமுடியில் தங்கி விளங்குமாறு சூடியவர்; நெற்றிக் கண்ணால் மன்மதனின் உடலை நீறாக்கியவர். பண்களில் பொருந்திய இசையோடு பாடும் புகழ்பொருந்திய திருவாஞ்சியத்துள் விளங்கும் அவ்வண்ணலாரின் திருவடியைப் போற்றவல்லார்க்கு அல்லல் இல்லை. |

| | |
|---|---|
| **1543.** மாட நீடுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்<br>வாடியூ டவரை யாலடர்த் தன்றருள் செய்தவர்<br>வேடவேடர்திரு வாஞ்சிய மேவிய வேந்தரைப்<br>பாட நீடுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. | நீண்ட கொடிகள் நிலைத்துள்ள மாடவீடுகளைக் கொண்ட தென்னிலங்கைக்கு அரசனாகிய இராவணன் வாடி வருந்தக் கயிலை மலையால் அவனை அடர்த்துப்பின் அருள்செய்தவர்; அருச்சுனன் பொருட்டு வேட்டுவக் கோலம் தாங்கியவர். திருவாஞ்சியத்துள் எழுந்தருளிய வேந்தர். அவ்விறைவரைப் பாட எண்ணுவார், வினை, பற்று ஆகியன நீங்கப் பெறுவர். |
| **1544.** செடிகொ ணோயினடை யார்திறம் பார்செறு தீவினை<br>கடிய கூற்றமுங் கண்டக லும்புகல் தான்வரும்<br>நெடிய மாலொடய னேத்தநின் றார்திரு வாஞ்சியத்<br>தடிகள் பாதமடைந் தாரடி யாரடி யார்கட்கே. | நீண்டுயர்ந்த திருமாலும் பிரமனும் தம்மை வணங்குமாறு ஓங்கிநின்ற திருவாஞ்சியத்து அடிகளாகிய சிவபிரான் திருவடிகளை அடைந்த அடியவர்களின் திருவடிகளை அடைந்தவர்கள், துன்பம் தரும் நோய்களை அடையார். துன்புறுத்தும் தீவினைகளால் மாறுபடார். கொடிய கூற்றுவனும் அவர்களைக்கண்டு அஞ்சி அகல்வான். சிவகதி அவர்களைத் தேடி வரும். |
| **1545.** பிண்ட முண்டுதிரி வார்பிரி யுந்துவ ராடையார்<br>மிண்டர் மிண்டுமொழி மெய்யல பொய்யிலை யெம்மிறை<br>வண்டு கெண்டிமரு வும்பொழில் சூழ்திரு வாஞ்சியத்<br>தண்ட வாணனடி கைதொழு வார்க்கில்லை யல்லலே. | பிறர் திரட்டித்தந்த சோற்றை உண்டு திரியும் சமணரும், செந்நிற ஆடையைப் போர்த்துழலும், அவரின் வேறுபட்ட புத்தரும் ஆகிய மிண்டர்கள் வ–ந்துகூறும் உரைகள் மெய்யல்ல. பொய்யி–யாகிய எம் இறைவன் வண்டுகள் கிளறி உண்ணும் தேன் நிறைந்த மலர்களை உடைய பொழில் சூழ்ந்த திருவாஞ்சியத்துள் எழுந்தருளியுள்ளான். அண்டம் முழுவதும் வாழும் அவன் திருவடிகளைக் கைகளால் தொழுது வணங்குவார்க்கு அல்லல் இல்லை. |
| **1546.** தென்றல் துன்றுபொழில் சென்றணை யுந்திரு வாஞ்சியத்<br>தென்று நின்றவிறை யானை யுணர்ந்தடி யேத்தலால்<br>நன்று காழிமறை ஞானசம் பந்தன செந்தமிழ்<br>ஒன்று முள்ளமுடை யாரடை வாருயர் வானமே. | தென்றல், பொழிலைப் பொருந்தி அதன் மணத்துடன் சென்று வீசும் திருவாஞ்சியத்துள் என்றும் நீங்கா துறையும், இறைவனியல்பை உணர்ந்து அவனடிகளை ஏத்தித் துதித்தலால், நன்மை தரும் காழிப்பதியுள் மறைவல்லவனாய்த் தோன்றிய ஞானசம்பந்தனின் இச்செந்தமிழ்ப் பாடல்களில் ஈடுபடும் மனம் உடையவர்கள், உயரிய வீடு பேற்றை அடைவர். |

## 8. திருச்சிக்கல்

பண் : இந்தளம் பதிக எண் : 8

**1547.** வானு லாவுமதி வந்துல வும்மதின் மாளிகை
தேனு லாவுமலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல் வேளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞான மாகநினை வார்வினை யாயின நையுமே.

வானத்தே உலாவும் மதிவந்து பொருந்தும் மதில்கள் சூழ்ந்த மாளிகைகளும், தேன்பொருந்திய மலர்களை உடைய சோலைகளும் நிறைந்து விளங்கும் திருச்சிக்கல் என்னும் தலத்தில், வேனிற் காலத்துக்குரியவனாகிய மன்மதனை நெற்றி விழியால் எரித்தழித்த வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளை அவனருளால் விளைந்த பதி ஞானத்தாலேயே நினைபவர் வினைகள் நைந்து அறும்.

வசிட்டர் காமதேனுவின் வெண்ணெயினால் சிவ–ங்கம் தாபித்துப் பூசித்தார். பூசை முடிவில் அது எடுக்க முடியாமல் சிக்கியதால் **சிக்கல்** எனப்பெயர் பெற்றது.

**1548.** மடங்கொள் வாளைகுதி கொள்ளு மணமலர்ப் பொய்கைசூழ்
திடங்கொண் மாமறை யோரவர் மல்கிய சிக்கலுள்
விடங்கொள் கண்டத்துவெண் ணெய்ப்பெரு மானடி மேவியே
அடைந்து வாழும்மடி யாரவ ரல்ல லறுப்பரே.

இளமை பொருந்திய வாளைமீன்கள் துள்ளிக் குதித்துக் களிக்கும் மணம் பொருந்திய மலர்கள் நிறைந்த பொய்கைகள் சூழ்ந்ததும் மனஉறுதியுடைய சிறந்த மறையவர்கள் நிறைந்துள்ளதுமான சிக்க–ல் எழுந்தருளிய, விடம் தங்கிய கண்டத்தினை உடைய வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளை மனத்தால் விரும்பியவராய் அடைந்து வாழும் அடியவர்கள் அல்லல்கள் நீங்குவர்.

**1549.** நீல நெய்தனில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வளம் மல்கிய சிக்கலுள்
**வேலொண் கண்ணியி னாளையொர் பாகன்வெண் ணெய்ப்பிரான்**
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம் பறையுமே.

நீலநிறம் பொருந்திய நெய்தல் மலர்கள் விளங்கி மலரும் சுனைகள் பலவற்றைக் கொண்டதும், சேல்மீன்கள் துள்ளும் வயல் வளம் நிறைந்ததுமான சிக்கல் என்னும் திருப்பதியில் வேல் போன்ற ஒளிநிறைந்த கண்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட வெண்ணெய்ப் பிரானாகிய பால்வண்ணநாதனின் திருவடிகளை ஏத்தின் நம் பாவங்கள் நீங்கும்.

**வெண்ணெய்ப்பிரான் – சுவாமி**
**வேல்நெடுங்கண்ணி – அம்பாள்**

**1550.** கந்த முந்தக் கைதைபூத்துக் கமழ்ந்துசே ரும்பொழிற்
செந்துவண் டின்னிசைப் பாடன்மல் குந்திகழ் சிக்கலுள்
வெந்தவெண் ணீற்றண்ணல் வெண்ணெய்ப் பிரான்விரை யார்கழல்
சிந்தைசெய் வார்வினை யாயின தேய்வது திண்ணமே.

மணம் முற்பட்டுச் சென்று பரவுமாறு தாழைகள் பூத்துக் கமழும் பொழில்களில் வண்டுகள் செந்து என்னும் ஒருவகைப் பண்ணோடு பாடும் பாடல்களைக் கொண்டு விளங்கும் சிக்கல் என்னும் தலத்தில், கற்பம் செய்தமைத்த திருவெண்ணீற்றை அணிந்த தலைமையாளனாகிய வெண்ணெய்ப்பிரானின் மணம் பொருந்திய திருவடிகளை நினைபவர் வினைகள் தேய்வது திண்ணம்.

| | |
|---|---|
| 1551. மங்குல்தங் கும்மறை யோர்கண்மா டத்தய லேமிகு<br>தெங்குதுங் கப்பொழிற் செல்வமல் குந்திகழ் சிக்கலுள்<br>வெங்கண்வெள் ளேறுடை வெண்ணெய்ப்பி ரானடி மேவவே<br>தங்கு மேற்சர தந்திரு நாளுந் தகையுமே. | மேகங்கள் தங்கும் மறையவரின் மாட வீடுகளையும் அவற்றின் அருகே உயர்ந்து வளர்ந்துள்ள தென்னைகளை உடைய சோலைகளையும் கொண்டு செல்வம் நிறைந்து விளங்கும் சிக்கல் என்னும் தலத்தில் வெள்ளேற்று ஊர்தியை உடைய வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளை அடையின், மேலான கதி கிடைத்தல் உறுதி. செல்வம் நாள்தோறும் பெருகும். |
| 1552. வண்டி ரைத்துமது விம்மிய மாமலர்ப் பொய்கைசூழ்<br>தெண்டி ரைக்கொள்புனல் வந்தொழு கும்வயற் சிக்கலுள்<br>விண்டி ரைத்தமல ராற்றிகழ் வெண்ணெய்ப் பிரானடி<br>கண்டி ரைத்துமன மேமதி யாய்கதி யாகவே. | வண்டுகள் ஒ–செய்து சூழத் தேனை மிகுதியாகச் சொரியும் பெரிய மலர்களைக் கொண்டுள்ள பொய்கைகள் சூழ்ந்ததும் தண்ணீர் பெருகி ஓடும் வயல்களை உடையதுமான சிக்கற் பதியில், திருமால் பூசித்த மலர்களால் திகழும் வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளைத் தரிசித்துத் துதிசெய்து நற்கதி பெற 'மனமே மதித்துப் போற்றுவாயாக'. |
| 1553. முன்னுமா டம்மதின் மூன்றுட னேயெரி யாய்விழத்<br>துன்னுவார் வெங்கணை யொன்று செலுத்திய சோதியான்<br>செந்நெலா ரும்வயற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி<br>உன்னிநீ டம்மன மேநினை யாய்வினை யோயவே. | மனமே! வானவெளியில் முற்பட்டுச் செல்லும் பெரிய அரக்கர்களின் கோட்டைகள், எரியில் அழிந்து விழுமாறு விரைந்து செல்வதும் நீண்டதும் கொடியதுமான கணை ஒன்றைச் செலுத்தி அழித்த ஒளிவடிவினனாகிய செந்நெல் பொருந்திய வயல்கள் சூழ்ந்த சிக்கல் என்னும் பதியில் விளங்கும் வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளைப் பலகாலும் எண்ணி அழுந்தி நம் வினைகள் தேய்ந்தொழிய நினைவாயாக. |
| 1554. தெற்ற லாகிய தென்னிலங் கைக்கிறை வன்மலை<br>பற்றி னான்முடி பத்தொடு தோள்கணெ ரியவே<br>செற்ற தேவனஞ் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி<br>உற்று நீநினை யாய்வினை யாயின வோயவே. | தெளிந்த அறிவினை உடைய தென்இலங்கைக்கு இறைவனாகிய இராவணன் ஈசன் எழுந்தருளிய கயிலைமலையைப் பெயர்க்க முற்பட்டுப் பற்றிய அளவில் அவன் முடிகள் பத்தோடு இருபது தோள்களும் நெறியுமாறு செற்ற தேவனாகிய நம் சிக்கல் வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளை, மனமே! வினைகள் யாவும் தேய்ந்தொழிய நீ உற்று நினைவாயாக. |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1555.** மா– னோடரு மாமறை வல்ல முனிவனும்<br>கோ– னார்குறு கச்சிவன் சேவடி கோ–யும்<br>சீலந் தாமறி யார்திகழ் சிக்கல்வெண் ணெய்ப்பிரான்<br>பாலும் பன்மலர் தூவப் பறையுநம் பாவமே. | திருமாலும், அரியமறை வல்ல நான்முகனும் சிவபிரானின் அடிமுடிகளைக் காண ஏனமும் அன்னமுமாய வடிவெடுத்து முயன்றார். முயன்றும் அப்பெருமானின் உண்மைத்தன்மையை உணராராயினர். அவ்விறைவன் சிக்க–ல் வெண்ணெய்ப் பிரான் என்ற திருப்பெயரோடு வீற்றிருந்தருளுகின்றான். அவனைப் பாலபிடேகம் புரிந்து பல மலர்களைத் தூவி வழிபடின் நம் பாவங்கள் நீங்கும். |
| **1556.** பட்டை நற்றுவ ராடையி னாரொடும் பாங்கிலாக்<br>கட்ட மண்கழுக் கள்சொல் –னைக்கரு தாதுநீர்<br>சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழு மாமறைப்<br>பட்டன் சேவடி யேபணி மின்பிணி போகவே. | நல்ல மருதந்துவர்ப்பட்டையின் சாறு ஊட்டப்பட்ட ஆடையை அணிந்த சாக்கியரும், முறையற்ற பண்புகளைக் கொண்ட உடற்கட்டுடைய கழுவேறுதற்குரிய சமணர்களும் சொல்லும் பொய்யுரைகளைக் கருதாது நீர் மேலானவனும் சிக்க–ல் வெண்ணெய்ப் பெருமானாக விளங்குபவனும் ஆகிய செழுமையான சிறந்த வேதங்களில் வல்ல புலவனாகிய சிவபிரான் சேவடிகளையே பிணிகள் தீரப்பணிவீர்களாக. |
| **1557.** கந்த மார்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்நல்<br>செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடிச்<br>சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை<br>வெந்த நீறணியும்பெரு மானடி மேவரே. | மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் செவ்விய தண்மையான அழகிய பொழில்கள் சூழ்ந்த சிக்க–ல் விளங்கும் வெண்ணெய்ப் பெருமான் திருவடிகளைப் போற்றி இசையோடு பாடிய இச்செந்தமிழ்ப் பதிகத்தை ஓதவல்லவர் சிவலோகத்தில் கற்பமுறையில் உண்டான திருவெண்ணீற்றை அணிந்துள்ள சிவபெருமான் திருவடிகளை மேவுவர். |

## 9. திருமழபாடி

**பண் : இந்தளம்** **பதிக எண் : 9**

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1558.** களையும் வல்வினை யஞ்சனெஞ் சேகரு தார்புரம்<br>உளையும் பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா<br>வளைய வெஞ்சரம் வாங்கியெய் தான்மதுத் தும்பிவண்<br>டளையுங் கொன்றையந் தார்மழ பாடியு ளண்ணலே. | உயர்ந்ததும், பெரியதுமான மேருமலையை நல்ல உயர்ந்த வில்லாக வளைத்து அசுரர்களின் திரிபுரங்களை அவ்வசுரர் வருந்துமாறு போர் செய்தவனாய், வண்டினங்கள் தேனை உண்ணத் துழாவுகின்ற கொன்றை மலர்மாலை அணிந்த மழபாடியுள் விளங்கும் அண்ணல், நம் வல்வினைகளைக் களைவான். நெஞ்சே! அஞ்ச வேண்டா. |

| | |
|---|---|
| **1559.** காச்சி லாதபொன் னோக்குங் கனவயி ரத்திரள்<br>ஆச்சி லாதப ளிங்கின னஞ்சுமு னாடினான்<br>பேச்சி னாலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்<br>வாச்ச மாளிகை சூழ்மழ பாடியை வாழ்த்துமே. | அறிவற்றவர்களே! அவப்பேச்சால் உமக்கு விளையும் பயன் யாது? காய்ச்சப் பெறாமலே இயற்கையாக ஒளிவிடும் பொன் போன்றவ ளாகிய, உமையம்மையால் நோக்கப்பெறும் வயிரம் போன்ற திரண்ட பெரிய தோள்களை உடையவனும், தன் பாற்பட்டதை நுணுக்காது அப்படியே காட்டும் பளிங்கு போன்ற ஒளியினனும், முற்காலத்தே நஞ்சை உண்டவனும் ஆகிய பெருமானைப் பேணுங்கள். இலக்கணம் அமைந்த மாளிகைகளால் சூழப்பட்ட மழபாடியை வாழ்த்துங்கள். |
| **1560.** உரங்கெ டுப்பவ னும்பர்க ளாயவர் தங்களைப்<br>பரங்கெ டுப்பவ னஞ்சையுண் டுபக லோன்றனை<br>முரண்கெ டுப்பவன் முப்புரந் தீயெழச் செற்றுமுன்<br>வரங்கொ டுப்பவன் மாமழ பாடியுள் வள்ளலே. | சிறந்த மழபாடியுள் எழுந்தருளிய வள்ளலாகிய பெருமான் தக்கன் வேள்வியில் அவியுண்ணச் சென்ற தேவர்களின் வ–மையை அழித்ததோடு அவர்களது தெய்வத்தன்மையையும் போக்கியவன். கட–டை எழுந்த நஞ்சினை உண்டவன். மாறுபட்ட கதிரவனின் பற்களைத் தகர்த்து, பின் அருள் புரிந்தவன். முப்புரங்களையும் தீயெழச் செய்து அழித்தவன். |
| **1561.** பள்ள மார்சடை யிற்புடை யேயடை யப்புனல்<br>வெள்ள மாதரித் தான்விடை யேறிய வேதியன்<br>வள்ளன் மாமழ பாடியுண் மேய மருந்தினை<br>உள்ள மாதரி மின்வினை யாயின வோயவே. | நடுவே பள்ளம் அமைந்த சடைமுடியில் வந்து தங்குமாறு கங்கை வெள்ளத்தைத் தரித்தவனும், விடை ஏறிவரும் வேதியனும் வள்ளலும் ஆகிய சிறந்த மழபாடியில் விளங்கும் அரிய மருந்து போல்வனை, வினைகள் நீங்குமாறு உள்ளத்தால் நினைந்து அன்பு செய்யுங்கள். |
| **1562.** தேனு லாமலர் கொண்டுமெய்த் தேவர்கள் சித்தர்கள்<br>பானெ யஞ்சுட னாட்டமுன் னாடிய பால்வணன்<br>வான நாடர்கள் கைதொழு மாமழ பாடியெங்<br>கோனை நாடொறுங் கும்பிட வேகுறி கூடுமே. | மெய்த்தேவர்களும் சித்தர்களும் தேன் பொருந்திய மலர்களைக் கொண்டு அர்ச்சித்துப் பால், நெய் முத–ய ஆனைந்து ஆட்ட, அவற்றுள் மூழ்கித் திளைக்கும் பால்வண்ணனும், வானவர்கள் கைகளால் தொழுது வணங்கும் மழபாடியில் விளங்கும் எம் தலைவனும் ஆகிய சிவபிரானை நாள்தோறும் வணங்கிவரின், அவன் நம்மோடு கூடுவான். |

| | | |
|---|---|---|
| **1563.** | தெரிந்த வன்புர மூன்றுடன் மாட்டிய சேவகன்<br>பரிந்து கைதொழு வாரவர் தம்மனம் பாவினான்<br>வரிந்த வெஞ்சிலை யொன்றுடை யான்மழ பாடியைப்<br>புரிந்து கைதொழு மின்வினை யாயின போகுமே. | எல்லாம் அறிந்தவனும், வ–ய முப்புரங்களையும் அழித்த வீரனும், அன்போடு தன்னை வழிபடுபவரின் மனத்தில் பரவி விளங்குபவனும், வரிந்து கட்டப்பட்ட வ–யவில்லை ஏந்தியவனும் ஆகிய மழபாடி இறைவனை விரும்பிக் கைதொழுபவர்களின் வினைகள் போகும். |
| **1564.** | சந்த வார்குழ லாளுமை தன்னொரு கூறுடை<br>எந்தை யானிமை யாதமுக் கண்ணின னெம்பிரான்<br>மைந்தன் வார்பொழில் சூழ்மழ பாடிம ருந்தினைச்<br>சிந்தி யாவெழு வார்வினை யாயின தேயுமே. | அழகிய நீண்ட கூந்தலை உடைய உமையம்மையைத் தன் திருமேனியில் ஒரு கூறாக உடைய எந்தையும், இமையாத மூன்று கண்களை உடையவனும், எம் தலைவனும், பெருவீரனும் ஆகிய, நீண்ட பொழில் சூழ்ந்த மழபாடியுள் விளங்கும் அரிய மருந்து போல்வானைச் சிந்திப்பவர்களின் வினைகள் தேய்ந்து கெடும். |
| **1565.** | இரக்க மொன்று மிலானிறை யான்றிரு மாமலை<br>உரக்கை யாலெடுத் தான்றன தொண்முடி பத்திற<br>விரற்ற லைந்நிறு வியுமை யாளொடு மேயவன்<br>வரத்தை யேகொடுக் கும்மழ பாடியுள் வள்ளலே. | நெஞ்சில் இரக்கம் ஒருசிறிதும் இல்லாத இராவணன், திருக்கயிலை மலையை, தனது வ–ய கைகளால் பெயர்க்க முற்பட்டபோது அவன் ஒளிபொருந்திய தலைகள் பத்தும் நெரியுமாறு கால்விர–ன் நுனியை ஊன்றி, உமையவளோடு மகிழ்ந்து வீற்றிருக்கும் சிவபிரான், மழபாடியில் வரத்தைக் கொடுக்கும் வள்ளலாக வீற்றிருந்தருளுகின்றான். |
| **1566.** | ஆல முண்டமு தம்மம ரர்க்கரு ளண்ணலார்<br>கால னாருயிர் வீட்டிய மாமணி கண்டனார்<br>சால நல்லடி யார்தவத் தார்களுஞ் சார்விட<br>மால யன்வணங் கும்மழ பாடியெம் மைந்தனே. | நஞ்சினைத் தாம் உண்டு அமுதத்தை, தேவர்க்கு அளித்த தலைமையாளரும், காலன் உயிரை அழித்த நீலமணி போன்ற கண்டத்தினரும், திருமாலும் பிரமனும் வணங்கும் மழபாடியில் எழுந்தருளிய வீரரும் ஆகிய சிவபிரான் மிகுதியான அடியவர்களும் தவத்தவர்களும் தம்மைச் சாரும் புக–டமாய் விளங்குபவர். |
| **1567.** | க–யின் வல்லம ணுங்கருஞ் சாக்கியப் பேய்களும்<br>ந–யு நாள்கெடுத் தாண்டவென் னாதனார் வாழ்பதி<br>ப–யும் பாட்டொடு பண்முழ வும்பல வோசையும்<br>ம–யு மாமழ பாடியை வாழ்த்தி வணங்குமே. | துன்பம் தரும் வ–ய சமணர்களும், கரிய சாக்கியப் பேய்களும் உலகை ந–வு செய்யும் நாளில் அதனைத் தடுத்துச் சைவத்தை மீண்டும் நிலைபெறச் செய்யுமாறு என்னை ஆண்டருளிய என் நாதனார் வாழும் பதி, உணவிடுதலும், பாட்டும், தாளத்தொடு, கூடிய முழவொ–யும் பிற மங்கல ஓசைகளும், நிறைந்த சிறந்த மழபாடி, அதனை வாழ்த்தி வணங்குவோம். |

| | |
|---|---|
| 1568. ம–யு மாளிகை சூழ்மழ பாடியுள் வள்ளலைக்<br>க–செய் மாமதில் சூழ்கடற் காழிக் கவுணியன்<br><br>(திருக்கடைக்காப்புப் பாடல் நிறைவு பெறவில்லை) | மாளிகைகள் பலவும் சூழ்ந்த மழபாடியுள் விளங்கும் வள்ளலை, வ–யவாகச் செய்யப் பெற்ற மதில்கள் சூழ்ந்த, கடற்கரையை அடுத்துள்ள காழிப்பதியுள் கவுணியர் கோத்திரத்தில் தோன்றிய ஞானசம்பந்தன். |

## 10. திருமங்கலக்குடி

பண் : இந்தளம் பதிக எண் : 10

| | |
|---|---|
| 1569. சீரி னார்மணி யும்மகில் சந்துஞ் செறிவரை<br>வாரி நீர்வரு பொன்னி வடமங் கலக்குடி<br>நீரின் மாமுனி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்<br>பூரித் தாட்டியர்ச் சிக்க விருந்த புராணனே. | மலையி–ருந்து புகழ்மிக்க மணிகள், அகில், சந்தனம் ஆகியவற்றை வாரிக்கொண்டுவரும் நீரை உடைய பொன்னி நதியின் வடபால் விளங்கும் திருமங்கலக்குடியில், அக்காவிரி நீரினைப் பெருமைமிக்க முனிவர் ஒருவர், தமது வ–மை மிக்க நீண்ட கையால் கோயி–ல் இருந்தவாறே நீட்டி எடுத்து நிறைத்து இறைவனுக்கு அபிடேகம் புரிந்து அர்ச்சிக்க பழையவனாகிய பெருமான் மகிழ்ந்து அதனை ஏற்று வீற்றிருந்தருள்கின்றான். |
| 1570. பணங்கொ ளாடர வல்குனல் லார்பயின் றேத்தவே<br>மணங்கொண் மாமயி லாலும் பொழின்மங் கலக்குடி<br>இணங்கி லாமறை யோரிமை யோர்தொழு தேத்திட<br>அணங்கி னோடிருந் தானடி யேசர ணாகுமே. | ஆடும் அரவினது படம் போன்ற அல்குலை உடைய மகளிர் பலகாலும் சொல்– ஏத்த, மணம் பொருந்தியனவும் பெரிய மயில்கள் ஆடுவனவுமான பொழில்கள் சூழ்ந்த மங்கலக் குடியில் தம்முள் மாறுபடும் செய்திகளைக் கூறும் வேதங்களை வல்ல அந்தணர்களும் இமையவர்களும் வணங்கிப் போற்ற உமையம்மை யாரோடு எழுந்தருளியிருக்கும் பெருமான் திருவடிகளே நமக்குப் புக–டமாகும். |
| 1571. கருங்கை யானையி னீருரி போர்த்திடு கள்வனார்<br>மருங்கெ லாமண மார்பொழில் சூழ்மங் கலக்குடி<br>அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு<br>விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. | கரிய துதிக்கையை உடைய யானையை உரித்த தோலைப் போர்த்த கள்வரும், அய–டமெல்லாம் மணம் பரப்பும் பொழில்கள் சூழ்ந்த மங்கலக் குடியில் அரும்புகளோடு கூடிய கொன்றை மலர் மாலையை அணிந்தவரும் ஆகிய சிவபிரான் திருவடிகளை அன்போடு விரும்பி ஏத்த வல்லவர் வினைகள் நீங்கும். |

| | |
|---|---|
| **1572.** பறையி னோடொ– பாடலு மாடலும் பாரிடம்<br>மறையி னோடியன் மல்கிடு வார்மங் கலக்குடிக்<br>குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று<br>முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. | பறையொ–யோடு பாடல், ஆடல் புரியும் பூத கணங்கள் சூழ, வேத ஒழுக்கத்தோடு நிறைந்து வாழும் அந்தணர் வாழும் திருமங்கலக்குடியில் விளங்கும் இறைவனை, குறைவிலா நிறைவே என்றும், பிறர்க்கு இல்லாத எண்குணங்களை உடையவனே என்றும் முறையோடு வணங்குவோர், முதன்மையான சிவநெறியை அறிவார்கள். |
| **1573.** ஆனி லங்கிள ரைந்தும விர்முடி யாடியோர்<br>மானி லங்கையி னான்மண மார்மங் கலக்குடி<br>ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே<br>ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே. | பசுவிடம் விளங்கும் பால், தயிர் முதலான ஐந்து தூய பொருள்களிலும் மூழ்கி, மானை ஏந்திய அழகிய கையினராய், மணம் பொருந்திய மங்கலக்குடியில், தசைவற்றிய வெள்ளிய பிரம கபாலத்தைக் கையின்கண் உடையவராய் விளங்கும் பெருமானார் திருவடி அடைதலே ஞானத்தின் பயனாவது என்பதை அறிந்து அவற்றை ஏத்த வல்லவர் வினைகள் நாசமாகும். |
| **1574.** தேனு மாயமு தாகிநின் றான்றெளி சிந்தையுள்<br>வானு மாய்மதி சூடவல் லான்மங் கலக்குடி<br>கோனை நாடொறு மேத்திக் குணங்கொடு கூறுவார்<br>ஊன மானவை போயறு முய்யும் வகையதே. | தேனும் அமுதமும் போல இனியவனும், தெளிந்த சிந்தையில் ஞானவெளியாக நிற்பவனும், பிறைமதியை முடியிற் சூடவல்லவனும் ஆகிய திருமங்கலக்குடிக்கோனை நாள்தோறும் வணங்கி, அவன் குணங்களைப் புகழ்பவர்களின் குறைகள் நீங்கும். உய்யும் வழி அதுவே யாகும். |
| **1575.** வேள்ப டுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே<br>வாள ரக்கர் புரமெரித் தான்மங் கலக்குடி<br>ஆளு மாதிப் பிரானடி கள்ளடைந் தேத்தவே<br>கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. | மன்மதனை அழித்த நுதல் விழியினனும், மேரு மலையை வில்லாகக் கொண்டு வாட்படை உடைய அரக்கர்களின் முப்புரங்களை எரித்தவனும் ஆகிய திருமங்கலக்குடியை ஆளும் முதற்பிரானாகிய சிவபிரான் திருவடிகளை அடைந்து, அவனை ஏத்துவார் நாள், கோள் ஆகியவற்றால் வரும் தீமைகள் அகல்வர். குற்றங்கள் இலராவர். |

| | |
|---|---|
| **1576.** பொ–யு மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட<br>வ–யும் வாளொடு நாள்கொடுத் தான்மங் கலக்குடிப்<br>பு–யி னாடையி னானடி யேத்திடும் புண்ணியர்<br>ம–யும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. | விளங்கித் தோன்றும் பெரிய கயிலைமலையைப் பெயர்த்து எடுத்த இராவணனை முத–ல் அடர்த்துப் பின் அவன் புகழ்ந்து ஏத்திய அளவில் அவனுக்கு வ–மை, வாள், நீண்ட ஆயுள் முத–யனவற்றைக் கொடுத்தருளியவனும், பு–த்தோல் ஆடை உடுத்தவனும் ஆகிய மங்கலக்குடிப் பெருமானை வணங்கி, அவன் திருவடிகளை ஏத்தும் புண்ணியர் இன்பம் மிகப் பெறுவர். சிவலோகம் சேர வல்லவர் ஆவர். காண்மின். |
| **1577.** ஞால முன்படைத் தானளிர் மாமலர் மேலயன்<br>மாலுங் காணவொ ணாவெரி யான்மங் கலக்குடி<br>ஏல வார்குழ லாளொரு பாக மிடங்கொடு<br>கோல மாகிநின் றான்குணங் கூறுங் குணமதே. | உலகைப் படைத்தவனாகிய குளிர்ந்த தாமரை மலர் மேல் உறையும் பிரமனும் திருமாலும் அறிதற்கரிய நிலையில் எரி உருவானவனும், திருமங்கலக்குடியில் மண மயிர்ச்சாந்தணிந்த குழ–னளாய உமையம்மையை இடப்பாகமாகக் கொண்ட அழகிய வடிவினனுமாகிய சிவபிரானின் குணத்தைக் கூறுங்கள். அதுவே உங்களைக் குணமுடையவராக்கும். |
| **1578.** மெய்யின் மாசினர் மேனி விரிதுவ ராடையர்<br>பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங் கலக்குடிச்<br>செய்ய மேனிச் செழும்புனற் கங்கை செறிசடை<br>ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. | அழுக்கேறிய மேனியராகிய சமணர்கள், மேனி மீது விரித்துப் போர்த்த துவராடையராகிய சாக்கியர் ஆகியோர்களின் பொய்யுரைகளை விட்டுச் சைவ சமய உண்மைகளை உணரும் புண்ணியர்கள் வாழும் திருமங்கலக்குடியில், சிவந்த திருமேனியனாய்ச் செழுமையான கங்கை நதி செறிந்த சடையினனாய் விளங்கும் தலைவன் சேவடிகளை ஏத்த வல்லார்க்கு, அழகிய பேரின்ப வாழ்வு அமையும். |
| **1579.** மந்த மாம்பொழில் சூழ்மங் கலக்குடி மன்னிய<br>எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்<br>சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்<br>முந்தி யேத்தவல் லாரிமை யோர்முத லாவரே. | தென்றற் காற்றைத்தரும் பொழில்கள் சூழ்ந்த திருமங்கலக்குடியில் நிலைபெற்றுள்ள எம் தந்தையாகிய சிவபிரானை அழகிய பொழில் சூழ்ந்த காழிப்பதியின் தலைவனாகிய ஞானசம்பந்தன், சிந்தித்து அவன் திருவடிகளைச் சேர்க்கவல்லதாகப் பாடிய இத்திருப்பதிக வாய்மொழியை அன்புருக ஏத்த வல்லவர், இமையோர் தலைவர் ஆவர். |

## 11. சீகாழி

பண் : இந்தளம் பதிக எண் : 11

| | பாடல் | விளக்கம் |
|---|---|---|
| 1580. | நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்<br>வல்லானை வல்லவர் பான்ம–ந் தோங்கிய<br>சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்<br>இல்லானை யேத்தநின் றார்க்குள தின்பமே. | நன்மையே வடிவானவன், நான்கு மறைகள், அவற்றோடு இயலும் ஆறு அங்கங்கள் ஆகியனவற்றில் வல்லவன். அவற்றைக் கற்றுணர்ந்த அந்தணர்பால் நிறைந்து அவர்கள் ஓதும் துதிகளைத் தம் வடிவாகக் கொண்டவன். பழமையான மதில்கள் சூழ்ந்த காழிப்பதியில் விளங்கும் கோயிலைத் தனது வீடாகக் கொண்டவன். அத்தகையோனை ஏத்துவோர்க்கு இன்பம் உண்டாம். |
| 1581. | நம்மான மாற்றிந மக்கரு ளாய்நின்ற<br>பெம்மானைப் பேயுட னாடல்பு ரிந்தானை<br>அம்மானை யந்தணர் சேரும ணிகாழி<br>எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே. | நம் குற்றங்கள் தீர்த்து நமக்குக் கருணை காட்டும் தலைவன். பேய்களோடு ஆடல் புரிபவன். அரிய வீரன். அந்தணர்கள் வாழும் அழகிய காழிப்பதியில் விளங்கும் எம் கடவுள். அத்தகையோனை ஏத்துவார்க்கு இடர் இல்லை. |
| 1582. | அருந்தானை யன்புசெய் தேத்தகில் லார்பாற்<br>பொருந்தானைப் பொய்யடி மைத்தொழில் செய்வாருள்<br>விருந்தானை வேதிய ரோதி மிடைகாழி<br>இருந்தானை யேத்துமி னும்வினை யேகவே. | தன்னிடம் அன்பு செய்து ஏத்தாதார் அளிக்கும் படையலை உண்ணாதவன். பொய்யாக அடிமை செய்வாரிடம் பொருந்தாதவன். புதுமைக்கும் புதியவன். நான்குவேதங்களை ஓதும் வேதியர் நிறைந்த காழிப் பதியில் இருப்பவன். அத்தகையோனை நும் இடர்போக ஏத்துவீராக. |
| 1583. | புற்றானைப் புற்றர வம்மரை யின்மிசைச்<br>சுற்றானைத் தொண்டுசெய் வாரவர் தம்மொடும்<br>அற்றானை யந்தணர் காழிய மர்கோயில்<br>பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. | புற்று வடிவானவன், புற்றில் வாழும் பாம்பினைத் தன் அரைமீது சுற்றியவன். தனக்குத் தொண்டு செய்பவர்களோடு தன் பெருமைகளை விடுத்துப் பழகியருள்பவன். அந்தணர்கள் நிறைந்த காழிப்பதி மீது பற்றுடையவன். அவனைப் பற்றி நிற்பவர்கட்குப் பாவம் இல்லை. |
| 1584. | நெதியானை நெஞ்சிடங் கொள்ளநி னைவார்தம்<br>விதியானை விண்ணவர் தாம்வியந் தேத்திய<br>கதியானைக் காருல வும்பொழிற் காழியாம்<br>பதியானைப் பாடுமி னும்வினை பாறவே. | நமக்கு நிதியாக விளங்குவோன். தம் நெஞ்சில் அவன் எழுந்தருளுமாறு நினைப்பவர்க்கு நன்னெறி காட்டுபவன். மேகங்கள் உலாவும் பொழில் சூழ்ந்த சீகாழியைத் தன் ஊராகக் கொண்டவன். அத்தகையோனை நும் வினை நீங்கப் பாடுவீராக. |

| | | |
|---|---|---|
| 1585. | செப்பான மென்முலை யாளைத்தி கழ்மேனி<br>வைப்பானை வார்கழ லேத்திநி னைவார்தம்<br>ஒப்பானை யோதமு லாவுக டற்காழி<br>மெய்ப்பானை மேவிய மாந்தர்வி யந்தாரே. | செப்புப் போன்ற மென்மையான தனங்களைக் கொண்ட உமையம்மை திருமேனியின் இடப்பாகமாக வைத்துள்ளவன். தன் திருவடிகளை நினைபவர்களிடம் ஒப்பப் பழகுபவன். கடல் நீர் உலாவுவதும், கடற்கரையை அடுத்துள்ளதுமான காழிப்பதியில் மெய்ப் பொருளாக விளங்குபவன். அத்தகையோனை விரும்பி வழிபட்ட மக்கள் பிறரால் வியந்து போற்றப்படும் புகழ் உடையோர் ஆவர். |
| 1586. | துன்பானைத் துன்பம ழித்தரு ளாக்கிய<br>இன்பானை யேழிசை யின்னிலை பேணுவார்<br>அன்பானை யணிபொழிற் காழிந கர்மேய<br>நம்பானை நண்ணவல் லார்வினை நாசமே. | நம்மைத் திருத்துமாறு துன்பங்களைத் தருபவன். நாம் துயர் உறும் போது, அத்துன்பங்களைத் தீர்த்து அருளைப் புரியும் இன்ப வடிவாய் இருப்பவன். ஏழிசையின் கூறுகளை அறிந்து பாடிப் போற்றுவாரிடம் அன்பு செய்பவன். அழகிய பொழில் சூழ்ந்த காழி நகரில் நம்மால் விரும்பப் படுபவனாய் எழுந்தருளியிருப்பவன். அத்தகை யோனை அடைந்து போற்ற வல்லாரின் வினைகள் அழியும். |
| 1587. | குன்றானைக் குன்றெடுத் தான்புய நாலைந்தும்<br>வென்றானை மென்மல ரானொடு மால்தேட<br>நின்றானை நேரிழை யாளொடுங் காழியுள்<br>நன்றானை நம்பெரு மானைந ணுகுமே. | மலைகளைத் தன் இருப்பிடமாகக் கொண்டவன். தான் எழுந்தருளிய கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் இருபது தோள்களையும் வென்றவன். மெல்–ய தாமரை மலரில் வாழும் நான்முகனும் மாலும் தேட ஓங்கி நின்றவன். உமையம்மையோடு காழிப்பதியுள் நன்மைகளைச் செய்பவனாய் வீற்றிருப்பவன். அத்தகைய நம் பெருமானை அடைந்து வழிபடுவீர்களாக. |
| 1588. | சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்<br>மேவாத சொல்லவை கேட்டுவெகு ளேன்மின்<br>பூவாய கொன்றையி னானைப் புனற்காழிக்<br>கோவாய கொள்கையி னானடி கூறுமே. | தம் கொள்கைக்கு அழிவு வந்தபோதும் விடாது வாது செய்யும் சமணர் சாக்கியர்களின் பொருந்தாத உரைகளைக் கேட்டு வெகுளாது கொன்றைப்பூ வணிந்தவனும், புனல் சூழ்ந்த காழி நகரின் தலைவனாய் மேலான சிவநெறிக்கு உரியவனும் ஆகிய சிவபெருமான் திருவடிகளைப் புகழ்ந்து போற்றுவீர்களாக. |

| | |
|---|---|
| 1589. கழியார்சீ ரோதமல் குங்கடற் காழியுள்<br>ஒழியாது கோயில்கொண் டானையு கந்துள்கித்<br>தழியார்சொன் ஞானசம் பந்தன்ற மிழார<br>மொழிவார்கண் மூவுல கும்பெறு வார்களே. | கழிகளின் வழியே வரும் மிக்க கடல்நீர் நிறைந்ததும் கடற்கரையை அடுத்துள்ளதுமான காழிப்பதியுள் கோயில் கொண்டு நீங்காது உறையும் இறைவனை, நினைந்து மகிழ்ந்து அவனைப் பொருந்தியவனாய், ஞானசம்பந்தன் பாடிய தமிழை மனம் பொருந்த மொழிந்து போற்றுபவர்கள் மூவுலகையும் பெறுவார்கள். |

## 12. திருக்கச்சியேகம்பம்

பண் : இந்தளம் பதிக எண் : 12

| | |
|---|---|
| 1590. மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்<br>பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை<br>இறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்<br>துறைவானை யல்லதுள் காதென துள்ளமே.<br><br>கச்சி – காஞ்சிபுரம்.<br>ஏகம்பம் – அங்குள்ள பெரிய சிவாலயம் | வேதவடிவினன், குற்றமற்ற சிவந்த சடையிற் பொருந்திய வெண்பிறையினன், பெண்ணும் ஆணுமாகிய பெருமான் எல்லாப் பொருள்களிலும் உறைபவன். அழகிய கச்சிப்பதியில் திருஏகம்பம் என்னும் கோயி–ல் உறைபவன். அத்தகை யோனை அல்லது என் உள்ளம் பிறவற்றை நினையாது. |
| 1591. நொச்சியே வன்னிகொன் றைமதி கூவிளம்<br>உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்<br>கச்சியே கம்பம்மே யகறைக் கண்டனை<br>நச்சியே தொழுமின்நும் மேல்வினை நையுமே. | நொச்சியிலை, வன்னியிலை, கொன்றை மலர், பிறைமதி, வில்வம் ஆகியவற்றை முடியிற் புனைந்துள்ளமை அவன் அடையாளமாகும். விடைஊர்தியை உடையவன் அவன். கச்சியில் திருவேகம்பத்தில் எழுந்தருளிய அக்கறைக் கண்டனை விரும்பித் தொழுவீர்களாக. உம்மேல் வரும் வினைகள் மெ–யும். |
| 1592. பாராரு முழவமொந் தைகுழல் யாழொ–<br>சீராலே பாடலா டல்சிதை வில்லதோர்<br>ஏரார்பூங் கச்சியே கம்பனை யெம்மானைச்<br>சேராதா ரின்பமா யந்நெறி சேராரே. | உலகிற் பொருந்திய முழவம், மொந்தை, குழல், யாழ் ஆகியவற்றின் ஒ–யோடு முறையான பாடலும் ஆடலும் குறையாத அழகிய கச்சி ஏகம்பத்து எம்மானைச் சேராதவர் இன்பமான நெறிகளைச் சேராதவர் ஆவர். நும் வினை – உங்கள் கர்மம், மேல்வினை – ஆகாமியம். |
| 1593. குன்றேய்க்கு நெடுவெண்மா டக்கொடி கூடிப்போய்<br>மின்றேய்க்கு முகில்கள்தோ யும்வியன் கச்சியுள்<br>மன்றேய்க்கு மல்குசீ ரான்ம– யேகம்பம்<br>சென்றேய்க்குஞ் சிந்தையார் மேல்வினை சேராவே. | குன்றுகள் போன்று உயர்ந்த சுதைமாடங்களில் கட்டிய கொடிகள் கூடிச் சென்று மின்னல்கள் உராயும் முகில்களைத் தோயும் விரிந்த கச்சிப் பதியில் பலவாறு மன்றுகளில் புகழப்படும் சீர்மையை உடையவன் எழுந்தருளிய திருஏகம்பத்தை அடைந்து மனம் பொருந்த வழிபாடு செய்யும் அடியவர்கள்மேல் வினைகள் சேரா. |

| | |
|---|---|
| 1594. சடையானைத் தலைகையேந் திப்ப– தருவார்தம்<br>கடையேபோய் மூன்றுங்கொண் டான்க–க் கச்சியுள்<br>புடையேபொன் மலருங்கம் பைக்கரை யேகம்பம்<br>உடையானை யல்லதுள் காதென துள்ளமே. | சடைமுடியை உடையவனும், தலையோட்டைக் கையில் ஏந்திப் ப–யிடுவார் இல்லங்களுக்குச் சென்று அவர்களின் உடல் பொருள் ஆவி ஆகியவற்றைக் கொண்டவனும் ஆகிய ஆரவாரம் நிறைந்த கச்சிப் பதியில் பொன்னிற மலர்கள் மலரும் கம்பை நதிக்கரையில் விளங்கும் திருஏகம்பம் உடையானை அல்லது பிறரை எனது உள்ளம் விரும்பாது. |
| 1595. மழுவாளோ டெழில்கொள்சூ லப்படை வல்லார்தங்<br>கெழுவாளோ ரிமையாருச் சியுமை யாள்கங்கை<br>வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பம்<br>தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னாவே. | மழு, வாள் அழகிய சூலம் ஆகிய படைகளை ஏந்தியவர். தம்மிடம் பொருந்திய ஒளியுடையவர். இமயமலையின் உச்சியில் உறைபவர். உமையம்மை கங்கை ஆகியோருடன் கூடி அவர் எழுந்தருளிய பெருகும் புகழ் பொருந்திய ஏகம்பத்தைத் தொழுபவரே விழுமியோர் ஆவர். அவரை வினைகள் அணுகா. |
| 1596. விண்ணுளார் மறைகள்வே தம்விரித் தோதுவார்<br>கண்ணுளார் கழ–ன்வெல் வார்கரி காலனை<br>நண்ணுவா ரெழில்கொள்கச் சிநக ரேகம்பத்<br>தண்ணலா ராடுகின் றவலங் காரம்மே. | வானகத்தில் உறைபவர். மறைகளாகிய வேதங்களை விரித்து ஓதுபவர்களின் கண்களில் ஒளிர்பவர். கருநிறம் உடைய காலனை வீரக்கழல் அணிந்த திருவடியால் உதைத்து வென்றவர். தம்மைச் சரணாக அடைபவர்களின் எழிலைக் கொள்ளும், கச்சி நகரில் விளங்கும் திருஏகம்பத்துத் தலைவர் ஆடுகின்ற ஆடல் மிக்க அழகுடையது. |
| 1597. தூயானைத் தூயவா யம்மறை யோதிய<br>வாயானை வாளரக் கன்வ– வாட்டிய<br>தீயானைத் தீதில்கச் சித்திரு வேகம்பம்<br>மேயானை மேவுவா ரென்றலை மேலாரே. | தூயவன், தூயனவாகிய மறைகளை ஓதிய வாயினன், ஒளி பொருந்திய வாளினை உடைய இராவணனின் வ–மையை அடர்த்த, தீயேந்தியவன். குற்றமற்ற திருக்கச்சி ஏகம்பத்தில் எழுந்தருளியிருப்பவன். அவனை அடைந்து துதிப்பவர் என் தலைமேல் கொள்ளத்தக்கவர். |

| | |
|---|---|
| **1598.** நாகம்பூ ணேறதே றல்நறுங் கொன்றைதார்<br>பாகம்பெண் ப–யுமேற் பர்மறை யாடுவர்<br>ஏகம்ப மேவியா டுமிறை யிருவர்க்கும்<br>மாகம்ப மறியும்வண் ணத்தவ னல்லனே. | நாகம் அவனது அணிகலன். அவனது ஊர்தி விடை. மணம் கமழும் கொன்றை அவனது மாலை. ஒருபாகத்தில் பெண்ணைக் கொண்டவன். பிச்சையும் ஏற்பவன். மறைகளைப் பாடுபவன். கச்சித் திருஏகம்பத்தில் எழுந்தருளி மகிழ்வோடு ஆடும் இறைவன். திருமால் பிரமர்க்குப் பெரிய நடுக்கத்தைத் தருவதோடு அவர்களால் அறியத்தக்க வண்ணத்தவன் அல்லன். |
| **1599.** போதியார் பிண்டியா ரென்றிவர் பொய்ந்நூலை<br>வாதியா வம்மினம் மாவெனுங் கச்சியுள்<br>ஆதியார் மேவியா டுந்திரு வேகம்பம்<br>நீதியாற் றொழுமினும் மேல்வினை நில்லாவே. | போதி மர நிழ–ல் அமர்ந்த புத்தனை வணங்குவோரும், அசோகமர நிழ–ல் அருகனை வணங்குவோரும் ஆகிய புத்தசமண மதத்தினரின் பொய்ந்நூல்களை ஆராய்வதை விடுத்து, வாருங்கள் அழகிய மாமர நீழ–ல் விளங்கும் தலைவனாகிய சிவபிரான் ஆடும் கச்சியுள் விளங்கும் திருஏகம்பத்தை விதிப்படி வழிபடுங்கள். நும் மேல் வரும் வினைகள் நில்லா. |
| **1600.** அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்<br>கந்தண்பூங் காழியூ ரன்க–க் கோவையால்<br>சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்<br>பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. | அழகும் தண்மையும் பொ–வும் உடைய கச்சி ஏகம்பத்தில் விளங்கும் தலைவனைப் பற்றி, நீர் வளமும் தண்மையும் அழகும் உடைய சீகாழிப் பதியுள் தோன்றியவனாய் ஒ–மாலை எனப்படும் திருப்பதிகங்களால் இசைத்தமிழில் பாடவல்ல ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகப் பாடல்களைப் பாடி ஆடிப் போற்றப் பாவம் கெடும். |

## 13. திருக்கோழம்பம்

பண் : இந்தளம் — பதிக எண் : 13

| | |
|---|---|
| **1601.** நீற்றானை நீள்சடை மேனிறை வுள்ளதோர்<br>ஆற்றானை யழகமர் மென்முலை யாளையோர்<br>கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய<br>ஏற்றானை யேத்துமின் நும்மிட ரேகவே. | திருநீறு அணிந்தவன். நீண்ட சடைமுடி மீது பெருகி வந்த கங்கை ஆற்றைத் தாங்கியவன். அழகமைந்த மெல்–ய தனங்களைக் கொண்ட உமையம்மையைத் தன் திருமேனியின் ஒரு கூறாகக் கொண்டவன். அத்தகையோன் பொழில் சூழ்ந்த கோழம்பம் என்னும் தலத்தில் விடையூர்தியனாய் உள்ளான். 'நும் துன்பங்கள் நீங்க வேண்டுமாயின் அவனை ஏத்துங்கள்'. |

| | |
|---|---|
| **1602.** மையான கண்டனை மான்மறி யேந்திய<br>கையானைக் கடிபொழிற் கோழம்ப மேவிய<br>செய்யானைத் தேனெய்பா லுந்திகழ்ந் தாடிய<br>மெய்யானை மேவுவார் மேல்வினை மேவாவே. | கருமைநிறம் பொருந்திய கண்டத்தினன். மான் கன்றை ஏந்திய கையினன். மணம் கமழும் பொழில் சூழ்ந்த கோழம்பத்தில் விளங்கும் செம்மையன். தேன், நெய், பால் முத–யவற்றை ஆடிய மெய்யினன். அவனை இடைவிடாது நினைப்பவர் மேல் வினைகள் மேவா. |
| **1603.** ஏதனை யேதமி லாவிமை யோர்தொழும்<br>வேதனை வெண்குழை தோடுவி ளங்கிய<br>காதனைக் கடிபொழிற் கோழம்ப மேவிய<br>நாதனை யேத்துமின் நும்வினை நையவே. | நாம் செய்யும் குற்றங்கட்குக் காரணமானவன். குற்றம் அற்ற இமையா நாட்டமுடைய யோகியர்களால் வழிபடப்பெறும் வேதவடிவினன். வெண்குழையும் தோடும் அணிந்த செவிகளை உடையவன். விளக்கமான பொழில்கள் சூழ்ந்த கோழம்பம் மேவிய தலைவன். அவனை உம் வினைகள் நைந்து கெடுமாறு ஏத்துமின். |
| **1604.** சடையானைத் தண்மல ரான்சிர மேந்திய<br>விடையானை வேதமும் வேள்வியு மாயநன்<br>குடையானைக் குளிர்பொழில் சூழ்திருக் கோழம்பம்<br>உடையானை யுள்குமின் உள்ளங் குளிரவே. | சடைமுடியை உடையவன். குளிர்ந்த தாமரை மலரில் விளங்கும் பிரமனின் தலையோட்டைக் கையில் ஏந்திய விடை ஊர்தியன். வேதமும் வேள்வியுமாய நன்மைகளை உடையவன். குளிர்ந்த பொழில் சூழ்ந்த திருக்கோழம்பத்தைத் தனக்கு ஊராக உடையவன். உள்ளங்குளிர அவனை நினைவீர்களாக. |
| **1605.** காரானைக் கடிகமழ் கொன்றையம் போதணி<br>தாரானைத் தையலொர் பான்மகிழ்ந் தோங்கிய<br>சீரானைச் செறிபொழிற் கோழம்ப மேவிய<br>ஊரானை யேத்துமின் நும்மிட ரொல்கவே. | மேகமாக இருந்து மழை பொழிபவன். மணம் கமழும் கொன்றை மலரால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவன். உமையம்மையை ஒரு பாலாகக் கொண்டு மகிழ்ச்சி மிக்கவனாய் விளங்கும் புகழினன். செறிந்த பொழில்கள் சூழ்ந்த திருக்கோழம்பத்தைத் தன் ஊராகக் கொண்டு அதன்கண் உறைபவன். நும் இடர்கள் நீங்க அவனை ஏத்துங்கள். |
| **1606.** பண்டா–ன் னீழலா னைப்பரஞ் சோதியை<br>விண்டார்கள் தம்புர மூன்றுட னேவேவக்<br>கண்டானைக் கடிகமழ் கோழம்பங் கோயிலாக்<br>கொண்டானைக் கூறுமி னுள்ளங் குளிரவே. | முற்காலத்தே ஆ–ன் நிழ–ல் இருந்து அறம் உரைத்தவன். மேலான ஒளிவடிவினன். பகைவராகிய அசுரர்களின் முப்புரங்களும் ஒருசேர வெந்தழியுமாறு செய்தவன். மணம் கமழும் திருக்கோழம்பத்தைக் கோயிலாகக் கொண்டவன். உள்ளம் குளிர அவன் புகழைக் கூறுங்கள். |

| | |
|---|---|
| **1607.** சொல்லானைச் சுடுகணை யாற்புர மூன்றெய்த<br>வில்லானை வேதமும் வேள்வியு மானானைக்<br>கொல்லானை உரியானைக் கோழம்ப மேவிய<br>நல்லானை யேத்துமி னும்மிடர் நையவே. | எல்லோராலும் புகழப்படுபவன். அனல் வடிவான கணையைத் தொடுத்து முப்புரங்களை எய்தழித்த வில்லை உடையவன். வேதமும் வேள்வியும் ஆனவன். தன்னைக் கொல்ல வந்த யானையை உரித்து அதன் தோலைப் போர்த்தவன். திருக்கோழம்பத்தில் எழுந்தருளிய மங்கல வடிவினன். நும் இடர் கெட அவனை ஏத்துவீராக. |
| **1608.** விற்றானை வல்லரக் கர்விறல் வேந்தனைக்<br>குற்றானைத் திருவிர லாற்கொடுங் காலனைச்<br>செற்றானைச் சீர்திக ழுந்திருக் கோழம்பம்<br>பற்றானைப் பற்றுவார் மேல்வினை பற்றாவே. | விற்படையை உடைய வ−ய இராக்கதர்களின் வ−ய வேந்தனாகிய இராவணனைத் தன் அழகிய கால் விரலால் நசுக்கியவன். கொடிய காலனைச் செற்றவன். புகழ் விளங்கும் திருக்கோழம்பத்திற் பற்றுதல் உடையவன். அவன்மீது பற்றுக் கொள்வாரை வினைகள் பற்றா. |
| **1609.** நெடியானோ டயனறி யாவகை நின்றதோர்<br>படியானைப் பண்டங்க வேடம் பயின்றானைக்<br>கடியாருங் கோழம்ப மேவிய வெள்ளேற்றின்<br>கொடியானைக் கூறுமின் உள்ளங் குளிரவே. | நீண்ட வடிவெடுத்த திருமாலும் பிரமனும் அறிய முடியாத வகையில் ஓங்கி நின்ற உருவத்தை உடையவன். பாண்டரங்கம் என்னும் கூத்தை ஆடும் கோலம் பூண்டவன். மணம் கமழும் திருக்கோழம்பம் மேவிய இடபக் கொடியினன். உள்ளம் குளிர அவன் புகழைக் கூறுங்கள். |
| **1610.** புத்தருந் தோகையம் பீ−கொள் பொய்ம்மொழிப்<br>பித்தரும் பேசுவ பேச்சல்ல பீடுடைக்<br>கொத்தலர் தண்பொழிற் கோழம்ப மேவிய<br>அத்தனை யேத்துமின் அல்லல் அறுக்கவே. | புத்த சமயத்தினரும், மயில் தோகையாலாகிய பீ−யைக் கையில் கொண்டுள்ள பொய்ம்மொழி பேசும் பித்தர்களாகிய சமணர்களும் பேசுவன பயன்தரும் உண்மையான அறவுரைகளாகா. பெருமை பொருந்திய பூங்கொத்துக்கள் அலரும் குளிர்ந்த பொழில் சூழ்ந்த திருக்கோழம்பம் மேவிய அத்தனை அல்லல்கள் அகலப் போற்றுங்கள். |
| **1611.** தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்<br>நண்புடை ஞானசம் பந்தனம் பானுறை<br>விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை<br>பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே. | குளிர்ந்த நீர் மிகுந்த தண்ணிதான அழகிய தராய் என்னும் மாநகரில் தோன்றிய, எல்லோரிடமும் நட்புக்கொண்டு ஒழுகும் ஞானசம்பந்தன், சிவபிரான் உறையும் வானளாவிய பொழில் சூழ்ந்த கோழம்பத்தைப் புகழ்ந்து போற்றிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசை பொருந்தப் பாடவல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 14. திருவெண்ணியூர்

பண் : இந்தளம் பதிக எண் : 14

| | |
|---|---|
| 1612. சடையானைச் சந்திர னோடுசெங் கண்ணரா<br>உடையானை யுடைதலை யிற்ப– கொண்டுரும்<br>விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை<br>உடையானை யல்லதுள் காதென துள்ளமே. | சடையின்மேல் சந்திரனையும் சிவந்த கண்களை உடைய பாம்பையும் உடையவன். உடைந்த தலையோட்டில் ப–ஏற்று, ஊர்ந்து செல்லும் விடைமீது ஏறி வருபவன். தேவர்களால் வணங்கப்படும் திருவெண்ணி என்னும் தலத்தைத் தனக்கு ஊராக உடையவன். அவனையன்றிப் பிறரை நினையாது என் உள்ளம். |
| 1613. சோதியைச் சுண்ணவெண் ணீறணிந் திட்டவெம்<br>ஆதியை யாதியு மந்தமு மில்லாத<br>வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியில்<br>நீதியை நினையவல் லார்வினை நில்லாவே. | ஒளி வடிவினன். வெண்ணீற்றைச் சுண்ணமாக அணிந்த எம் தலைவன். முதலும் முடிவும் இல்லாத மறையோன். வேதியர்களால் வணங்கப் பெறும் திருவெண்ணியில் விளங்கும் நீதி வடிவினன். அவனை நினைய வல்லவர்களின் வினைகள் நில்லாது அகலும். |
| 1614. கனிதனைக் கனிந்தவ ரைக்கலந் தாட்கொள்ளும்<br>முனிதனை மூவுல குக்கொரு மூர்த்தியை<br>நனிதனை நல்லவர் தாந்தொழும் வெண்ணியில்<br>இனிதனை யேத்துவ ரேதமி லாதாரே. | கனியாய் இனிப்பவன். மனம் கனிந்து வழிபடுவோரைக் கலந்து ஆட்கொள்ளும் முனிவன். மூவுலகங்கட்கும் தானே தலைவன் ஆனவன். மேம்பட்டவன். நல்லவர்களால் வணங்கப் பெறும் வெண்ணியில் எழுந்தருளிய இன்ப உருவினன். அவனை ஏத்துவார் குற்றம் இலராவர். |
| 1615. மூத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்<br>காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக<br>ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்றன்னை<br>ஏத்தாதா ரென்செய்வா ரேழையப் பேய்களே. | எல்லாப் பொருள்கட்கும் முன்னே தோன்றிய பழையோன். மூவுலகங்கட்கும் தலைவனாய் விளங்கிக் காப்பவன். தன்னை வழிபட்டு நெகிழ்ந்தவர்களோடு கலந்து அவர்களைப் பிணிப்பவன். அழகிய வெண்ணி நகரில் விளங்கும் தலைவன். அவனை ஏத்தாதவர் என்ன பயனைக் காணவல்லார்? அவர்கள் மனிதரே ஆயினும் பேய்களையே ஒப்பர். |
| 1616. நீரானை நிறைபுனல் சூழ்தரு நீள்கொன்றைத்<br>தாரானைத் தையலொர் பாகமு டையானைச்<br>சீரானைத் திகழ்தரு வெண்ணி யமர்ந்துறை<br>ஊரானை யுள்கவல் லார்வினை யோயுமே. | நிறைந்த நீரைக் கொண்ட கங்கையை முடிமிசைத் தரித்தவன். அதனைச் சூழக் கொன்றை மாலையைப் புனைந்துள்ளவன். உமையம்மையை ஓர் பாகமாக உடையவன். புகழ் பொருந்தியவன். விளங்கும் வெண்ணியை விரும்பி உகந்த ஊராகக் கொண்டு எழுந்தருளியிருப்பவன். அவனை நினைவார் வினைகள் நீங்கும். |

| | | |
|---|---|---|
| **1617.** | முத்தினை முழுவயி ரத்திரண் மாணிக்கத்<br>தொத்தினைத் துளக்கமி லாதவி ளக்காய<br>வித்தினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்<br>அத்தனை யடையவல் லார்க்கில்லை யல்லலே. | முத்துப் போன்றவன். முழுமையான வயிரத்திரள் போன்றவன். மாணிக்கக் கொத்துப் போன்றவன். அசைவற்ற சுடராய் உலகத் தோற்றத்துக்கு வித்தாய் விளங்குபவன். தேவர்களால் தொழுது வணங்கப் பெறும் வெண்ணியில் விளங்கும் தலைவனானவன். அவனை அடைய வல்லவர்கட்கு அல்லல் இல்லை. |
| **1618.** | காய்ந்தானைக் காமனை யுஞ்செறு காலனைப்<br>பாய்ந்தானைப் பரியகை மாவுரித் தோன்மெய்யில்<br>மேய்ந்தானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்<br>நீந்தானை நினையவல் லார்வினை நில்லாவே. | மன்மதனை எரித்தவன். கொல்லும் தொழிலுடைய எமனை உதைத்தவன். பெரிய கையை உடைய யானையை உரித்து அதன் தோலை மேனிமீது போர்த்தவன். தேவர்கள் வந்து வணங்கும் திருவெண்ணியில் விளங்கும் அக்கடவுளை நினைப்பவர்களின் வினைகள் நீங்கும். |
| **1619.** | மறுத்தானை மாமலை யைமதி யாதோடிச்<br>செறுத்தானைத் தேசழி யத்திகழ் தோண்முடி<br>இறுத்தானை யெழிலமர் வெண்ணியெம் மானெனப்<br>பொறுத்தானைப் போற்றுவா ராற்றலு டையாரே. | பகைமை பூண்டவனாய்ப் பெருமை மிக்க கயிலை மலையைப் பொருட்படுத்தாது விரைந்து அதனைச் சினந்து சென்று எடுத்த இராவணனது பெருமை அழியுமாறு அவனுடைய விளங்கும் தோள்கள் முடிகள் ஆகியனவற்றை முரித்தவன். அழகமைந்த வெண்ணியில் உறையும் எம் தலைவன் என வழிபடுபவர் குற்றங்களைப் பொறுப்பவன். அவனைப் போற்றுவார் ஆற்றல் உடையவர் ஆவர். |
| **1620.** | மண்ணினை வானவ ரோடும னிதர்க்கும்<br>கண்ணினைக் கண்ணனும் நான்முக னுங்காணா<br>விண்ணினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்<br>அண்ணலை யடையவல் லார்க்கில்லை யல்லலே. | ஐம்பூதங்களில் மண் வடிவமாக விளங்குபவன். மனிதருக்கும், வானவருக்கும் கண் போன்றவன். மால், பிரமன் காண இயலாத விண் வடிவினன். தேவர்கள் வழிபட வெண்ணியில் உள்ள அவரை அடைய அல்லல் அகலும். |
| **1621.** | குண்டருங் குணமிலா தசமண் சாக்கிய<br>மிண்டர்கண் மிண்டவை கேட்டுவெகு ளன்மின்<br>விண்டவர் தம்புர மெய்தவன் வெண்ணியில்<br>தொண்டரா யேத்தவல் லார்துயர் தோன்றாவே. | குண்டர்களாகிய சமண புத்த மதத்தைச் சேர்ந்த மிடுக்குடையோரின் மிடுக்கான உரைகளைக் கேட்டு நம் சமய நெறிகளை வெறாதீர்கள். பகைவர் முப்புரங்களை எய்தவனாகிய திருவெண்ணியில் உறையும் இறைவனுக்குத் தொண்டு பூண்டு அவனை அடைய வல்லார்க்குத் துயர்கள் தோன்றா. |

| | |
|---|---|
| **1622.** மருவாரு மல்குகா ழித்திகழ் சம்பந்தன்<br>திருவாருந் திகழ்தரு வெண்ணிய மர்ந்தானை<br>உருவாரு மொண்டமிழ் மாலையி வைவல்லார்<br>பொருவாகப் புக்கிருப் பார்புவ லோகத்தே. | மணம் பொருந்தியதும் பெரியோர் நிறைந்ததுமான காழிப்பதியில் தோன்றி விளங்கும் ஞானசம்பந்தன், செல்வம் நிறைந்து திகழும் திருவெண்ணியில் அமர்ந்த இறைவனைப் போற்றிப் பாடிய ஞானவடிவாக விளங்கும் இத்தமிழ் மாலையை ஓதவல்லவர் மண்ணுலகினும் மேம்பட்ட சிவலோகத்தை அடைந்து இனிது வாழ்வர். |

## 15. திருக்காறாயில்

பண் : இந்தளம் பதிக எண் : 15

(முசுகுந்தன் இந்திரனிடம் பெற்றுக்கொண்டு வந்த 7 தியாகேசத்திருமேனிகளுள் ஒன்று எழுந்தருளப் பெற்றுள்ளதலம்.)

| | |
|---|---|
| **1623.** நீரானே நீள்சடை மேலொர்நி ரைகொன்றைத்<br>தாரானே தாமரை மேலயன் றான்றொழும்<br>சீரானே சீர்திக ழுந்திருக் காறாயில்<br>ஊரானே யென்பவ ரூனமி லாதாரே. | நீண்ட சடைமுடிமீது ஒப்பற்ற கங்கையை அணிந்தவன். வரிசையாகத் தொடுக்கப்பட்ட கொன்றை மாலையைச் சூடியவன். தாமரை மலரில் எழுந்தருளிய பிரமனால் வணங்கப்படும் புகழாளன். சீர் விளங்கும் திருக்காறாயில் எனப்படும் ஊரினன். இவ்வாறு அவனைப் போற்றிக் கூறுவார் குற்றம் இலராவர். |
| **1624.** மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்<br>விதியானே விதியுடை வேதியர் தாந்தொழும்<br>நெதியானே நீர்வயல் சூழ்திருக் காறாயிற்<br>பதியானே யென்பவர் பாவமிலாதாரே. | பிறைமதியைச் சூடியவன். வரிகளை உடைய பாம்போடு ஊமத்தம் மலர் முத–யவற்றை அணிந்து நமக்கு ஊழை அமைப்பவன். விதிமுறைளைப் பின்பற்றும் வேதியர்கள் வணங்கும் நிதியானவன். நீர்வளம் மிக்க வயல்களால் சூழப்பட்ட திருக்காறாயில் எனப்படும் ஊரினன் என்று அவனைப் போற்றுவார் பாவம் இலராவர். |
| **1625.** விண்ணானே விண்ணவ ரேத்திவி ரும்புஞ்சீர்<br>மண்ணானே மண்ணிடை வாழுமு யிர்க்கெல்லாம்<br>கண்ணானே கடிபொழில் சூழ்திருக் காறாயில்<br>எண்ணானே யென்பவ ரேதமி லாதாரே. | வீட்டுலகுக்கு உரியவன். தேவர்களாலும் போற்றி விரும்பப் பெறுமாறு மண்ணுலகில் வாழ்பவன். நிலவுலகில் வாழ்வோர்க்குக் கண் போன்றவன். மணம் கமழும் பொழில் சூழ்ந்த திருக்காறாயி–ல் நாம் எண்ணுதற்கு ஏற்றவாறு எளி வந்திருப்பவன். இவ்வாறு அவன் புகழ் கூறுவோர் ஏதம் இலராவர். |

| | |
|---|---|
| **1626.** தாயானே தந்தையு மாகிய தன்மைகள்<br>ஆயானே யாயநல் லன்பர்க் கணியானே<br>சேயானே சீர்திக ழுந்திருக் காறாயில்<br>மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. | நமக்குத் தாயும் தந்தையும் ஆகி அவ்விருவர் செய்யும் கடமைகளையும் புரிபவன். தன்மீது நல்லன்பு செலுத்துவோர்க்கு மிக அணிமையில் இருந்து அருள்பவன். அல்லாதவர்க்குச் சேய்மையில் இருப்பவன். புகழ் விளங்கும் திருக்காறாயில் என்னும் தலத்தில் மேவி இருப்பவன் என இவ்வாறு போற்றுபவர் மீது வினைகள் மேவா. |
| **1627.** கலையானே கலைம— செம்பொற் கயிலாய<br>மலையானே மலைபவர் மும்மதின் மாய்வித்த<br>சிலையானே சீர்திக ழுந்திருக் காறாயில்<br>நிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. | எண்ணெண் கலைகளின் வடிவாய் விளங்குபவன். கலைகளின் பயனாய்ச் சிறந்த சிவந்த பொன்மயமான கயிலாய மலைக்கு உரியவன். தன்னோடு மலைந்த அசுரர்களின் முப்புரங்களை மாய்த்த வில்லை உடையவன். புகழ் மிகுந்த திருக்காறாயில் என்னும் தலத்தை நிலையாகக் கொண்டவன் என்று இவ்வாறு போற்றுபவர் மேல் வினைகள் நில்லா. |
| **1628.** ஆற்றானே யாறணி செஞ்சடை யாடர<br>வேற்றானே யேழுல கும்மிமை யோர்களும்<br>போற்றானே பொழில்திக ழுந்திருக் காறாயில்<br>நீற்றானே யென்பவர் மேல்வினை மேவாவே. | நெறிகளின் வடிவாய் விளங்குபவன். கங்கையை அணிந்த செஞ்சடைமீது ஆடும் பாம்பு ஒன்றை ஏற்றவன். ஏழுலகில் வாழ்வோராலும் தேவர்களாலும் போற்றப்படுபவன். பொழில் விளங்கும் திருகாறாயி—ல் நீறு பூசிய கோலத்தோடு விளங்குபவன் என்று இவ்வாறு கூறிப் போற்றுபவர் மேல் வினைகள் நில்லா. |
| **1629.** சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்கள்<br>ஏத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்<br>காத்தானே கார்வயல் சூழ்திருக் காறாயில்<br>ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யாடாவே. | தீவினைகள் தேய்ந்து அறுமாறு செய்து நம்மை அவனோடு சேர்ப்பவன். தேவர்களால் போற்றப்படுபவன். நன்மா முனிவர்கட்கு இடர் வாராது காப்பவன். மழைநீர் நிறைந்த வயல்கள் சூழ்ந்த திருக்காறாயி—ல் நிறைந்தவன். இவ்வாறு அவனைப் போற்றுவாரை வினைகள் வெல்லா. |
| **1630.** கடுத்தானே காலனைக் காலாற் கயிலாயம்<br>எடுத்தானை யேதமா கம்முனி வர்க்கிடர்<br>கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காறாயில்<br>அடுத்தானே யென்பவர் மேல்வினை யாடாவே. | காலனைக் காலால் கடிந்தவன். கயிலாயத்தைப் பெயர்த்த இராவணனுக்கு ஏதம் வருமாறும், முனிவர்கட்கு இடர் கெடுமாறும் செய்தவன். விளக்கமான திருக்காறாயி—ல் எழுந்தருளி யிருப்பவன் என இவ்வாறு போற்றுவாரை வினைகள் வெல்லா. |

| | |
|---|---|
| **1631.** பிறையானே பேணிய பாடலொ டின்னிசை<br>மறையானே மாலொடு நான்முகன் காணாத<br>இறையானே யெழில்திக ழுந்திருக் காறாயில்<br>உறைவானே யென்பவர் மேல்வினை யோடுமே. | இளம் பிறையைச் சூடியவன். தன்னை விரும்பிப் பாடப்பெறும் இன்னிசைப் பாடல் வடிவில் அமைந்த சாமகானமாகிய மறை மொழியை ஏற்றருள்பவன். திருமாலும் நான்முகனும் தேடி அறிய முடியாத இறைவன். அழகிய திருக்காறாயி–ல் உறைபவன் என்று போற்றுபவர் மேல் வரும் வினைகள் ஓடும். |
| **1632.** செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்<br>படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை<br>கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காறாயில்<br>குடியாருங் கொள்கையி னார்க்கில்லை குற்றமே. | உலகில் வாழும் முடைநாற்றம் வீசும் சமணரும், சீவரம் என்னும் துவர் ஊட்டிய ஆடையை அணிந்த புல்–ய புத்தர் என்ற பாவிகளும் கூறும் பேச்சுக்களைக் கேட்பதால் விளையும் பயன் ஏதும் இல்லை. மணம் கமழும் திருக்காறாயில் என்னும் தலத்தைக் குடியாகக் கொண்டு அங்கு எழுந்தருளிய இறைவனை வழிபட்டு வாழ்வோர்க்குக் குற்றம் ஏதும் இல்லை. |
| **1633.** ஏய்ந்தசீ ரெழில்திக ழுந்திருக் காறாயில்<br>ஆய்ந்தசீ ரானடி யேத்திய ருள்பெற்ற<br>பாய்ந்தநீர்க் காழியுண் ஞானசம் பந்தன்சொல்<br>வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. | புகழ் பொருந்தியதும் அழகு நிறைந்ததுமான திருக்காறாயி–ல் எழுந்தருளிய, ஆராய்ந்து கூறப்படும் புகழ் மொழிக்குப் பொருளான இறைவன் திருவடிகளை ஏத்தி அவன் அருள்பெற்ற, நீர் பாய்ந்து வளம் செய்யும் காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை இயன்ற அளவில் இசையோடு பாடி ஏத்துவார் வானுலகு ஆள்வர். |

## 16. திருமணஞ்சேரி

பண் : இந்தளம் பதிக எண் : 16

| | |
|---|---|
| **1634.** அயிலாரு மம்பத னாற்புர மூன்றெய்து<br>குயிலாரு மென்மொழி யாளொரு கூறாகி<br>மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்<br>பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. | கூரிய அம்பினால் முப்புரங்களையும் எய்து அழித்து, குயில் போலும் இனிய மென்மையான மொழிபேசும் உமையம்மையை ஒரு கூற்றில் உடையவனாகி, மயில்கள் வாழும் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருமணஞ்சேரியில் எழுந்தருளிய இறைவனைப் பற்றி நின்றார்க்குப் பாவம் இல்லை. |

| | |
|---|---|
| **1635.** விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய<br>நெதியானை நீள்சடை மேனிகழ் வித்தவான்<br>மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்<br>பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. | நீதி நெறிகளின் வடிவினன். தேவர்கள் வணங்கித் தமது நிதியாகக் கொள்பவன். நீண்ட சடைமீது வானத்து மதியைச் சூடியவன். வளமான பொழில்கள் சூழ்ந்த திருமணஞ்சேரியைத் தனது பதியாகக் கொண்டவன். அவனைப் பாடவல்லார் வினைகள் அழியும். |
| **1636.** எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய<br>இப்பாலா யெனையு மாள வுரியானை<br>வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி<br>மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. | வறுமையால் இளைத்தவர்க்குப் பெருகிய இன்பம் தரும் தேன் அளித்து இவ்வுலகத்துள்ளோனாய் அருள்புரிபவன். என்னையும் ஆட்கொண்டருளும் உரிமையன். செல்வங்களாக உள்ள மாடவீடுகள் சூழ்ந்த திருமணஞ்சேரியில் உண்மைப்பொருளாய் விளங்குபவன். அவனை மேவி வழிபடுவார் வினைகள் நீங்கும். |
| **1637.** விடையானை மேலுல கேழுமிப் பாரெலாம்<br>உடையானை யூழிதோ றூழி யுளதாய<br>படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி<br>அடைவானை யடையவல் லார்க்கில்லை யல்லலே. | விடை ஊர்தியன். மேலே உள்ள ஏழு உலகங்களையும் இம்மண்ணுலகையும் தன் உடைமையாகக் கொண்டவன். பல்லூழிக்காலங் களாய் விளங்கும் படைகளை உடையவன். அடியவர் பண்ணிசை பாடி வழிபடும் திருமணஞ் சேரியை அடைந்து வாழ்பவன். அவனை அடைய வல்லார்க்கு அல்லல் இல்லை. |
| **1638.** எறியார்பூங் கொன்றையி னோடு மிளமத்தம்<br>வெறியாருஞ் செஞ்சடை யார மிலைத்தானை<br>மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்<br>செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. | ஒளிபொருந்திய கொன்றை மலர்களோடு புதிய ஊமத்தம் மலர்களை மணம் கமழும் தன் செஞ்சடை மீது பொருந்தச் சூடியவன். மான் கன்றை ஏந்திய கையினன். திருமணஞ்சேரியில் செறிந்து உறைபவன். அவனைப் புகழ்ந்து போற்ற வல்லவர்களை இடர்கள் அடையா. |
| **1639.** மொழியானை முன்னொரு நான்மறை யாறங்கம்<br>பழியாமைப் பண்ணிசை யான பகர்வானை<br>வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி<br>இழியாமை யேத்தவல் லார்க்கெய்து மின்பமே. | முற்காலத்தே நான்மறைகளையும், ஆறு அங்கங்களையும் அருளியவன். அவற்றைப் பண்ணிசையோடு பிறர் பழியாதவாறு பகர்பவன். வேதாகம விதிகளைப் பின்பற்றி, வானவர்கள் வந்து துதிக்குமாறு திருமணஞ்சேரியில் விளங்குபவன். அத்தலத்தை இகழாமல் போற்ற வல்லார்க்கு இன்பம் உளதாம். |

| | | |
|---|---|---|
| **1640.** | எண்ணானை யெண்ணமர் சீரிமை யோர்கட்குக்<br>கண்ணானைக் கண்ணொரு மூன்று முடையானை<br>மண்ணானை மாவயல் சூழ்ந்த மணஞ்சேரிப்<br>பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. | யாவராலும் மனத்தால் எண்ணி அறியப்படாதவன். தம் உள்ளத்தே வைத்துப் போற்றும் புகழ்மிக்க சிவஞானிகட்குக் கண் போன்றவன். மூன்று கண்கள் உடையவன். அட்ட மூர்த்தங்களில் மண் வடிவானவன். சிறந்த வயல்களால் சூழப்பட்ட திருமணஞ்சேரியில் உமையம்மையோடு கூடியவனாய் விளங்கும் அவ்விறைவன் புகழைப் பேசுவோர் பெரியோர் ஆவர். |
| **1641.** | எடுத்தானை யெழின்முடி யெட்டு மிரண்டுந்தோள்<br>கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை<br>மடுத்தார வண்டிசை பாடு மணஞ்சேரி<br>பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. | கயிலைமலையைப் பெயர்த்து எடுத்த இராவணனின் அழகிய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் அடர்த்தவன். மாறுபாடற்ற செம்மை நிலையை உடையவன். வண்டுகள் தேனை மடுத்து உண்ணுவதற்கு இசைபாடிச் சூழும் திருமணஞ்சேரியில் உறையும் அவ்விறைவன் திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொள்வார் பெரியார்கள். |
| **1642.** | சொல்லானைத் தோற்றங்கண் டானு நெடுமாலும்<br>கல்லானைக் கற்றன சொல்–த் தொழுதோங்க<br>வல்லார்நன் மாதவ ரேத்து மணஞ்சேரி<br>எல்லாமா மெம்பெரு மான்கழ லேத்துமே. | வேதாகமங்களைச் சொல்–யவன். உலகைப் படைக்கும் நான்முகன் திருமால் ஆகியோர்களாற் கற்றுணரப்படாத பெருமையன். தாம் அறிந்தவற்றைச் சொல்–த் தொழுது உயர்வுறும் அன்பர்களும் பெரிய தவத்தினை உடையவர் களும் தொழுது வணங்கும் திருமணஞ்சேரியில் உலகப் பொருள்கள் எல்லாமாக வீற்றிருக்கும் அப்பெருமான் திருவடிகளை ஏத்துவோம். |
| **1643.** | சற்றேயுந் தாமறி வில்சமண் சாக்கியர்<br>சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை<br>வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி<br>பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே. | சிறிதேனும் தாமாக அறியும் அறிவு இல்லாத சமண புத்தர்களின் உரைகள் பொருளற்றனவாய் ஒழியும் வண்ணம் ஒப்பற்ற செம்பொருளாய் விளங்கும் சிவப்பெருமானை வற்றாத நீர் நிலைகள் சூழ்ந்த திருமணஞ்சேரியை அடைந்து வழிபட்டு அவனையே பற்றுக் கோடாகக் கொண்டு வாழ்பவர்களை வினைகள் பற்றா. |
| **1644.** | கண்ணாருங் காழியர் கோன்கருத் தார்வித்த<br>தண்ணார்சீர் ஞானசம் பந்தன் றமிழ்மாலை<br>மண்ணாரு மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி<br>பண்ணாரப் பாடவல்லார்க் கில்லை பாவமே. | கண்களுக்கு விருந்தாய் அமையும் சீகாழிப் பதியில் விளங்கும் சிவபிரானின் திருவுள்ளத்தை நிறைவித்த இனிய புகழ் பொருந்திய ஞானசம்பந்தன் பாடிய இத்தமிழ்மாலையை, வளம் நிறைந்த மண்சேர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருமணஞ்சேரியை அடைந்து பண் பொருந்தப் பாடிப் போற்றுவார்க்குப் பாவம் இல்லை. |

## 17. திருவேணுபுரம்

பண் : இந்தளம் பதிக எண் : 17

| | |
|---|---|
| 1645. நிலவும் புனலும் நிறைவா ளரவும்<br>இலகுஞ் சடையார்க் கிடமா மெழிலார்<br>உலவும் வயலுக் கொளியார் முத்தம்<br>விலகுங் கடலார் வேணு புரமே. | பிறை, கங்கை, மிகக் கொடிய நாகம் ஆகியன விளங்கும் சடையினை உடைய சிவபெருமானுக்கு இடம், அழகிய மகளிர் உலாவுவதும், ஒளிபொருந்திய முத்துக்கள் வயல்களில் விளங்குவதும், விலகி உள்ள கடற்கரையை அடுத்துள்ளதுமான வேணுபுரம் ஆகும். |
| 1646. அரவார் கரவன் னமையார் திரள்தோள்<br>குரவார் குழலா ளொருகூ றனிடங்<br>கரவா தகொடைக் கலந்தா ரவர்க்கு<br>விரவா கவல்லார் வேணு புரமே. | பாம்பைக் கையில் கங்கணமாக அணிந்தவனும், மூங்கில் போன்று திரண்ட தோளினையும் குராமலர் அணிந்த கூந்த–னையும் உடைய உமையம்மையை ஒருகூறாக உடையவனும் ஆகிய சிவபிரானுக்கு இடம், மறையாத கொடையாளரும், தம்மோடு பழகியவர்களை நட்புக் கொண்டு ஒழுகுபவர்களும் ஆகிய நல்லோர் வாழும் வேணுபுரம் ஆகும். |
| 1647. ஆகம் மழகா யவள்தான் வெருவ<br>நாகம் முரிபோர்த் தவன்நண் ணுமிடம்<br>போகந் தருசீர் வயல்சூழ் பொழில்கண்<br>மேகந் தவழும் வேணு புரமே. | அழகிய மேனியை உடைய உமையம்மை வெருவுமாறு யானையை உரித்துப் போர்த்த சிவபிரான் உறையும் இடம், மக்கட்கு விளைபொருள்களாகிய பயனைத்தரும் வயல்கள் சூழ்ந்துள்ள உயரிய பொழில்களில் மேகங்கள் தவழும் வேணுபுரம் ஆகும். |
| 1648. காசக் கட–ல் விடமுண் டகண்டத்<br>தீசர்க் கிடமா வதுவின் னறவ<br>வாசக் கமலத் தனம்வன் றிரைகள்<br>வீசத் துயிலும் வேணு புரமே. | முத்து பவளம் ஆகிய மணிகளை உடைய கட–ல் எழுந்த நஞ்சினை உண்ட கண்டத்தை உடைய ஈசனுக்கு இடமாவது; இனிய தேன் நிறைந்ததும் மணம் நிறைந்ததுமான தாமரை மலரில் அன்னம் அலைகள் காற்று வீசத் துயில் கொள்ளும் வளம் நிறைந்த வேணுபுரம் ஆகும். |
| 1649. அரையார் கலைசே ரனமென் னடையை<br>உரையா வுகந்தா னுறையும் மிடமாம்<br>நிரையார் கமுகின் னிகழ்பா ளையுடை<br>விரையார் பொழில்சூழ் வேணு புரமே. | இடையில் மேகலை அணிந்தவளும், அன்னம் போன்ற நடையினளும் ஆகிய உமையம்மையைப் புகழ்ந்து உரைத்து, சிவபிரான் மகிழ்வுடன் உறையும் இடம், வரிசையாக வளர்ந்துள்ள கமுக மரங்களின் பாளைகள் உடைதலால் மணம் பொருந்தித் தோன்றும் பொழில்கள் சூழ்ந்த வேணுபுரம் ஆகும். |

| | |
|---|---|
| **1650.** ஒளிரும் பிறையும் முறுகூ விளவின்<br>றளிருஞ் சடைமே லுடையா னிடமாம்<br>நளிரும் புன–ன் நலசெங் கயல்கள்<br>மிளிரும் வயல்சூழ் வேணு புரமே. | ஒளிதரும் பிறையையும், வில்வத் தளிர்களையும் சடைமிசை உடையவனாகிய சிவபெருமானுக்குரிய இடம், குளிர்ந்த நீரில் நல்ல செங்கயல்மீன்கள் விளங்கும் வயல்கள் சூழ்ந்த வேணுபுரம் ஆகும். |
| **1651.** ஏவும் படைவேந் தனிரா வணனை<br>ஆவென் றலற அடர்த்தா னிடமாந்<br>தாவும் மறிமா னொடுதண் மதியம்<br>மேவும் பொழில்சூழ் வேணு புரமே. | இலக்குத் தவறாது செல்லும் கணைகளொடு கூடிய விற்படையை உடைய இராவணனை ‘ஆ’ என்று அலறுமாறு அடர்த்தருளிய சிவபிரானுக்குரிய இடம், தாவிச்செல்லும் மான்கன்றுகளை உடையதும், குளிர்ந்த பொழில்கள் சூழ்ந்ததுமான வேணுபுரம் ஆகும். |
| **1652.** கண்ணன் கடிமா மலரிற் திகழும்<br>அண்ணல் –ருவர் அறியா இறையூர்<br>வண்ணச் சுதைமா ளிகைமேற் கொடிகள்<br>விண்ணில் திகழும் வேணு புரமே. | திருமாலும், மணம் பொருந்திய சிறந்த தாமரை மலரில் உறையும் நான்முகனும் ஆகிய இருவரும் அறியாதவாறு உயர்ந்து நின்ற இறைவனது இடம், அழகிய சுதை தீட்டப்பட்ட மாளிகைகளின்மேல் கட்டப்பட்ட கொடிகள் வானத்தில் திகழும் வேணுபுரம் ஆகும். |
| **1653.** போகம் அறியார் துவர்போர்த் துழல்வார்<br>ஆகம் அறியா அடியார் இறையூர்<br>மூகம் அறிவார் கலைமுத் தமிழ்நூல்<br>மீகம் அறிவார் வேணு புரமே. | சிவபோகத்தின் சிறப்பை அறியாதவர்களும், துவராடை போர்த்துத் திரிபவர்களும் ஆகிய சமண புத்தர்களின் உடலை ஏறெடுத்தும் பாராத சிவனடியார்களுக்குத் தலைவனாகிய சிவபிரானது ஊர், மௌனத்தின் சிறப்பை அறிந்தவர்களும், கலைகளையும் முத்தமிழ் நூல்களையும் கற்ற மேலான அறிவுடையவர்களும் வாழும் வேணுபுரம் ஆகும். |
| **1654.** கலமார் கடல்போல் வளமார் தருநற்<br>புலமார் தருவே ணுபுரத் திறையை<br>நலமார் தருஞா னசம்பந் தன்சொன்ன<br>குலமார் தமிழ்கூ றுவர்கூர் மையரே. | மரக்கலங்களையுடைய கடல் போல் பரவிய வளங்களை உடையதும், நன்செய் நிலங்கள் நிறைந்ததும் ஆகிய வேணுபுரத்து இறைவனை, நன்மைகள் நிறைந்த ஞானசம்பந்தன் போற்றிச் சொன்ன மேன்மைமிக்க இத்தமிழ் மாலையை அன்போடு பாராயணம் புரிவோர் மதிநுட்பமும் திருவருட்பெருக்கமும் உடையவர் ஆவர். |

## 18. திருமருகல் (விடந்தீர்த்த பதிகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 18

1655. சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால்வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உண் மெ–வே.

நீர்நிலைகளில் குவளை மலர்கள் மலர்ந்து மணம் செய்யும் திருமருகலைத் தனக்குரிய ஊராக உடைய பெருமானே! இப்பெண், சடையாய் என்றும் விடையாய் என்றும் நீயே எனக்குப் புக–டம் என்றும் கூறி அஞ்சி மயங்கி விழுகின்றாள். உன்னையே நினைந்து புலம்பும் இவள் மன வருத்தத்தைப் போக்காதிருத்தல் உன் பெருமைக்குத் தக்கதோ?

1656. சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா எனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவள்ஏ சறவே.

பூங்கொத்துக்கள் குவளை மலர் ஆகியன மலர்ந்து மணம் பரப்பும் திருமருக–ல் எழுந்தருளிய எம் தந்தையே! இவள் உன்னை நினைந்து, "சிந்தையில் நிறைந்துள்ளவனே! என்றும், சிவனே என்றும், எல்லோர்க்கும் முற்பட்டவனே என்றும், முதல்வனே" என்றும் புலம்பி நைகின்றாள். இவள் துன்பத்தைப் போக்காதிருத்தல் உன் பெருமைக்குத் தக்கதோ?

1657. அறையார் கழலும் அழல்வா யரவும்
பிறையார் சடையும் உடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வா யிவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே.

ஒ–க்கின்ற வீரக்கழலையும், கொடிய விடம் பொருந்திய வாயினை உடைய பாம்பையும் பிறையணிந்த சடையினையும் உடையவனே! பெருமைக்குரிய வேதங்களைக் கற்றுணர்ந்த மறையவர் வாழும் திருமருக–ல் மகிழ்ந்து உறைபவனே! இப்பெண்ணை அவள் முன்கையில் அணிந்திருந்த வளையல்களைக் கவர்ந்ததோடு அழகையும் கவர்ந்தாயே! இது தகுமோ?

1658. ஒ–நீர் சடையிற் கரந்தா யுலகம்
ப–நீ திரிவாய் பழியில் புகழாய்
ம–நீர் மருகல் மகிழ்வா யிவளை
மெ–நீர் மையளாக் கவும்வேண் டினையே.

முழங்கிவந்த கங்கையைத் தன் சடைமிசை மறைத்தவனே! உலகெங்கணும் சென்று ப–யேற்றுத் திரிபவனே! குற்றம் அற்ற புகழாளனே! நீர் நிறைந்த திருமருகலைத் தனது இடமாகக் கொண்டு மகிழ்பவனே! இப்பெண்ணை மெ–யும் நீர்மையள் ஆக்கவும் விரும்பினையோ?

| | |
|---|---|
| **1659.** துணிநீ லவண்ணம் முகில்தோன் றியன்ன<br>மணிநீ லகண்டம் உடையாய் மருகல்<br>கணிநீ லவண்டார் குழலாள் இவள்தன்<br>அணிநீ லவொண்கண் அயர்வாக் கினையே. | தெளிந்த நீல நிறம் பொருந்திய மேகம் தோன்றினாற் போன்ற அழகிய நீலகண்டத்தை உடையவனே! திருமருகலை வந்தடைந்த, நீல வண்டுகளின் தொகுதியோ எனக் கருதக்கூடிய கூந்தலை உடைய இளைய இப்பெண்ணின் ஒளிபொருந்திய கண்கள் கலங்குமாறு இவளுக்கு அயர்வை உண்டாக்கி விட்டாயே. இது தகுமோ? |
| **1660.** பலரும் பரவப் படுவாய் சடைமேல்<br>மலரும் பிறையொன் றுடையாய் மருகல்<br>புலருந் தனையுந் துயிலாள் புடைபோந்<br>தலரும் படுமோ அடியா ளிவளே. | பலராலும் பரவிப் போற்றப் படுபவனே! சடையின் மேல் விளங்கித் தோன்றும் பிறை ஒன்றை உடையவனே! திருமருகலை வந்தடைந்த இப்பெண் விடியும் அளவும் துயிலாதவளாய்த் துயருறுகிறாள். அடியவளாகிய இவள்மீது பழிமொழி வருவது தக்கதோ? |
| **1661.** வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா<br>எழுவாள் நினைவாள் இரவும் பகலும்<br>மழுவா ளுடையாய் மருகற் பெருமான்<br>தொழுவா ளிவளைத் துயராக் கினையே. | மழுப்படையை உடையவனே! மருகற் பெருமானே! தவறாமல் பெருமான் திருவடிகள் வாழ்க என்று கூறிக் கொண்டே துயில் எழுந்து இரவும் பகலும் உன்னையே நினைந்து தொழுபவளாகிய இவளைத் துயருக்குரியவள் ஆக்கினையே! இது தகுமோ? |
| **1662.** இலங்கைக் கிறைவன் விலங்கல் எடுப்பத்<br>துலங்கவ் விரலூன் றலுந்தோன் றலனாய்<br>வலங்கொள் மதில்சூழ் மருகற் பெருமான்<br>அலங்கல் இவளை அலராக் கினையே. | இலங்கைக்கு அரசனாகிய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்த போது, அவனது ஆற்றல் அழியுமாறு, விளங்கும் தனது காற்பெருவிரலை ஊன்றிய அளவில் அவன் செய்வதறியாது இடர்ப்பட்டு மீண்டு, வலமாக வந்து பணிந்து வரம் கொண்ட மருகற்பெருமானே! மாலைசூடி மணம் கொள்ள இருந்த இவளுக்குத் துன்பம் வரச் செய்தனையே! இது தக்கதோ? |
| **1663.** எரியார் சடையும் அடியும் இருவர்<br>தெரியா ததொர்தீத் திரளா யவனே<br>மரியார் பிரியா மருகற் பெருமான்<br>அரியாள் இவளை அயர்வாக் கினையே. | நெருப்புப் போலச் சிவந்த சடையையும், அடியையும் திருமால் பிரமன் ஆகிய இருவர் அறிய முடியாதவாறு ஒளிப்பிழம்பாய் உயர்ந்து தோன்றியவனே! பிறவி நீங்கிய முக்தர்கள் வாழும் திருமருக–ல் விளங்கும் பெருமானே! அரியவளாக இத்தலத்துக்குவந்த இவளைத் துன்புறச்செய்தாயே! இது தக்கதோ? |

| | |
|---|---|
| **1664.** அறிவில் சமணும் அலர்சாக் கியரும்<br>நெறியல் லனசெய் தனர்நின் றுழல்வார்<br>மறியேந் துகையாய் மருகற் பெருமான்<br>நெறியார் குழ– நிறைநீக் கினையே. | அறிவற்ற சமணர்களும் எங்கும் பரவி வாழும் சாக்கியர்களும் நெறியல்லனவற்றைச் செய்து நின்று உழல்பவராவர். மான்கன்றை ஏந்திய கையை உடையவனே! மருகற் பெருமானே! உன்னை நினையும் அடர்ந்த கூந்த–னளாய இப்பெண்ணின் மனத்தைச் சிதறுண்ணச் செய்தீரே, இது தகுமோ ? |
| **1665.** வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்<br>உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்<br>இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்<br>வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. | தன்மயமாக்கும் திருவருள் ஞானம் பெற்றார் வாழும் மருகற் பெருமான் திருவடிகளை உயர்ஞானம் உணர்ந்து நினைதலால் பதி இயல்புற்ற ஞானசம்பந்தன் அருளிய இப்பதிகப் பாடல்களைப் பாடவல்லார் புகழ், அகன்ற இவ்வுலகமெல்லாம் விளங்கித் தோன்றும். |

## 19. திருநெல்லிக்கா

பண் : இந்தளம்          பதிக எண் : 19

| | |
|---|---|
| **1666.** அறத்தா லுயிர்கா வலமர்ந் தருளி<br>மறத்தான் மதின்மூன் றுடன்மாண் பழித்த<br>திறத்தால் தெரிவெய் தியதீ வெண்திங்கள்<br>நிறத்தா நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் விளங்கும் இறைவன், உயிர்களைக் காத்தலாகிய அறத்தை மேற் கொண்டருளி, அறநெறிக்கு மாறாக நடந்த அசுரர்களின் மும்மதில்களின் பெருமைகளை அழித்த திறத்தால் பலராலும் நன்கறியப்பட்டு வெண்திங்கள் போன்ற வெள்ளிய திருநீற்றைப் பூசிய அழல் போலும் வண்ணனாய் விளங்குபவன். |
| **1667.** பதிதா னிடுகா டுபைங்கொன் றைதொங்கல்<br>மதிதா னதுசூ டியமைந் தனுந்தான்<br>விதிதான் வினைதான் விழுப்பம் பயக்கும்<br>நெதிதான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் எழுந்தருளிய இறைவன் இடுகாட்டை வாழும் இடமாகவும், கொன்றை மலரைத் தான் விரும்பும் மாலையாகவும் கொண்டவன். மதிசூடிய வீரன். விதியாகவும் வினையாகவும் மேன்மையளிக்கும் நிதியாகவும் விளங்குபவன். |
| **1668.** நலந்தா னவன்நான் முகன்தன் தலையைக்<br>கலந்தா னதுகொண் டகபா –யுந்தான்<br>புலந்தான் புகழா லெரிவிண் புகழும்<br>நிலந்தான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் எழுந்தருளிய இறைவன் நன்மைகளைத் தருபவன். நான்முகனின் தலையை உண்கலனாகக் கொண்டு கபா– எனப் பெயர் பெற்றவன். ஞானமே வடிவானவன். புகழால் விளங்கும் வானோர் போற்றும் வீட்டுலகாக விளங்குபவன். |

| | | |
|---|---|---|
| 1669. | தலைதா னதுஏந் தியதம் மடிகள்<br>கலைதான் திரிகா டிடம்நா டிடமா<br>மலைதா னெடுத்தான் மதின்மூன் றுடைய<br>நிலைதான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நிலையாக நெல்–க்காவுள் எழுந்தருளிய சிவபெருமான், பிரமனது தலையோட்டைக் கையில் ஏந்திய தலைவன், தான் விரும்பும் இடமாக மான்கள் திரியும் காட்டைக் கொண்டவன். முப்புரங்களும் அழிய மேருமலையை வில்லாக எடுத்தவன். |
| 1670. | தவந்தான் கதிதான் மதிவார் சடைமேல்<br>உவந்தான் சுறவேந் தனுரு வழியச்<br>சிவந்தான் செயச்செய் துசெறுத் துலகில்<br>நிவந்தான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் விளங்கும் சிவபெருமான், நாம் செய்யத்தக்க தவமாகவும், அடையத்தக்க கதியாகவும் விளங்குபவன், நீண்ட சடைமுடி மீது பிறை மதியை உவந்து சூடியவன். மீனக் கொடியை உடைய மன்மதனைச் சினந்தழித்தவன். உலக மக்கள் செயற்படத்தான் ஐந்தொழில்களைச் செய்து அனைத்தையும் அழித்து வீடருள்பவனாய் உயர்ந்து தோன்றுபவன். |
| 1671. | வெறியார் மலர்க்கொன் றையந்தார் விரும்பி<br>மறியார் மலைமங் கைமகிழ்ந் தவன்றான்<br>குறியாற் குறிகொண் டவர்போய்க் குறுகும்<br>நெறியான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் நிலவும் இறைவன், மணம் கமழும் கொன்றைமாலையை விரும்புபவன். மான்கள் விளையாடும் மலையினிடம் தோன்றிய உமையம்மையை மணங்கொண்டு மகிழ்ந்தவன். குரு ஆனவர் காட்டும் குறியைத் தியானித்து நாம் போய் அடையும் வீட்டுநெறியை உடையவன். |
| 1672. | பிறைதான் சடைச்சேர்த் தியஎந் தைபெம்மான்<br>இறைதான் இறவாக் கயிலைம் மலையான்<br>மறைதான் புனலொண் மதிமல் குசென்னி<br>நிறைதான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் நிலாவிய இறைவன், சடையின் கண் இளம் பிறையை அணிந்து எம் தந்தையாக விளங்கும் பெருமான். சிறிதும் அழிவற்ற கயிலை மலையில் உறைபவன். மறைந்துறையும் கங்கையோடு ஒளி பொருந்திய மதி நிறைந்த சென்னியை உடைய பூரணன். |
| 1673. | மறைத்தான் பிணிமா தொருபா கந்தன்னை<br>மிறைத்தான் வரையா லரக்கன் மிகையைக்<br>குறைத்தான் சடைமேற் குளிர்கோல் வளையை<br>நிறைத்தான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் நிலாவிய சிவபெருமான் உமையம்மையை ஒருபாகமாகப் பிணித்துத் தன்னோடு இணைத்துக் கொண்டவன். இராவணன் கயிலை மலைமீது பறந்து சென்ற குற்றத்திற்காக அக்கயிலை மலையைக் கொண்டே வருத்தி அவன் வ–மையைக் குறைத்தவன். குளிர்ந்த திரண்ட வளையல்களை அணிந்த கங்கையைச் சடைமேல் அடக்கியவன். |
| 1674. | தழல்தா மரையான் வையந்தா யவனும்<br>கழல்தான் முடிகா ணியநா ணொளிரும்<br>அழல்தான் அடியார்க் கருளாய்ப் பயக்கும்<br>நிழல்தான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் எழுந்தருளிய இறைவன் தழல் போலச் சிவந்த தாமரைமலர் மேல் உறையும் பிரமனும், உலகனைத்தையும் அளந்த திருமாலும் திருவடி திருமுடி ஆகியவற்றைக் காண முயன்று நாண, ஒளிரும் அழல் வடிவாய் நின்றவன். அடியவர்கட்கு அருளைத்தரும் ஒளி வடிவினன். |

| | |
|---|---|
| **1675.** கனத்தார் திரைமாண் டழற்கான் றநஞ்சை<br>எனத்தா வெனவாங் கியதுண் டகண்டன்<br>மனத்தாற் சமண்சாக் கியர்மாண் பழிய<br>நினைத்தான் நெல்–க்கா வுள்நிலா யவனே. | நெல்–க்காவுள் எழுந்தருளிய இறைவன் மேகங்களால் உண்ணப்படும் அலைகளோடு கூடிய பெரிய கட–ல் பெருகி எழுந்து அனலை உமிழ்ந்த நஞ்சைக் கண்டு அஞ்சிய தேவர்கள் 'என் அத்தனே காப்பாற்று' என வேண்ட, அந்நஞ்சினை எடுத்து வரச் செய்து அதனை வாங்கி உண்ட கண்டத்தினன். சமண புத்தர்களின் செல்வாக்கு நாட்டில் அழியுமாறு மனத்தால் நினைத்தவன். |
| **1676.** புகரே துமிலா தபுத்தே ளுலகில்<br>நிகரா நெல்–க்கா வுள்நிலா யவனை<br>நகரா நலஞா னசம்பந் தன்சொன்ன<br>பகர்வா ரவர்பா வமிலா தவரே. | குற்றமற்ற தேவர்கள் உலகில் யாவரும் தனக்கு ஒப்பாகாதவனாய் விளங்கி, இம்மண்ணுலகை வாழ்விக்க நெல்–க்காவுள் எழுந்தருளிய இறைவனைப் பற்றி அழிவற்ற நன்மைகளைக் கொண்ட ஞானசம்பந்தன் அருளிய இப்பாமாலையைப் பாடித் தொழுபவர் பாவம் அற்றவர் ஆவர். |

## 20. திருஅழுந்தூர்

**பண் : இந்தளம்** **பதிக எண் : 20**

| | |
|---|---|
| **1677.** தொழுமா றுவல்லார் துயர்தீ ரநினைந்<br>தெழுமா றுவல்லார் இசைபா டவிம்மி<br>அழுமா றுவல்லார் அழுந்தை மறையோர்<br>வழிபா டுசெய்மா மடம்மன் னினையே. | தொழும் வகையிலும், பிறவித்துயர் தீர நினைந்தெழும் வகையிலும், பிறர் இசைபாட விம்மி அழும் வகையிலும் வல்லவராய மறையவர் வழிபாடு செய்ய, 'பெருமானே நீ அழுந்தையில் சிறந்துள்ள மடம்' எனப் பெயரிய கோயி–ல் எழுந்தருளியுள்ளாய்'. |
| **1678.** கடலே றியநஞ் சமுதுண் டவனே<br>உடலே உயிரே உணர்வே யெழிலே<br>அடலே றுடையாய் அழுந்தை மறையோர்<br>விடலே தொழுமா மடமே வினையே. | கட–ன்கண் எழுந்த நஞ்சை அமுதாக உண்டவனே! உடல், உயிர், உணர்வாக இருப்பவனே! அழகனே! வ–மை பொருந்திய ஆனேற்றை உடையவனே! அழுந்தையில் வாழும் மறையவர் தலைவனே! எனத் தொழ, பெருமானே! நீ சிறந்த மடம் எனப் பெயரிய கோயி–ல் எழுந்தருளியுள்ளாய். |
| **1679.** கழிகா டலனே கனலா ட–னாய்<br>பழிபா டிலனே யவையே பயிலும்<br>அழிபா டிலராய் அழுந்தை மறையோர்<br>வழிபா டுசெய்மா மடமன் னினையே. | பலரும் வெறுக்கும் சுடுகாட்டில் உறைபவனே! கன–ல் நின்று ஆடுபவனே! பிறரால் பழிக்கப்படும் இயல்புகள் இல்லாதவனே! எனப் பலவாறு உன்புகழையே பலகாலும் சொல்லும் அழிவுபாடற்ற அந்தணர் வழிபாடு செய்யும் அழுந்தை என்னும் தலத்தில், பெருமானே! நீ எழுந்தருளியுள்ளாய். |

| | | |
|---|---|---|
| **1680.** | வானே மலையே யெனமன் னுயிரே<br>தானே தொழுவார் தொழுதாள் மணியே<br>ஆனே சிவனே அழுந்தை யவரெம்<br>மானே யெனமா மடமன் னினையே. | அன்பர்கள் 'வானே! மலையே!' என்று கூற மன்னிய உயிரே! தாமே வணங்குவார் வணங்குதற்குரிய திருவடிகளை உடைய மணியே! ஆன் (பசு) வடிவாக விளங்குபவனே! சிவனே! அழுந்தை என்னும் பதியில் வாழும் மறையவர் எம் தலைவனே' எனப் போற்றப் 'பெருமானே! நீ மடம் எனப் பெயரிய கோயிலுள் விளங்குகின்றாய்'. |
| **1681.** | அலையார் புனல்சூழ் அழுந்தைப் பெருமான்<br>நிலையார் மறியுந் நிறைவெண் மழுவும்<br>இலையார் படையும் மிவையேந் துசெல்வ<br>நிலையா வதுகொள் கெனநீ நினையே. | அலைகள் வீசும் ஆறுகள் சூழ்ந்த அழுந்தைப் பதியில் உறையும் பெருமானை அவன் கையில் ஏந்திய நிலையான மான், கையில் ஏந்திய வெண்மையான மழு, இலைவடிவமான சூலம் ஆகியவற்றோடு, உள்ளத்தில் ஏந்துதலே நிலையான செல்வம் எனக் கொள்க. அவனையே நீ நினைக. |
| **1682.** | நறவார் தலையின் நயவா வுலகில்<br>பிறவா தவனே பிணியில் லவனே<br>அறையார் கழலாய் அழுந்தை மறையோர்<br>மறவா தெழமா மடமன் னினையே. | அடியவர் கட்டிய மலர்களால் தலையில் தேன் பொருந்திய நயம் உடையவனே! உலகில் பிறவாதவனே! நோயற்றவனே! ஒ—க்கின்ற வீரக்கழலை அணிந்தவனே! அழுந்தையில் வாழும் மறையவர் மறவாது எழுந்து தொழ, அங்குள்ள சிறந்த மடம் எனப் பெயரிய கோயி—ல் உள்ளாய். |
| **1683.** | தடுமாறு வல்லாய் தலைவா மதியம்<br>சுடுமாறு வல்லாய் சுடரார் சடையில்<br>அடுமாறு வல்லாய் அழுந்தை மறையோர்<br>நெடுமா நகர்கை தொழநின் றனையே. | உன்னை உணர்வதில் தடுமாற்றத்தை விளைப்பவனே! தலைவனே! காதல் வயப்பட்ட மகளிரை நீ சூடிய மதியால் சுடும் படி செய்பவனே! ஒளிபொருந்திய சடையின்மேல் உலகை அடவந்த கங்கையாற்றைச் சூடியவனே! அழுந்தையில் மறையவர் கைகளால் தொழ நீண்டுயர்ந்த பெரிய கோயி—ல் எழுந்தருளி யுள்ளாய். |
| **1684.** | பெரியாய் சிறியாய் பிறையாய் மிடறு<br>கரியாய் கரிகா டுயர்வீ டுடையாய்<br>அரியாய் ஒளியாய் அழுந்தை மறையோர்<br>வெரியார் தொழமா மடம்மே வினையே. | பெரியவனே! நுண்ணியனே! பிறை சூடியவனே! கண்டம் கரியவனே! சுடுகாட்டை உயர்ந்த வீடாகக் கொண்டவனே! அறிதற்கு அரியவனே! அன்பர்க்கு எளியவனே! அழுந்தையில் பழி பாவங்கட்கு அஞ்சும் மறையவர் வணங்க நீ சிறந்த மடம் என்னும் கோயி—ல் விளங்குகின்றாய். |

| | |
|---|---|
| **1685.** மணிநீள் முடியான் மலையை அரக்கன்<br>தணியா தெடுத்தான் உடலம் நெரித்த<br>அணியார் விரலாய் அழுந்தை மறையோர்<br>பணிமா மடம்மன் னியிருந் தனையே. | மணிகள் இழைத்த நீண்ட மகுடம் சூடிய முடியனாகிய இராவணன் கயிலை மலையைப் பொறுமையின்றி எடுத்த போது, அவனது உடலை நெரித்த அழகிய கால் விரலை உடையவனே! அழுந்தைப் பதியில் மறையவர் போற்ற அழகிய மடம் என்னும் கோயி–ல் நீ நிலையாக எழுந்தருளியுள்ளாய். |
| **1686.** முடியார் சடையாய் முனம்நா ளிருவர்<br>நெடியான் மலரான் நிகழ்வா –வர்கள்<br>அடிமே லறியார் அழுந்தை மறையோர்<br>படியால் தொழமா மடம்பற் றினையே. | சடைமுடியை உடையவனே! முற்காலத்தே திருமால், பிரமன் ஆகிய இருவர் தம்முள் செருக்கி உன் அடிமுடிகளை அறிய முற்பட்டு அறியாதவர் ஆயினர். அழுந்தைப் பதியுள் மறையவர் விதிமுறைப்படி வழிபட, வணங்கிப் போற்ற, சிறந்த மடம் எனப் பெயரிய கோயி–ல் நீ விளங்குகின்றாய். |
| **1687.** அருஞா னம்வல்லார் அழுந்தை மறையோர்<br>பெருஞா னமுடைப் பெருமா னவனைத்<br>திருஞா னசம்பந் தனசெந் தமிழ்கள்<br>உருஞா னமுண்டாம் உணர்ந்தார் தமக்கே. | எய்தற்கரிய திருவருள் ஞானம் பெற்றவர்களாகிய மறையவர் வணங்கிப் போற்ற அழுந்தைப் பதியில் விளங்கும் பெரிய ஞானமே வடிவாக உடைய பெருமானை, திருஞானசம்பந்தன் போற்றிப் பாடியுள்ள இத்திருப்பதிகத்தை ஓதி உணர்ந்தவர்க்கு உண்மை உணர்வு உண்டாகும். |

## 21. திருக்கழிப்பாலை

பண் : இந்தளம் பதிக எண் : 21

| | |
|---|---|
| **1688.** புனலா டியபுன் சடையா யரணம்<br>அனலா கவிழித் தவனே யழகார்<br>கனலா ட–னாய் கழிப்பா லையுளாய்<br>உனவார் கழல்கை தொழுதுள் குதுமே. | கங்கை நீரில் மூழ்கிய சடையை உடையவனே! முப்புரங்களையும் அழலெழுமாறு விழித்து எரித்தவனே! அழகிய நெருப்பில் நின்று ஆடல் புரிபவனே! கழிப்பாலையுள் எழுந்தருளியவனே! உன்னுடைய நீண்ட திருவடிகளைக் கைகளால் தொழுது நினைகின்றோம். |
| **1689.** துணையா கவொர்தூ வளமா தினையும்<br>இணையா கவுகந் தவனே யிறைவா<br>கணையால் எயிலெய் கழிப்பா லையுளாய்<br>இணையார் கழலேத் தஇடர் கெடுமே. | தனக்குத் துணையாகுமாறு தூய அழகிய உமையம்மையையும் உன்திருமேனியின் ஒருபாகமாக இணைத்துக் கொண்டு மகிழ்ந்தவனே! இறைவனே! முப்புரங்களைக் கணையால் எய்து கழிப்பாலையில் மேவி இருப்பவனே! உன் இரண்டு திருவடிகளை ஏத்த இடர் கெடும். |

| | |
|---|---|
| **1690.** நெடியாய் குறியாய் நிமிர்புன் சடையின்<br>முடியாய் சுடுவெண் பொடிமுற் றணிவாய்<br>கடியார் பொழில்சூழ் கழிப்பா லையுளாய்<br>அடியார்க் கடையா அவலம் அவையே. | மிகவும் பெரியவனே! நுண்ணியனே! நிமிர்த்துக் கட்டப்பட்ட சடையாகிய முடியை உடையவனே! திருநீற்றைத் திருமேனி முழுதும் அணிந்தவனே! மணம் கமழும் பொழில் சூழ்ந்த கழிப்பாலையில் எழுந்தருளியிருப்பவனே! உன் அடியவர்களை அவலங்கள் அடையமாட்டா. |
| **1691.** எளியாய் அரியாய் நிலம்நீ ரொடுநீ<br>வளிகா யமென வெளிமன் னியதூ<br>ஒளியாய் உனையே தொழுதுன் னுமவர்க்<br>களியாய் கழிப்பா லையமர்ந் தவனே. | அன்பர்க்கு எளியவனே! அல்லாதார்க்கு அரியவனே! நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களில் வெளிப்படையாக விளங்கும் தூய ஒளியோனே! உன்னையே வணங்கி நினைப்பவர்பால் அன்பு செய்பவனே! கழிப்பாலையில் விளங்குபவனே! |
| **1692.** நடநண் ணியொர்நா கமசைத் தவனே<br>விடநண் ணியதூ மிடறா விகிர்தா<br>கடல்நண் ணுகழிப் பதிகா வலனே<br>உடல்நண் ணிவணங் குவனுன் னடியே. | நடனத்தை விரும்பி ஒப்பற்ற பாம்பைக் கச்சாகக் கட்டியவனே! விடம் பொருந்திய தூய மிடற்றினனே! வேறுபட்ட பல வடிவங்களைக் கொண்டவனே! கடலை அடுத்துள்ள கழியில் விளங்கும் தலத்தில் விளங்குபவனே! என் உடல் உறுப்புக்கள் நிலத்தில் பொருந்த வணங்குவது உன் திருவடிகளையாகும். |
| **1693.** பிறையார் சடையாய் பெரியாய் பெரிய<br>மறையார் தருவாய் மையினா யுலகிற்<br>கறையார் பொழில்சூழ் கழிப்பா லையுளாய்<br>இறையார் கழலேத் தஇடர் கெடுமே. | பிறையணிந்த சடையினனே! பெரியோனே! பெருமை பொருந்திய வேதங்கள் கூறும் உண்மைப் பொருளாய் உள்ளவனே! மண்ணுலகில் கருநிறம் பொருந்திய பொழில் சூழ்ந்த கழிப்பாலையில் எழுந்தருளியவனே! எங்கும் தங்கும் உன் திருவடிகளை ஏத்த இடர் கெடும். |
| **1694.** முதிருஞ் சடையின் முடிமேல் விளங்குங்<br>கதிர்வெண் பிறையாய் கழிப்பா லையுளாய்<br>எதிர்கொள் மொழியால் இரந்தேத் துமவர்க்<br>கதிரும் வினையா யினஆ சறுமே. | முதிர்ந்த சடை முடியின்மேல் விளங்கும் வெண்மையான ஒளிக்கதிர்களை உடைய பிறையைச் சூடியவனே! கழிப்பாலையில் எழுந்தருளியவனே! முன்னிலைப் பரவல் என்னும் வகையில் எதிர்நின்று பரவி இரங்கி உன்னைத் துதிக்கும் அடியவர்க்கு நடுக்கத்தைத் தரும் வினைகளாகிய குற்றங்கள் அகலும். |

| | |
|---|---|
| **1695.** எரியார் கணையால் எயிலெய் தவனே<br>விரியார் தருவீழ் சடையாய் இரவிற்<br>கரிகா ட–னாய் கழிப்பா லையுளாய்<br>உரிதா கிவணங் குவனுன் னடியே. | தீக்கடவுள் பொருந்திய கணையால் முப்புரங்களை அழித்தவனே! விரிந்து விழும் சடைக்கற்றையை உடையவனே! இரவில் கரிந்த சுடுகாட்டில் ஆடுபவனே! கழிப்பாலையில் விளங்குபவனே! உன் திருவடிகளை எனக்கு உரியவாகக் கொண்டு வணங்குவேன். |
| **1696.** நலநா ரணன்நான் முகன்நண் ணலுறக்<br>கனலா னவனே கழிப்பா லையுளாய்<br>உனவார் கழலே தொழுதுன் னுமவர்க்<br>கிலதாம் வினைதான் எயிலெய் தவனே. | நன்மைகளைப் புரியும் திருமால், நான்முகன் இருவரும் அடிமுடி காண்போம் என்று உன்னை நண்ணியபோது கனல்வடிவோடு ஓங்கி நின்றவனே! கழிப்பாலையில் எழுந்தருளியவனே! முப்புரங்களை எய்து எரித்தவனே! உன்னுடைய நீண்ட திருவடிகளையே தொழுது நினைவார்க்கு வினைகள் இல்லையாகும். |
| **1697.** தவர்கொண் டதொழிற் சமண்வே டரொடுந்<br>துவர்கொண் டனர்நுண் துகிலா டையரும்<br>அவர்கொண் டனவிட் டடிகள் உறையும்<br>உவர்கொண் டகழிப் பதியுள் குதுமே. | தவத்தினராகிய வேடங்கொண்டு திரிவதைத் தொழிலாகக் கொண்ட போ–யான சமண் துறவி வேடத்தினரும், பழுப்பு நிறம் ஏற்றிய நுண்ணிய ஆடையைப் போர்த்துத் திரியும் புத்தர்களும் ஆகிய அவர்கள் கொண்ட கொள்கைகள் உண்மையானவை அல்ல என விடுத்துத் தலைமைக் கடவுளாக விளங்கும் சிவபிரான் உறைவதும், உவர் நீரையுடைய உப்பங்கழிகளை உடையதும் ஆகிய கழிப்பாலையை நாம் நினைத்துப் போற்றுவோம். |
| **1698.** கழியார் பதிகா வலனைப் புக–ப்<br>பழியா மறைஞா னசம்பந் தனசொல்<br>வழிபா டிவைகொண் டடிவாழ்த் தவல்லார்<br>கெழியா ரிமையோ ரொடுகே டிலரே. | உப்பங்கழிகள் பொருந்திய தலமாகிய கழிப்பாலைத் தலைவனாகிய சிவபிரானை, புக–ப் பதிக்குரியவனாய் மறைநெறி வளரத் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பரவிய இத்திருப்பதிகத்தை ஓதுவதையே வழிபாடாகக் கொண்டு போற்றவல்லவர் வானோர்களோடு பொருந்தி விளங்குவர். கேடு முத–யன இல்லாதவர் ஆவர். |

## 22. திருக்குடவாயில்

பண் : இந்தளம் பதிக எண் : 22

**1699.** திகழுந் திருமா லொடுநான் முகனும்
புகழும் பெருமான் அடியார் புகல
மகிழும் பெருமான் குடவாயின் மன்னி
நிகழும் பெருங்கோ யில்நிலா யவனே.

குடவாயில் என்னும் தலத்தில் நிலைபெற்று விளங்கும் பெருங்கோயி–ல் எழுந்தருளிய பெருமான், எல்லோராலும் அறியப்பெறும் திருமால், பிரமன் ஆகியோரால் புகழ்ந்து போற்றப்படும் தலைவனும், அடியவர்கள் தன்னைத் துதித்துப் போற்ற மகிழும் பெருமானும் ஆவான்.

---

திருணபிந்து முனிவர் பூசித்த தலம்.
திருக்குடத்தி–ருந்து சுவாமி வெளிப்பட்டு அவருடைய குட்ட நோயைத் தீர்த்த தலம்.

**1700.** ஓடுந் நதியும் மதியோ டுரகம்
சூடுஞ் சடையன் விடைதொல் கொடிமேல்
கூடுங் குழகன் குடவா யில்தனில்
நீடும் பெருங்கோ யில்நிலா யவனே.

குடவாயி–ல் நீடி விளங்கும் பெருங்கோயி–ல் எழுந்தருளிய பெருமான் பெருகி ஓடி வந்த கங்கையையும், பிறைமதியையும், பாம்பையும் சூடிய சடையை உடையவன். பழமையான தனது கொடியில் விடை இலச்சினை பொருந்தியவன். இளமைத் தோற்றம் உடையவன்.

**1701.** கலையான் மறையான் கனலேந் துகையான்
மலையா ளவள்பா கம்மகிழ்ந்த பிரான்
கொலையார் சிலையான் குடவா யில்தனில்
நிலையார் பெருங்கோ யில்நிலா யவனே.

குடவாயில் என்னும் தலத்தில் நிலைத்து விளங்கும் பெருங்கோயி–ல் எழுந்தருளிய பெருமான், பீதாம்பர ஆடையணிந்த திருமால், வேதங்களை ஓதும் நான்முகன் என்பவராகவும், கனலைக் கையில் ஏந்திய உருத்திரனாகவும், அறக்கருணை புரியும் மலைமகள் பாகனாகவும், மறக்கருணைபுரிய, கொலைத் தொழிலுக்குரிய வில்லை ஏந்தியவனாகவும் விளங்குபவன்.

**1702.** சுலவுஞ் சடையான் சுடுகா டிடமா
நலமென் முலையாள் நகைசெய் யநடம்
குலவுங் குழகன் குடவா யில்தனில்
நிலவும் பெருங்கோ யில்நிலா யவனே.

குடவாயி–ல் விளங்கும் பெருங்கோயி–ல் எழுந்தருளிய பெருமான், சுற்றிய சடைக் கற்றையை உடைய முடியன், அழகிய தனபாரங்களை உடைய உமையம்மை கண்டு மகிழச் சுடுகாட்டை ஆடுகளமாகக் கொண்டு நடம்புரியும் இளையோன்.

**1703.** என்றன் உளமே வியிருந் தபிரான்
கன்றன் மணிபோல் மிடறன் கயிலைக்
குன்றன் குழகன் குடவா யில்தனில்
நின்ற பெருங்கோ யில்நிலா யவனே.

குடவாயி–ல் பலரும் அறியப்படுவதாய் நிற்கும் பெருங்கோயி–ல் நிலவும் பெருமான், என் உள்ளத்தில் விரும்பி உறையும் தலைவன் ஆவான். ஒளி குன்றிய நீலமணி போன்ற மிடற்றினன். கயிலாய மலையில் உறைபவன்.

| | |
|---|---|
| 1704. அலைசேர் புனலன் அனலன் அமலன்<br>தலைசேர் ப–யன் சதுரன் விதிரும்<br>கொலைசேர் படையன்குடவா யில்தனில்<br>நிலைசேர் பெருங்கோ யில்நிலா யவனே. | குடவாயி–ல் நிலையாக விளங்கும் பெருங் கோயி–ல் எழுந்தருளிய இறைவன் : அலைகள் வீசும் கங்கையை அணிந்தவன். அனல் ஏந்தியவன். தலையோட்டில் ப– பெறுபவன். சதுரப்பாடு உடையவன்: நடுங்கத்தக்க கொலைக் கருவியாகிய சூலத்தை ஏந்தியவன். |
| 1705. அறையார் கழலன் அழலன் இய–ன்<br>பறையாழ் முழவும் மறைபா டநடம்<br>குறையா அழகன் குடவா யில்தனில்<br>நிறையார் பெருங்கோ யில்நிலா யவனே. | குடவாயி–ல் நிறைவாக அமைந்த பெருங்கோயி–ல் விளங்கும் இறைவன், ஒ–க்கின்ற வீரக் கழலை அணிந்தவன்: அழல் ஏந்தியவன். இசைமரபுடன் கூடிய பறை, யாழ் முழவுடன் வேதங்கள் பாட நடனமாடும் அழகன். |
| 1706. வரையார் திரள்தோள் அரக்கன் மடியவ்<br>வரையா ரவொர்கால் விரல்வைத் தபிரான்<br>வரையார் மதில்சூழ் குடவா யில்மன்னும்<br>வரையார் பெருங்கோ யில்மகிழ்ந் தவனே. | மலை போன்றுயர்ந்த மதில்கள் சூழ்ந்த குடவாயி–ல் நிலைபெற்ற கயிலைமலை போன்ற பெருங்கோயி–ல் மகிழ்ந்துறையும் இறைவன், மலை போன்று திரண்ட தோள்களை உடைய இராவணன் மடியுமாறு அவன் பெயர்த்த கயிலைமலை அவன்மீது அழுந்திப் பொருந்தத் தன் கால் விரலை ஊன்றிய பெருமான் ஆவான். |
| 1707. பொன்னொப் பவனும் புயலொப் பவனும்<br>தன்னொப் பறியாத் தழலாய் நிமிர்ந்தான்<br>கொன்னற் படையான் குடவா யில்தனில்<br>மன்னும் பெருங்கோ யில்மகிழ்ந் தவனே. | குடவாயி–ல் நிலை பெற்ற பெருங்கோயி–ல் மகிழ்ந்துறையும் பெருமான், பொன்னிறத்தின னாகிய பிரமனும், புயல் நிறத்தினனாகிய திருமாலும் தனக்கு உவமையாகாதவனாய்த் தழலுருவில் உயர்ந்து தோன்றியவன், கொல்லும் தொழில் புரியும் நல்ல படைக்கலன்களை ஏந்தியவன். |
| 1708. வெயி–ன் நிலையார் விரிபோர் வையினார்<br>பயிலும் முரையே பகர்பா விகள்பால்<br>குயிலன் குழகன்குடவா யில்தனில்<br>உயரும் பெருங்கோ யிலுயர்ந் தவனே. | குடவாயி–ல் உயர்ந்துள்ள பெருங்கோயி–ல் உயர்ந்தோனாய் விளங்கும் இறைவன், வெயி–ல் காய்பவராகிய சமணர்கள், விரித்துப் போர்த்த போர்வையினராகிய புத்தர்கள் ஆகிய சொன்னவற்றையே மீண்டும் மீண்டும் கூறும் பாவிகள்பால் பதியாதவன்; இளமையான தோற்றத்தை உடையவன். |

| | |
|---|---|
| **1709.** கடுவாய் மடீநீர் குடவா யில்தனில்<br>நெடுமா பெருங்கோ யில்நிலா யவனைத்<br>தடமார் புகடித் தமிழார் விரகன்<br>வடவார் தமிழ்வல் லவர்நல் லவரே. | வேகம் வாய்ந்த ஆற்றுநீரின் வளம் உடைய குடவாயில் நகரில் விளங்கும் நீண்டுயர்ந்த சிறந்த பெருங்கோயிடில் விளங்கும் இறைவனை, நீர் நிலைகளோடு கூடிய புகடிப் பதியினனாகிய தமிழ் வல்ல ஞானசம்பந்தன் அருளிய மாலையாக அமைந்த இப்பதிகத்தை ஓதவல்லவர் நன்மைகளை அடைவர். |

## 23. திருவானைக்கா

பண் : இந்தளம் — பதிக எண் : 23

| | |
|---|---|
| **1710.** மழையார் மிடறா மழுவா ளுடையாய்<br>உழையார் கரவா உமையாள் கணவா<br>விழவா ரும்வெண்நா வடின்மே வியஎம்<br>அழகா எனும்ஆ யிழையாள் அவளே. | நுண்ணிய வேலைப்பாடமைந்த அணிகலன் பூண்ட என் மகள், "மேகம் போன்ற கரிய மிடற்றினனே, மழுவாகிய படைக்கலனை உடையவனே, மான் ஏந்திய கரத்தினனே, உமையாள் கணவனே, விழாக்கள் பல நிகழும் வெண்ணாவல் ஈச்சுரம் என்னும் திருவானைக்காவில் மேவிய எம் அழகனே! அருள்புரி" என்று உன்னையே நினைந்து கூறுகின்றாள். |
| **1711.** கொலையார் கரியின் உரிமூ டியனே<br>மலையார் சிலையா வளைவித் தவனே<br>விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்<br>நிலையா அருளா யெனுநே ரிழையே. | அவயவங்கட்கு ஏற்ற அணிகலன்கள் பூண்ட என் மகள், 'கொல்ல வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தவனே, மலையை வில்லாக வளைத்தவனே, தன்னைத்தந்து என்னைக் கொள்ளும் விலையால் என்னை அடிமையாக ஆளும் வெண்ணாவல் என்னும் தலத்தில் விளங்குபவனே! நிலையாக என்னை ஆண்டருள்' எனக் கூறுகின்றாள். |
| **1712.** காலா லுயிர்கா லனைவீ டுசெய்தாய்<br>பாலோ டுநெய் யாடிய பால்வணனே<br>வேலா டுகையா யெம்வெணா வலுளாய்<br>ஆலார் நிழலா யெனுமா யிழையே. | என் ஆயிழையாள், 'காலால் காலன் உயிரைப் போக்கியவனே, பால், நெய் முதடியவற்றை ஆடும் பால்வண்ணனே, வேல் ஏந்திய கையனே, வெண்ணாவடின் கீழ் விளங்குபவனே, கல்லால மரநிழடின்கீழ் வீற்றிருந்து அறம் அருளியவனே!' என்று பலவாறு கூறுகின்றாள். அருள்புரி. |

| | பாடல் | பொருள் |
|---|---|---|
| 1713. | சுறவக் கொடிகொண் டவன்நீ றதுவாய்<br>உறநெற் றிவிழித் தஎம் உத் தமனே<br>விறன்மிக் ககரிக் கருள்செய் தவனே<br>அறமிக் கதுவென் னுமென் ஆயிழையே. | என் ஆயிழையாள், 'மீன் கொடியை உடைய மன்மதன் எரிந்து நீறாகுமாறு நுதல் விழியைத் திறந்த எங்கள் உத்தமனே, வ–மை மிக்க யானைக்கு அருள் செய்தவனே, நீ அருள் செய்யாதிருப்பதைக் கண்டு அறம் தவறுடையது' என்று கூறுவாள். |
| 1714. | செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்<br>அங்கட் கருணை பெரிதா யவனே<br>வெங்கண் விடையா யெம்வெண்நா வலுளாய்<br>அங்கத் தயர்வா யினள்ஆ யிழையே. | ஆராய்ந்து எடுத்த அணிகலன்களைப் பூண்ட என் மகள், 'செங்கண்ணான் எனப் பெயர் பூண்ட சோழமன்னனுக்கு அழகிய கண்களால் கருணை பெரிதாகப் புரிந்தருளியவனே, கொடிய கண்களை உடைய விடையூர்தியை உடையவனே, எமது வெண்ணாவல் என்னும் பெயரிய திருஆனைக்காக் கோயி–ல் உறைபவனே!' என்று பலவாறு நைந்து கூறி உடல் சோர்வுற்றாள். |
| 1715. | குன்றே யமர்வாய் கொலையார் பு–யின்<br>தன்தோ லுடையாய் சடையாய் பிறையாய்<br>வென்றாய் புரமூன் றைவெண்நா வலுளாய்<br>நின்றா யருளா யெனும்நே ரிழையே. | தன் உடல் உறுப்பிற்கு ஏற்ற அணிகலன்களைப் பூண்ட என் மகள், ''கயிலை மலையில் வீற்றிருப்பவனே, கொல்லும் தொழில் வல்ல பு–யினது தோலை உடுத்தவனே, சடைமுடியினனே, பிறை சூடியவனே, முப்புரங்களை அழித்து அவற்றின் தலைவர்களை வென்றவனே, வெண்ணாவல் என்னும் தலத்துள் எழுந்தருளியவனே அருளாய்!'' என்று அரற்றுகின்றாள். |
| 1716. | மலையன் றெடுத்த அரக்கன் முடிதோள்<br>தொலையவ் விரலூன் றியதூ மழுவா<br>விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்<br>அலசா மல்நல்காய் எனும்ஆ யிழையே. | ஆராய்ந்து பூண்ட அணிகலன்களை உடைய என் மகள், 'கயிலைமலையை அன்று எடுத்த இராவணனின் முடி, தோள் ஆகியன அழியுமாறு கால் விரலை ஊன்றிய தூய மழுவாளனே! என்னைக் கொண்டு தன்னைத்தரும் விலையால் என்னை ஆண்டருளும் வெண்ணாவல் தலத்தில் வீற்றிருப்பவனே! என்னை அலைக்காமல் அருள்புரிவாய்' என்று கூறுகிறாள். |

| | |
|---|---|
| **1717.** திருவார் தருநா ரணன்நான் முகனும்<br>மருவா வெருவா அழலாய் நிமிர்ந்தாய்<br>விரையா ரும்வெண்நா வலுள்மே வியஎம்<br>அரவா எனும்ஆ யிழையா ளவளே. | ஆராய்ந்தெடுத்த அணிகளைப் பூண்ட என் மகள், திருமகள் மார்பிடை மருவிய திருமாலும், நான்முகனும் அடிமுடி காண மருவி வெருவுமாறு அழலுருவாய் நிமிர்ந்தவனே, மணம் கமழும் வெண்ணாவலுள் மேவிய எம் அரவாபரணனே! என்று கூறுகின்றாள். |
| **1718.** புத்தர் பலரோ டமண்பொய்த் தவர்கள்<br>ஒத்தவ் வுரைசொல் –வையோ ரகிலார்<br>மெய்த்தே வர்வணங் கும்வெண்நா வலுளாய்<br>அத்த அருளாய் எனும் ஆயிழையே | ஆராய்ந்து பூண்ட அணிகலன்களை உடைய என் மகள், 'புத்தர்கள் பலரோடு, பொய்யான தவத்தைப் புரியும் சமணர்கள், தமக்குள் ஒத்த உரைகளைக் கூறி உன்னை அறியாதவராயினர். உண்மைத் தேவர்கள் வந்து வணங்கும் வெண்ணாவலுள் வீற்றிருக்கும் இறைவனே, அத்தனே அருளாய்!' என்று கூறுவாள். |
| **1719.** வெண்நா வலமர்ந் துறைவே தியனைக்<br>கண்ணார் கமழ்கா ழியர்தந் தலைவன்<br>பண்ணோ டிவைபா டியபத் தும்வல்லார்<br>விண்ணோ ரவரேத் தவிரும் புவரே. | வெண்ணாவ–ன் கீழ் அமர்ந்துறையும் வேதங்களை அருளிய இறைவனை, கண்களில் நிலைத்து நிற்பதும் மணம் கமழ்வதுமான சீகாழிப் பதிக்குத் தலைவனாகிய ஞானசம்பந்தன், பண்ணோடு பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லார் விண்ணோர்களால் ஏத்தி விரும்பப்படுபவர் ஆவர். |

## 24. திருநாகேச்சுரம் (திருஞானசம்பந்தரின் வினைக் கொள்கை)

**பண் : இந்தளம்** **பதிக எண் : 24**

| | |
|---|---|
| 1720. பொன்நேர் தருமே னியனே புரியும்<br>மின்நேர் சடையாய் விரைகா விரியின்<br>நன்னீர் வயநா கேச்சுர நகரின்<br>மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே.<br>( 9 பாடல்களில் "வினை அறும்" என்று இயம்புகிறார்) | பொன்னை யொத்த மேனியனே, வளைத்துக் கட்டப்பட்ட மின்னல் போன்ற சடையினை உடையவனே, மணத்துடன் வரும் காவிரி நதியின் நல்ல நீரால் வளம் பெறும் வயல்களை உடைய நாகேச்சுரத் திருக்கோயி–ல் விளங்கும் மன்னவனே என்று ஏத்த, வ–ய வினைகள் அழிந்து கெடும். |

| | |
|---|---|
| **1721.** சிறவார் புரமூன் றெரியச் சிலையில்<br>உறவார் கணையுய்த் தவனே உயரும்<br>நறவார் பொழில்நா கேச்சுர நகருள்<br>அறவா எனவல் வினையா சறுமே. | சிறவாதவராகிய அசுரர்களின் முப்புரங்கள் எரியுமாறு வில்—ற் பொருந்திய நீண்ட கணையைச் செலுத்தியவனே, உயர்ந்த தேன் பொருந்திய மலர்ச்சோலைகள் சூழ்ந்த திருநாகேச்சுரக் கோயி—ல் விளங்கும் அறவடிவினனே! என்று கூறி ஏத்த, வ—ய வினைக்குற்றங்கள் அழிந்து கெடும். |
| **1722.** கல்லால் நிழல்மே யவனே கரும்பின்<br>வில்லான் எழில்வே வவிழித் தவனே<br>நல்லார் தொழுநா கேச்சுர நகரில்<br>செல்வா எனவல் வினைதேய்ந் தறுமே. | கல்லால மரநிழ—ல் எழுந்தருளியவனே, கரும்பு வில்லை ஏந்திய மன்மதனின் அழகிய உடல் வேகுமாறு விழித்தவனே, நல்லவர்களால் வணங்கப்பெறும் நாகேச்சுரத் திருக்கோயி—ல் விளங்கும் செல்வனே என்று கூறி ஏத்த வ—ய வினைகள் தேய்ந்து கெடும். |
| **1723.** நகுவான் மதியோ டரவும் புனலும்<br>தகுவார் சடையின் முடியாய் தளவம்<br>நகுவார் பொழில்நா கேச்சுர நகருள்<br>பகவா எனவல் வினைபற் றறுமே. | விளங்குகின்ற வானத்தில் ஊரும் திங்கள், பாம்பு, கங்கை ஆகியன பொருந்திய தக்க நீண்ட சடையை உடையவனே, முல்லை மலர்கள் விளங்கும் நீண்ட பொழில்கள் சூழ்ந்த நாகேச்சுரத் திருக்கோயி—ல் விளங்கும் பெருமானே என்று கூறி ஏத்த வ—ய வினைகளின் தொடக்கு அறும். |
| **1724.** கலைமான் மறியுங் கனலும் மழுவும்<br>நிலையா கியகை யினனே நிகழும்<br>நலமா கியநா கேச்சுர நகருள்<br>தலைவா எனவல் வினை தா னறுமே. | மான்கன்று, அழல், மழு ஆகியன நிலையாக விளங்கும் கைகளை உடையவனே, நன்மை விளையும் தலமாகிய நாகேச்சுரக் கோயி—ல் விளங்கும் தலைவனே! என்று கூறி ஏத்த வ—ய வினைகள் கெடும். |
| **1725.** குரையார் கழலா டநடங் குலவி<br>வரையான் மகள்கா ணமகிழ்ந் தவனே<br>நரையார் விடையே றுநாகேச் சுரத்தெம்<br>அரைசே யெனநீங் குமருந் துயரே. | மலைமகளாகிய பார்வதி தேவி கண்டு மகிழ, கால்களில் ஒ—க்கின்ற வீரக்கழல்கள் ஆட நடனம் ஆடி மகிழ்பவனே, வெண்ணிறமான விடையின்மீது ஏறி நாகேச்சுரத்துள் விளங்கும் அரசனே! என்று கூறி ஏத்த, நீங்குதற்கு அரியவாய் வரும் துன்பங்கள் கெடும். |

| | | |
|---|---|---|
| 1726. | முடையார் தருவெண் டலைகொண் டுலகில்<br>கடையார் ப– கொண் டுழல்கா ரணனே<br>நடையார் தருநா கேச்சுர நகருள்<br>சடையாவென வல்வினை தானறுமே. | முடை நாற்றம் பொருந்திய வெள்ளிய தலையோட்டை ஏந்தி உலகில் பலர் வீட்டு வாயில்களிலும் ப– கொண்டு உழலும் உலகக் காரணனே, நாகேச்சுரக் கோயிலுள் எழுந்தருளிய சடையனே! என்று கூறி ஏத்த, வ–ய வினைகள் கெடும். |
| 1727. | ஓயா தவரக் கனொடிந் தலற<br>நீயா ரருள்செய் துநிகழ்ந் தவனே<br>வாயா ரவழுத் துவர்நா கேச்சுரத்<br>தாயே யெனவல் வினைதா னறுமே. | தன் வ–மையால் இடைவிடாது போர்புரியும் இராவணன் மனம் உடைந்து அலற நீ அவனுக்கு அரிய அருளைச் செய்து மனம் இளகுதலாகிய உன் நடை முறையைக் காட்டியவன், என்று உன்னைப் பலரும் வாயார வாழ்த்துவர். நாகேச்சுரத்தில் எழுந்தருளிய இறைவனே! என உன்னை நினைந்து போற்றுவார் வ–ய வினைகள் கெடும். |
| 1728. | நெடியா னொடுநான் முகன்நே டலுறச்<br>சுடுமா லெரியாய் நிமிர்சோ தியனே<br>நடுமா வயல்நா கேச்சுர நகரே<br>இடமா வுறைவா யெனஇன் புறுமே. | திருமாலும், பிரமனும் அடிமுடி தேடலை மேற்கொள்ளச் சுடுகின்ற பெரிய தீப்பிழம்பாய் எழுந்து நின்ற ஒளி வடிவினனே, நாற்று நடத்தக்க பெரிய வயல்களைக் கொண்டுள்ள நாகேச்சுரத்துக் கோயிலை உனக்குரிய கோயிலாகக் கொண்டு உறைபவனே என்று போற்ற அவன் இன்புறுவான். |
| 1729. | மலம்பா வியகை யொடுமண் டையதுண்<br>கலம்பா வியர்கட் டுரைவிட் டுலகில்<br>நலம்பா வியநா கேச்சுர நகருள்<br>சிலம்பா வெனத்தீ வினைதேய்ந் தறுமே. | அழுக்கேறிய கையினராய் உணவுகொள்ள மண்டை முதலான உண்கலங்களைப் பயன்படுத்தும் சமண, புத்தர்களின் பொய்மொழிகளை விடுத்து, உலகின்கண் நன்மைகள் வளர நாகேசுரக் கோயிலுள் எழுந்தருளிய கயிலை மலையானே! எனப் போற்றுவார் தீவினைகள் தேய்ந்து விடும். |
| 1730. | கலமார் கடல்சூழ் தருகா ழியர்கோன்<br>தலமார் தருசெந் தமிழின் விரகன்<br>நலமார் தருநா கேச்சுரத் தரனைச்<br>சொலமா லைகள்சொல் லநிலா வினையே. | மரக்கலங்கள் பல நிறைந்த கடல் சூழ்ந்த தலங்களில் சிறந்த காழிப்பதிக்குத் தலைவனும் செந்தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் நன்மைகள் நிறைந்த நாகேச்சுரத்து அரனைப் போற்றிச் சொன்ன பாமாலைகளாகிய இப்பதிகத்தை இசையுடன் ஓத வினைகள் நில்லா. |

## 25. திருப்புகலி

பண் : இந்தளம் பதிக எண் : 25

| | |
|---|---|
| 1731. உக– யாழ்கட லோங்கு பாருளீர்<br>அக– யாவினை யல்லல் போயறும்<br>இக– யார்புர மெய்த வன்னுறை<br>புக– யாம்நகர் போற்றி வாழ்மினே. | "தாவிச் செல்லும் அலைகளை உடைய ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட உலகின்கண் வாழ்பவர்களே, தன்னோடு மாறுபட்ட அசுரர்களின் முப்புரங்களை எய்தழித்த சிவபிரான் உறையும் புக– எனப் பெயர் பெற்ற சீகாழிப்பதியைப் போற்றி வழிபடுங்கள்" வினைகள் பெருகாமல் ஒழியும். அல்லல் போகும். |
| 1732. பண்ணி யாள்வதோ ரேற்றர் பான்மதிக்<br>கண்ணி யார்கமழ் கொன்றை சேர்முடிப்<br>புண்ணி யன்னுறை யும்பு க–யை<br>நண்ணு மின்னல மான வேண்டிலே. | நன்மைகள் பலவும் உங்களை அடைய வேண்டுமாயின், அலங்கரித்து ஊர்ந்து ஆளும் விடையை உடையவனும், பால் போன்ற வெண்மையான பிறை மதியைக் கண்ணியாகப் புனைந்தவனும், மணம் கமழும் கொன்றை மாலை சேர்ந்த முடியினனும் ஆகிய புண்ணிய மூர்த்தியாகிய சிவபிரான் உறையும் புக–யை அடைந்து வழிபடுங்கள். |
| 1733. வீசு மின்புரை காதன் மேதகு<br>பாச வல்வினை தீர்த்த பண்பினன்<br>பூசு நீற்றினன் பூம்பு க–யைப்<br>பேசு மின்பெரி தின்ப மாகவே. | இன்பம் பெரிதாக விளையவேண்டின், ஒளிவீசும் மின்னல் போன்ற அணிபூண்ட காதினனும், பற்றுக்கள், வ–ய வினைகள் ஆகியவற்றைப் போக்கிய மேதகு பண்பினனும், திருநீறு பூசியவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய புக–ப்பதியை அடைந்து அவனைப் புகழ்ந்து பேசுங்கள். |
| 1734. கடிகொள் கூவிளம் மத்தம் வைத்தவன்<br>படிகொள் பாரிடம் பேசும் பான்மையன்<br>பொடிகொள் மேனியன் பூம்பு க–யுள்<br>அடிக ளையடைந் தன்பு செய்யுமே. | மணம் கமழும் வில்வம், ஊமத்தைமலர் ஆகியவற்றை முடிமிசைச் சூடியவனும், பெரிதான இவ்வுலகில் உள்ளோர் புகழ்ந்து போற்றும் தன்மையாளனும், திருநீற்றுப்பொடி பூசிய மேனியனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய அழகிய புக–ப்பதியை அடைந்து அங்கு மேவிய பெருமானிடம் அன்பு செய்யுங்கள். |
| 1735. பாதத் தாரொ– பல்சி லம்பினன்<br>ஓதத் தார்விட முண்ட வன்படைப்<br>பூதத் தான்புக –ந்ந கர்தொழ<br>ஏதத் தார்க்கிட மில்லை யென்பரே. | பாதங்களில் பொருந்தி ஒ–க்கும் பல சிலம்புகளை அணிந்தவனும், பாற்கட–ற் பொருந்தி எழுந்த விடத்தை உண்டவனும், பூதப்படைகளை உடையவனும் ஆகிய சிவபிரானது புக–ப்பதியை அடைந்து தொழ, துன்பங்கள் வருதற்கு இடம் இல்லையாகும். |

| | |
|---|---|
| 1736. மறையி னான்ஒ– மல்கு வீணையன்<br>நிறையி னார்நிமிர் புன்ச டையனெம்<br>பொறை யினானுறை யும்பு க–யை<br>நிறையி னால்தொழ நேச மாகுமே. | வேதங்களை அருளியவனும், ஒ– நிறைந்த வீணையை உடையவனும், பூரணனாய் நிமிர்த்துக் கட்டிய சிவந்த சடைமுடியை உடையவனும், எமது பொறுமையை மலராகக் கொள்பவனும் ஆகிய சிவபிரான் உறையும் புக–யையே குறிக் கொண்டு தொழ, அதுவே அன்பு வழிபாடாக அமையும். |
| 1737. கரவி டைமனத் தாரைக் காண்கிலான்<br>இரவி டைப்ப– கொள்ளும் எம்மிறை<br>பொருவி டையுயர்த் தான்பு க–யைப்<br>பரவி டப்பயில் பாவம் பாறுமே. | வஞ்சகம் பொருந்திய மனத்தாரைக் காண விரும்பாதவனும், இரவில் ப–யேற்கும் இயல்பினனும், எம் இறைவனும், போர் வல்ல விடைபொறித்த கொடியினனும் ஆகிய சிவபிரானது புக–யைப் பரவ நாம் செய்த பாவங்கள் அழியும். |
| 1738. அருப்பி னார்முலை மங்கை பங்கினன்<br>விருப்பி னான்அரக் கன்னு ரஞ்செகும்<br>பொருப்பி னான்பொழி லார்பு க–யூர்<br>இருப்பி னானடி யேத்தி வாழ்த்துமே. | தாமரை அரும்பை ஒத்த தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும், தன்மீது விருப்பினன் ஆயினும் செருக்குற்ற காரணத்தால் இராவணனது வ–மையை அடர்த்த கயிலைமலையினனும், பொழில் சூழ்ந்த புக–யூரைத்தன் இருப்பிடமாக கொண்டவனும் ஆகிய சிவபிரானுடைய திருவடிகளை ஏத்தி வாழ்த்துங்கள். |
| 1739. மாலும் நான்முகன் தானும் வார்கழற்<br>சீல மும்முடி தேட நீண்டெரி<br>போலும் மேனியன் பூம்பு க–யுட்<br>பால தாடிய பண்பன் நல்லனே. | திருமால் நான்முகன் ஆகியோர் நீண்ட திருவடிப் பெருமையையும், திருமுடியையும் தேட எரி போலும் மேனியனாய் நீண்டவனும், அழகிய புக–யுள் பால் முத–யவற்றை ஆடி உறைபவனும் ஆகிய பண்பினன். நமக்கு நன்மைகள் செய்பவன். |
| 1740. நின்று துய்ப்பவர் நீசர் தேரர்சொல்<br>ஒன்ற தாகவை யாஉ ணர்வினுள்<br>நின்ற வன்நிக ழும்பு க–யைச்<br>சென்று கைதொழச் செல்வ மாகுமே. | நின்று உண்பவராகிய இழிந்த சமணர்கள், தேரர்களாகிய பௌத்தர்கள் உரைகளை ஒரு பொருளாகக் கொள்ளாத அன்பர்களின் உணர்வினுள் நிற்கும் சிவபிரான் எழுந்தருளிய புக–யைச் சென்று கைதொழச் செல்வங்கள் உளவாம். |

| | |
|---|---|
| 1741. புல்லம் மேறிதன் பூம்பு க–யை<br>நல்ல ஞானசம் பந்தன் நாவினாற்<br>சொல்லு மாலையீ ரைந்தும் வல்லவர்க்<br>கில்லை யாம்வினை யிருநி லத்துளே. | விடைமீது ஏறி வருபவனாகிய சிவபிரானது அழகிய புக–யை நன்மை செய்யும் ஞானசம்பந்தன் தன் நாவினால் போற்றிச் சொல்–ய தமிழ் மாலையாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர்க்கு அகன்ற இந்நிலவுலகத்தில் வினைகள் இல்லை. |

## 26. திருநெல்வாயில்

பண் : இந்தளம் — பதிக எண் : 26

| | |
|---|---|
| 1742. புடையி னார்புள்ளி கால்பொ ருந்திய<br>மடையி னார்மணி நீர்நெல் வாயிலார்<br>நடையி னால்விரற் கோவ ணந்நயந்<br>துடையி னாரெம துச்சி யாரே. | வயற்பக்கங்களில் நண்டுகளை உடையதும், வாய்க்கால்களை அடுத்துள்ள நீர்மடையில் நீலமணி போன்று தெளிந்த நீரை உடையதுமான நெல்வாயில் இறைவர் ஒழுக்கத்திற்குக்காட்டாக நால்விரல் அளவுள்ள கோவண ஆடையை உடையவர். அவர் எம் முடிமேல் திகழும் மாண்பினர். |
| 1743. வாங்கி னார்மதின் மேற்க ணைவெள்ளந்<br>தாங்கி னார்தலை யாய தன்மையர்<br>நீங்கு நீரநெல் வாயி லார்தொழ<br>ஓங்கி னாரெம துச்சி யாரே. | முப்புரங்கள் மீது கணை தொடுக்க வில்–னை வளைத்தவர், பெருகிவந்த கங்கைநீரைச் சடைமிசைத் தாங்கியவர். மேலான தன்மைகளை உடையவர். ஓடும் நீரினை உடைய நெல் வாயில் என்னும் தலத்தினர். நாம் தொழுமாறு புகழால் ஓங்கி விளங்குபவர். அவர் எம்முடிமேல் விளங்கும் மாண்பினர். |
| 1744. நிச்ச லேத்துநெல் வாயி லார்தொழ<br>இச்சை யாலுறை வாரெம் ஈசனார்<br>கச்சை யாவதோர் பாம்பி னார்கவின்<br>இச்சை யாரெம துச்சி யாரே. | நாள்தோறும் நாம் ஏத்தவும் தொழவும் நெல் வாயி–ல் இச்சையோடு விளங்குபவர். எம் ஈசர் பாம்பைக் கச்சையாக அணிந்தவர். உயிர்கட்கு இச்சை உண்டாதற் பொருட்டு தான் இச்சா சக்தியோடு விளங்குபவர். அவர் எம் உச்சியில் விளங்கும் மாண்பினர். |
| 1745. மறையி னார்மழு வாளி னார்மல்கு<br>பிறையி னார்பிறை யோடி லங்கிய<br>நிறையி னாரநெல் வாயிலார் தொழும்<br>இறைவ னாரெம துச்சி யாரே. | வேதங்களை அருளியவர். மழுவாகிய வாளினை உடையவர். சடைமுடியில் பொருந்திய பிறையினை உடையவர். வானளாவ வளர்ந்து, நிறைந்து விளங்கும் நெற்பயிர் விளையும் வயல் களை வாயி–ல் உடையதால், நெல்வாயில் எனப்பெற்ற தலத்தில் எழுந்தருளியிருப்பவர். நம்மால் தொழத்தகும் இறைவர். அவர் எமது முடிமிசைத் திகழ்பவர். |

| | |
|---|---|
| 1746. விருத்த னாகிவெண் ணீறு பூசிய<br>கருத்த னார்கன லாட்டு கந்தவர்<br>நிருத்த னாரநெல் வாயின் மேவிய<br>ஒருத்த னாரெம துச்சி யாரே. | முதியவராய்த் திருவெண்ணீறு அணிந்துள்ள தலைவர். தீயில் ஆடுதலை உகந்தவர். நடனம் புரிபவர். நெல்வாயில் என்னும் தலத்தில் விளங்கும் ஒருவர் என்னும் பெயருக்கு உரியவர். அவர் எமது உச்சியில் விளங்குபவர். |
| 1747. காரி னார்கொன்றைக் கண்ணி யார்மல்கு<br>பேரி னார்பிறை யோடி லங்கிய<br>நீரி னாரநெல் வாயி லார்தொழும்<br>ஏரி னாரெம துச்சி யாரே. | கார்காலத்தில் மலரும் கொன்றைமலரால் இயன்ற கண்ணியைச் சூடியவர். நிறைந்த புகழை உடையவர். பிறைசூடி விளங்கும் இயல்பினர். நெல் வாயி–ல் உறைபவர். நாம் தொழத்தகும் அழகர். அவர் எமது உச்சியில் விளங்குபவர். |
| 1748. ஆதி யாரந்த மாயி னார்வினை<br>கோதி யார்மதில் கூட்ட ழித்தவர்<br>நீதி யாரநெல் வாயி லார்மறை<br>ஓதி யாரெம துச்சி யாரே. | உலகிற்கு ஆதிஅந்தமாக விளங்குபவர். குரோதமான செயல்களைப் புரிந்த அசுரர்களின் மதில் கூட்டங்களை அழித்தவர். நீதியை உடையவர். நெல் வாயி–ல் எழுந்தருளி யிருப்பவர். மறைகளை ஓதியவர். அவர் எமது உச்சியில் உறைபவர். |
| 1749. பற்றி னானரக் கன்க யிலையை<br>ஒற்றி னாரொரு கால்வி ரலுற<br>நெற்றி யாரநெல் வாயி லார்தொழும்<br>பெற்றி யாரெம துச்சி யாரே. | கயிலைமலையைப் பற்றி எடுத்த இராவணனை ஒருகால் விரலைப் பொருந்தி அவன் தலைகள் முழுவதும் அடர ஒற்றியவர். நெல்வாயி–ல் விளங்குபவர். நாம் தொழும் தன்மையர். அவர் எமது உச்சியில் உறைபவர். |
| 1750. நாடி னார்மணி வண்ண னான்முகன்<br>கூடி னார்குறு காத கொள்கையர்<br>நீடி னாரநெல் வாயி லார்தலை<br>ஓடி னாரெம துச்சி யாரே. | நீலமணி போன்ற நிறத்தினனாகிய திருமாலும், நான்முகனும் கூடித் தேடிக்குறுக முடியாத இயல்பினராய் எரி உருவொடு நீடியவர். நெல்வாயி–ல் எழுந்தருளியிருப்பவர். தலை ஓட்டைக் கையில் உடையவர். அவர் எமது உச்சியில் உறைபவர். |
| 1751. குண்ட மண்டுவர்க் கூறை மூடர்சொற்<br>பண்ட மாகவை யாத பண்பினர்<br>விண்ட யங்குநெல் வாயி லார்நஞ்சை<br>உண்ட கண்டரெம் முச்சி யாரே. | குண்டர்களாகிய சமணர்களும், துவர் ஏற்றிய ஆடையை அணிந்த மூடர்களாகிய புத்தர்களும் கூறும் சொற்களைப் பொருளாகக் கொள்ளாத பண்பினர். வானளாவ உயர்ந்துள்ள நெற் பயிர்கள் நிறைந்த நெல் வாயில் என்னும் தலத்தில் விளங்குபவர். அவர் எமது உச்சியார். |

| | |
|---|---|
| 1752. நெண்ப யங்குநெல் வாயில் ஈசனைச்<br>சண்பை ஞானசம் பந்தன்சொல் –வை<br>பண்ப யன்கொளப் பாட வல்லவர்<br>விண்ப யன்கொளும் வேட்கை யாளரே. | நெல்வாயில் என்னும் தலத்தில் நட்புக்கொண்டு விளங்கும் ஈசனை, சண்பைப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய சொல்மாலையாகிய இத்திருப்பதிகத்தைப் பண்ணின்பயன் கொள்ளு மாறு பாடி வழிபட வல்லவர், வீட்டுலக இன்பத்தை அடையும் வேட்கையினர் ஆவர். |

## 27. திருஇந்திரநீலப் பருப்பதம்

பண் : இந்தளம் — பதிக எண் : 27

| | |
|---|---|
| 1753. குலவு பாரிடம் போற்ற வீற்றிருந்<br>திலகு மான்மழு வேந்து மங்கையர்<br>நிலவு மிந்திர நீலப் பர்ப்பதத்<br>துலவி னானடி யுள்க நல்குமே. | விளங்கும் மான் மழுஏந்திய அகங்கையாளனாய்த் தன்னிடம் அன்பு செய்யும் பூதகணங்கள் போற்ற, விளங்கித் தோன்றும் இந்திர நீலப்பர்வதத்து வீற்றிருந்து உலாவுகின்ற சிவபிரான் தன் திருவடிகளை நினைவார்க்கு அருள் புரிவான். |
| 1754. குறைவி லார்மதி சூடி யாடல்வண்<br>டறையு மாமலர்க் கொன்றை சென்னிசேர்<br>இறைவ னிந்திர நீலப் பர்ப்பதத்<br>துறைவி னான்றனை யோதி யுய்ம்மினே. | மேலும் குறைதல் இன்றி என்றும் ஒரு கலையாய் நிறைவுபெறும் பிறையை, வண்டுகள் இசைக்கும் சிறந்த கொன்றை மலர் சூடிய சென்னியில் சேர்த்துள்ள இறைவனும், இந்திர நீலப் பருவதத்து உறைபவனுமாகிய சிவபிரானைப் போற்றி உய்யுங்கள். |
| 1755. என்பொ னென்மணி யென்ன வேத்துவார்<br>நம்ப னான்மறை பாடு நாவினான்<br>இன்ப னிந்திர நீலப் பர்ப்பதத்<br>தன்பன் பாதமே யடைந்து வாழ்மினே. | என் பொன்னே என்மணியே என்று புகழ்ந்து போற்றுவாரை விரும்புபவன் நான்கு மறைகளையும் பாடும் நாவினை உடையவன். இன்ப வடிவினன், இந்திரநீலப் பர்வதத்து அன்பு உடையவன் ஆகிய சிவபிரான் திருவடிகளையே சரணாக அடைந்து வாழுங்கள். |
| 1756. நாச மாம்வினை நன்மை தான்வரும்<br>தேச மார்புக ழாய செம்மையெம்<br>ஈச னிந்திர நீலப் பர்ப்பதம்<br>கூசி வாழ்த்துதுங் குணம தாகவே. | நம் வினைகள் நாசமாகவும், நன்மைகளே வந்தெய்தவும், உலகளாவிய புகழுடைய செம்மையாளனாகிய எம் ஈசனும் இந்திரநீலப் பருவதத்து உறைவோனுமாகிய சிவபிரானை, நும் சிறுமையையும் அவன் பெருமையையும் எண்ணி நற்குணங்கள் பலவும் அமைய வாழ்த்துங்கள். |

| | |
|---|---|
| **1757.** மருவு மான்மட மாதொர் பாகமாய்ப்<br>பரவு வார்வினை தீர்த்த பண்பினான்<br>இரவ னிந்திர நீலப் பர்ப்பதத்<br>தருவி சூடிடு மடிகள் வண்ணமே. | இந்திர நீலப்பருவதத்து இறைவனது இயல்பு அருவிகளை மாலையாகச் சூடி மகிழ்வதோடு தன்னை மருவிய மான் போன்ற கண்ணளாகிய உமையம்மை ஒரு பாகமாக விளங்க, தன்னைப் பரவுவார் வினைகளைப் போக்குவதாகும். |
| **1758.** வெண்ணி லாமதி சூடும் வேணியன்<br>எண்ணி லார்மதி லெய்த வில்–னன்<br>அண்ண –ந்திர நீலப் பர்ப்பதத்<br>துண்ணி லாவுறு மொருவ னல்லனே. | வெண்மையான நிலவைத் தரும் மதியைச் சூடும் சடையினனும் பகைவரின் திரிபுரங்களை அழித்த வில்–னனும், தலைமையாளனும் ஆகிய இறைவன், இந்திரநீலப் பருவதத்துள் விளங்கும் ஒருவன் அல்லனோ ? |
| **1759.** கொடிகொள் ஏற்றினர் கூற்று தைத்தவர்<br>பொடிகொள் மேனியிற் பூண்ட பாம்பினர்<br>அடிகள் இந்திர நீலப் பர்ப்பதம்<br>உடைய வாண னுகந்த கொள்கையே. | கொடியில் கொண்ட விடையை உடையவர். எமனை உதைத்தவர். பொடியணிந்த மேனியில் பாம்பினை அணிந்தவர். தலைவர். இந்திரநீலப் பருவதத்துள் வாழும் இறைவனின் இயல்புகள் இவையாகும். |
| **1760.** எடுத்த வல்லரக் கன்க ரம்புயம்<br>அடர்த்த தோர்விர லானவ னையாட்<br>படுத்த னிந்திர நீலப் பர்ப்பதம்<br>முடித்த லம்முற முயலு மின்பமே. | கயிலை மலையை எடுத்த இராவணனின் கைகள், தோள்கள், ஆகியவற்றை அடர்த்த விரலால் ஆட்படுத்தியவன் உறையும் இந்திர நீலப்பருவதத்தை முடிகளால் வணங்க இன்பம் எளிதின் வாய்க்கும். |
| **1761.** பூவி னானொடு மாலும் போற்றுறும்<br>தேவ னிந்திர நீலப் பர்ப் பதம்<br>பாவி யாவெழு வாரைத் தம்வினை<br>கோவி யாவருங் கொல்லுங் கூற்றமே. | தாமரை மலரில் எழுந்தருளிய பிரமனோடு திருமால் போற்றி வணங்கும் தேவனாகிய இந்திரநீலப் பருவதத்துள் உறையும் இறைவனை நினையாதவரை வினைகள் சினக்கும். கூற்றம் கொல்லும். |
| **1762.** கட்டர் குண்டமண் டேரர் சீரிலர்<br>விட்ட ரிந்திர நீலப் பர்ப்பதம்<br>எட்ட னைநினை யாத தென்கொலோ<br>சிட்ட தாயுறை யாதி சீர்களே. | கட்டானவும் பருமையானவுமான உட–னராகிய சமணபுத்தர்கள் சிறப்பற்றவர். நம்மால் விட்டொழியத் தக்கவர். அவர்களை விடுத்து இந்திரநீலப் பருவதத்து உறையும் மேலான ஆதியின் சீர்களை எள்ளளவும் நினையாதிருப்பது ஏனோ ? |

1763. கந்த மார்பொழில் சூழ்ந்த காழியான்
**இந்தி ரன்றொழு நீலப் பர்ப்பதத்**
தந்த மில்லியை யேத்து ஞானசம்
பந்தன் பாடல்கொண் டோதி வாழ்மினே.

மணம் கமழும் பொழில் சூழ்ந்த காழிப் பதியானாகிய ஞானசம்பந்தன் இந்திரனால் வழிபடப் பெற்ற நீலமலையில் விளங்கும் அந்தம் இல்லாத பெருமானை ஏத்திய பாடல்களை ஓதி வழிபட்டு வாழுங்கள்.

இந்திரன் பூசித்ததற்குச் சான்று இப்பாடல் உள்ளது.

## 28. திருக்கருவூரானிலை

பண் : இந்தளம் பதிக எண் : 28

1764. தொண்டெ லாமலர் தூவி யேத்தநஞ்
சுண்ட லாருயி ராய தன்மையர்
கண்ட னார்கரு வூரு ளானிலை
அண்ட னாரரு ளீயு மன்பரே.

தொண்டர்கள் மலர் தூவி ஏத்த நஞ்சினை உண்டவரும், அரிய உயிர் போன்றவரும், கற்கண்டு போல் இனிப்பவருமாய இறைவர், கருவூர் ஆனிலையில் விளங்கும் தேவராவார். அருள் வழங்கும் அன்புடையவர் அவர்.

1765. நீதி யார்நினைந் தாய நான்மறை
ஓதி யாரொடுங் கூட லார்குழைக்
காதி னார்கரு வூரு ளானிலை
ஆதி யாரடி யார்த மன்பரே.

நீதியின் வடிவானவர். நினைந்து ஆராயத்தக்க தாய நான்கு மறைகளை ஓதும் அந்தணர்களோடு கூடியவர். குழை அணிந்த திருச்செவியர். கருவூர் ஆனிலையில் விளங்கும் முதல்வர். அடியார்களுக்கு அன்பர்.

1766. விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை
அண்ண லாரடி யார்க்கு நல்லரே.

வானத்தில் உலாவும் மதியைச் சூடியவர். வேத இசையாக விளங்குபவர். மேலான பண்பினர். கூத்தர். கருவூர் ஆனிலையில் விளங்கும் தலைவர். அடியவர்கட்கு நல்லவர்.

1767. முடியர் மும்மத யானை யீருரி
பொடியர் பூங்கணை வேளைச் செற்றவர்
கடியுளார் கரு வூரு ளானிலை
அடிகள் யாவையு மாய ஈசரே.

சடைமுடியை உடையவர். மும்மதங்களை உடைய யானையை உரித்தவர். வெண்பொடி பூசியவர். மன்மதனைச் செற்றவர். சிறப்புடையவர். கருவூர் ஆனிலையில் விளங்கும் தலைவர். அவர் எல்லாமாய் விளங்கும் ஈசராவார்.

1768. பங்க யம்மலர்ப் பாதர் பாதியோர்
மங்கை யர்மணி நீல கண்டர்வான்
கங்கை யார்கரு வூரு ளானிலை
அங்கை யாடர வத்தெம் மண்ணலே.

தாமரை போன்ற திருவடியர். தம் திருமேனியின் பாதியாக உமையம்மையைக் கொண்டவர். நீலமணி போன்ற கண்டத்தினர். ஆகாய கங்கையைத் தாங்கியவர். அழகிய கைகளின் மேல் ஆடும் பாம்பை உடையவர். அவர் கருவூர் ஆனிலையில் விளங்கும் தலைவராவார்.

| | |
|---|---|
| **1769.** தேவர் திங்களும் பாம்புஞ் சென்னியின்<br>மேவர் மும்மதி லெய்த வில்-யர்<br>காவ லர்கரு வூரு ளானிலை<br>மூவ ராகிய மொய்ம்ப ரல்லரே.<br><br>கருவூர் – கரூர் – ஊர்ப்பெயர்<br>ஆனிலை – கோயி-ன் பெயர் | தேவர்கட்கு எல்லாம் தேவர். திங்கள், பாம்பு ஆகியவற்றை முடிமேல் சூடியவர். மும்மதில்களை எய்த வில்லை உடையவர். எல்லோரையும் காப்பவர். கருவூர் ஆனிலையில் விளங்கும் இவர் அயன், அரி, அரன் ஆகிய மும்மூர்த்திகளுக்கும் சக்தி வழங்கியவர் அல்லரோ? |
| **1770.** பண்ணி னார்படி யேற்றர் நீற்றர்மெய்ப்<br>பெண்ணி னார்பிறை தாங்கு நெற்றியர்<br>கண்ணி னார்கரு வூரு ளானிலை<br>நண்ணி னார்நமை யாளு நாதரே. | பண்களின் வடிவாய் இருப்பவர். படிந்து ஏறுதற்கு உரிய விடையூர்தியர். நீறணிந்தவர். திருமேனியில் உமைஅம்மையைக் கொண்டுள்ளவர். பிறை சூடிய திருமுடியர். நெற்றியில் கண்ணுடையவர். கருவூர் ஆனிலையில் எழுந்தருளியிருப்பவர். நம்மை ஆளும் நாதர் அவர். |
| **1771.** கடுத்த வாளரக் கன்க யிலையை<br>எடுத்த வன்றலை தோளுந் தாளினால்<br>அடர்த்த வன்கரு வூரு ளானிலை<br>கொடுத்த வன்னருள் கூத்த னல்லனே. | வாளோடு சினந்து வந்து கயிலையைப் பெயர்த்த இராவணனின் தலை தோள் ஆகியவற்றைத் தாளினால் அடர்த்தவன். பின் அவனுக்கு அருள் கொடுத்தவன். கூத்தன் அவன் கருவூர் ஆனிலையில் விளங்கும் பெரியவன். |
| **1772.** உழுது மாநிலத் தேன மாகிமால்<br>தொழுது மாமல ரோனுங் காண்கிலார்<br>கழுதி னான்கரு வூரு ளானிலை<br>முழுது மாகிய மூர்த்தி பாதமே. | எல்லாமாய் விளங்கும் இறைவனின் பாதங்களைப் பன்றி வடிவெடுத்துப் பெரிய நிலத்தை உழுது சென்று முயன்ற திருமால், பிரமன் ஆகியோர் தொழுதும் காண்கிலர். அத்தகைய பெருமான் கருவூர் ஆனிலையில் நாம் எளிதின் வணங்க எழுந்தருளியுள்ளான். |
| **1773.** புத்தர் புன்சம ணாதர் பொய்யுரைப்<br>பித்தர் பேசிய பேச்சை விட்டுமெய்ப்<br>பத்தர் சேர்கரு வூரு ளானிலை<br>அத்தர் பாத மடைந்து வாழ்மினே. | புத்தர்களும் புன்மையான அறிவற்ற பொய்யுரைகளைக் கூறும் பித்தர்களாகிய சமணர்களும் பேசும் பேச்சுக்களை விட்டு உண்மையான பக்தர்கள் சேரும் கருவூர் ஆனிலையில் விளங்கும் மேலான இறைவனின் திருவடிகளை அடைந்து வாழுங்கள். |
| **1774.** கந்த மார்பொழிற் காழி ஞானசம்<br>பந்தன் சேர்கரு வூரு ளானிலை<br>எந்தை யைச்சொன்ன பத்தும் வல்லவர்<br>சிந்தை யிற்றுய ராய தீர்வரே. | மணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் கருவூர் ஆனிலையை அடைந்து எம் தந்தையாகிய இறைவன்மேல் பாடிய இப்பதிகப்பாடல் பத்தையும் ஓத வல்லவர் மனத்துயர் தீர்வர். |

## 29. திருப்புகலி (திருவிராகம்)

பண் : இந்தளம் — பதிக எண் : 29

| | பாடல் | பொருள் |
|---|---|---|
| 1775. | முன்னிய கலைப்பொருளு மூவுலகில் வாழ்வும்<br>பன்னிய வொருத்தர்பழ வூர்வினவின் ஞாலந்<br>துன்னியிமை யோர்கள்துதி செய்துமுன் வணங்குஞ்<br>சென்னியர் விருப்புறு திருப்புக– யாமே. | பொருந்திய கலைகளின் பொருளையும் மூவுலக வாழ்வையும் உயிர்கட்கு ஆராய்ந்து அளித்துக் காக்கும் ஒருவராக விளங்கும் சிவபிரானின் பழமையான ஊர் யாதென வினவின், தேவர்கள் மண்ணுலகை அடைந்து துதி செய்து வணங்கும் சென்னியில் உள்ளவராகும் இறைவர் எழுந்தருளிய திருப்புக– என்னும் தலமாகும். |
| 1776. | வண்டிரை மதிச்சடை மிலைத்தபுனல் சூடிப்<br>பண்டெரிகை யாடுபர மன்பதிய தென்பர்<br>புண்டரிக வாசமது வீசமலர்ச் சோலைத்<br>தெண்டிரை கடற்பொ– திருப்புக– யாமே. | வளமையான அலைகளோடு கூடிய கங்கையை மதி சூடிய சடையின்மேல் தாங்கிப் பழமையான தீயைக் கையின்கண் ஏந்தி ஆடும் பரமனது பதி தாமரை மலரின் மணம் வீசப் பெறுவதும் சோலைகள் சூழ்ந்ததும், தெளிந்த அலைகளை உடைய கட–ல் தோணியாக மிதந்து பொ–ந்ததும் ஆகிய திருப்புக–யாகும். |
| 1777. | பாவணவு சிந்தையவர் பத்தரொடு கூடி<br>நாவணவு மந்தணன் விருப்பிடம தென்பர்<br>பூவணவு சோலையிருண் மாலையெதிர் கூரத்<br>தேவண விழாவளர் திருப்புக– யாமே. | இறைவன் புகழான பாடல்கள் பாடும் சிந்தையை உடையவர்கள், பத்தர்களோடு கூடிப்பரவ, அவர்தம் நாவில் உறையும் அந்தணனாக விளங்கும் பெருமானுக்கு விருப்பமான இடம், பூக்கள் நிறைந்த சோலையில் இருளைத்தரும் மாலைப்போதுவர தெய்வத் தொடர்பான விழாக்கள் நிகழும் திருப்புக– எனக்கூறுவர். |
| 1778. | மைதவழு மாமிடறன் மாநடம தாடி<br>கைவளையி னாளொடு கலந்தபதி யென்பர்<br>செய்பணி பெருத்தெழு முருத்திரர்கள் கூடித்<br>தெய்வம திணக்குறு திருப்புக– யாமே. | கருமை நிறம் பொருந்திய மிடற்றினை உடைய சிவபிரான் மகிழ்ச்சியால் சிறந்த நடனங்கள் ஆடி, கைகளில் வளையல் அணிந்த உமையம்மை யோடு கலந்துறையும் பதி, உருத்திரர்கள் பெரிதான இறைத்தொண்டுகளைப் புரிந்து பெருமானோடு இணங்கி நிற்கும் திருப்புக–யாகும். |
| 1779. | முன்னமிரு மூன்றுசம யங்களவை யாகிப்<br>பின்னையருள் செய்தபிறை யாளனுறை கோயில்<br>புன்னைய மலர்ப்பொழில்க ளக்கினொளி காட்டச்<br>செந்நெல்வய லார்தரு திருப்புக– யாமே. | முன்னமே அறுவகைச் சமயங்களாய் விளங்கி அவரவரும் மேற்கொண்ட கொள்கைகளுக்கு ஏற்ப அருள் செய்த பிறையாளன் உறையும் கோயில், சங்குகள் ஒளிவிடும் புன்னைமலர்ச் சோலைகளை உடையதும் செந்நெல்விளையும் வயல்கள் பொருந்தியதுமான திருப்புக–யாகும். |

| | | |
|---|---|---|
| 1780. | வங்கம– யுங்கடல் விடத்தினை நுகர்ந்த<br>அங்கண னருத்திசெய் திருக்குமிட மென்பர்<br>கொங்கண வியன்பொழி–ன் மாசுபனி மூசத்<br>தெங்கணவு தேன்ம– திருப்புக– யாமே. | மரக்கலங்கள் நிறைந்து தோன்றும் திருப்பாற் கட–ல் தோன்றிய விடத்தினை உண்ட அழகிய கருணையாளன் ஆகிய சிவபிரான் மிகவிரும்பி இருக்கும் இடம், மணம் நிறையுமாறு பனிபடர்ந்த மாசுடன் விளங்கும் பொழில்களை உடையதும் இனிய தென்னைமரங்கள் சூழ்ந்ததுமான திருப்புக–யாகும். |
| 1781. | நல்குரவு மின்பமும் நலங்களவை யாகி<br>வல்வினைகள் தீர்த்தருளு மைந்தனிட மென்பர்<br>பல்குமடி யார்கள்படி யாரவிசை பாடிச்<br>செல்வமறை யோருறை திருப்புக– யாமே. | வறுமை இன்பவாழ்வு நலங்கள் ஆகியனவற்றைத் தருபவராய்த் தம்மை வழிபடுவாரின் வ–ய வினைகளைத் தீர்த்தருளும் பெருவீரராய் விளங்கும் பெருமானாருடைய இடம், பெருகிய அடியார்கள் நிலமிசை இசைபாடி வாழ்த்துவதும், செல்வம் நிரம்பிய மறையவர்கள் நிறைந்துள்ளதுமான திருப்புக–யாகும். |
| 1782. | பரப்புறு புகழ்ப்பெருமை யாளன்வரை தன்னால்<br>அரக்கனை யடர்த்தருளு மண்ண–ட மென்பர்<br>நெருக்குறு கடற்றிரைகண் முத்தமணி சிந்தச்<br>செருக்குறு பொழிற்பொ– திருப்புக– யாமே. | பரவிய புகழாளரும், கயிலைமலையால் இராவணனை அடர்த்தருளிய தலைவருமான சிவபெருமானது இடம், நெருங்கிவரும் கடல் அலைகள் முத்துக்களையும், மணிகளையும் சிந்துதலால் பெருமை பெற்ற பொழில்கள் பொழியும் திருப்புக–ப் பதியாகும். |
| 1783. | கோடலொடு கூன்மதி குலாயசடை தன்மேல்<br>ஆடரவம் வைத்தருளு மப்பனிரு வர்க்கும்<br>நேடவெரி யாகியிரு பாலுமடி பேணித்<br>தேடவுறை யுந்நகர் திருப்புக– யாமே. | காந்தள் மலர்களோடு வளைந்த பிறைமதி குலாவும் சடையின்மேல் ஆடும் பாம்பினையும் வைத்தருளிய தலைவரும், திருமால், பிரமர் தேட ஏரியுருவமாய்த் தோன்றி அவர்கள் கீழும், மேலும் அடி முடிகளைத் தேட நின்றவருமான சிவபிரான் உறையும் நகர் திருப்புக–யாகும். |
| 1784. | கற்றமண ருற்றுலவு தேரருரை செய்த<br>குற்றமொழி கொள்கைய திலாதபெரு மானூர்<br>பொற் றொடிமடந்தையரும் மைந்தர்புல னைந்துஞ்<br>செற்றவர் விருப்புறு திருப்புக– யாமே. | கல்வி கற்ற அமணர்களும், நூலறிவில் தேர்ந்துலவும் புத்தர்களும் மெய்ப்பொருள் அறியாது கூறும் குற்றம் பொருந்திய கொள்கைகளை ஏலாதவனது ஊர், பொன்னால் இயன்ற வளையல்களை அணிந்த மகளிரும் மைந்தர்களும், ஐம்புலன்களையும் வென்ற ஞானியரும் விரும்பும் திருப்புக–யாகும். |

**1785.** செந்தமிழ் பரப்புறு திருப்புக– தன்மேல்
அந்தமுத லாகிநடு வாயபெரு மானைப்
பந்தனுரை செய்தமிழ்கள் பத்துமிசை கூர
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே.

செந்தமிழ் மொழிபரவி வளரும் திருப்புக–யில் எழுந்தருளிய ஆதி, அந்தம், நடு எனப்படும் மூவகையாகவும் விளங்கும் பெருமான்மீது, ஞானசம்பந்தன் உரைத்தருளிய இத்திருப்பதிகப் பாடல்களைக் கொண்டு இசையோடு இயலும் வகையில் பாடிப் பரவுவார், வீடு பேற்றுக்கு உரியவர் ஆவர்.

## 30. திருப்புறம்பயம்

பண் : இந்தளம்

(திருவிராகம்)

பதிக எண் : 30

**1786.** மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்பய னுறும்பொரு டெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பயம் அமர்ந்தோய்.

பிரளயம் வந்தபோது அது ஊரினுள் புகாதவாறு தடைப்பட்டு புறத்தே நின்றமையால் – புறம்பயம். பக்கத்தே தண்ணீர் உடையது என்று பொருள்படும்.

புறம்பயம் அமர்ந்தவனே! வீரமும் பயமும் கொண்டு தன்னோடு போர்மலைந்த அசுரர்களின் முப்புரங்களின் வ–மையை அறுத்தாய். உனது தன்மை பசுமை நிறமும் செம்மையும் கலந்தது. ஆகமங்களின் பயனாகச் சொல்லத்தக்க பொருளைத் தெரிந்துணர விரும்பிய முனிவர் நால்வர்க்கு அறமாகிய பயனை உணர்த்தி யருளினாய்.

**1787.** விரித்தனை திருச்சடை யரித்தொழுகு வெள்ளம்
தரித்தனை யதன்றியு மிகப்பெரிய காலன்
எருத்திற வுதைத்தனை யிலங்கிழையொர் பாகம்
பொருத்துதல் கருத்தினை புறம்பயம் அமர்ந்தோய்.

புறம்பயத்தில் எழுந்தருளியவனே! சடையை விரித்து பெருகி வந்த கங்கை வெள்ளத்தைத் தாங்கினாய். அஃதன்றியும் மிகப்பெரிய காலனின் பிடரி வருந்துமாறு உதைத்தாய். விளங்கும் அணிகலன் பூண்ட உமையம்மையை மேனியின் ஒரு பாகமாகப் பொருந்தியுள்ளாய்.

**1788.** விரிந்தனை குவிந்தனை விழுங்குயி ருமிழ்ந்தனை
திரிந்தனை குருந்தொசி பெருந்தகையு நீயும்
பிரிந்தனை புணர்ந்தனை பிணம்புகு மயானம்
புரிந்தனை மகிழ்ந்தனை புறம்பயம் அமர்ந்தோய்.

புறம்பயம் அமர்ந்த பெருமானே! எல்லாமாக விரிந்து நின்றாய். நுண்ணியனாகக் குவிந்துள்ளாய் : ஊழிக் காலத்தில் விழுங்கிய உயிர்களை வினைப்போகத்திற்காக மீண்டும் உடலோடு உலவவிட்டாய். உன் நிலையை விடுத்துப் பல்வகை வடிவங்கள் எடுத்துத் திரிந்தாய். குருந்த மரத்தை வளைத்த திருமால் மோகினியாக வர அவரோடு கூடிப் பிரிந்தும் புணர்ந்தும் விளையாடினாய்: பிணம் புகும் சுடுகாட்டை விரும்பி மகிழ்ந்தாய்.

| | |
|---|---|
| **1789.** வளங்கெழு கடும்புன லொடுஞ்சடை யொடுங்கத்<br>துளங்கம ரிளம்பிறை சுமந்தது விளங்க<br>உளங்கொள வளைந்தவர் சுடுஞ்சுடலை நீறு<br>புளங்கொள விளங்கினை புறம்பயம் அமர்ந்தோய். | புறம்பயம் அமர்ந்த பெருமானே! வளமை பொருந்தியதாய்க் கடுமையாகப் பெருகி வந்த கங்கையொடு கூடிய சடையசைய விளங்கும் இளம்பிறையை கலங்கத்தாங்கி மனம் நெகிழ்ந்து வணங்கும் அடியவர்க்குச் சுடுகாட்டில் விளைந்த நீற்றொடு தோன்றும் உன் கோலத்தை அறிவிற் காட்டி விளங்குகின்றாய். |
| **1790.** பெரும்பிணி பிறப்பினொ டிறப்பிலையொர் பாகம்<br>கரும்பொடு படுஞ்சொ–ன் மடந்தையை மகிழ்ந்தோய்<br>சுரும்புண வரும்பவிழ் திருந்தியெழு கொன்றை<br>விரும்பினை புறம்பயம் அமர்ந்தவிறை யோனே.<br><br>கரும்பன்ன சொல்லம்மை – அம்மையின் திருப்பெயர் | புறம்பயம் அமர்ந்த இறைவனே! நீ பெரிதாகப் பற்றிய நோய், பிறப்பு, இறப்பு, இல்லாதவன். கரும்படு சொல்– என்னும் பெயருடைய உமையம்மையுடன் மகிழ்ந்தவன். வண்டுகள் தேனுண்ண அதனால் அழகுற அவிழும் கொன்றை மலர்களை விரும்பியவன். |
| **1791.** அனற்படு தடக்கையவ ரெத்தொழில ரேனும்<br>நினைப்புடை மனத்தவர் வினைப் பகையும் நீயே<br>தனற்படு சுடர்ச்சடை தனிப்பிறையொ டொன்றப்<br>புனற்படு கிடக்கையை புறம்பயம் அமர்ந்தோய். | புறம்பயம் அமர்ந்த பெருமானே! தீ வளர்க்கும் நீண்டகையை உடைய அந்தணர்கள் உன்னை நினையும் மனத்தவராயின் அவர் எத்தொழிலை மேற்கொண்டவர் ஆயினும் அவர்தம் தீவினை கட்குப் பகையாயிருந்து தீர்ப்பவன் நீ. தீக் கொழுந்து போன்ற ஒளி பொருந்திய சடையில் தனித்த பிறையோடு பொருந்தக் கங்கை கிடக்குமாறு செய்துள்ளவன் நீ. |
| **1792.** மறத்துறை மறுத்தவர் தவத்தடிய ருள்ளம்<br>அறத்துறை யொறுத்துன தருட்கிழமை பெற்றோர்<br>திறத்துள திறத்தினை மதித்தகல நின்றும்<br>புறத்துள திறத்தினை புறம்பயம் அமர்ந்தோய்.<br><br>அருட்கிழமை – சிவஞானத்திற்கு உரியராந்தன்மை, இருவினையொப்பு | புறம்பயம் அமர்ந்தோய்! பாவமான செயல்களை விரும்பாத தவத்தைப்புரியும் அடியவர் உள்ளங்களில் அறநெறிப் பயனையும் அடைய விரும்பாதவாறு அதனைக் கடிந்து, உன் அருள் உரிமையைப் பெற்றோர் திறத்தினுக்கு ஏற்ப அருள் வழங்கும் தன்மையனாய் வேறாய் நின்றும் அருள் புரிபவன் நீ. |
| **1793.** இலங்கைய ரிறைஞ்சிறை விலங்க–ன் முழங்க<br>உலங்கெழு தடக்கைக ளடர்த்திடலு மஞ்சி<br>வலங்கொள வெழுந்தவ னலங்கவின வஞ்சு<br>புலங்களை விலங்கினை புறம்பயம் அமர்ந்தோய். | புறம்பயம் அமர்ந்தவனே! இலங்கை மக்கள் வணங்கும் தலைவனாகிய இராவணன் மலையின் கீழ் அகப்பட்டு முழங்க அவன் வ–ய தலைகளோடு கைகளை அடர்த்து அவன் அஞ்சிப் போற்ற வாளும், நாளும் அளித்து அவனுக்கு வெற்றி உண்டாக அருள் புரிந்தவன் நீ. நன்மைகள் உண்டாக ஐந்து புலன்களை வென்றவன் நீ. |

| | |
|---|---|
| **1794.** வடங்கெட நுடங்குண விடந்தவிடை யல்–க்<br>கிடந்தவ னிருந்தவ னளந்துணர லாகார்<br>தொடர்ந்தவ ருடம்பொடு நிமிர்ந்துடன் வணங்கப்<br>புடங்கருள்செய் தொன்றினை புறம்பயம மர்ந்தோய். | புறம்பயம் அமர்ந்தவனே! ஆல்இலையில் துயின்ற திருமாலும் அவனது கொப்பூழாகிய தாமரையில் இருந்துதோன்றிய பிரமனுட்ம உன்னை அளந்தறிய இயலாத வரா(யி)னார். பின் அவர்கள் தொடர்ந்து பழைய உருவோடு வணங்க அவர்கட்கு கருடப்புள், அன்னப்புள் ஆகியவற்றை ஊர்தியாகக் கொண்டு படைத்தல், காத்தல் ஆகிய தொழில்களைச் செய்யுமாறு அருள் புரிந்தாய். |
| **1795.** விடக்கொருவர் நன்றென விடக்கொருவர் தீதென<br>உடற்குடை களைந்தவ ருடம்பினை மறைக்கும்<br>படக்கர்கள் பிடக்குரை படுத்துமை யொர்பாகம்<br>அடக்கினைபுறம்பய மமர்ந்தவுர வோனே. | புறம்பயம் அமர்ந்த வ–பவனே! ஊன் உண்டல் நன்றென்று கூறும் தேரர்கள், தீதென்று கூறும் சமணர்கள், உட–ல் உடையின்றித் திரியும் திகம்பரர்கள் உடலைப் போர்த்தித் திரியும் புத்தர்கள் ஆகியோர் கூறும் பிடகநூல் முத–யவற்றின் உரைகளைக் கொள்ளாது உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு விளங்குகின்றாய். |
| **1796.** கருங்கழி பொருந்திரை கரைக்குலவு முத்தம்<br>தருங்கழு மலத்திறை தமிழ்க்கிழமை ஞானன்<br>சுரும்பவிழ் புறம்பய மமர்ந்ததமிழ் வல்லார்<br>பெரும்பிணி மருங்கற வொருங்குவர் பிறப்பே. | கரிய உப்பங்கழிகள், பெரிய அலைகளால் விளங்கும் முத்துக்களைத் தந்து உலவும் கழுமலத்தார்க்குத் தலைவனும் தமிழுக்கு உரிமை பூண்டவனுமாகிய ஞானசம்பந்தன், வண்டுகள் ஒ– செய்யும் புறம்பயம் அமர்ந்த பிரானை விரும்பிப் பாடிய இப்பதிகத்தமிழை வல்லவர்கள் காலங்காலமாக வரும் பெரும் பிணியாகிய பிறப்பு நீங்கப் பெறுவர். |

## 31. திருக்கருப்பறியலூர்

(திருவிராகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 31

| | |
|---|---|
| **1797.** சுற்றமொடு பற்றவை துயக்கற வறுத்துக்<br>குற்றமில் குணங்களொடு கூடுமடி யார்கள்<br>மற்றவரை வானவர்தம் வானுலக மேற்றக்<br>கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே. | சுற்றம், பற்று ஆகியவற்றை முற்றிலும் அறுத்துக் குற்றமற்ற நல்ல குணங்களோடு கூடி விளங்கும் அடியவர்களைத் தேவர்கள் வாழும் வானுலகம் ஏற்றலைச் செய்யும் சிவபிரான் இருக்குமிடம் கருப்பறியலூர். |

| | |
|---|---|
| **1798.** வண்டணைசெய் கொன்றையது வார்சடைகண்மேலே<br>கொண்டணைசெய் கோலமது கோளரவி னோடும்<br>விண்டணைசெய் மும்மதிலும் வீழ்தரவொ ரம்பால்<br>கண்டவ னிருப்பது கருப்பறிய லூரே. | வண்டுகள் அணைதலைச் செய்கின்ற கொன்றை மலர்மாலையை நீண்ட சடைமுடிமீது அணிந்து, துன்பம் செய்யும் பாம்பு அணைதலைச் செய்யும் கோலம் பூண்டவராய், மும்மதில்களும் உடைந்து நிலத்தினை அடையுமாறு ஓரம்பால் எய்தழித்தவர் இருப்பது கருப்பறியலூர். |
| **1799.** வேதமொடு வேதியர்கள் வேள்விமுத லாகப்<br>போதினொடு போதுமலர் கொண்டுபுனை கின்ற<br>நாதனென நள்ளிருண்மு னாடுகுழை தாழும்<br>காதவ னிருப்பது கருப்பறிய லூரே. | வேதியர்கள் வேதங்களை ஓதுவதோடு வேள்வி முத–யவற்றைச் செய்து, காலம்பெற அரும்புகளையும் மலர்களையும் சாத்தி வழிபடும் தலைவராக நள்ளிருளில் அசைகின்ற குழைதாழ ஆடும் காதினை உடையவராகிய சிவபிரான் இருப்பது கருப்பறியலூர். |
| **1800.** மடம்படு மலைக்கிறைவன் மங்கையொரு பங்கன்<br>உடம்பினை விடக்கருதி நின்றமறை யோனைத்<br>தொடர்ந்தணவு காலனுயிர் காலவொரு காலால்<br>கடந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. | மலையரசனின் மகளாகிய மடப்பம் பொருந்திய உமையொருபாகனும், உடலைவிட்டு உயிர் செல்லும் காலம் வருவதை அறிந்து தொழுது நின்ற மார்க்கண்டேயன் உயிரைக் கவர வந்த காலனின் உயிர் நீங்குமாறு தனது ஒரு கா–னால் உதைத்தவனும் ஆகிய பெருமான் வீற்றிருக்கும் தலம் கருப்பறியலூர். |
| **1801.** ஒருத்தியுமை யோடுமொரு பாகமது வாய<br>நிருத்தனவ னீதியவ னித்தனெறி யாய<br>விருத்தனவன் வேதமென வங்கமவை யோதும்<br>கருத்தவ னிருப்பது கருப்பறிய லூரே. | ஒருபாகமாக ஒப்பற்றவளாகிய உமையம்மையோடு கூடி விளங்கும் கூத்தனும், நீதியின் வடிவானவனும், அழியாதவனும், நெறிகாட்டும் முதியோனும், வேதங்கள் ஆறு அங்கங்கள் ஆகியவற்றை ஓதும் தலைவனும் ஆகிய சிவபிரான் விளங்குவது கருப்பறியலூர். |
| **1802.** விண்ணவர்கள் வெற்பரசு பெற்றமகண் மெய்த்தேன்<br>பண்ணமரு மென்மொழியி னாளையணை விப்பான்<br>எண்ணிவரு காமனுடல் வேவவெரி காலும்<br>கண்ணவ னிருப்பது கருப்பறிய லூரே. | இமவான் பெற்ற மகளும், தேன்சுவை, பண்ணிசை ஆகியன போன்ற மொழியினாளும் ஆகிய உமையம்மையை, சிவபிரானது திருமேனியோடு சேர்ப்பிக்குமாறு விண்ணவர்கள் ஏவ வந்த காமனது உடல் வெந்தழியுமாறு எரிகாலும் நெற்றிக் கண்ணை உடைய சிவபிரான் எழுந்தருளியிருப்பது கருப்பறியலூர். |

| | |
|---|---|
| **1803.** ஆதியடி யைப்பணிய வப்பொடு மலர்ச்சேர்<br>சோதியொளி நற்புகை வளர்க்குவடு புக்குத்<br>தீதுசெய வந்தணையு மந்தக னரங்கக்<br>காதின னிருப்பது கருப்பறிய லூரே. | உலகின் ஆதியாய் விளங்கும் தன்னை வழிபட நீர், மலர், ஒளிதரும் விளக்கு, நறுமணப்புகை ஆகியவற்றுடன் கட்டு மலையாய் உயரமாக அமைந்த ஆலயத்தை அடைந்து வழிபட்ட மார்க்கண்டேயனின் உயிரைக் கவர வந்தணைந்த காலன் அழியுமாறு உதைத்த சிவபிரான் எழுந்தருளியிருப்பது கருப்பறியலூர். |
| **1804.** வாய்ந்தபுகழ் விண்ணவரு மண்ணவரு மஞ்சப்<br>பாய்ந்தமர்செ யுந்தொழி– லங்கைநகர் வேந்தற்<br>கேய்ந்தபுய மத்தனையு மிற்றுவிழ மேனாள்<br>காய்ந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. | புகழ் வாய்ந்த தேவர்களும் மக்களும் அஞ்சுமாறு ஓடிச் சென்று போர் உடற்றும் தொழி–னை உடைய இலங்கை மன்னனுக்கு அமைந்த இருபது தோள்களும் ஒடிந்து விழுமாறு முன்னாளில் சினந்தவனாகிய சிவபிரான் வீற்றிருப்பது கருப்பறியலூர். |
| **1805.** பரந்தது நிரந்துவரு பாய்திரைய கங்கை<br>கரந்தொர்சடை மேன்மிசை யுகந்தவளை வைத்து<br>நிரந்தர நிரந்திருவர் நேடியறி யாமல்<br>கரந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. | வரிசையாய்ப் பரவிப் பெருகி வந்த அலைவீசும் கங்கை சுவறுமாறு ஒருசடைமேல் ஏற்று அந்நதித் தெய்வமாகிய கங்கையை மகிழ்வுடன் முடிமிசை வைத்து, திருமால் பிரமர் தேடி அறியாதவாறு எப்போதும் அவர்களால் அறியப் பெறாதவனாய் ஒளிந்திருக்கும் சிவபிரான் எழுந்தருளியிருக்கும் ஊர் கருப்பறியலூர். |
| **1806.** அற்றமறை யாவமண ராதமி– புத்தர்<br>சொற்றமறி யாதவர்கள் சொன்னசொலை விட்டுக்<br>குற்றமறி யாதபெரு மான்கொகுடிக் கோயில்<br>கற்றென விருப்பது கருப்பறிய லூரே. | மறைக்கவேண்டிய உறுப்பை மறையாது ஆடையின்றித் திரியும் சமணர்களும், அறிவற்ற புத்தர்களும் சொல்லும் திறன் அறியாதவர்கள். அவர்கள் சொல்லை விடுத்துக் குற்றம் அறியாத பெருமான் கொகுடிக் கோயிலையே உறுதியானதாகக் கருதி எழுந்தருளிய ஊர் கருப்பறியலூர். |
| **1807.** நலந்தரு புனற்புக– ஞானசம் பந்தன்<br>கலந்தவர் கருப்பறியன் மேயகட வுள்ளைப்<br>பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று<br>வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே. | நன்மைகளைத் தரும் நீர்வளம் மிக்க புக–ப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், தன்னோடு உடன் கலந்தவனாய் கருப்பறிய–ல் மேவிய கடவுளைப்பாடிய பயன்தரும் தமிழ்ச் செய்யுளாகிய இப்பதிகப்பாடல்கள் பத்தையும் கற்று வன்மை உற்றோர்க்கு வினைகள் வாடுதல் எளிதாம். |

## 32. திருவையாறு

(திருவிராகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 32

| | |
|---|---|
| 1808. திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்<br>உருத்திக ழெழிற்கயிலை வெற்பிலுறை தற்கே<br>விருப்புடைய வற்புதரி ருக்குமிட மேரார்<br>மருத்திகழ் பொழிற்குலவு வண்டிருவை யாறே. | அழகிய மலைமகளோடு மிக்க ஒளிவடிவினராய சிவபிரான் வெண்மையான உருவுடைய அழகிய கயிலைமலையில் உறைவதற்கு விருப்புடைய மேன்மையர். அவர் இருக்குமிடம மணம் கமழும் பொழில் சூழ்ந்ததும் வண்மையாளர் வாழ்வதுமாய திருவையாறாகும். |
| 1809. கந்தமர வுந்துபுகை யுந்த–ல் விளக்கேர்<br>இந்திரனு ணர்ந்துபணி யெந்தையிட மெங்கும்<br>சந்தம– யுந்தருமி டைந்தபொழில் சார<br>வந்தவளி நந்தணவு வண்டிருவை யாறே. | பற்றுக்கோடாக விளங்கும் சிவபிரானைப் பொருந்துமாறு புகை இல்லாத விளக்கொளி போன்ற அச்செம்பொற் சோதியை இந்திரன் உணர்ந்து வழிபடும் இடம் எங்கும் அழகு விளங்கும் மரம் நிறைந்த பொழிலைச் சார்ந்து வரும் குளிர்ந்த காற்று தங்கிக் கலந்துள்ளதும் வள்ளன்மையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |
| 1810. கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தில்<br>கொட்டுகர மிட்டவொ– தட்டும்வகை நந்திக்<br>கிட்டமிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்<br>வட்டமதி லுட்டிகழும் வண்டிருவை யாறே. | எட்டு வடங்களால் கட்டப்பட்ட வட்டமான முழவத்தை நந்திதேவர் தம் கரங்களால் கொட்ட, அம்முழவொ–க்கும் தாளச்சதிக்கும் ஏற்ப அவர்க்குப் பெருவிருப்பம் உண்டாகுமாறு நடனமாடிய சிவபிரானது இடம், அழகிய வட்டமான மதில்களுள் விளங்குவதும், வள்ளன்மையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |
| 1811. நண்ணியொர் வடத்தினிழல் நால்வர்முனி வர்க்கன்<br>றெண்ணி– மறைப்பொருள்வி ரித்தவ ரிடஞ்சீர்த்<br>தண்ணின்ம– சந்தகிலொ டுந்திவரு பொன்னி<br>மண்ணின்மிசை வந்தணவு வண்டிருவை யாறே. | கல்லால மரநிழலை அடைந்து சனகாதியர் நால்வருக்கு அக்காலத்தில் வேதப் பொருளை விரித்துரைத்த சிவபிரானது இடம்; குளிர்ந்த சந்தனம், அகில் ஆகிய மரங்களை அடித்து வருகின்ற பொன்னியாற்றின் கரையின்மேல் வந்து பொருந்தியதும் வள்ளன்மையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |
| 1812. வென்றிமிகு தாருகன தாருயிர் மடங்கக்<br>கன்றிவரு கோபமிகு காளிகத மோவ<br>நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்<br>மன்றன்ம– யும்பொழில்கொள் வண்டிருவை யாறே. | வெற்றிகள் பல பெற்ற தாருகன் உயிர் போகுமாறு சினந்து அவனை அழித்த கோபம் மிக்க காளி தேவியின் சினம் அடங்க அவளோடு நடனமாடிய சிவபிரானது இடம், பெரிய மலர்மணம் நிறையும் பொழில்களைக் கொண்டுள்ளதும், வள்ளன்மையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |

| | | |
|---|---|---|
| **1813.** | பூதமொடு பேய்கள்பல பாடநட மாடிப்<br>பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்திக்<br>கோதைய ரிடும்ப– கொளும்பர னிடம்பூ<br>மாதவி மணங்கமழும் வண்டிருவை யாறே. | பூதங்களும் பேய்களும் பாட நடனமாடி அடிமுதல் முடிவரை பாம்புகளை அழகுடன் பூண்டு மகளிர் இடும் ப–யைக் கொள்ளும் சிவபிரானது இடம், குருக்கத்திச் செடிகளின் மணம் கமழ்வதும் வள்ளன்மையுடையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |
| **1814.** | துன்னுகுழன் மங்கையுமை நங்கைசுளி வெய்தப்<br>பின்னொரு தவஞ்செய்துழல் பிஞ்ஞகனு மங்கே<br>என்னசதி யென்றுரைசெ யங்கணனி டஞ்சீர்<br>மன்னுகொடை யாளர்பயில் வண்டிருவை யாறே. | செறிந்த கூந்தலையுடைய, உமைமங்கை சினம் கொள்ளுமாறு பின்னும் ஒரு தவத்தைச் செய்ய, ‘உமையே! நீ சினம் கொள்ளக் காரணம் யாதென’ வினவி, அவளை மணந்துறையும் கருணை நிரம்பிய கண்களை உடைய சிவபிரானது இடம், வள்ளன்மை நிரம்பிய கொடையாளர் வாழும் திருவையாறு ஆகும். |
| **1815.** | இரக்கமில்கு ணத்தொடுல கெங்குந– வெம்போர்<br>அரக்கன்முடி யத்தலை புயத்தொடும டங்கத்<br>துரக்கவிர –ற்சிறிது வைத்தவரி டஞ்சீர்<br>வரக்கருணை யாளர்பயில் வண்டிருவை யாறே. | இரக்கமற்ற குணத்தோடு உலகெங்கும் வாழ்வோரை ந–வு செய்யும் கொடிய போரைச் செய்துவந்த இராவணனின் தலைகள், தோள்கள் ஆகியன அழியுமாறு கால்விரலால் செற்ற சிவபிரானது இடம் புகழ் உண்டாகுமாறு பொருள் வழங்கும் கருணையாளர் வாழும் திருவையாறு ஆகும். |
| **1816.** | பருத்துருவ தாகிவிண் அடைந்தவனொர் பன்றிப்<br>பெருத்துருவ தாயுல கிடந்தவனு மென்றும்<br>கருத்துரு வொணாவகை நிமிர்ந்தவனி டங்கார்<br>வருத்துவகை தீர்கொள்பொழில் வண்டிருவை யாறே. | பருந்து உருவமாய் விண்ணிற்சென்று தேடிய பிரமன், பெரிய பன்றி உருவமாய் நிலத்தை அகழ்ந்து சென்று அடிமுடி தேடிய திருமால் ஆகியோர் மனங்கட்கு எட்டாதவாறு ஓங்கி உயர்ந்து நின்ற சிவபிரானது இடம், வெம்மையைப் போக்கும் பொழில்கள் சூழ்ந்ததும் வள்ளன்மை உடையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |
| **1817.** | பாக்கியம தொன்றுமில் சமண்பதகர் புத்தர்<br>சாக்கியர்க ளென்றுடல் பொதிந்துதிரி வார்தம்<br>நோக்கரிய தத்துவ னிடம்படியின் மேலால்<br>மாக்கமுற நீடுபொழில் வண்டிருவை யாறே. | நல்லூழ் இல்லாத சமண் பாதகர்கள், புத்தராகிய சாக்கியர்கள் என்று உடலைப் போர்த்தித் திரிவோரின் பார்வைக்கு அகப்படாத மெய்ப் பொருளாகிய சிவபிரானது இடம் உலகில் நீண்டு வளர்ந்த சோலைகள் சூழ்ந்ததும், வள்ளன்மையோர் வாழ்வதுமான திருவையாறு ஆகும். |

| | |
|---|---|
| **1818.** வாசம– யும்பொழில்கொள் வண்டிருவை யாற்றுள்<br>ஈசனை யெழிற்புக– மன்னவன்மெய்ஞ் ஞானப்<br>பூசுரன் உரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்<br>நேசம– பத்தரவர் நின்மலன் அடிக்கே. | மணம் நிறைந்த பொழில்களைக் கொண்டுள்ள வளமான திருவையாற்றுள் எழுந்தருளிய சிவபிரானை, அழகிய புக– மன்னனும், உண்மை ஞானம் பெற்ற அந்தணனும் ஆகிய ஞானசம்பந்தன் போற்றி உரைத்த இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர், சிவபிரான் திருவடிக்கண் மிக்க அன்புடையவராவர். |

## 33. திருநள்ளாறு

(திருவிராகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 33

| | |
|---|---|
| **1819.** ஏடும– கொன்றையர விந்துவிள வன்னி<br>மாடவல செஞ்சடையெ மைந்தனிட மென்பர்<br>கோடும– ஞாழல்குர வேறுசுர புன்னை<br>நாடும– வாசமது வீசியநள் ளாறே. | இதழ்கள் நிறைந்த கொன்றைமலர், பாம்பு, திங்கள், வன்னிஇலை ஆகியவற்றை அணிந்த செஞ்சடையை உடைய சிவபிரானது இடம் கிளைகளோடு கூடிய ஞாழல், குரவு, சுரபுன்னை முத–ய மரங்களின் மணம் வீசும் திருநள்ளாறு ஆகும். |
| **1820.** விண்ணியல் பிறைப்பிள வறைப்புனன் முடித்த<br>புண்ணிய னிருக்குமிட மென்பர்புவி தன்மேல்<br>பண்ணிய நடத்தொடிசை பாடுமடி யார்கள்<br>நண்ணிய மனத்தின்வழி பாடுசெய்நள் ளாறே. | வானில் இயங்கும் பிறைமதியோடு கங்கையையும் முடியில் சூடிய புண்ணியனாகிய சிவபிரான் இருக்குமிடம், உலகில் ஆடிப்பாடி அடியவர்கள் மனம் பொருந்த வழிபாடு செய்யும் திருநள்ளாறு ஆகும். |
| **1821.** விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்<br>துளங்கொள விருத்திய வொருத்தனிட மென்பர்<br>வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி<br>நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய்நள் ளாறே.<br><br>நளன் சிவபெருமானைப் பூசித்து வழிபட்ட செய்தி உறுதிப்படுகிறது. | விளங்கும் அணிகலன்களைப் பூண்டுள்ள மலை மங்கையை மேனியின் ஒரு பாகமாக இருத்தியுள்ள ஒப்பற்றவனாகிய சிவபிரான் இருக்கும் இடம், நளன் வந்து தங்கி நாள்தோறும் தூபதீபங்களுடன் மலர்தூவி வழிபட்டுக் க– நீங்கப் பெற்ற திருநள்ளாறு ஆகும். |
| **1822.** கொக்கரவர் கூன்மதியர் கோபர்திரு மேனிச்<br>செக்கரவர் சேருமிட மென்பர்தட மூழ்கிப்<br>புக்கரவர் விஞ்சையரும் விண்ணவரு நண்ணி<br>நக்கரவர் நாமநினை வெய்தியநள் ளாறே. | திருக்குளத்தில் மூழ்கி நாகலோகத்தவரும், வித்யாதரர்களும், தேவர்களும், சிவபெருமான் திருவைந்தெழுத்தை நினைந்து வழிபடும் திருநள்ளாறு. கொக்கிறகு அணிந்தவர். வளைந்த பிறைமதியைச் சூடியவர். கோபம் உடையவர், சிவந்த திருமேனியர் ஆகிய சிவபெருமான் சேரும் இடம் என்பர். |

| | |
|---|---|
| **1823.** நெஞ்சமிது கண்டுகொ ளுனக்கென நினைந்தார்<br>வஞ்சம தறுத்தருளு மற்றவனை வானோர்<br>அஞ்சமுது காகியவர் கைதொழ வெழுந்த<br>நஞ்சமுது செய்தவனி ருப்பிடநள் ளாறே. | மனமே! இதுவே நீ உய்தற்குரிய நெறி எனத் தம் மனத்துக்கு அறிவுறுத்தி நினைந்தவர்களின் குற்றங்களைப் போக்கியருள்பவரும், தேவர்கள் கட–டைத் தோன்றிய நஞ்சைக் கண்டு அஞ்சி, புறமுதுகிட்டு ஓடிவந்து, தன்னை வந்து கைதொழுத அளவில், அந்நஞ்சினை அமுதாக உண்டவரும் ஆகிய சிவபிரானது இருப்பிடம் திருநள்ளாறு. |
| **1824.** பாலனடி பேணவவ னாருயிர் குறைக்குங்<br>காலனுடன் மாளமு னுதைத்தவர னூராம்<br>கோலமலர் நீர்க்குட மெடுத்துமறை யாளர்<br>நா–ன்வழி நின்றுதொழில் பேணியநள் ளாறே. | மார்க்கண்டேயர் தம் திருவடிகளை வணங்கும் வேளையில் அவர் உயிரைக் கவர்தற்கு வந்த காலன் உடனே மாளுமாறு உதைத்தருளிய சிவபிரானது ஊர். மறையவர் அழகிய மலர்கள், நீர் நிரம்பிய குடங்கள் ஆகியவற்றை எடுத்து வந்து நால்வேத நெறி நின்று நீராட்டி அருச்சித்து வழிபடும் திருநள்ளாறு ஆகும். |
| **1825.** நீதியர் நெடுந்தகையர் நீண்மலையர் பாவை<br>பாதியர் பராபரர் பரம்பர ரிருக்கை<br>வேதியர்கள் வேள்வியொழி யாதுமறை நாளும்<br>ஓதியர னாமமு முணர்த்திடுநள் ளாறே. | நீதி வடிவினர். மேலான குணங்களை உடையவர். புகழ் விரிந்த கயிலைமலைக்கு உரியவர். உமையொரு கூறர். மேலானவர். அவரது இருப்பிடம் அந்தணர்கள் நாள்தோறும் வேள்வி செய்து வேதங்களை ஓதித் திருவைந்தெழுத்தின் சிறப்பை உணர்த்தி வரும் திருநள்ளாறு ஆகும். |
| **1826.** கடுத்துவ லரக்கன்மு னெருக்கிவரை தன்னை<br>எடுத்தவன் முடித்தலைகள் பத்துமிகு தோளும்<br>அடர்த்தவர் தமக்கிடம தென்பர்அளி பாட<br>நடத்தகல வைத்திரள்கள் வைகியநள் ளாறே. | சினந்து வந்த கயிலைமலையை அடைந்து அதனை எடுத்தவனாகிய வ–ய இராவணனின் முடியணிந்த தலைகள் பத்தையும், வ–மிகுந்த இருபது தோள்களையும் அடர்த்தவனாகிய சிவபிரானது இடம் வண்டுகள் இசைபாட மக்கள் நடைமுறையில் பயன்படுத்தும் மணப் பொருள்களின் மணம் நிறைந்த திருநள்ளாறு ஆகும். |
| **1827.** உயர்ந்தவ னுருக்கொடு திரிந்துலக மெல்லாம்<br>பயந்தவ னினைப்பரிய பண்பனிட மென்பர்<br>வியந்தமரர் மெச்சமலர் மல்குபொழி லெங்கும்<br>நயந்தரும வேதவொ– யார்திருநள் ளாறே. | உயர்ந்த உருவம் கொண்டு திரிந்த திருமால், உலகங்கள் அனைத்தையும் படைத்த பிரமன் ஆகியோர் நினைப்பதற்கும் அரிய பண்புகளை உடைய சிவபிரானது இடம் தேவர்கள் வியந்து போற்ற மலர்கள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்து விளங்குவதும் எல்லா இடங்களிலும் அறநெறியின் வடிவான வேதங்களின் ஒ– நிறைந்துள்ளதுமான திருநள்ளாறு என்பர். |

| | |
|---|---|
| **1828.** சிந்தைதிரு கற்சமணர் தேரர்தவ மென்னும்<br>பந்தனை யறுத்தருள நின்றபர மன்னூர்<br>மந்தமுழ வந்தரு விழாவொ–யும் வேதச்<br>சந்தம்விர விப்பொழின் முழங்கியநள் ளாறே. | மனம் மாறுபட்ட சமணர் தேரர்கள் செய்யும் தவம் என்னும் கட்டுப்பாடுகளை விலக்கி, தன்னை வழிபடும் அன்பர்க்கு அருள்புரிய நின்ற பரமனது ஊர், மந்த இசையொடு முழவம் முழங்கும் விழாக்களின் ஒ–யும், வேதவொ–யும் கலந்து நிறைந்து பொழி–ல் முழங்கும் திருநள்ளாறு ஆகும். |
| **1829.** ஆடலர வார்சடைய னாயிழைதன் னோடும்<br>நாடும– வெய்திட விருந்தவனள் ளாற்றை<br>மாடம– காழிவளர் பந்தனது செஞ்சொல்<br>பாடலுடை யாரையடை யாபழிகள் நோயே. | ஆடுகின்ற அரவினை அணிந்த சடையினனாகிய சிவபிரான் உமையம்மையோடு உலகம் மகிழ்ச்சியால் நிறையுமாறு எழுந்தருளியுள்ள திருநள்ளாற்றை, மாடவீடுகள் நிறைந்த சீகாழியில் வாழும் ஞானசம்பந்தன் பாடிய செஞ்சொற் களா–யன்ற இப்பதிகப் பாடல்களைப் பாடி வழிபடுபவரைப் பழிகளும் நோய்களும் அடையா. |

## 34. திருப்பழுவூர் (திருவிராகம்)

பண் : இந்தளம் பதிக எண் : 34

(பழு என்ற சொல் ஆலமரத்தைக் குறிக்கும்.
ஆலமரத்தைத் தலமரமாகக் கொண்டு விளங்குவதால் இத்தலம் பழுவூர் எனப்படுகிறது.)

| | |
|---|---|
| **1830.** முத்தன்மிகு மூவிலைநல் வேலன்விரி நூலன்<br>அத்தனெமை யாளுடைய வண்ண–ட மென்பர்<br>மைத்தழை பெரும்பொழி–ன் வாசமது வீசப்<br>பத்தரொடு சித்தர்பயில் கின்றபழு வூரே. | இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன். மூவிலை வடிவான வேலை உடையவன். விரிந்த வேதங்களை அருளியவன். தலைவன். எம்மை ஆளாக உடைய முதல்வன். அவனது இடம் கரிய தழைகளை உடைய பெரிய பொழி–ன் மணம் கமழ்வதும், பத்தர் சித்தர் பயில்வதுமான பழுவூர் என்பர். |
| **1831.** கோடலொடு கோங்கவை குலாவுமுடி தன்மேல்<br>ஆடரவம் வைத்தபெரு மானதிட மென்பர்<br>மாடம– சூளிகையி லேறிமட வார்கள்<br>பாடலொ– செய்யம– கின்றபழு வூரே. | வெண்காந்தள் மலரும் கோங்கமலரும் சூடிய, முடி மேல் ஆடும் அரவினையும் அணிந்துள்ள, பெருமானின் இடம், பெண்கள் மாடங்களின் உச்சியில் ஏறிப்பாடும் ஒ– நிறைந்துள்ள பழுவூர் என்பர். |
| **1832.** வா–ய புரத்திலவர் வேவவிழி செய்த<br>போ–ய வொருத்தர்புரி நூலரிட மென்பர்<br>வே–யின் விரைக்கமல மன்னமுக மாதர்<br>பாலென மிழற்றிநட மாடுபழு வூரே. | பெரிய முப்புரங்களைத் தமது இல்லமாகக் கொண்ட அவுணர் வெந்தழியுமாறு கண் விழித்த கோலத்தைக் கொண்ட ஒப்பற்றவரும், முப்புரி நூலணிந்தவருமான சிவபெருமானது இடம், வயல்களில் முளைத்த தாமரைமலர் போன்ற முகத்தினராய மகளிர் பால் போல இனிய சொற்களால் பாடல் பாடி நடம் புரியும் பழுவூர் என்பர். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **1833.** எண்ணுமொ ரெழுத்துமிசை யின்கிளவி தேர்வார் கண்ணுமுத லாயகட வுட்கிடம தென்பர் மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப் பண்ணினொ—கொண்டுபயில் கின்ற பழுவூரே. | எண், எழுத்து, இசை இவற்றை ஆராய்வார் கருதும் முதற்பொருளாய கடவுளின் இடம், மலையாள அந்தணர் உலகில் பாடியாடித் தொழுது ஏத்திப்பாடி வழிபடும் பழுவூர் என்பர். |
| **1834.** சாதல்புரி வார்சுடலை தன்னில்நட மாடும் நாதனமை யாளுடைய நம்பனிட மென்பர் வேதமொழி சொல்—மறை யாளரிறை வன்றன் பாதமவை யோதநிகழ் கின்றபழு வூரே. | இறந்தவர்களை எரிக்கும் சுடலையில் நடனமாடும் நாதனும் நம்மை ஆளாக உடைய நம்பனும் ஆகிய சிவபெருமானது இடம் மறையாளர் வேதங்களை ஓதி இறைவனின் திருவடிப் பெருமைகளைப் பாடும் பழுவூர் என்பர். |
| **1835.** மேவயரு மும்மதிலும் வெந்தழல் விளைத்து மாவயர வன்றுரிசெய் மைந்தனிட மென்பர் பூவையை மடந்தையர்கள் கொண்டுபுகழ் சொல்—ப் பாவையர்கள் கற்பொடு பொ—ந்தபழு வூரே. | தங்கள் மீது மேவுதலால் துயர் செய்வனவாகிய மும்மதில்களையும் வெந்தழலால் அழித்தும், யானையை அயருமாறு செய்து அதன் தோலை உரித்துப் போர்த்தும் வீரம் விளைவித்த சிவபிரானது இடம், நாகண வாய்ப் பறவைக்கு இறைவன் புகழைக் கற்பித்துப் பேச வைக்கும் பெண்கள் கற்பொடு விளங்கும் பழுவூர் என்பர். |
| **1836.** மந்தண மிருந்துபுரி மாமடிதன் வேள்வி சிந்தவிளை யாடுசிவ லோகனிட மென்பர் அந்தணர்க ளாகுதியி —ட்டவகின் மட்டார் பைந்தொடிநன் மாதர்சுவ டொற்றுபழு வூரே. | இரகசிய ஆலோசனைகளுடன் மாமனாகிய தக்கன் செய்த வேள்வி அழியுமாறு செய்த சிவபெருமானது இடம், அந்தணர்கள் செய்த வேள்விகளால் அகி—ன் மணம் கமழ்வதும் அணிகலன்கள் அணிந்த அழகிய பெண்களின் காலடிச் சுவடுகள் உடையதுமான பழுவூர் என்பர். |
| **1837.** உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்தன் றரக்கனை யடர்த்தருளு மப்பனிட மென்பர் குரக்கினம் விரைப்பொழி—ன் மீதுகனி யுண்டு பரக்குறு புனற்செய்விளை யாடுபழு வூரே. | வ—ய கட—டை எழுந்த நஞ்சினை மிடற்றிடை வைத்துள்ளவனும், அக்காலத்தில் இராவணனை அடர்த்து அருள் செய்த தந்தையும் ஆகிய சிவபிரானது இடம், குரங்குகள் மணமுடைய பொழி—ன் மீது ஏறிக் கனி வகைகளை உண்டு நீர் பரவிய வயல்களில் விளையாடும் பழுவூர் என்பர். |
| **1838.** நின்றநெடு மாலுமொரு நான்முகனும் நேட அன்றுதழ லாய்நிமிரு மாதியிட மென்பர் ஒன்றுமிரு மூன்றுமொரு நாலுமுணர் வார்கள் மன்றினி —ருந்துடன் மகிழ்ந்தபழு வூரே. | உயர்ந்து நின்ற திருமாலும் நான்முகனும் தேடுமாறு அன்று அழலுருவாய் ஓங்கி நிமிர்ந்த தலைவனது இடம், சிவபரம் பொருளாகிய ஒருவனையும், நால்வேதங்களையும் ஆறு அங்கங்களையும் உணர்ந்தவர்கள் பொது இடங்களி—ருந்து மகிழ்ந்துறையும் ஊராகிய பழுவூர் என்பர். |

| | |
|---|---|
| **1839.** மொட்டையம ணாதர்துகின் மூடுவிரி தேரர்<br>முட்டைகண் மொழிந்தமுனி வான்றனிட மென்பர்<br>மட்டைம– தாழையிள நீரதிசை பூகம்<br>பட்டையொடு தாறுவிரி கின்றபழு வூரே. | முண்டிதமான தலையை உடைய அமணர்களாகிய அறிவி–களும் ஆடையை விரித்து உடலைப் போர்த்த தேரர்களும் ஆகிய குற்றமுடையோர் கூறுவனவற்றை ஏலாத இறைவனது இடம், மட்டைகள் நிறைந்த தென்னையினது இளநீர்களும் கமுக மரங்களும் பாக்குப் பட்டைகளோடு கூடிய பாக்குக் குலைகளும் நிறைந்த பழுவூர் என்பர். |
| **1840.** அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும்<br>பந்தம– கின்றபழு வூரரனை யாரச்<br>சந்தமிகு ஞானமுணர் பந்தனுரை பேணி<br>வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. | மலையாள அந்தணர்கள் ஏத்தும் அருளுறவு நிறைந்த பழுவூர் இறைவனை ஞானசம்பந்தன் மனம் ஆரச் சந்த இசையால் பாடிய இப்பாடல்களை விரும்பித் தமக்கு இயன்ற இசையோடு ஏத்தித் தொழுபவர் சிவலோகம் பெறுவர். |

## 35. திருத்தென்குரங்காடுதுறை

பண் : இந்தளம் — பதிக எண் : 35

வடகுரங்காடுதுறை – காவிரியின் வடகரை. வா– வழிபட்டது.
தென்குரங்காடுதுறை – காவிரியின் தென்கரை. சுக்கிரீவன் வழிபட்டது.

| | |
|---|---|
| **1841.** பரவக் கெடும்வல் வினைபா ரிடஞ்சூழ<br>இரவிற் புறங்காட் டிடைநின் றெரியாடி<br>அரவச் சடையந் தணன்மே யவழகார்<br>குரவப் பொழில்சூழ் குரங்கா டுதுறையே. | பூதகணங்கள் சூழ இரவில் சுடுகாட்டில் நின்று எரி ஆடுபவனும், அரவணிந்த சடையினை உடைய அந்தணனும் ஆகிய சிவபிரானது குராமரப் பொழில் சூழ்ந்த குரங்காடுதுறையைப் பரவ வ–ய வினைகள் கெட்டொழியும். |
| **1842.** விண்டார் புரமூன்று மெரித்த விமலன்<br>இண்டார் புறங்காட் டிடைநின்றெரி யாடி<br>வண்டார் கருமென் குழன்மங் கையொர்பாகம்<br>கொண்டா னகர்போல் குரங்கா டுதுறையே. | தன்னோடு பகை பூண்டவராகிய அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தழித்த விமலனும், இண்டங்கொடிகள் படர்ந்த சுடுகாட்டில் நின்று எரியாடுபவனும், வண்டுகள் மொய்க்கும் மெல்–ய கூந்தலை உடையவளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனுமாகிய சிவபிரானது நகர் குரங்காடுதுறை. |

| | |
|---|---|
| **1843.** நிறைவில் புறங்காட் டிடைநே ரிழையோடும்<br>இறைவில் லெரியான் மழுவேந் திநின்றாடி<br>மறையின் னொ—வா னவர்தா னவரேத்தும்<br>குறைவில் லவனூர் குரங்கா டுதுறையே. | "இனி வரும் பிணத்துக்கு இங்கு இடமில்லை" என்று நிறைதல் இல்லாத சுடுகாட்டுள் நின்று அழிவற்ற எரியைக் கையில் உடையவனாய் மழு ஏந்தி உமையம்மையோடு ஆடுபவனும், வேத ஒ—யால் தேவர், அசுரர் ஆகியோரால் தொழப்படும் குறைவற்றவனும் ஆகிய சிவபிரானது ஊர், குரங்காடுதுறை. |
| **1844.** விழிக்குந் நுதன்மே லொருவெண் பிறைசூடித்<br>தெழிக்கும் புறங்காட் டிடைச்சேர்ந் தெரியாடிப்<br>பழிக்கும் பரிசே ப—தேர்ந் தவனூர்பொன்<br>கொழிக்கும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. | விழியை உடைய நெற்றியின்மேல் தலையின் முன் பாகத்தில் பிறைசூடி, ஒ—க்கும் சுடுகாட்டை அடைந்து எரியாடி, எல்லோரும் பழித்துரைக்கப் ப—யேற்றுத் திரியும் சிவபிரானது ஊர் பொன் கொழிக்கும் காவிரி நீரால் சூழப்பட்ட குரங்காடு துறையாகும். |
| **1845.** நீறார் தருமே னியனெற் றியொர்கண்ணன்<br>ஏறார் கொடியெம் மிறையீண் டெரியாடி<br>ஆறார் சடையந் தணனா யிழையாளோர்<br>கூறா னகர்போல் குரங்கா டுதுறையே. | நீறு பூசிய மேனியன். நெற்றிக் கண்ணன். விடைக் கொடியை உடைய எம் தலைவன். மிகுதியான தீயில் நின்று ஆடுபவன். கங்கை சூடிய சடையினை உடைய கருணையாளன். உமையொரு பாகன். அவனது நகர் குரங்காடுதுறை. |
| **1846.** நளிரும் மலர்க்கொன் றையுநா றுகரந்தைத்<br>துளிருஞ் சுலவிச் சுடுகாட் டெரியாடி<br>மிளிரும் மரவார்த் தவன்மே வியகோயில்<br>குளிரும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. | குளிர்ந்த கொன்றைமலர், மணம் வீசும் சிவகரந்தைத் தளிர் ஆகியவற்றைக் கலந்தணிந்து சுடுகாட்டில் எரியில் நின்றாடும் அழகனாய், விளங்கும் பாம்பை இடையில் கட்டியவன் ஆகிய சிவபிரான் மேவிய கோயிலைக் கொண்டது குளிர்ந்த நீரால் சூழப்பட்ட குரங்காடுதுறை. |
| **1847.** பழகும் வினைதீர்ப் பவன்பார்ப் பதியோடும்<br>முழவங் குழன்மொந் தைமுழங் கெரியாடும்<br>அழகன் னயின்மூ விலைவேல் வலனேந்தும்<br>குழகன் னகர்போல் குரங்காடு துறையே. | பிறவி தோறும் பழகிய வினைகளைத் தீர்ப்பவன். பார்வதியோடு முழவு, குழல், மொந்தை ஒ—க்க இடுகாட்டுள் முழங்கும் தீயில் நின்று எரியாடும் அழகன். கூரிய மூவிலை வேலை வெற்றிக்கு அடையாளமாக ஏந்தும் இளையோன் ஆகிய சிவபிரானது நகர் குரங்காடுதுறை. |

| | |
|---|---|
| **1848.** வரையார்த் தெடுத்தவ் வரக்கன் வ–யொல்க<br>நிரையார் விரலா னெரித்திட் டவனூராம்<br>கரையார்ந் திழிகா விரிக்கோ லக்கரைமேல்<br>குரையார் பொழில்சூழ் குரங்காடு துறையே. | கயிலைமலையை ஆரவாரித்துப் பெயர்த்த இராவணனின் வ–மை கெடுமாறு கா–லமைந்த விரலால் நெரித்தவனாகிய சிவபிரானது ஊர், கரையைப் பொருந்தி ஓடிவரும் காவிரியாற்றின் அழகிய கரைமேல் ஒ– பொருந்திய பொழில் சூழ்ந்திலங்கும் குரங்காடு துறையாகும். |
| **1849.** நெடியா னொடுநான் முகனுந் நினைவொண்ணாப்<br>படியா கியபண் டங்கனின் றெரியாடி<br>செடியார் தலையேந் தியசெங்கண் வெள்ளேற்றின்<br>கொடியா னகர்போல் குரங்கா டுதுறையே. | திருமால், பிரமர்கள் நினையவும் ஒண்ணாத இயல்பினன். பாண்டரங்கக் கூத்தை ஆடியவன். எரியில் நின்று ஆடுபவன். முடைநாற்றம் வீசும் தலையோட்டை ஏந்தியவன். சிவந்த கண்களை உடைய திருமாலாகிய வெள்விடையைக் கொடியாக உடையவன். அவனது நகர் குரங்காடுதுறை. |
| **1850.** துவரா டையர்வே டமலாச் சமண்கையர்<br>கவர்வாய் மொழிகா தல்செய்யா தவனூராம்<br>நவையார் மணிபொன் னகில்சந் தனமுந்திக்<br>குவையார் கரைசேர் குரங்கா டுதுறையே. | துவராடை அணிந்த புத்தர்களும், வேடமல்லாத வேடம் பூண்ட சமணர்களாகிய கீழோரும் பேசும் ஐய உரைகளை விரும்பாத சிவபிரானது ஊர், மலைகளி–ருந்து சிதைந்து வந்த மணிகள், பொன், அகில், சந்தனம் ஆகியவற்றை உந்திவந்து குவியலாகக் கரையில் சேர்க்கும் காவிரியின் கரையில் உள்ள குரங்காடு துறையாம். |
| **1851.** நல்லார் பயில்காழி யுண்ஞான சம்பந்தன்<br>கொல்லே றுடையான் குரங்கா டுதுறைமேல்<br>சொல்லார் தமிழ்மாலை பத்துந் தொழுதேத்த<br>வல்லா ரவர்வா னவரோ டுறைவாரே. | நல்லவர்கள் வாழும் காழியுள் தோன்றிய ஞானசம்பந்தன் கொல்லேற்றை ஊர்தியாக உடைய சிவபிரான் எழுந்தருளிய குரங்காடு துறைமேல் பாடிய தமிழ்மாலை பத்தையும் பாடித் தொழ வல்லவர், வானவரோடு உறைவர். |

## 36. திருவிரும்பூளை (வினாவுரை)

பண் : இந்தளம் (ஆலங்குடி) பதிக எண் : 36

| | |
|---|---|
| **1852.** சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்<br>வாரார் முலைமங் கையொடும் முடனாகி<br>ஏராரி ரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>காரார் கடனஞ் சமுதுண் டகருத்தே.<br><br>பூளைச் செடியை தல மரமாகக் கொள்வதால் இரும்பூளை எனப்படுகிறது. | சீர் பொருந்திய இறைவன் திருவடிகளையே பணியும் அடியவர்களே! கச்சணிந்த தனங்களைக் கொண்ட உமையம்மையோடும் உடனாய் அழகிய இரும்பூளையை இடமாகக் கொண்டுறையும் ஈசன் கரிய கட–ல் எழுந்த நஞ்சினை அமுதாக உண்டதற்குக் காரணம் யாதோ ? இதனைச் சொல்வீராக. |

| பாடல் | பொருள் |
|---|---|
| **1853.** தொழலார் கழலே தொழுதொண் டர்கள்சொல்லீர்<br>குழலார் மொழிக்கோல் வளையோ டுடனாகி<br>எழிலா ரிரும்பூ ளைஇடங் கொண்டவீசன்<br>கழல்தான் கரிகா னிடையா டுகருத்தே. | வணங்குதற்குரிய திருவடிகளையே தொழும் தொண்டர்களே! வேய்ங்குழல் போன்ற இனிய மொழியையும் திரண்ட வளையல்களையும் உடைய அம்மையோடு உடனாய் அழகிய இரும்பூளையை இடமாகக் கொண்டுள்ள ஈசன் தன் திருவடிகளால் கரிந்த சுடுகாட்டில் ஆடுதற்குக் காரணம் யாதோ? சொல்வீராக. |
| **1854.** அன்பா லடிகை தொழுவீ ரறியீரே<br>மின்போன் மருங்குன் மடவா ளொடுமேவி<br>இன்பா யிரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>பொன்போற் சடையிற் புனல்வைத்த பொருளே. | அன்பால் இறைவன் திருவடிகளைக் கைகளால் தொழும் அடியவர்களே! மின்னல் போன்ற இடையினை உடைய உமைமடவாளோடு கூடி மகிழ்வாய் இரும்பூளையை இடமாகக் கொண்டுறையும் ஈசன் பொன் போன்ற தன் சடைமீது கங்கையை வைத்துள்ளதன் கருத்து யாது? அறிவீர்களோ! |
| **1855.** நச்சித் தொழுவீர் கணமக் கிதுசொல்லீர்<br>கச்சிப் பொ–கா மக்கொடி யுடன்கூடி<br>இச்சித் திரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>உச்சித் தலையிற் ப–கொண் டுழலூணே. | சிவபிரானை விரும்பித்தொழும் அடியவர்களே! காஞ்சிமாநகரில் கோயில் கொண்டு விளங்கும் காமாட்சியாகிய வல்–க்கொடியுடன் கூடி இச்சை கொண்டு இரும்பூளையை இடமாகக் கொண்டுள்ள ஈசன் தலையோட்டில் ப–யேற்று உணவின் பொருட்டு உழலக் காரணம் யாதோ? நமக்குக் கூறுவீராக. |
| **1856.** சுற்றார்ந் தடியே தொழுவீ ரிதுசொல்லீர்<br>நற்றாழ் குழனங் கையொடும் முடனாகி<br>எற்றே யிரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>புற்றா டரவோ டென்புபூண் டபொருளே. | சூழ்ந்தும், நிறைந்தும், சிவபிரான் திருவடிகளையே தொழும் அன்பர்களே! அழகியதாய்த் தொங்குகின்ற கூந்தலை உடைய உமையம்மையோடும் உடனாய் இரும்பூளையை இடமாகக் கொண்டுள்ள ஈசன் புற்றில் வாழும் ஆடுகின்ற பாம்பையும் எலும்பையும் அணிகலனாகப் பூண்டுள்ளதன் காரணம் யாதோ? சொல்வீராக. |
| **1857.** தோடார் மலர்தூய்த் தொழுதொண் டர்கள்சொல்லீர்<br>சேடார் குழற்சே யிழையோ டுடனாகி<br>ஈடாய் இரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>காடார் கடுவே டுவனா னகருத்தே. | இதழ் நிறைந்த மலர்களைத் தூவித்தொழும் தொண்டர்களே! திரண்ட கூந்தலையும் செவ்விய அணிகலன்களையும் கொண்டுள்ள அம்மையோடும் உடனாய், பெருமையோடு இரும்பூளையில் உறையும் ஈசன் காட்டில் வாழும் கடுமையான வேடனாய் வந்தது ஏனோ? சொல்வீராக. |

| | |
|---|---|
| **1858.** ஒருக்கும் மனத்தன் பருள்ளீ ரிதுசொல்லீர்<br>பருக்கை மதவே ழுமுரித் துமையோடும்<br>இருக்கை இரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>அரக்கன் னுரந்தீர்த் தருளாக் கியவாறே. | ஒருமைப்பாடு கொண்ட மனத்தினராகிய அன்பர் கூட்டத்தைச் சார்ந்த அடியவர்களே! நீண்ட கையையும் மதத்தையும் உடைய யானையை உரித்து உமையம்மையோடு இரும்பூளையை இடமாகக் கொண்ட ஈசன் இராவணனின் வ–மையை அழித்துப் பின் அருள் செய்தது ஏனோ ? சொல்வீராக. |
| **1859.** துயரா யினநீங் கித்தொழுந் தொண்டர்சொல்லீர்<br>கயலார் கருங்கண் ணியொடும் முடனாகி<br>இயல்பா யிரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>முயல்வா ரிருவர்க் கெரியா கியமொய்ம்பே. | துன்பம் நீங்கித் தொழும் தொண்டர்களே! கயல் போன்ற கரிய கண்ணினளாகிய அம்மையோடும் உடனாய் இயல்பான இடமாக இரும்பூளையைக் கொண்டுறையும் ஈசன் காணமுயன்ற திருமால், பிரமர்க்கு அரியனாய் எரியுருவில் நின்ற ஆற்றல் எத்தகையதோ ? சொல்வீராக. |
| **1860.** துணைநன் மலர்தூய்த் தொழுந்தொண் டர்கள்சொல்லீர்<br>பணைமென் முலைப்பார்ப் பதியோ டுடனாகி<br>இணையில் –ரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>அணைவில் சமண்சாக் கியமாக் கியவாறே. | திருவடிக்கு ஒப்புடைய மலர்களைத் தூவித் தொழும் தொண்டர்களே! பருத்த தன பாரங்களைக் கொண்டுள்ள பார்வதி தேவியோடு உடனாய் இணையற்ற தலமான இரும்பூளையை இடமாகக் கொண்டுள்ள ஈசன், அணைந்து வழிபடுதல் இல்லாத சமண பௌத்த மதங்களைப் படைத்தது ஏனோ ? கூறுவீராக. |
| **1861.** எந்தை யிரும்பூ ளையிடங் கொண்டவீசன்<br>சந்தம் பயில்சண் பையுண்ஞா னசம்பந்தன்<br>செந்தண் டமிழ்செப் பியபத் திவைவல்லார்<br>பந்தம் மறுத்தோங் குவர்பான் மையினாலே. | எம் தந்தையும் இரும்பூளையை இடமாகக் கொண்டுள்ள ஈசனும் ஆகிய பெருமானை சந்தக்கவி பாடும் சண்பைப் பதிக்குரிய ஞானசம்பந்தன் செவ்விய தண்டமிழால் செப்பிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர் மலபந்தம் நீங்கி உயர்ந்த தன்மையைப் பெறுவர். |

## 37. திருமறைக்காடு (வேதாரண்யம்)

பண் : இந்தளம் | பதிக எண் : 37

| | |
|---|---|
| **1862.** சதுரம் மறைதான் றுதிசெய் துவணங்கும்<br>மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா<br>இதுநன் கிறைவைத் தருள்செய் கவெனக்குன்<br>கதவந் திருக்காப்புக் கொள்ளுங் கருத்தாலே.<br><br>"எனக்கு அருள் செய்க" என்று இவ்வாறு வேண்டுவது ஆசிரியர் திருவாக்கில் வேறெங்கும் காண்டல் அரிது. | இனிய பொழில்கள் சூழ்ந்த திருமறைக்காட்டில் வேதங்கள் நான்கும் துதி செய்து வணங்க வீற்றிருக்கும் வ–யோனே! உன் திருக்கோயில் கதவுகள் முன் உள்ளவாறே திருக்காப்புக் கொள்ளும் கருத்தோடு வினவிய இக்கேள்விகளுக்கு எனக்கு நல்ல வண்ணம் விடை அருள்வாயாக. |

| | |
|---|---|
| **1863.** சங்கந் தரளம் மவைதான் கரைக்கெற்றும்<br>வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா<br>மங்கை யுமைபா கமுமா கவிதென்கொல்<br>கங்கை சடைமே லடைவித் தகருத்தே. | சங்குகளையும், முத்துக்களையும் அலைக் கரங்களால் கரையில் எறியும் மரக்கலங்களை உடைய கடல் சூழ்ந்த மறைக்காட்டில் உறையும் மைந்தனே! உமைமங்கை ஒருபாகமாக இருக்க நீ கங்கையைச் சடைமீது கொண்டுள்ள கருத்தின் காரணம் யாதோ? |
| **1864.** குரவங் குருக்கத் திகள்புன் னைகண்ஞாழல்<br>மருவும் பொழில்சூழ் மறைக் காட் டுறைமைந்தா<br>சிரமும் மலருந் திகழ்செஞ் சடைதன்மேல்<br>அரவம் மதியோ டடைவித் தலழகே. | குரா, குருக்கத்தி, புன்னை, பு–நகக்கொன்றை ஆகியன மருவிய பொழில் சூழ்ந்த மறைக்காட்டில் உறையும் மைந்தனே! தலைமாலையும் மலர்மாலையும் திகழும் உன் செஞ்சடைமேல் தம்முள் பகை உடைய பாம்பையும் மதியையும் உடன் வைத்துள்ளதற்குக் காரணம் யாதோ? |
| **1865.** படர்செம் பவளத் தொடுபன் மலர்முத்தம்<br>மடலம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா<br>உடலம் முமைபங் கமதாகியு மென்கொல்<br>கடனஞ் சமுதா வதுவுண் டகருத்தே. | படர்ந்த செம்பவளக் கொடிகள், பல்வகையான மலர்கள், முத்துக்கள், மடல்கள் அவிழ்ந்த மலர்ப் பொழில்கள் ஆகியன சூழ்ந்து விளங்கும் மறைக்காட்டில் உறையும் மைந்தனே! உன் திருமேனியில் ஒரு பாகமாக உமையம்மையைக் கொண்டவனாயிருந்தும் கட–ல் எழுந்த நஞ்சினை அமுதம்போல உண்டதன் கருத்து யாதோ? |
| **1866.** வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட<br>தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா<br>ஏனோர் தொழுதேத் தவிருந் தநீயென்கொல்<br>கானார் கடுவே டுவனா னகருத்தே. | தேவர்கள், வேதங்களை உணர்ந்த பெரிய தவத்தினர் ஆகியோர் வழிபட்ட தேன் நிறைந்த பொழில் சூழ்ந்த திருமறைக் காட்டில் உறையும் செல்வனே! தன்னையல்லாத ஏனையோர் அனைவராலும் தொழுது போற்றப்பெறும் பெருமையோடு இருந்த நீ காட்டுள் வாழும் வேடுவனாய் உருக்கொண்ட காரணம் யாதோ? |
| **1867.** பலகா லங்கள்வே தங்கள்பா தங்கள்போற்றி<br>மலரால் வழிபாடு செய்மா மறைக்காடா<br>உலகே முடையாய் கடைதோறு முன்னென்கொல்<br>தலைசேர் ப–கொண் டதிலுண் டதுதானே. | பலகாலங்கள் வேதங்கள் பாதங்களைப் போற்றி மலரால் வழிபாடு செய்யும் மறைக்காட்டுள் எழுந்தருளி விளங்கும் இறைவனே! ஏழுலகங்களையும் தன் உடைமையாகக் கொண்டுள்ளவனே! நீ பலர் வீடுகளுக்கும் சென்று தலையோட்டில் ப–யேற்று அதில் உண்டருளியதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக. |

| | |
|---|---|
| **1868.** வேலா வலயத் தயலே மிளிர்வெய்தும்<br>சேலார் திருமா மறைக்காட் டுறைசெல்வா<br>மாலோ டயனிந் திரனஞ் சமுனென்கொல்<br>காலார் சிலைக்கா மனைக்காய்ந் தகருத்தே. | விளங்கும் சேல்மீன்களைக் கொண்டுள்ள கட–ன் அயலே உள்ள திருமா மறைக்காட்டில் உறையும் செல்வனே! முற்காலத்தில் திருமால், பிரமன், இந்திரன் ஆகியோர் அஞ்சுமாறு கா–ல் வைத்து மிதித்துக் கணை பூட்டும் வில்லை ஏந்திய காமனை எரித்ததன் கருத்து யாதோ ? |
| **1869.** கலங்கொள் கடலோ தமுலாவு கரைமேல்<br>**வலங்கொள் பவர்**வாழ்த் திசைக்கும் மறைக்காடா<br>இலங்கை யுடையா னடர்ப்பட் டிடரெய்த<br>அலங்கல் விரலூன் றியருள் செய்தவாறே.<br><br>திருக்கோயில் வலம் மட்டும் பிற தலங்களில் நிகழும். இங்கு திருமறைக்காட்டையே வலம் வருதல் வேண்டும். | மரக்கலங்களைக் கொண்டுள்ள கட–ன் ஓதம் உலாவுகின்ற கரைமீது வலம் வருபவர் வாழ்த்தி இசைத்துப் போற்றுமாறு விளங்கும் மறைக்காட்டில் விளங்கும் பெருமானே! இலங்கை மன்னன் இராவணன் அடர்க்கப்பட்டு இடர் எய்துமாறு அசையும் உன் திருவடி விரலால் ஊன்றிப் பின் அவனுக்கு அருள் செய்த காரணம் யாதோ ? |
| **1870.** கோனென் றுபல்கோ டியுருத் திரர்போற்றும்<br>தேனம் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா<br>ஏனங் கழுகா னவருன் னைமுனென்கொல்<br>வானந் தலமண் டியுங்கண் டிலாவாறே. | பலகோடி உருத்திரர்கள் தலைவன் என்று போற்றும், தேன் பொருந்திய அழகிய பொழில்கள் சூழ்ந்த மறைக்காட்டில் உறையும் செல்வனே! பன்றியும் கழுகும் ஆன திருமால், பிரமர் உன்னை முற்காலத்தே நிலத்தை அகழ்ந்து சென்றும், வானத்தில் பறந்து சென்றும் கண்டிலர். அதற்குக் காரணம் யாதோ ? |
| **1871.** வேதம் பலவோ மம்வியந் தடிபோற்ற<br>ஓதம் முலவும் மறைக்காட் டிலுறைவாய்<br>ஏதில் சமண்சாக் கியர்வாக் கிவையென்கொல்<br>ஆத ரொடுதா மலர்தூற் றியவாறே. | வேதங்கள் பலவும் வேள்விகள் செய்து வியந்து உன் திருவடிகளைப் போற்ற, கடல்நீர் உலவும் மறைக்காட்டில் உறைகின்ற பெருமானே! வைதிக நெறியினர்க்கு அயலவராகிய சமணர் சாக்கியர் களாகிய அறிவற்றவர்கள் உரைகளால் உம்மை அலர் தூற்றுதற்குக் காரணம் யாதோ ? |
| **1872.** காழிந் நகரான் கலைஞான சம்பந்தன்<br>வாழிம் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த<br>ஏழின் னிசைமாலை யீரைந் திவைவல்லார்<br>வாழி யுலகோர் தொழவா னடைவாரே. | காழி நகரில் தோன்றிய கலைகளில் வல்ல ஞானசம்பந்தன் வாழ்த்துதற்குரிய மறைக்காட்டில் உறையும் ஈசனைத் தரிசிக்கும் பேறு வாய்த்து அறிவித்த ஏழிசை பொருந்திய இப்பதிகப் பாமாலையை ஓதி வழிபட வல்லவர், வாழும் இவ்வுலகோர் தொழ வான் அடைவர். |

## 38. திருச்சாய்க்காடு

பண் : இந்தளம் | பதிக எண் : 38

**1873.** நித்த லுந்நிய மஞ்செய்து நீர்மலர் தூவிச்
சித்த மொன்றவல் லார்க்கரு ளுஞ்சிவன் கோயில்
மத்த யானையின் கோடும்வண் பீ–யும் வாரித்
தத்துநீர்ப் பொன்னி சாகர மேவுசாய்க் காடே.

நாள்தோறும் நியமமாக நீரையும் மலரையும் தூவி மனம் ஒன்றி வழிபடுவார்க்கு அருள்புரியும் சிவபிரான் உறையும் கோயில், மதயானைகளின் தந்தங்களையும், மயி–னது வளமான பீ–களையும் வாரித் தவழ்ந்துவரும் நீரினை உடைய காவிரியாறு கட–டைக் கலக்கும் இடத்தே அமைந்துள்ள திருச்சாய்க்காடு ஆகும்.

---

**1874.** பண்ட லைக்கொண்டு பூதங்கள் பாடநின் றாடும்
வெண்ட லைக்கருங் காடுறை வேதியன் கோயில்
கொண்ட லைத்திகழ் பேரிமு ழங்கக் குலாவித்
தண்ட லைத்தட மாமயி லாடுசாய்க் காடே.

பண்ணிசையோடு பூதங்கள் பாடநின்று ஆடுகின்றவனும் வெண்மையான தலையோடு களை உடைய கரிய காட்டில் உறைபவனும் ஆகிய வேதியன் கோயில், மேகங்களைப் போலப் பேரிகைகள் முழங்கச் சோலைகளில் பெரிய மயில்கள் குலாவி ஆடும் திருச்சாய்க்காடு ஆகும்.

---

**1875.** நாறு கூவிள நாகிள வெண்மதி யத்தோ
டாறு சூடு மமரர் பிரானுறை கோயில்
ஊறு தேங்கனி மாங்கனி யோங்கிய சோலைத்
தாறு தண்கத –ப்புதன் மேவுசாய்க் காடே.

மணம் வீசும் வில்வம், மிக இளையபிறை ஆகியவற்றோடு கங்கையையும் முடியில் சூடும் அமரர் தலைவனாகிய சிவபிரான் உறையும் கோயில், சுவை ஊறுகின்ற தெங்கின் காய் மாங்கனி ஆகியன ஓங்கிய சோலைகளும், குளிர்ந்த பழத்தாறுகளை உடைய வாழைப்புதர்களும் பொருந்திய சாய்க்காடு ஆகும்.

---

**1876.** வரங்கள் வண்புகழ் மன்னிய வெந்தை மருவார்
புரங்கள் மூன்றும் பொடிபட வெய்தவன் கோயில்
இரங்க லோசையு மீட்டிய சரக்கொடு மீண்டித்
தரங்க நீள்கழித் தண்கரை வைகுசாய்க் காடே.

வரங்கள் பலவும் தரும் வளமையான புகழ் பொருந்திய எந்தையும், பகைவரின் முப்புரங்கள் பொடியாகுமாறு கணைஎய்து அழித்தவனும் ஆகிய சிவபிரான் உறையும் கோயில், நெய்தல் நிலத்துக்குரிய இரங்கல் ஓசையைக் கொண்டதும் வணிகர்கள் சேர்த்த சரக்குகளைக் கொண்டுவந்து சேர்ப்பதும் ஆகிய கட–னது நீண்ட கழியின் குளிர்ந்த கரையில் அமைந்த திருச்சாய்க்காடு ஆகும்.

| | |
|---|---|
| **1877.** ஏழை மார்கடை தோறு மிடுப–க் கென்று<br>கூழை வாளர வாட்டும் பிரானுறை கோயில்<br>மாழை யொண்கண் வளைக்கை நுளைச்சியர் வண்பூந்<br>தாழை வெண்மடற் கொய்துகொண் டாடுசாய்க் காடே. | மகளிர் வாழும் இல்லங்கள் தோறும் சென்று அவர்கள் இடும் ப–க்காகக் கூழையான ஒளிபொருந்திய பாம்பை ஆடச் செய்து மகிழ்விக்கும் பரமன் உறையும் கோயில், பொன் போன்ற ஒண் கண்ணையும், வளையணிந்த கையையும் உடைய நுளைச்சியர் வளமையான தாழை மரத்தில் பூத்துள்ள மலரின் வெண் மடல்களைக் கொய்து மகிழும் திருச்சாய்க்காடு ஆகும். |
| **1878.** துங்க வானவர் சூழ்கடல் தாங்கடை போதில்<br>அங்கொர் நீழ லளித்தவெம் மானுறை கோயில்<br>வங்க மங்கொளி ரிப்பியு முத்து மணியுஞ்<br>சங்கும் வாரித் தடங்கட லுந்துசாய்க் காடே. | உயர்வுடைய தேவர்கள், உலகைச் சூழ்ந்துள்ள கடலைத் தாங்கள் கடையும் பொழுது எழுந்த நஞ்சினை உண்டு அவர்கட்கு அருள் நிழல் தந்த எம்தலைவன் உறையும் கோயில், பெரிதான கடல், மரக்கலங்களையும், அதன்கண் ஒளிர்கின்ற இப்பி, முத்து, மணி, சங்கு ஆகியவற்றையும் வாரி வந்து சேர்க்கும் திருச்சாய்க்காடு ஆகும். |
| **1879.** வேத நாவினர் வெண்பளிங் கின்குழைக் காதர்<br>ஓத நஞ்சணி கண்ட ருகந்துறை கோயில்<br>மாதர் வண்டுதன் காதல்வண் டாடிய புன்னைத்<br>தாது கண்டு பொழின்மறைந் தூடுசாய்க் காடே. | வேதங்களை அருளிய நாவினர். வெண்மையான பளிங்கால் இயன்ற குழையணிந்த காதினர். கட–டை எழுந்த நஞ்சினை நிறுத்திய கண்டத்தை உடையவர். அத்தகைய சிவபிரானார் எழுந்தருளிய கோயில், பெண் வண்டு தன்மீது காதல் உடைய ஆண் வண்டோடு புன்னை மலர்த் தாதில் ஆடி மகிழ்ந்து பின் பொழி–டை மறைந்து ஊடும் சாய்க்காடாகும். |
| **1880.** இருக்கு நீள்வரை பற்றி யடர்த்தன் றெடுத்த<br>அரக்கன் ஆகம் நெரித்தருள் செய்தவன் கோயில்<br>மருக்கு லாவிய மல்–கை சண்பகம் வண்பூந்<br>தருக்கு லாவிய தண்பொழி னீடுசாய்க் காடே. | தான்வீற்றிருக்கும் நீண்ட கயிலைமலையைப் பற்றிப் பெயர்த்து எடுத்த இராவணனின் உடலை நெரித்துப் பின் அருள்செய்த சிவபிரானது கோயில், மணம் பொருந்திய மல்–கை, சண்பகம் ஆகிய வளமான பூக்களைக் கொண்ட மரங்கள் விளங்கும் தண்பொழில்களை உடைய சாய்க்காடாகும். |
| **1881.** மா– னோடயன் காண்டற் கரியவர் வாய்ந்த<br>வேலை யார்விட முண்டவர் மேவிய கோயில்<br>சே– னேர்விழி யார்மயி லாலச் செருந்தி<br>காலை யேகன கம்மலர் கின்றசாய்க் காடே. | திருமால் பிரமர்களால் காணுதற்கு அரியவனும் பொருந்திய கட–டை எழுந்த விடத்தை உண்டவனும் ஆகிய சிவபெருமான் உறையும் கோயில், சேல்மீன் போன்ற கண்களைக் கொண்ட மகளிர் வாழ்வதும், தோகையை விரித்து மயில்கள் ஆடுவதும் செருந்திமரங்கள் செம்பொன் போலக் காலையில் மலர்ந்து மணம் பரப்புவதுமான சாய்க்காடு ஆகும். |

| | |
|---|---|
| **1882.** ஊத்தை வாய்ச்சமண் கையர்கள் சாக்கியர்க் கென்றும்<br>ஆத்த மாக வறிவரி தாயவன் கோயில்<br>வாய்த்த மாளிகை சூழ்தரு வண்புகார் மாடே<br>பூத்த வாவிகள் சூழ்ந்து பொ–ந்தசாய்க் காடே. | அழுக்கேறிய வாயினை உடைய சமணர்களாகிய கீழ் மக்களுக்கும் சாக்கியர்களுக்கும் எக்காலத்தும் அன்புடையனாத–ன்றி அறிதற்கும் அரிதாயிருப் பவனது கோயில், ஏற்புடைய மாளிகைகள் சூழ்ந்த புகார் நகரின் அருகே பூத்துள்ள மலர் வாவிகள் சூழ்ந்து பொ–யும் சாய்க்காடாகும். |
| **1883.** ஏனை யோர்புகழ்ந் தேத்திய வெந்தைசாய்க் காட்டை<br>ஞான சம்பந்தன் காழியர் கோனவில் பத்தும்<br>ஊன மின்றி யுரைசெய வல்லவர் தாம்போய்<br>வான நாடினி தாள்வரிம் மானிலத் தோரே. | சமண பௌத்தர்கள் அன்றி ஏனையோர் புகழ்ந்து ஏத்தும் எம் தந்தையாகிய இறைவர் விளங்கும் சாய்க்காட்டை, காழியர் கோனாகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் குற்றமற்ற வகையில் உரைசெய்து வழிபட வல்ல இம்மாநிலத்தோர் வான நாடு சென்று இனிதாக அரசாளுவர். |

## 39. திருக்ஷேத்திரக்கோவை

**(திருப்பதிக் கோவை)**

**பண் : இந்தளம்** **பதிக எண் : 39**

| | |
|---|---|
| **1884.** ஆரூர்தில்லை யம்பலம் வல்லந்நல்லம்<br>வடகச்சியு மச்சிறு பாக்கநல்ல<br>கூரூர்குட வாயில் குடந்தைவெண்ணி<br>கடல்சூழ்கழிப் பாலைதென் கோடிபீடார்<br>நீரூர்வய னின்றியூர் குன்றியூருங்<br>குருகாவையூர் நாரையூர் நீடுகானப்<br>பேரூர்நன் னீள்வய னெய்த்தானமும்<br>பிதற்றாய்பிறை சூடிதன் பேரிடமே. | பிறைசூடிய பெருமானின் பெருந்தலங்களாய ஆரூர், தில்லையம்பலம், வல்லம், நல்லம், வடகச்சி, அச்சிறுபாக்கம், குடவாயில், குடந்தை, வெண்ணி, கழிப்பாலை, நின்றியூர், குன்றியூர், குருகாவையூர், நாரையூர், கானப்பேர், நெய்த்தானம் முதலான தலங்களின் பெயர்களைப் பலகாலும் சொல்–க் கொண்டிரு. உனக்குப் பெரும் பயன் விளையும். |
| **1885.** அண்ணாமலை யீங்கோயு மத்திமுத்தா<br>றகலாமுது குன்றங் கொடுங்குன்றமுங்<br>கண்ணார்கழுக் குன்றங் கயிலை கோணம்<br>பயில்கற்குடி காளத்தி வாட்போக்கியும்<br>பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையான்<br>பரங்குன்றம் பருப்பதம் பேணிநின்றே<br>எண்ணாயிர வும்பகலு<br>மிடும்பைக்கட னீந்தலாங் காரணமே. | அண்ணாமலை, ஈங்கோய்மலை, முதுகுன்றம், கொடுங்குன்றம், திருக்கழுக்குன்றம், கயிலை, கற்குடி, காளத்தி, வாட்போக்கி, திருப்பரங்குன்றம், பருப்பதம் முதலான தலங்களை விரும்பி இரவும் பகலும் எண்ணின் துன்பக்கடலை நீந்தற்குக் காரணமாய் அமையும். |

| | |
|---|---|
| **1886.** அட்டானமென் றோதிய நா–ரண்டு<br>மழகன்னுறை காவனைத் துந்துறைகள்<br>எட்டாந்திரு மூர்த்தியின் காடொன்பதுங்<br>குளமூன்றுங் களமஞ்சும் பாடிநான்கும்<br>மட்டார்குழ லாண்மலை மங்கைபங்கன்<br>மதிக்கும்மிட மாகிய பாழிமூன்றும்<br>சிட்டானவன் பாசூரென் றேவிரும்பா<br>யரும்பாவங்க ளாயின தேய்ந்தறவே. | திருவதிகை, விற்குடி, திருக்கோவிலூர், குறுக்கை, பரசலூர், வழுவூர், கடவூர், கண்டியூர், ஆகிய அட்ட (எட்டு) வீரட்டத்தலங்களையும், அழகனாகிய அப்பெருமான் உறையும் மாந்துறை, ஆலந்துறை என்று துறைகளாக முடியும் எட்டுத்தலங்களையும், சாய்க்காடு, ஆலங்காடு என்று காடாக முடியும் ஒன்பது தலங்களையும் கடிக்குளம் போன்று குளம் என்று முடியும் மூன்று தலங்களையும், திருவஞ்சைக்களம் என்று களமாக முடியும் ஐந்து தலங்களையும், மாறன்பாடி போன்று பாடி என்று முடியும் நான்கு தலங்களையும், அரதைப்பெரும்பாழி போன்று பாழி என்று முடியும் மூன்று தலங்களையும், பாசூரையும் அரிய பாவங்கள் தேய்ந்தொழிதற்பொருட்டு விரும்புவாயாக. |
| **1887.** அறப்பள்ளி யகத்தியான் பள்ளிவெள்ளைப்<br>பொடிப்பூசி ஆறணிவானமர் காட்டுப்பள்ளி<br>சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன்பள்ளி<br>திருநனிபள்ளி சீர் மகேந்திரத்துப்<br>பிறப்பில்லவன் பள்ளிவெள் ளச்சடையான்<br>விரும்பும்மிடைப் பள்ளிவண் சக்கரமால்<br>உறைப்பாலடி போற்றக் கொடுத்தபள்ளி<br>யுணராய்மட நெஞ்சமே யுன்னிநின்றே. | நெஞ்சமே கோயில் எனப் பொருள் தரும் பள்ளி என முடிவன வாய கொல்– அறைப்பள்ளி அகத்தியான் பள்ளி, சிறப்பள்ளி, சிராப்பள்ளி, செம்பொன்பள்ளி, காட்டுப்பள்ளி, நனிப்பள்ளி, மகேந்திரப்பள்ளி, இடைப்பள்ளி முதலான தலங்களை உன்னி உணர்வாயாக. உனக்குப் பயன்பல விளையும். |
| **1888.** ஆறைவட மாகற லம்பரையா<br>றணியார்பெரு வேளூர் விளமர்தெங்கூர்<br>சேறைதுலை புகலூ ரகலா<br>திவைகாத–த் தானவன் சேர்பதியே.<br><br>(இப்பதிகத்தில் மூன்று பாடல்கள் நிறைவடையவில்லை) | சிவபிரான் காத–த்து உறையும் பதிகள் பழையாறை மாகறல் பெருவேளூர், விளமர், தெங்கூர், சேறை, புகலூர் முதலான தலங்களாகும். அவற்றைச் சென்று தொழுவீர்களாக. |
| **1889.** மனவஞ்சர்மற் றோடமுன் மாதராரு<br>மதிகூர் திருக்கூட– லாலவாயும்<br>இனவஞ்சொ –லாவிடை மாமருது<br>மிரும்பைப்பதி மாகாளம் வெற்றியூரும்<br>கனமஞ்சின மால்விடை யான்விரும்பும்<br>கருகாவூர் நல்லூர் பெரும்பு–யூர்<br>தனமென்சொ–ற் றஞ்சமென் றேநினைமின்<br>றவமாமல மாயின தானறுமே. | வஞ்சமனத்தவர் போயகல மதிகூர் மாதர்கள் வாழும் ஆலவாய் இடைமருது, திருவிரும்பை மாகாளம், வெற்றியூர், கருகாவூர், நல்லூர், பெரும்பு–யூர் முதலான தலங்கள் நமக்குப் புக–டமாவன என நினைமின். அதுவே தவமாகும். மும்மலங்களும் அற்று ஒழியும். |

| | |
|---|---|
| **1890.** மாட்டூர்மடப் பாச்சி லாச்சிரம<br>மயிண்டீச்சரம் வாதவூர் வாரணாசி<br>காட்டூர்கடம் பூர்படம் பக்கங்கொட்டுங்<br>கடலொற்றியூர் மற்றுறை யூரவையும்<br>கோட்டூர்திரு வாமாத்தூர் கோழம்பமுங்<br>கொடுங்கோ வலூர்திருக் குணவாயில் | மாட்டூர், பாச்சில் ஆச்சிராமம், அயிண்டீச்சரம், வாதவூர், வாரணாசி, காட்டூர், கடம்பூர், ஒற்றியூர், உறையூர், கோட்டூர், ஆமாத்தூர், கோழம்பம், கோவலூர், குணவாயில் முத–யன இறைவன் உறையும் சிறந்த தலங்கள். |
| **1891.** குலாவுதிங்கட்சடையான் குளிரும் பரிதிநியமம்<br>போற்றூரடி யார்வழி பாடொழியாத்தென்<br>புறம்பயம் பூவணம் பூழியூரும்<br>காற்றூர்வரை யன்றெடுத் தான்முடிதோ<br>ணெரித்தானுறை கோயிலென்றென் றுநீகருதே. | திருப்பரிதிநியமம், திருப்புறம்பயம், பூவணம், பூழியூர், காற்றூர் முதலான தலங்கள் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் முடி, தோள் ஆகியவற்றை நெரித்த சிவபிரான் உறையும் கோயில்கள் என நீ கருதுக. |
| **1892.** நெற்குன்றமோத் தூர்நிறை நீர்மருக<br>னெடுவாயில் குறும்பலா நீடுதிரு<br>நற்குன்றம் வலம்புரந் நாகேச்சுர<br>நளிர்சோலையுஞ் சேனைமா காளம்வாய்மூர்<br>கற்குன்றமொன் றேந்தி மழைதடுத்த<br>கடல்வண்ணனு மாமல ரோனுங்காணாச்<br>சொற்கென்றுந் தொலைவிலா தானுறையுங்<br>குடமூக்கென்று சொல்–க் குலாவுமினே. | நெற்குன்றம், ஓத்தூர், நெடுவாயில், குறும்பலா, நற்குன்றம், வலம்புரம், நாகேச்சுரம், மாகாளம், வாய்மூர், கற்குன்றம், குடமூக்கு முத–ய தலங்களை எண்ணி மகிழ்வாயாக. |
| **1893.** குத்தங்குடி வேதி குடிபுனல்சூழ்<br>குருந்தங்குடி தேவன் குடிமருவும்<br>அத்தங்குடி தண்டிரு வண்குடியு<br>மலம்புஞ்சலந் தன்சடை வைத்துகந்த<br>நித்தன்னிம லனுமை யோடுங்கூட<br>நெடுங்கால முறைவிட மென்று சொல்லாப்<br>புத்தர்புறங் கூறிய புன்சமணர்<br>நெடும்பொய் களைவிட்டு நினைந்துய்மினே. | குத்தங்குடி, வேதிகுடி, குருந்தங்குடி, திருந்துதேவன்குடி, அத்தங்குடி, இருவண்குடி முதலான குடி என முடியும் தலங்கள் சிவபிரான் உமையம்மையாருடன் கூடி நெடுங்காலம் வீற்றிருப்பன என்று எண்ணி வழிபடாப் பௌத்தர் சமணர் கூறும் பொய்மொழி களை விட்டு அத்தலங்களை நினைந்துய்மின். |
| **1894.** அம்மானை யருந்தவ மாகிநின்ற<br>வமரர்பெரு மான்பதியான வுன்னிக்<br>கொம்மமாமலர்ச் சோலை குலாவுகொச்சைக்<br>கிறைவன் சிவஞானசம் பந்தன் சொன்ன<br>இம்மாலையீ ரைந்து மிருநிலத்தி<br>–ரவும்பக லுந்நினைந் தேத்திநின்று<br>விம்மாவெரு வாவிரும்பும் மடியார்<br>விதியார் பிரியார் சிவன்சேவடிக்கே. | தலைவனும் அரிய தவவடிவாக விளங்கும் தேவர் முதல்வனும் ஆகிய சிவபெருமான் உறையும் திருத்தலங்களை நினைந்து கொய்யத் தக்கனவான நறுமண மலர்களைக் கொண்டுள்ள சோலைகள் செறிந்த கொச்சையம் பதிக்குத் தலைவனாகிய சிவஞானசம்பந்தன் பாடிய இப்பதிகப்பாமாலையை நிலவுலகில் இரவும் பகலும் நினைந்து விம்மியும் அஞ்சியும் விரும்பிப் போற்றும் அடியவர் நிறைந்த நல்லூழ் உடையவராவர். மறுமையில் சிவன் சேவடிகளைப் பிரியாதவராவர். |

## சீகாமரம்

இது மருதப் பெரும்பண்ணில் செய்திறம் என்ற பெயருடையது. நான்காம் திறத்தின் புறநிலைப் பிரிவாகிய 82 எண்பெற்ற திறமாகும். இப்பண்ணை மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 2:40-53, அப்பர் 4:19-20, சுந்தரர் 86-89, ஆக 20 பதிகங்கள். இதற்கு கட்டளை 2 இதன் சுவை அவலம், மருட்கை எனப்படும். இது இரவுப்பண். சம்பந்தர், மண்புகார் வான்புகுவர், மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை என்ற பூம்பாவைப் பதிகம், கண்காட்டு நுதலானும் என்ற சிறப்புடைய திருவெண்காட்டுப் பதிகம், பிழையுளன பொறுத்திடுவர் என்று சுந்தரர், திருவெண்பாக்கத்தில் வேண்டிய பதிகம் என்பன இப்பண்ணுக்குரியன. இதற்குரிய ஒப்புமை இராகம் நாதநாமக்கிரியை. தேவார ஆசிரியர்களும் பிறரும் சீகாமரம் என்ற பெயரைக் காமரம் என்றே குறிப்பிடக் காண்கிறோம். இது 15ஆவது மேளம் மாயமாளவ கௌளத்தில் இருந்து கிளைத்தது. இது நவசந்தியில் மேற்குச் சந்திக்குரிய பண்ணாகும்.

*சீகாமரம் (இலக்கணம்)*

சீரிற் காயமர்ந் திலங்கி நிற்கும்
சீர்கா யமர்வே சீகா மரமாய்
ஆறுதல் தருவதற்கு அமையும் பண்ணாகும்.

*பொருள்*

சீர்களில் காய்ச்சீர்கள் விளக்கமாக நிற்கும். காய்ச்சீர்கள் இன்றியும் பலசீர்கள் விரவியும் வரும். இங்ஙனம் காய்ச்சீர்கள் பொருந்தியும் அவை இன்றியும் உயிர்கள் அமைதி பெறும் இயல்பினை விளக்குதற்கு அமையும் பண் சீகாமரம் என்னும் பண்ணாகும்.

### 40. திருப்பிரமபுரம்

**பண் : சீகாமரம்** — **பதிக எண் : 40**

**1895.** எம்பிரா னெனக்கமுதம் ஆவானுந் தன்னடைந்தார்
தம்பிரா னாவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபா– கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே.

எமக்குத் தலைவன், எனக்கு அமுதம் போல இனிப்பவன், தன்னை அடைபவர்களுக்குத் தம்பிரான், தழல் ஏந்திய கையான், அசையும் இயல்புடைய பெரிய யானையை உரித்துப் போர்த்த காபா–, இத்தகையோன் மணம் உலாவும் பொழில் சூழ்ந்த பிரமபுரத்தில் உறையும் வானவனே யாவான்.

**1896.** தாமென்றும் மனந்தளராத் தகுதியரா யுலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினான்
ஓமென்று மறைபயில்வார் பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் னுடலெரியக் கனல்சேர்ந்த கண்ணானே.

உலகில் வாழ்வோர்க்கு அடைக்கலம் தருபவன் இவனேயாம் என்று எக்காலத்தும் மனம் தளராத தன்மையராய்த் தன்னைச் சரண் அடைந்தவர்களைக் காக்கும் கருணையாளன் யாவன் எனில் ஓம் எனக்கூறி நான்மறைகளைப் பயிலும் அந்தணர் வாழும் பிரமபுரத்தில் விளங்குகின்ற காமனின் உடலை எரியச் செய்த கண்ணுதலோனே யாவான்.

| | |
|---|---|
| **1897.** நன்னெஞ்சே யுனையிரந்தேன் நம்பெருமான் றிருவடியே<br>உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்<br>அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை யெப்போதும்<br>பன்னஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே. | நல்ல நெஞ்சே! உன்னை இரந்து வேண்டு கின்றேன். நீ கடைத்தேற நினைவாயானால் நமது தலைவனாகிய சிவபிரான் திருவடிகளையே எக்காலத்தும் சிந்தித்திரு. வாயே! அன்னங்கள் பயிலும் பிரமபுரத்தில் விளங்கும் அரிய அமுது போல்வான் புகழைப் பேசு. கண்ணே! அவன் நம் மேல் பரிவு கொண்டு அருள்செய்ய அவனையே பார். |
| **1898.** சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்குங்<br>கோனாளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையுந்<br>தேனாளும் பொழிற்பிரம புரத்துறையுந் தீவணனை<br>நாநாளு நன்னியமஞ் செய்தவன்சீர் நவின்றேத்தே. | மனமே! சாகும் நாள் இன்றி, இனிது வாழவும் மனத்தில் எழும் ஐயங்களைப் போக்கவும் வல்லனாய தலைவனின் திருவடிகளிலேயே நாள்தோறும் நல்ல மலர்களை எவ்வளவிலேனும் தூவி வருவாயாக. நாவே, தேன் நிறைந்த பொழில் சூழ்ந்த பிரமபுரத்துறையும் தீவண்ணனை நல்ல நியமத்துடன் இருந்து அவன் புகழை நவின்று ஏத்துவாயாக. |
| **1899.** கண்ணுதலான் வெண்ணீற்றான் கமழ்சடையான் விடையேறி<br>பெண்ணிதமா முருவத்தான் பிஞ்ஞகன்பேர் பலவுடையான்<br>விண்ணுதலாத் தோன்றியசீர்ப் பிரமபுரந் தொழவிரும்பி<br>எண்ணுதலாஞ் செல்வத்தை யியல்பாக வறிந்தோமே. | நுதல் விழியனும், வெண்ணீறு அணிந்தவனும் மணம் கமழும் சடையினனும், விடையேறி வருபவனும், இனிய பெண்ணோடு கூடிய உருவத்தினனும், பிஞ்ஞகனும், பேர்பல உடையவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய விண்ணோரால் கருதப்படுமாறு தோன்றிய புகழ் உடைய பிரமபுரத்தைத் தொழ விரும்பும் நாம் இயல்பாக அறிந்துள்ள புண்ணியம் பெற்றுள்ளோம். |
| **1900.** எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்<br>கிங்கேயென் றருள்புரியும் எம்பெருமா னெருதேறிக்<br>கொங்கேயு மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்<br>சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் றன்மைகளே. | தேன் பொருந்திய மலர்ச்சோலை சூழ்ந்து தண்ணிதாக விளங்கும் பிரமபுரத்துள் சங்கு போன்ற வெண்ணிற மேனியனாய் விளங்கும் சங்கரன்தன் தன்மைகள், தன் அடியவர் அவ்விடத்து எப்பிறப்பை எய்தினாலும் எம்பெருமானாகிய அவ்விறைவன் எருதேறிச் சென்று அவற்றுக்கு ஏற்ற வகையில் அங்கங்கே தோன்றி இங்கே என அருள் புரியும் செயல்களாகும். |

| | |
|---|---|
| **1901.** சிலையதுவெஞ் சிலையாகத் திரிபுரமூன் றெரிசெய்த<br>இலைநுனைவேற் றடக்கையன் ஏந்திழையா<br>ளொருகூறன்<br>அலைபுனல்சூழ் பிரமபுரத் தருமணியை யடிபணிந்தால்<br>நிலையுடைய பெருஞ்செல்வம் நீடுலகிற் பெறலாமே. | மேருமலையைக் கொடிய வில்லாகக் கொண்டு திரிபுரங்களை எரித்து அழித்தவனும், மூவிலை வடிவாகக் கூரிய முனையோடு அமைந்த வேல் ஏந்திய நீண்ட கையினனும், உமையொரு பாகனும் ஆகிய கடல் சூழ்ந்திலங்கும் பிரமபுரத்துள் அரிய மணி போல் வானாய் விளங்கும் சிவபிரான் திருவடிகளை வணங்கினால் வானோர்க்குயர்ந்த உலகில் வீடுபேறாகிய பெருஞ்செல்வம் எய்தலாம். |
| **1902.** எரித்தமயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத்<br>தோளொடுதாள்<br>நெரித்தருளுஞ் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினான்<br>உரித்தவரித் தோலுடையான் உறைபிரம<br>புரந்தன்னைத்<br>தரித்தமன மெப்போதும் பெறுவார்தாந் தக்காரே. | எரிபோலும் தலைமயிரை உடைய, வாள் ஏந்திய அரக்கனாகிய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க, அவன் தோளையும், தாளையும் நெரித்தருளிய சிவமூர்த்தியும், நீறணிந்த மேனியனும், யானையை உரித்து அதன் தோலைப் போர்வையாகக் கொண்டவனும் ஆகிய சிவபிரானது பிரமபுரத்தை எண்ணுவார் எப்போதும் தக்கார் என்னும் பெயரைப் பெறுவர். |
| **1903.** கரியானும் நான்முகனுங் காணாமைக் கனலுருவாய்<br>அரியானாம் பரமேட்டி அரவஞ்சே ரகலத்தான்<br>றெரியாதா னிருந்துறையுந் திகழ்பிரம புரஞ்சேர<br>உரியார்தா மேழுலகும் உடனாள வுரியாரே. | திருமால் பிரமர் காணாதவாறு எரிஉருவாய் நீண்டு அவர்க்கு அரியன் ஆனவனும், மேலான நிலையினனும், பாம்பணிந்த மார்பினனும், காணுதற்குத் தெரியாதவனும் ஆகிய பெருமான் எழுந்தருளியுள்ள பிரமபுரத்தைச் சேர்ந்தார் ஏழு உலகங்களையும் அரசாளுதற்கு உரிமை உடையோராவர். |
| **1904.** உடையிலார் சீவரத்தார் தன்பெருமை யுணர்வரியான்<br>முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாந்<br>திருவுருவன்<br>பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்துறையுஞ்<br>சடையிலார் வெண்பிறையான் தாள்பணிவார் தக்காரே. | உடையற்றவர்களும் சீவரம் அணிந்தவர்களுமாய சமணர் புத்தர்களால் தன்பெருமைகளை உணர இயலாதவனும், நாற்றம் பொருந்திய வெண்ணிறத் தலையோட்டைக் கையில் ஏந்திய மூர்த்தி எனப்பெறும் திருவுருவினனும், சடையில் பிறையணிந்தவனும் ஆகிய பெண்வண்டுகளோடு ஆண் வண்டுகள் கூடி விளையாடும் பொழில் சூழ்ந்த பிரமபுரத்துப் பெருமானின் திருவடிகளைப் பணிவோர் தக்கார் எனப் பெயர் பெறுவர். |

| | |
|---|---|
| **1905.** தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்<br>கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை<br>முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்<br>பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. | தன்னை அடைந்த அன்பர்க்கு இன்பங்கள் தருபவனும் மெய்ப்பொருளாக விளங்குவோனும், கல்லா—யன்ற மதில் சூழ்ந்த பிரமபுரத்துள் விளங்கிக் காப்பவனும் ஆகிய பெருமானின் அருளை மிக இளைய காலத்திலேயே பெற்ற ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்கள், பொன்னையும் போகங்கள் பலவற்றையும் அடைந்து புண்ணியர் ஆவர். |

## 41. திருச்சாய்க்காடு

பண் : சீகாமரம்      பதிக எண் : 41

| | |
|---|---|
| **1906.** மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்<br>கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்<br>விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்<br>தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே. | வெண்மாடங்களைக் கொண்ட, நீண்ட வீதியினை உடைய தண்மையான புகாரில் விளங்கும் சாய்க்காட்டுள் மேவிய எம் தலைவன் தாளைச் சார்ந்து அவன் புகழைக் கற்றவரும் கேட்டவரும் நில உலகில் பிறவார். பேரின்ப உலகம் பெறுவர். மனச்சோர்வாலும் பசியாலும் இடுக்கண் அடையார். நோய் உறார். |
| **1907.** போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும் பூம்புகார்ச்<br>சாய்க்காடே பதியாக வுடையானும் விடையானும்<br>வாய்க்காடு முதுமரமே யிடமாக வந்தடைந்த<br>பேய்க்காடல் புரிந்தானும் பெரியோர்கள் பெருமானே. | இடுகாட்டுள் மறைந்து உறைதலை விரும்புபவனும், பூம்புகாரை அடுத்துள்ள சாய்க்காட்டைப் பதியாக உடையவனும், விடையூர்தியனும், காட்டில் உள்ள முதிய ஆலமரத்தை இடமாகக்கொண்ட பேயின் பாடலுக்கு ஏற்ப ஆடுபவனும் ஆகிய சிவபிரான் பெரியோர்களின் தலைவன் ஆவான். |
| **1908.** நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்<br>சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே<br>பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப<br>நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. | நல்ல நெஞ்சமே! நீ நாள்தோறும் அவனை நினைவாயாக. சாகும் நாளையும் உயிர்வாழும் நாளையும் யார் அறிவார்கள் ஆத—ன் சாய்க்காட்டை அடைந்து அங்குள்ள எம்பெருமானுக்கு நாளும் பூக்களைத் தலையில் சுமந்து சென்று அருச்சித்தும் செவிகளால் அவன் புகழ் மொழிகளைக் கேட்டும், நாள்தோறும் நாவினால் அவன் திருப்பெயரை நவின்றேத்தியும் செயற்படின் நல்வினைப் பயன் பெறலாம். |

| | |
|---|---|
| **1909.** கட்டலர்த்த மலர்தூவிக் கைதொழுமின் பொன்னியன்ற<br>தட்டலர்த்த பூஞ்செருந்தி கோங்கமருந் தாழ்பொழில்வாய்<br>மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்குங் காவிரிப்பூம்<br>பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே. | பொன்தட்டுப் போல மலர்ந்த செருந்தி, கோங்கு முத—ய மரங்கள் பொருந்திய தாழ்ந்த பொழி—டத்துத் தாழைமலர்கள் மொட்டுக்களை விரித்து மணம் பரப்பும் காவிரிப்பூம்பட்டினத்துச் சாய்க்காட்டுப் பரமேட்டியின் பாதங்களை வண்டுகளால் கட்டவிழ்க்கப்பட்ட மலர்களைத் தூவிக் கைகூப்பி வணங்குமின். |
| **1910.** கோங்கன்ன குவிமுலையாள் கொழும்பணைத்தோட் கொடியிடையைப்<br>பாங்கென்ன வைத்துகந்தான் படர்சடைமேற் பான்மதியந்<br>தாங்கினான் பூம்புகார்ச் சாய்க்காட்டான் தாள்நிழற்கீழ்<br>ஓங்கினா ரோங்கினா ரெனவுரைக்கு முலகமே. | கோங்கரும்பு போன்ற தனங்களையும், செழுமையான மூங்கில் போன்ற தோள்களையும், கொடி போன்ற இடையினையும் உடைய உமையம்மையைத் தன் பாகமாக வைத்து மகிழ்பவனும், தன் திருமுடிமேல் பால்போன்ற வெள்ளிய மதியைச் சூடியவனுமான பூம்புகார்ச் சாய்க்காட்டு இறைவனின் திருவடி நீழ—ல் ஓங்கி நின்றவரே ஓங்கினார் எனப்படுவார். |
| **1911.** சாந்தாக நீறணிந்தான் சாய்க்காட்டான் காமனைமுன்<br>தீந்தாக மெரிகொளுவச் செற்றுகந்தான் றிருமுடிமேல்<br>ஓய்ந்தார மதிசூடி யொளிதிகழு மலைமகடோள்<br>தோய்ந்தாகம் பாகமா வுடையானும் விடையானே. | சந்தனம் போலத் திருநீற்றை உடல் முழுவதும் அணிந்தவன். சாய்க்காட்டில் உறைபவன். காமனின் உடல் தீயுமாறு எரிகொளுவச் செய்தவன். திருமுடியில் நுணுகிய மதியைச் சூடியவன். ஒளிதிகழும் மலைமகள் தோளைத் தோய்த்து அவளைப் பாகமாகக் கொண்டவன். விடையூர்தியன். |
| **1912.** மங்குல்தோய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்<br>சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்<br>கொங்குலா வரிவண்டின் னிசைபாடு மலர்கொன்றைத்<br>தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே. | மேகங்களைத் தோயுமாறு உயர்ந்து விளங்கும் அழகியமாட வீடுகளின் வெண்ணிற ஒளியை உடைய வீதிகளைக் கொண்டதும், சங்குகளைக் கரையில் கொண்டுவந்து சேர்க்கும் அலைகளின் ஆரவாரம் கேட்பதுமாய சாய்க்காட்டு இறைவன், தேன் உண்ணவந்த வரிவண்டுகள் இன்னிசை பாடும் மலர் மாலைகளை அணிந்தவன். அப்பெருமானை அடைந்த அடியவர்க்குச் சுவர்க்கங்கள் பொருள் எனத் தோன்றா. |

| | |
|---|---|
| **1913.** தொடலரிய தொருகணையாற் புரமூன்று மெரியுண்ணப்<br>படவரவத் தெழிலாரம் பூண்டான்பண் டரக்கனையுந்<br>தடவரையாற் றடவரைத்தோ ளூன்றினான் சாய்க்காட்டை<br>இடவகையா வடைவோமென் றெண்ணுவார்க் கிடரிலையே. | தொடற்கரிய வெம்மையையுடைய ஒரு கணையால் முப்புரங்களையும் எரியுண்ணச் செய்தவனும் படப்பாம்பை அணிகலனாகப் பூண்டவனும், முற்காலத்தே இராவணனைக் கயிலை மலையால் பெரிய தோள்களை ஊன்றி நெரித்தவனும் ஆகிய சிவபிரானது சாய்க்காட்டைச் சிறந்த ஒரு தலம் எனக் கருதி அடைவோர்க்கு இடர் இல்லை. |
| **1914.** வையநீ ரேற்றானு மலருறையு நான்முகனும்<br>ஐயன்மா ரிருவர்க்கு மளப்பரிதா லவன்பெருமை<br>தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்<br>தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேறோமே. | இவ்வுலகை நீர்வார்த்துத்தர ஏற்ற திருமாலும், தாமரை மலரில் உறையும் நான்முகனும் ஆகிய இரு தலைமைத் தேவர்க்கும் அவன் பெருமை அளந்து காணுதற்கு அரியதாகும். மகளிர் பாடும் இசைப்பாடல் ஓவாதே கேட்கும் சாய்க்காட்டு எம்பெருமானைத் தெய்வமாக விரும்பாதார் ஞானம் பெறார். |
| **1915.** குறங்காட்டு நால்விர–ற் கோவணத்துக் கோலாவிப்போய்<br>அறங்காட்டுஞ் சமணருஞ் சாக்கியரு மலர்தூற்றுந்<br>திறங்காட்டல் கேளாதே தெளிவுடையீர் சென்றடைமின்<br>புறங்காட்டி லாடலான் பூம்புகார்ச் சாய்க்காடே. | தொடைகளில் அடையும் நால்விரல் கோவண ஆடையோடு உலாவித் திரிந்து அறம் போலக் கூறும் சமண சாக்கியர்கள் பழித்துரை கூறும் திறங்களைக் கேளாது, சுடுகாட்டில் நடனம் ஆடும் பூம்புகார்ச் சாய்க்காட்டு இறைவன் திருவடிகளைச் சென்று அடைவீர்களாக. |
| **1916.** நொம்பைந்து புடைத்தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்<br>அம்பந்தும் வரிக்கழலு மரவஞ்செய் பூங்காழிச்<br>சம்பந்தன் றமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும்<br>எம்பந்த மெனக்கருதி யேத்துவார்க் கிடர்கெடுமே. | பந்து நோகுமாறு அதனைப் புடைத்துக் கொண்டு பாதங்களில் அணிந்த நூபுரம் ஒ–க்க அழகிய பந்துகளும் கழற்சிக்காய்களும் கொண்டு விளையாடி மகளிர் ஆரவாரிக்கும் அழகிய காழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய தமிழ்ப் பாடல்கள் பத்தையும் எமக்குப் பற்றுக்கோடு எனக் கருதிச் சாய்க்காட்டு இறைவனை ஏத்துவார்க்கு இடர்கள் கெடும். |

## 42. திருவாக்கூர்த் தான்றோன்றி மாடம்

பண் : சீகாமரம் (திருவை ஆக்கும் ஊர் திருவாக்கூர்) பதிக எண் : 42

1917. அக்கிருந்த வாரமும் ஆடரவும் ஆமையும்
தொக்கிருந்த மார்பினான் தோலுடையான் வெண்ணீற்றான்
புக்கிருந்த தொல்கோயில் பொய்யிலா மெய்ந்நெறிக்கே
தக்கிருந்தார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே.

என்புமாலை, ஆடும் பாம்பு, ஆமை ஒடு ஆகியனவற்றை ஒருசேர அணிந்த மார்பினனும், திருவெண்ணீறு அணிந்தவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள பழமையான கோயில், பொய்யில்லாத மெய்ந்நெறியாகிய சைவ சமயத்தைச் சார்ந்தொழுகுவார் பலர் வாழும் ஆக்கூரில் விளங்கும் தான்தோன்றி மாடம் ஆகும்.

ஊரின் பெயர் – ஆக்கூர்.
கோயி–ன் பெயர் – தான்தோன்றி மாடம்.
சிறப்பு– நாயனார் அவதாரத்தலம்.

1918. நீரார வார்சடையான் நீறுடையா னேறுடையான்
காரார்பூங் கொன்றையினான் காத–த்த தொல்கோயில்
கூரார்ல் வாய்நிறையக் கொண்டயலே கோட்டகத்தில்
தாராமல் காக்கூரிற் றான்றோன்றி மாடமே.

கங்கை தங்கிய நீண்ட சடையினனும், திருநீறு அணிந்தவனும், விடையேற்றை ஊர்தியாகக் கொண்டவனும், கார் காலத்தே மலரும் கொன்றை மலரைச் சூடியவனும் ஆகிய சிவபெருமான் விரும்பிய பழமையான கோயில் நாரைப் பறவைகள் மிகுதியான ஆரல்மீன்களை வாய் நிறைய எடுத்துக்கொண்டு நீர்க்கரைகளில் மிகுதியாக வாழும் ஆக்கூரில் விளங்கும் தான் தோன்றி மாடமாகும்.

சுயம்பு – தான்தோன்றி. உளியால் செதுக்கப்படாமல் தாமே முளைத்து உருவானது.
மாடக்கோயில் – யானை ஏற முடியாதபடி படிக்கட்டுகள் வைத்துக் கட்டப் பெற்றதாகும்.

1919. வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் தொல்கோயில்
வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே.

ஒளி பொருந்திய கண்களையும், சிவந்த பவளம் போன்ற வாயினையும் உடையவனாய் இமவான் மகளாகிய பார்வதியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு அவள் தோளைத் தழுவிய சிவபெருமானது பழமையான கோயில், வள்ளன்மை உடைய, பிறர்க்கு உபகாரியாக விளங்கும் ஊக்கமுடைய வேளாளர்கள் மிகுந்து வாழும் ஆக்கூரில் விளங்கும் தான்தோன்றி மாடம் ஆகும்.

| | | |
|---|---|---|
| 1920. | கொங்குசேர் தண்கொன்றை மாலையினான் கூற்றடரப்<br>பொங்கினான் பொங்கொளிசேர் வெண்ணீற்றான்<br>பூங்கோயில்<br>அங்கமா றோடும் அருமறைகள் ஐவேள்வி<br>தங்கினார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | தேன் பொருந்திய குளிர்ந்த கொன்றை மாலையைச் சூடியவனும் இயமனை வருத்தச் சினந்தவனும் ஒளிமிக்க திருவெண்ணீற்றை அணிந்தவனும் ஆகிய சிவபெருமானது அழகிய கோயில், அரிய நான்கு வேதங்களோடு ஆறு அங்கங்களையும் கற்றுணர்ந்து ஐவகை வேள்விகளையும் புரியும் அந்தணர்கள் வாழும் ஆக்கூரில் உள்ள தான் தோன்றி மாடமாகும். |
| 1921. | வீக்கினா னாடரவம் வீழ்ந்தழிந்தார் வெண்டலையென்<br>பாக்கினான் பலகலன்கள் ஆதரித்துப் பாகம்பெண்<br>ஆக்கினான் தொல்கோயில் ஆம்பலபூம் பொய்கைபுடை<br>தாக்கினார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | ஆடுகின்ற பாம்பைக் கச்சாகக் கட்டியவரும், இறந்து அழிந்தவருடைய வெண்டலைகளையும், என்புகளையும் பல அணிகலன்களாக அணிந்தவரும், விரும்பி ஒருபாகமாகப் பெண்ணைக் கொண்டவரும் ஆகிய சிவபிரானது பழமையான கோயில் ஆம்பல் பூக்கள் மலரும் அழகிய பொய்கைக்கரையை உயர்த்திக் கட்டிய உழவர்கள் வாழும் ஆக்கூரில் உள்ள தான் தோன்றிமாடம் ஆகும். |
| 1922. | பண்ணொளிசேர் நான்மறையான் பாட—னோ<br>டாட—னான்<br>கண்ணொளிசேர் நெற்றியினான் காத—த்த<br>தொல்கோயில்<br>விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால்<br>வெண்மாடம்<br>தண்ணொளிசேர் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | பண்ணமைதியும், அறிவொளியும் அமைந்த நான்கு வேதங்களையும் அருளியவனும், பாட—லும் ஆட—லும் வல்லவனும், ஒளிசெறிந்த கண்பொருந்திய நெற்றியினனும் ஆகிய சிவபெருமான் காத—த்த பழமையான கோயில், வானவெளியில் உலாவும் பெரிய மதியொளி சேர்தலால் வெண்மையான மாடவீடுகள் குளிர்ந்த ஒளியைப் பெறும் ஆக்கூரில் விளங்கும் தான் தோன்றிமாடம் ஆகும். |
| 1923. | வீங்கினார் மும்மதிலும் வில்வரையால் வெந்தவிய<br>வாங்கினார் வானவர்கள் வந்திறைஞ்சுந் தொல்கோயில்<br>பாங்கினார் நான்மறையோ டாறங்கம் பலகலைகள்<br>தாங்கினார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | பெருமை மிக்கவரும், மும்மதில்களையும் வெந்து அழியுமாறு மலைவில்லை வளைத்தவரும், தேவர்களால் வந்து வணங்கப்படுபவருமாகிய சிவபெருமான் எழுந்தருளிய பழமையான கோயில், பல பிரிவுகளுடன் கூடிய நான்மறை களையும், ஆறு அங்கங்களையும் பல கலைகளையும் கற்றுணர்ந்த அந்தணர்கள் வாழும் ஆக்கூரில் உள்ள தான்தோன்றி மாடமாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **1924.** கன்னெடிய குன்றெடுத்தான் தோளடரக் காலூன்றி<br>இன்னருளா லாட்கொண்ட வெம்பெருமான் தொல்கோயில்<br>பொன்னடிக்கே நாடோறும் பூவோடு நீர்சுமக்கும்<br>தன்னடியார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | கற்கள் நிரம்பிய நீண்ட கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் தோள்கள் நெரியுமாறு கால் விரலை ஊன்றிப் பின் அவன் வருந்தி வேண்ட அவனுக்கு இனிய கருணை காட்டி ஆட்கொண்ட எம்பெருமானின் பழமையான கோயில், சிவபிரானின் பொன்போன்ற திருவடிகளுக்கு நாள்தோறும் பூவும் நீரும் சுமக்கும் சிவனடியார்கள் பலர் வாழும் ஆக்கூரில் விளங்கும் தான்தோன்றிமாடம் ஆகும். |
| **1925.** நன்மையா னாரணனும் நான்முகனுங் காண்பரிய<br>தொன்மையான் தோற்றங்கே டில்லாதான் தொல்கோயில்<br>இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னா தீந்துவக்குந்<br>தன்மையார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே. | நன்மைகள் செய்பவனாகிய திருமாலும் நான் முகனும் காணுதற்கு அரிய பழமையோனும், பிறப்பிறப்பு இல்லாதவனும் ஆகிய சிவபிரானது பழமையான கோயில், இன்மையால் வந்து இரந்தவர்கட்கு இல்லையென்று கூறாது ஈந்து மகிழும் தன்மையார் வாழும் ஆக்கூரில் விளங்கும் தான் தோன்றிமாடம் ஆகும். |
| **1926.** நாமருவு புன்மை நவிற்றச் சமண்டேரர்<br>பூமருவு கொன்றையினான் புக்கமருந் தொல்கோயில்<br>சேன்மருவு பங்கயத்துச் செங்கழுநீர் பைங்குவளை<br>தாமருவு மாக்கூரிற் றான்றோன்றி மாடமே. | சமண பௌத்தர்கள் நாவிற் பொருந்திய புன்மை மொழிகளால் அறியாது பிதற்றித் திரிய, கொன்றைப் பூக்கள் பொருந்திய சடையினனாகிய சிவபிரான் எழுந்தருளி அமரும் கோயில், சேல்மீன்கள் பொருந்திய நீர்நிலைகளில் செங்கழுநீர் பசுமையான குவளை மலர்கள் ஆகியன வளரும் வளமையைக் கொண்ட ஆக்கூரில் விளங்கும் தான்தோன்றி மாடம் ஆகும். |
| **1927.** ஆட லமர்ந்தானை யாக்கூரிற் றான்றோன்றி<br>மாட மமர்ந்தானை மாடஞ்சேர் தண்காழி<br>நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொல்<br>பாட –வைவல்லார்க் கில்லையாம் பாவமே. | திருக்கூத்து ஆடுவதை விரும்புபவனாய், ஆக்கூரில் தான்தோன்றி மாடத்து எழுந்தருளிய சிவபிரானை ஏத்தி மாட வீடுகள் நிரம்பிய சீகாழிப் பதியில் தோன்றிய அறிதற்கரிய புகழினனாகிய ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகப் பாடல்கள் வல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 43. திருப்புள்ளிருக்குவேளூர்

பண் : சீகாமரம் — பதிக எண் : 43

சடாயு, சம்பாதி என்ற இருவரும் சூரியனது மக்கள். இருவரும் ஞாயிற்று மண்டலம் வரை பறந்து சென்று, சிறகுகள் எரிந்து வீழ்ந்து இத்தலத்தில் வழிபட்டுச் சிறகும், பேறும் பெற்றனர் என்பது தலச்சிறப்பு. புள் – பறவை (சடாயு, சம்பாதி). இருக்கு – வேதம். வேள்–முருகவேள். ஊர் – சூரியன். இவர்கள் பூசித்த தலம்.

**1928.** கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே.

ஐயறிவேயுடைய பறவைகளும் வழிபட்டுப்பேறு அடையுமானால் அதைக் கண்டேனும் மக்கள் வழிபட்டுத் துன்பம் நீங்கக் கடவர் என்று வழிப்படுத்த சம்பந்தர் பாடியது.

தேன்நிறைந்த அழகிய கொன்றை மலர், கடுநாற்றத்தை உடைய ஊமத்தை மலர், ஒளிபொருந்திய திங்கள் ஆகியன உள்ளே அமைந்து விளங்கும் சடையினனும், தள்ளத்தகாத பறவைப் பிறப்படைந்து சம்பாதி சடாயு எனப் பெயரிய இருவர் வழிபட அவர்கட்கு அரசனும் ஆகிய சிவபிரான் உறையும் இடம் புள்ளிருக்கு வேளூர்.

---

**1929.** தையலா ளொருபாகஞ் சடைமேலா ளவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோ ரந்தணனா ருறையுமிடம்
மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே.

இப்பதிகத்தின் 2, 4, 5, 6, 7, 8, 9, 10 ஆம் பாடல்களில் சடாயுவையும், 3 ஆம் பாட–ல் சம்பாதியையும், முதல் பாட–ல் இருவரையும் பாடிவிட்டு வழக்கம்போல் திருக்கடைக்காப்பில் தம்மைப் பாடுகிறார்.

ஒரு பாகத்தே விளங்கும் தையல்நாயகியோடும் சடையின் மேல் பொருந்திய கங்கை நங்கை யோடும் சென்று ஐயம் ஏற்று உழலும் அழகிய கருணையாளனும், உண்மை புகலாத இராவணனைப் பறந்து சென்று வ–மையை அழித்து அவனால் தாக்குண்டு, இராமனுக்கு நடந்த உண்மைகளைப் புகன்று உயிர்விட்ட சடாயுவால் வழிபடப்பட்டவனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் புள்ளிருக்கு வேளூர்.

---

**1930.** வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
ஈசனெம் பெருமானார் இனிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே.

தேவர்கள் தலவாசம் செய்து நாள்தோறும் தீர்த்த நீராடி நறு மலர்தூவி வழிபட விளங்கும் ஈசனும், எம் தலைவனும் யோசனை தூரம் சென்று மலர் பறித்து வந்து ஒருநாளும் தவறாமல் சம்பாதியால் பூசிக்கப்பட்டவனும் ஆகிய சிவபிரான் இனிதாக உறையும் இடம் புள்ளிருக்கு வேளூர்.

| | |
|---|---|
| **1931.** மாகாயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை<br>ஏகாய மிட்டுகந்த வெரியாடி யுறையுமிடம்<br>ஆகாயந் தேரோடு மிராவணனை யமரின்கண்<br>போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. | பெரிய தனது திருமேனியில் பெரியதொரு யானையினை உரித்து அதன்தோலை உடை வகையில் ஒன்றான மேலாடையாகப் போர்த்து மகிழ்ந்தவனும், எரியில் நின்று ஆடுபவனும், சீதையைக் கவர்ந்து வானில் தேரோடு விரைந்து சென்ற இராவணனோடு போரிட்டுத் தாக்கி அவனைப் போகாதவாறு செய்ய முயன்ற சடாயுவால் பூசிக்கப்பட்டவனும் ஆகிய சிவபிரான் உறையுமிடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1932.** கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்<br>பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்<br>வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்<br>போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. | வேதகீதங்களை மிகுதியாகப் பாடும் அடியார்கள் கூடியிருந்து திருவடிகளைத் தொழுமாறு விளங்கி நிற்கும் ஒளி வடிவினனும், வெண்மணலைச் சிவ–ங்கமாகத் திரட்டி வேதமந்திரங்களை ஓதி சடாயுவால் ஞானத்தோடு வழிபடப்பட்டவனுமாகிய சிவபிரான் எழுந்தருளிய இடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1933.** திறங்கொண்ட வடியார்மேற் றீவினைநோய் வாராமே<br>அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரா னமருமிடம்<br>மறங்கொண்டங் கிராவணன்றன் வ–கருதி<br>வந்தானைப்<br>புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. | சைவத்திறம் மேற்கொண்ட அடியவர்மீது தீவினைகளால் வரும் துன்பங்கள் வாராமே செய்பவனும், சிவதன்மங்களாகிய அறநெறிகளை ஆ–ன் கீழ் இருந்து அருளியவனும் தனது வீரத்தையே பெரிதெனக் கருதி வந்த இராவணனை மறத்தொடு போரிட்டுப் புறங்கண்ட சடாயுவால் வழிபடப்பட்டவனுமாகிய சிவபிரான் அமரும் இடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1934.** அத்தியினீ ருரிமுடி யழகாக வனலேந்திப்<br>பித்தரைப்போற் ப–திரியும் பெருமானார் பேணுமிடம்<br>பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து<br>புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே. | யானையை உரித்த தோலால் உடலை மூடிக் கொண்டு அழகாகக் கையில் அனலை ஏந்தி, பித்தர் போலப் ப–யேற்றுத் திரியும் பெருமானும், பக்தியோடு வழிபட்டுப் பலகாலம் தவஞ்செய்து தன் அறிவை இறை உணர்வொடு பொருந்த வைத்து மகிழ்ந்த சடாயுவால் வழிபடப் பட்டவனும் ஆகிய சிவபிரான் விரும்பும் இடம் புள்ளிருக்கு வேளூர். |

| | |
|---|---|
| **1935.** பண்ணொன்ற இசைபாடு மடியார்கள் குடியாக<br>மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்<br>எண்ணின்றி முக்கோடி வாணாள துடையானைப்<br>புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. | பண்பொருந்த இசைபாடும் அடியவர்கள் குடியாக இருந்து வழிபட உலகியல் இன்பங்களை மட்டுமல்லாமல் விண்ணுலக இன்பங்களையும் அருளும் நீலமணி மிடற்றோனும், கணக்கில் அடங்காத மூன்று கோடி ஆண்டுகளை வாழ் நாளாகப் பெற்ற இராவணனோடு போரிட்டுப் புண்படும்படி செய்து அவன் வ–மையை அழித்த சடாயுவால் பூசிக்கப்பட்டவனுமாகிய சிவபிரான் மருவும் இடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1936.** வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்<br>சாதித்த வில்லாளி கண்ணாளன் சாருமிடம்<br>ஆதித்தன் மகனென்ன வகன்ஞாலத் தவரோடும்<br>போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. | தன்னோடு பேதம் உற்ற அசுரர்களின் முப்புரங்களும் கொடிய கணையால் வெந்தவியுமாறு செய்த வில்லாளியும், கருணைக் கண்ணாளனும், ஆதித்தன் மகனாய் அகன்ற இந்நிலவுலக மக்களோடு பறவை வடிவாய்த் தோன்றி அறநெறி போதித்து வந்த சடாயுவால் வழிபடப்பட்டவனுமாகிய சிவபெருமான் சாரும் இடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1937.** கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றாடாமே<br>தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம்<br>விடைத்துவரு மிலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காப்<br>புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. | சினந்துவந்த கங்கையைத் தனது மணம் கமழும் சடை ஒன்றில் அதுவும் முற்றிலும் நனையாதவாறு தடுத்துத் தாங்கியவராகிய எம் தலைவரும், சீறிவந்த இராவணன் மயங்குமாறு சென்று இராமனுக்காக அவனைப்புடைத்து, அவனோடு போரிட்டுத் தடுத்த சடாயுவால் வழிபடப் பெற்றவரும் ஆகிய சிவபெருமான் உறையுமிடம் புள்ளிருக்கு வேளூர். |
| **1938.** செடியாய வுடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்<br>பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்<br>கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்<br>மடியாது சொல்லவல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. | குணமில்லாத இவ்வுடலொடு பிறக்கும் பிறப்பை நீக்கியருளுவானும், தீவினை காரணமாகவரும் நோய்களுக்கு மருந்தாக இருந்து அருள்பவனும், மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியனும் ஆகிய சிவபெருமானுக்கு அடித்தொண்டு பூண்ட மணம் கமழும் பொழில் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய கவுணியர்கோன் ஆகிய ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகச் சொல்மாலையைச் சோம்பியிராமல் சொல்– வழிபடவல்லவர்கட்கு மறுபிறப்பு இல்லை. |

## 44. திருவாமாத்தூர்

பண் : சீகாமரம் பதிக எண் : 44

| | |
|---|---|
| 1939. துன்னம்பெய் கோவணமுந் தோலு முடையாடை<br>பின்னஞ் சடைமேலோர் பிள்ளை மதிசூடி<br>அன்னஞ்சேர் தண்கான லாமாத்தூ ரம்மான்றன்<br>பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே. | தைத்தல் அமைந்த கோவணத்தை உடையாகவும், யானைத் தோலைமேல் ஆடையாகவும் கொண்டு பின்னிய சடைமீது இளம்பிறையைச் சூடி, அன்னங்கள் வாழும் குளிர்ந்த சோலைகளைக் கொண்டுள்ள திருஆமாத்தூரில் விளங்கும் இறைவனின் பொன் போன்ற அழகிய திருவடிகளைப் பரவாதவர் பொ–வு பொ–வாகுமோ ? |
| 1940. கைம்மாவின் றோல்போர்த்த காபா– வானுலகில்<br>மும்மா மதிலெய்தான் முக்கணான் பேர்பாடி<br>அம்மா மலர்ச்சோலை யாமாத்தூ ரம்மானெம்<br>பெம்மானென் றேத்தாதார் பேயரிற் பேயரே. | யானைத் தோலைப் போர்த்துள்ள காபா–யும், வானுலகில் திரிந்து இடர் விளைத்த முப்புரங்களை எய்தழித்தவனும், முக்கண்ணனும் ஆகிய சிவபிரானின் புகழைப்பாடி அழகிய பெரிய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த ஆமாத்தூர் அம்மானே எம் தலைவன் என்று ஏத்தாதார் பேயர்களினும் பேயராவர். |
| 1941. பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்<br>தேம்ப –ளமதியஞ் சூடிய சென்னியான்<br>ஆம்பலம்பூம் பொய்கை யாமாத்தூ ரம்மான்றன்<br>சாம்ப லகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. | பாம்பை இடையில் கட்டியவன். ஒப்பற்ற பாண்டரங்கம் என்னும் திருக்கூத்தை ஆடியவன். வாய்பிளந்து மெ–ந்ததோர் இளமதியைச் சூடிய சென்னியன். ஆம்பல் பூக்கள் மலர்ந்த பொய்கைகளை உடைய ஆமாத்தூரில் எழுந்தருளியவன். சாம்பல் பூசிய மார்பினனாய அப்பெருமானின் அடியவர்களின் சார்பு அல்லால் பிறிதொரு சார்பு நமக்கு இல்லை. |
| 1942. கோணாகப் பேரல்குற் கோல்வளைக்கை மாதராள்<br>பூணாகம் பாகமாப் புல்கி யவளோடும்<br>ஆணாகங் காதல்செய் ஆமத்தூ ரம்மானைக்<br>காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே. | வ–ய நாகத்தின் படம் போன்ற பெரிய அல்குலையும், திரண்ட வளையல்கள் அணிந்த கைகளையும் உடைய பார்வதி தேவியின் அணிகலன்கள் அணிந்த திருமேனியைத் தனது இடப்பாகமாகக் கொண்டு அவ்வம்மையோடு ஆண் உடலோடு விளங்கும் தான் காதல் செய்து மகிழும் ஆமாத்தூர் அம்மானைக் காணாத கண்கள் எல்லாம் குருட்டுக் கண்களேயாகும். |

| | |
|---|---|
| **1943.** பாட னெறிநின்றான் பைங்கொன்றைத் தண்டாரே<br>சூட னெறிநின்றான் சூலஞ்சேர் கையினான்<br>ஆட னெறிநின்றா னாமாத்தூ ரம்மான்றன்<br>வேட நெறிநில்லா வேடமும் வேடமே. | பாடும் நெறி நிற்பவனும், பசிய தண்மையான கொன்றை மாலையைச் சூடும் இயல்பினனும், சூலம் பொருந்திய கையினனும் ஆடும் நெறி நிற்போனும் ஆகிய ஆமாத்தூர் அம்மான் கொண்டருளிய மெய்வேடங்களாகிய மார்க்கங்களைப் பின்பற்றாதார் மேற்கொள்ளும் வேடங்கள் பொய்யாகும். |
| **1944.** சாமவரை வில்லாகச் சந்தித்த வெங்கணையால்<br>காவன் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்<br>யாவருஞ் சென்றேத்து மாமாத்தூ ரம்மானைத்<br>தேவர் தலைவணங்குந் தேவர்க்குந் தேவனே. | பொன்மயமான மேருமலையை வில்லாகக் கொண்டு அதன்கண் பொருந்திய கொடியகணையால் காவலை உடைய மும்மதில்களை எய்து அழித்தவனும், நெற்றிக் கண்ணனும் எல்லோரும் சென்று வணங்கிப் போற்றும் ஆமாத்தூர் அம்மானும் ஆகிய சிவபிரான் தேவர்கள் தலை வணங்கும் இந்திரனுக்கும் தேவன் ஆவன். |
| **1945.** மாறாத வெங்கூற்றை மாற்றி மலைமகளை<br>வேறாக நில்லாத வேடமே காட்டினான்<br>ஆறாத தீயாடி யாமாத்தூ ரம்மானைக்<br>கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே. | யாவராலும் ஒழிக்கப்படாத கூற்றுவனை ஒழித்து, மலைமகளைத் தனித்து வேறாக நில்லாது தன் திருமேனியிலேயே ஒரு பாதியை அளித்து மாதொரு பாகன் என்ற வடிவத்தைக் காட்டியவனும், ஆறாத தீயில் நின்று ஆடுபவனும் ஆகிய ஆமாத்தூர் இறைவன் புகழைக் கூறாத நாக்குடையவர் நாவிருந்தும் ஊமையர் எனக் கருதப்படுவர். |
| **1946.** தாளா லரக்கன்றோள் சாய்த்த தலைமகன்றன்<br>நாளா திரையென்றே நம்பன்ற னாமத்தால்<br>ஆளானார் சென்றேத்து மாமத்தூ ரம்மானைக்<br>கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே. | தோல்வி உறாத இராவணனின் தோள் வ–மையை அழித்த தலைவனாகிய சிவபெருமானுக்கு உகந்த நாள் திருவாதிரை யாகும் எனக் கருதித் தங்கள் விருப்புக்கு உரியவனாகிய, அடியவர் சென்று வழிபடும் ஆமாத்தூர் அம்மான் புகழைக் கேளாச்செவிகள் எல்லாம் செவிட்டுச் செவிகள் ஆகும். |
| **1947.** புள்ளுங் கமலமுங் கைக்கொண்டார் தாமிருவர்<br>உள்ளு மவன்பெருமை யொப்பளக்குந் தன்மையதே<br>அள்ளல் விளைகழனி யாமாத்தூ ரம்மானெம்<br>வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. | கருடப்பறவை தாமரை ஆகியவற்றை இடமாகக் கொண்ட திருமால் பிரமன் ஆகிய இருவரால் தியானிக்கப்படும் சிவபிரானது பெருமை அளவிடற்கு உரியதோ? சேறாக இருந்து நெற்பயிர் விளைக்கும் கழனிகள் சூழ்ந்த ஆமாத்தூர் அம்மானாகிய எம் வள்ள–ன் திருவடிகளை வணங்காத வாழ்க்கையும் வாழ்க்கை யாமோ? |

| | |
|---|---|
| **1948.** பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்<br>கொச்சை புலானாற வீருரிவை போர்த்துகந்தான்<br>அச்சந்தன் மாதேவிக் கீந்தான்ற னாமாத்தூர்<br>நிச்ச னினையாதார் நெஞ்சமு நெஞ்சமே. | மகளிர் பிச்சையிட்டுப் பின்னே வர, தன் தலைமைத்தன்மை கெடாதபடி, உமையம்மை அஞ்ச இழிவான புலால் மணம் வீசும் யானைத் தோலைப் போர்த்து அழியாது மகிழ்ந்தவனாகிய சிவபிரானது ஆமாத்தூரை நாள்தோறும் நினையாதார் நெஞ்சம் நெஞ்சாகுமா ? |
| **1949.** ஆட லரவசைத்த வாமாத்தூ ரம்மானைக்<br>கோட –ரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்<br>நாட லரியசீர் ஞானசம் பந்தன்றன்<br>பாட –வைவல்லார்க் கில்லையாம் பாவமே. | படம் விரித்து ஆடும் பாம்பை இடையில் கட்டிய ஆமாத்தூர் அம்மானைக் காந்தள் மலரும் கரிய காடுகளைக் கொண்ட கொச்சைவயம் என்னும் சீகாழிப் பதிக்குத் தலைவனாகிய நாடற்கு அரிய புகழை உடைய ஞானசம்பந்தன் பாடியருளிய இப்பாடல்களை வல்லவர்க்குப் பாவம் இல்லை. |

## 45. திருக்கைச்சினம்

பண் : சீகாமரம் பதிக எண் : 45

இந்திரன் இங்கு மணலால் சிவ–ங்கத்திருவுரு தாபித்துப் பூசித்துப் பின் எடுக்க முயன்றபோது, எடுக்கவராமல் அவனது கைச்சின்னம் (கை அடையாளம்) திருவுருவத்தில் பதிந்து விட்ட காரணத்தால் இப்பெயர் பெற்றது. சுவாமி – கைச்சினநாதர்.

| | |
|---|---|
| **1950.** தையலோர் கூறுடையான் தண்மதிசேர் செஞ்சடையான்<br>மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலான்<br>நெய்யுலா மூவிலைவேல் ஏந்தி நிவந்தொளிசேர்<br>கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. | மாதொருபாகனும், குளிர்ந்த பிறைமதி சூடிய செஞ்சடையினனும் கருமை விரவிய நீலமணி மிடற்றானும், வேதப்பாடல்களைப் பாடுவோனும், நெய் பூசப் பெற்ற மூவிலை வடிவமான சூலத்தை ஏந்திப் பெருகி ஒளிர்கின்ற கையை உடையோனும் ஆகிய சிவபிரான் மேவி உறையும் கோயில் கைச்சினமாகும். |
| **1951.** விடமல்கு கண்டத்தான் வெள்வளையோர் கூறுடையான்<br>படமல்கு பாம்பரையான் பற்றாதார் புரமெரித்தான்<br>நடமல்கு மாட–னான் நான்மறையோர் பாட–னான்<br>கடமல்கு மாவுரியான் உறைகோயில் கைச்சினமே. | விடம் பொருந்திய கண்டத்தினனும், வெண்மையான வளையல்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவனும், படம் எடுத்தாடும் பாம்பினை அரையில் கட்டியவனும், பகைவரின் முப்புரங்களை எரித்தவனும், நடனம் ஆடுபவனும், நான்மறைகளைப் பாடுபவனும், மதயானையை உரித்த தோ–னனும் ஆகிய சிவபிரான் உறையும் கோயில் கைச்சினம். |

| | |
|---|---|
| **1952.** பாடலார் நான்மறையான் பைங்கொன்றை பாம்பினொடும்<br>சூடலான் வெண்மதியந் துன்று கரந்தையொடும்<br>ஆடலா னங்கை யனலேந்தி யாடரவக்<br>காடலான் மேவியுறை கோயில் கைச்சினமே. | பாடல்களோடு கூடிய நான்மறைகளை அருளியவனும், பசிய கொன்றையைப் பாம்போடு சூடியவனும், வெண்மையான பிறைமதி, செறிந்த கரந்தைத்தளிர் ஆகியன சூடி ஆடுபவனும், அழகிய கையில் அனல் ஏந்தி, ஆடும் அரவுடன் இடுகாட்டில் உறைபவனும் ஆகிய சிவபிரான் மேவி உறையும் கோயில் கைச்சினம். |
| **1953.** பண்டமரர் கூடிக் கடைந்த படுகடல்நஞ்<br>சுண்டபிரா னென்றிறைஞ்சி யும்பர் தொழுதேத்த<br>விண்டவர்கள் தொன்னகர மூன்றுடனே வெந்தவியக்<br>கண்டபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. | முற்காலத்தே தேவர்கள் கூடித்திருப்பாற் கடலைக் கடைந்த போது தோன்றிய நஞ்சினை உண்ட தலைவன் என்ற நன்றி உணர்வோடு தேவர்கள் தொழுது ஏத்தப் பகைவருடைய பழமையான முப்புரங்களையும் வெந்தழியுமாறு செய்தவனாகிய சிவபிரான் மேவி உறையும் கோவில் கைச்சினம். |
| **1954.** தேய்ந்துமு– வெண்பிறையான் செய்யதிரு மேனியினான்<br>வாய்ந்திலங்கு வெண்ணீற்றான் மாதினையோர் கூறுடையான்<br>சாய்ந்தமரர் வேண்டத் தடங்கடனஞ்சுண்ட நங்கைக்<br>காய்ந்தபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. | தேய்ந்து வளரும் வெண்பிறையை அணிந்தவனும், சிவந்த திருமேனியினனும், பொருந்த விளங்கும் வெண்ணீற்றினனும், மாதொருகூறனும், வருந்தி அமரர் வேண்டப் பெரிய கட–டைத் தோன்றிய நஞ்சினை உண்டவனும், மன்மதனை எரித்தவனும் ஆகிய சிவபெருமான் மேவி உறையும் கோயில் கைச்சினம். |
| **1955.** மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்<br>அங்கையோர் வெண்டலையா னாடரவம் பூண்டுகந்தான்<br>திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேல்<br>கங்கையினான் மேவியுறை கோயில் கைச்சினமே. | மாதொரு கூறனும், நிலையான வேதங்களை ஓதுபவனும், அழகிய கையில் வெள்ளியதொரு தலையோட்டை ஏந்தியவனும், ஆடும் பாம்பினைப் பூண்டு மகிழ்ந்தவனும், முடியில் திங்கள், பாம்பு, கங்கை ஆகியவற்றைச் சூடியவனும் ஆகிய சிவபெருமான் மேவி உறையும் கோயில் கைச்சினம். |
| **1956.** வரியரவே நாணாக மால்வரையே வில்லாக<br>எரிகணையான் முப்புரங்க ளெய்துகந்த வெம்பெருமான்<br>பொரிசுடலை யீமப் புறங்காட்டான் போர்த்ததோர்<br>கரியுரியான் மேவியுறை கோயில் கைச்சினமே. | வரிகளை உடைய பாம்பினை நாணாகவும், பெரிய மலையை வில்லாகவும் கொண்டு எரிபொருந்திய கணையால் முப்புரங்களை எய்து அழித்து மகிழ்ந்த எமது பெருமானும், நெற் பொறியைத் தூவும் சுடலையாகிய ஈமப்புறங்காட்டில் ஆடுபவனும் கரியுரி போர்த்தவனும் ஆகிய சிவபெருமான் மேவி உறையும் கோயில் கைச்சினம். |

| | |
|---|---|
| **1957.** போதுலவு கொன்றை புனைந்தான் றிருமுடிமேல்<br>மாதுமையா ளஞ்ச மலையெடுத்த வாளரக்கன்<br>நீதியினா லேத்த நிகழ்வித்து நின்றாடும்<br>காத–னான் மேவியுறை கோயில் கைச்சினமே. | உமைமாது அஞ்சக் கயிலை மலையைப் பெயர்த்த வாளரக்கனாகிய இராவணன் முறையோடு துதிக்க அவனை முன்போல விளங்கச் செய்து திருமுடிமேல் கொன்றைமலர் மாலையைப் புனைந்தவனும், இடுகாட்டில் நின்று ஆடுவதில் விருப்புடையவனும் ஆகிய சிவபெருமான் மேவி உறை கோயில் கைச்சினம். |
| **1958.** மண்ணினைமுன் சென்றிரந்த மாலும் மலரவனும்<br>எண்ணறியா வண்ண மெரியுருவ மாயபிரான்<br>பண்ணிசையா லேத்தப் படுவான்றன் னெற்றியின்மேல்<br>கண்ணுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. | மாவ–யிடம் மூன்றடி மண் இரந்த திருமாலும், தாமரைமலர் மேல் உறையும் நான்முகனும் எண்ணவும் இயலாதவாறு எரியுருவாய் நீண்ட பிரானும், அடியவர்களால் பண்ணிசையோடு ஏத்தப்படுபவனும், நெற்றிக் கண்ணனும் ஆகிய சிவபிரான் மேவி உறையும் கோயில் கைச்சினம். |
| **1959.** தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்<br>கண்ணுதலான் மேவியுறை கோயில் கைச்சினத்தைப்<br>பண்ணிசையா லேத்திப் பயின்ற விவைவல்லார்<br>விண்ணவரா யோங்கி வியனுலகம் ஆள்வாரே. | குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட காழிப்பதியில் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் நுதல் விழிநாட்டத்து இறையோன் மேவி உறையும் கோயிலைக் கொண்டுள்ள கைச்சினத்தைப் பண்ணிசையோடு ஏத்திப்பாடிய இப்பதிகத்தை ஓத வல்லவர் விண்ணவராய் உயர்ந்து அகன்ற அவ்வுலகை ஆட்சிபுரிவர். |

## 46. திருநாலூர்மயானம்

**பண் : சீகாமரம்** (மயானம் என்று திருமுறைத் தலங்களின் பெயரோடு வந்தால் அது பிரம சம்காரம் நடைபெற்ற இடம் என்று பொருள்) **பதிக எண் : 46**

| | |
|---|---|
| **1960.** பாலூரு மலைப்பாம்பும் பனிமதியு மத்தமும்<br>மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினான்<br>நாலூர் மயானத்து நம்பான்ற னடிநினைந்து<br>மாலூருஞ் சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே.<br>---<br>ஒவ்வொரு கற்பத்திலும் ஒவ்வொரு இடத்தில் நடக்கும். இம்மாதிரி தமிழ்நாட்டில் 4 மயானங்கள் உள்ளன.<br>1. கச்சி, 2. கடவூர், 3. காழி, 4. நாலூர். | பக்கத்தே ஊர்ந்து செல்லும் மலைப்பாம்பு, குளிர்ந்த மதி, ஊமத்தை மலர் ஆகியன மேலே பொருந்தப் பெற்ற செஞ்சடையினனும், வெண்மையான பூணூல் சேர்ந்த மார்பினனும் ஆகிய நாலூர் மயானத்து இறைவன் திருவடிகளை நினைந்து மயங்கும் மனமுடையார்க்கு மறுபிறப்பு வந்து பொருந்தாது. |
| **1961.** சூடும் பிறைச்சென்னிச் சூழ்கா டிடமாக<br>ஆடும் பறைசங் கொ–யோ டழகாக<br>நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானத்தைப்<br>பாடுஞ் சிறப்போர்பாற் பற்றாவாம் பாவமே. | பிறை சூடிய சென்னியுடன், காடு சூழ்ந்த சுடுகாட்டில் பறை சங்கு ஒ–களுடன் அழகாக ஆடுபவன் எழுந்தருளிய, பலராலும் நாடும் சிறப்புக்குன்றாத நாலூர் மயானத்தைப் பாடும் சிறப்புடையோரைப் பாவம் பற்றா. |

| | |
|---|---|
| **1962.** கல்லா னிழன்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்<br>றெல்லா வறனுரையும் இன்னருளால் சொல்–னான்<br>நல்லார் தொழுதேத்தும் நாலூர் மயானத்தைச்<br>சொல்லா தவரெல்லாஞ் செல்லாதார்<br>தொன்னெறிக்கே. | கல்லால மரநிழ–ல் எழுந்தருளியிருந்து, விரும்பி வந்த புகழ் உடையவராகிய சனகாதி நால்வர்க்கு அன்று எல்லா அறவுரைகளையும் இன்னருளால் சொன்னவனாய் எழுந்தருளிய நல்லவர் தொழுது ஏத்தும் நாலூர் மயானத்து இறைவன் புகழைச் சொல்லாதவர் தொன்மையான சைவ நெறிக்கண் செல்லாதவர் ஆவர். |
| **1963.** கோலத்தார் கொன்றையான் கொல்பு–த்தோ<br>லாடையான்<br>நீலத்தார் கண்டத்தான் நெற்றியோர் கண்ணினான்<br>ஞாலத்தார் சென்றேத்தும் நாலூர் மயானத்தில்<br>சூலத்தா னென்பார்பாற் சூழாவாந் தொல்வினையே. | அழகால் நிறைந்த கொன்றைமாலையைச் சூடியவன், கொல்லும் பு–யினது தோலை ஆடையாக உடுத்தவன். நீலநிறம் பொருந்திய கண்டத்தினன். நெற்றிக்கண்ணன், உலகோர் சென்று பரவிப்புகழும் நாலூர் மயானத்தில் விளங்கும் சூலத்தினன் என்பாரைத் தொல்வினை சூழா. |
| **1964.** கறையார் மணிமிடற்றான் காபா– கட்டங்கன்<br>பிறையார் வளர்சடையான் பெண்பாக னண்பாய<br>நறையார் பொழில்புடைசூழ் நாலூர் மயானத்தெம்<br>இறையானென் றேத்துவார்க் கெய்துமா மின்பமே. | விடக்கறை பொருந்திய நீலமணி போன்ற மிடற்றினன். கையில் கபாலம் ஏந்தியவன். மழு ஏந்தியவன். பிறை வளரும் சடைமுடியினன். தன்பால் நட்புக்கொண்ட பெண்பாகன். தேன் பொருந்திய பொழில்கள் புடையே சூழ்ந்துள்ள நாலூர் மயானத்து இறைவன் என்று அவனை ஏத்துபவர்க்கு இன்பம் வந்துறும். |
| **1965.** கண்ணார் நுதலான் கனலா டிடமாகப்<br>பண்ணார் மறைபாடி ஆடும் பரஞ்சோதி<br>நண்ணார் புரமெய்தான் நாலூர் மயானத்தை<br>நண்ணா தவரெல்லாம் நண்ணாதார் நன்னெறியே. | கண்பொருந்திய நுத–னனும், கனலை ஆடும் களமாகக் கொண்டவனும் பண்ணமைதியுடைய வேதங்களைப் பாடுவோனும், நடனம் ஆடும் பரஞ்சோதியும், பகைவருடைய முப்புரங்களை எய்தவனும் ஆகிய சிவபெருமான் உறையும் நாலூர் மயானத்தை அணுகாதவர் எல்லாம் சரியை, கிரியை, யோகம் என்னும் அழிவில்லாத தவத்தால் வரும் ஞானமாகிய நன்னெறியைச் சாரார். |
| **1966.** கண்பாவு வேகத்தாற் காமனைமுன் காய்ந்துகந்தான்<br>பெண்பாவு பாகத்தான் நாகத்தோ லாகத்தான்<br>நண்பார் குணத்தோர்கள் நாலூர் மயானத்தை<br>எண்பாவு சிந்தையார்க் கேலா விடர்தானே. | நெற்றிக் கண்ணி–ருந்து பரவிய வெம்மை வேகத்தால் மன்மதனைக் காய்ந்து உகந்தவனும், மாதொருபாகனும் யானைத் தோல் போர்த்த மார்பினனும் ஆகிய சிவபெருமான் உறைவதும், நட்புக்குணம் அமைந்தோர் வாழ்வதுமான நாலூர் மயானத்தைத் தியானிக்கும் சிந்தையை உடையார்க்கு இடர் வாரா. |

| | |
|---|---|
| **1967.** பத்துத் தலையோனைப் பாதத் தொருவிரலால்<br>வைத்து மலையடர்த்து வாளோடு நாள்கொடுத்தான்<br>நத்தி னொ–யோவா நாலூர் மயானத்தென்<br>அத்த னடிநினைவார்க் கல்ல லடையாவே. | பத்துத்தலைகளை உடைய இராவணனைப் பாதத்து ஒரு விரலால் மலையின் கீழ் அகப்படுத்தி அடர்த்து, பின் அவனுக்கு வாளும் நாளும் கொடுத்தவனும், சங்கொ– முழங்கும் நாலூர் மயானத்தில் விளங்கும் என் தலைவனுமான சிவபெருமான் திருவடிகளை நினைவாரை அல்லல்கள் அடையா. |
| **1968.** மாலோடு நான்முகனும் நேட வளரெரியாய்<br>மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்<br>நாலோடு மாறங்கம் நாலூர் மயானத்தெம்<br>பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே. | திருமாலும் நான்முகனும் தேடி, மேலொடு கீழ் காணாவகையில் வளர் எரியாய் நின்ற மேன்மையாளனும் நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அருளியவனும் நாலூர் மயானத்துப் பாலும் நெய்யும் ஆடி மகிழ்பவனும் ஆய எம்பெருமானின் பாதங்களைப் பணிவோம். |
| **1969.** துன்பாய மாசார் துவராய போர்வையார்<br>புன்பேச்சுக் கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்<br>நண்பாற் சிவாயவெனா நாலூர் மயானத்தே<br>இன்பா யிருந்தானை யேத்துவார்க் கின்பமே. | துன்பமாகிய அழுக்குடையவர்களும், பழுப்பாகிய போர்வையை அணிந்தவர்களுமான சமண பௌத்தர்களின் பொருளற்ற பேச்சுக்களைக் கேளாது புண்ணியத்தின் வடிவாய் விளங்கும் பெருமானை நட்போடு ‘சிவாய’ என்னும் அதிசூக்கும மந்திரத்தைக் கூறிக் கொண்டு நண்ணுங்கள். அப்பெருமான் நாலூர் மயானத்தில் இன்ப வடிவினனாய் இருந்தருளுகின்றான். அவனை ஏத்துவார்க்கு இன்பம் விளையும். |
| **1970.** ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்றான்<br>நாலு மறையோதும் நாலூர் மயானத்தைச்<br>சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்<br>கேலும் புகழ்வானத் தின்பா யிருப்பாரே. | உலகம் புகழும் காழிப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், நான்மறைகளை அந்தணர் ஓதும், நாலூர் மயானத்தில் விளங்கும் பெருமானின் சீலத்தையும் புகழையும் போற்றிப் பாடிய இப்பதிகத்தைச் சிறந்த முறையில் ஓதிவழிபட வல்லவர்க்கு உயரிய புகழ் கூடும். வான் உலகில் இன்பம் ஆர்ந்து இருத்தல் இயலும். |

## 47. திருமயிலாப்பூர்
## (எலும்பைப் பெண்ணுருவாக்கிய பூம்பாவைத் திருப்பதிகம்)

பண் : சீகாமரம் பதிக எண் : 47

1971. மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

ஊரின் பெயர் – மயிலாப்பூர்.
கோயி–ன் பெயர் – கபாலீச்சரம்.
உமாதேவியார் மயில் உருவமாய் இறைவனைப் பூசித்த தலம்.
தலமரம் – புன்னை.
வாயிலார் நாயனார் அவதாரத்தலம்.

பூம்பாவாய்! தேன்பொருந்திய அழகிய புன்னை மரச் சோலைகள் சூழ்ந்ததும், இளமயில்கள் ஆரவாரிப்பதுமான ஊரில் உள்ள கபாலீச்சரம் என்னும் கோயி–ல் விருப்பத்தோடு அமர்ந்தவன் மீது நெருக்கமான அன்புடைய மாகேசுரர்களுக்குத் திருவிழாக் காலங்களில் அன்பர்கள் அமுது செய்விக்கும் காட்சிகளைக் காணாது செல்வது முறையோ? இவ்விழாச் சிறப்பாக **புரட்டாசி** மாதத்தில் நடைபெறும். இத்திங்கள் முதல் ஒவ்வொரு மாதமும் நிகழ்த்தும் திருவிழாச்சிறப்பு மேல் வரும் ஒவ்வொரு பாட–லும் குறிக்கப்பட்டுள்ளது. மயிலை இன்றும் திருவிழாச்சிறப்புக்களுடன் விளங்கி வருகிறது.

1972. மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய்.

ஓணத்திற் கொடியேற்றம்.
கிருத்திகையில் தீர்த்தவாரி. இது இராமபிரான் நடத்திய பெருந்திருவிழாவாகும்.

பூம்பாவாய்! மைபூசப்பெற்ற ஒளிநிறைந்த கண்களை உடைய இளமகளிர் வாழும் திருமயிலையில் கபாலீச்சரம் என்னும் கோயி–ல் கைமேல் பயன்தரும் திருநீற்றை அணிந்தவனாய் அமர்ந்துள்ள பெருமானுக்கு நிகழ்த்தும் **ஐப்பசித் திருவோண விழாவையும்** அருந்தவ முனிவர் அமுதுண்ணும் காட்சிகளையும் காணாது செல்வது முறையோ?

1973. வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.

பூம்பாவாய்! வளையல்கள் அணிந்த இளமகளிர் வாழும் வளமான தெருக்களைக் கொண்டுள்ள மாமயிலையில் விளங்கும், தளர்வற்ற கபாலீச்சரம் என்னும் கோயி–ல் விளங்கும் பெருமானைக் **கார்த்திகைத்** திங்களில் நிகழும் விழாக்களின் போது சாந்தணிந்த இளநகில்களைக் கொண்ட மகளிர் திருவிளக்குகள் ஏற்றிக் கொண்டாடும் காட்சியைக் காணாது செல்வது முறையோ?

| | |
|---|---|
| **1974.** ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்<br>கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்<br>கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்<br>ஆர்திரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! ஊர்ந்து வரும் அலைகள் வந்து உலாவும் கடலை அடுத்துள்ள உயர்ந்த மயிலாப்பூரில், கூரிய வேலால் மீன்களைக் கொல்வதில் நெய்தல் நில மக்கள் வெற்றிகாணும் நெய்தற்சேரியில் மழைவளம் தந்ததால் வளர்ந்த சோலைகள் சூழ்ந்த கபாலீச்சரம் என்னும் கோயி–ல் விளங்கும் பெருமானுக்கு **மார்கழித்** திருவாதிரை நாளில் நிகழ்த்தும் விழாவைக் காணாது செல்வது முறையோ ? |
| **1975.** மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்<br>கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்<br>நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார் கொண்டாடும்<br>தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! மைபூசிய ஒளிநிறைந்த கண்களை உடைய இளமகளிர் வாழும் சிறந்த மயிலாப்பூரில் உள்ள கபாலீச்சரம் என்னும் கோயி–ல் கைகளில் நீறுபூசியவனாய் அமைந்துள்ள பெருமானுக்கு அணிகலன் பூண்டுள்ள மகளிர் நெய்யொழுகும் சிறந்த பொங்கல் படைத்துக் கொண்டாடும் **தைப்பூச** விழாவைக் காணாது செல்வது முறையோ ? |
| **1976.** மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்<br>கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்<br>அடலானே றூரு மடிக ளடிபரவி<br>நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! மடல்கள் நிறைந்த தென்னை மரங்கள் மிகுந்த மயிலாப்பூரில் **மாசிமக** நாளில் கடலாட்டுக் கொண்ட களிப்பொடு கபாலீச்சரம் என்னும் கோயி–ல் எழுந்தருளியிருப்பவனும், வ–மை பொருந்திய ஆனேற்றில் ஊர்ந்து வருபவனும் ஆகிய இறைவன் புகழ் பரவி அப்பெருமானது நடனமாடும் காட்சியைக் காணாது செல்வது முறையோ ? |
| **1977.** ம–விழா வீதி மடநல்லார் மாமயிலைக்<br>க–விழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்<br>ப–விழாப் பாடல்செய் பங்குனி யுத்தரநாள்<br>ஒ–விழாக் காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! இளம் பெண்கள் வாழும் விழாக்கள் நிறைந்த வீதிகளைக் கொண்ட பெரிய மயிலையில் எழுச்சியை விளைவிக்கும் திருவிழாக்களைக் கண்டு அங்குள்ள கபாலீச்சரம் என்னும் கோயி–ல் அமர்ந்தானது திசைதோறும் இடும் உருத்திர ப– அளிக்கும் விழாவாகப் **பங்குனி உத்தர** நாளில் நிகழும் ஆரவாரமான விழாவைக் காணாது செல்வது முறையோ ? |

| | |
|---|---|
| **1978.** தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்<br>கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்<br>பண்ணார் பதினெண் கணங்கடம் மட்டமிநாள்<br>கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய்.<br><br>பதினெண்கணங்கள் அட்டமியில் நடத்திய விழா தற்காலத்தில் சித்திரை நிறைநிலா நாளாகக் கொண்டாடப்படுகிறது. | பூம்பாவாய்! வெம்மையான இயல்புடைய இராவணனின் தோள்களை நெரித்துகந்த திருவடிகளை உடையவனாய், கண்களுக்கு நிறைவு தரும் மயிலையில் உள்ள கபாலீச்சரத்தில் அமர்ந்துள்ளவனுக்கு, பண்ணோடு பாடும் பதினெண் கணத்தினரும் ஏத்தும் வகையில் **சித்திரை** அட்டமியில் நிகழும் விழாவைக் கண்ணாரக் கண்டுமகிழாது செல்வது முறையோ? |
| **1979.** நற்றா மரைமலர்மே னான்முகனு நாரணனும்<br>முற்றாங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்<br>கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்<br>பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! நல்ல தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும் திருமாலும் முழுவதும் அறியாதவாறு அழலுருவாய் ஓங்கிய, மூர்த்தி தன் திருவடிகளைக் கற்றவர்பரவக் கபாலீச்சரம் அமர்ந்து உறைவோன். அப்பெருமானுக்கு நிகழும் **வைகாசி** ஊஞ்சலாட்டுத் திருவிழாவைக் காணாது செல்லல் முறையோ? |
| **1980.** உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப் போர்க்கும்<br>இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்<br>கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான்றன்<br>பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய். | பூம்பாவாய்! உடை ஒழிந்தவராய் வாழும் சமணர், உடையைப் போர்த்துத் திரியும் கரிய சாக்கியர் தம் வாய்க்கு வந்தவாறு பிதற்ற மண்ணுலகில் கரிய சோலை சூழ்ந்த கபாலீச்சரத்தானுக்கு ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் நிகழும் நல்ல காப்புக்கட்டுதல் என்னும் பெருஞ்சாந்தி விழாவைக் காணாது செல்வது முறையோ? |
| **1981.** கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்<br>தேனமர் **பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்**<br>ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வல்லார்<br>வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.<br><br>"பூம்பாவைப் பாட்டு" என்று திருஞானசம்பந்தரே குறிப்பிடுகிறார். | மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த மயிலையில் விளங்கும் கபாலீச்சரம் என்னும் கோயி–ல் எழுந்தருளிய இறைவன்மீது, தேன் பொருந்திய பூவில் உறையும் பாவையை விளிக்கும் பாட்டாகச் செந்தமிழால் ஞானசம்பந்தன் இறைவனது நலம்புகழ்ந்து பாடிய இப்பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர் வீடுபெற்ற சிவகணத்தவரோடு கூடி நிலைத்து வாழ்வர். |

## 48. திருவெண்காடு
## (வெள்ளானைக்காடு – வெண்காடு)

பண் : சீகாமரம் பதிக எண் : 48

1982. கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங்
கொடியானே.

தேவாரத்திருமுறைகளில் கயிறு சார்த்திப் பார்த்துப் பலன்சொல்லும் வழக்கம் அக்காலத்தில் நடைமுறையில் இருந்தது.

வெண்காட்டில் உறையும் பெருமான், நுத–டைக் கண் கொண்டவன். கையில் கனல் ஏந்தியவன். உமையம்மையை ஒரு கூறாகக் கொண்ட திருமேனியன். பிறையணிந்த சடைமுடியினன். பண்ணில் இறைவடிவானவன். பயிரை வளர்க்கும் மேகமானவன். விடை ஏந்திய கொடியை உடையவன்.

1983. பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந்
தீவினையே.

குழந்தைப் பேறின்றித் தம்மை அணுகிய மெய்கண்டாரின் தந்தைக்கு சிவஞான சித்தியாரின் ஆசிரியர் அருணந்தி சிவாசாரியார் கயிறு சார்த்திப் பார்த்த போது இப்பாடல் கிடைத்தது.

மூங்கில் போன்ற திரண்ட தோளினை உடைய உமையம்மை பங்கன் எழுந்தருளிய திருவெண்காட்டை அடைந்து அங்குள்ள முக்குளநீரில் மூழ்கி எழுந்து வழிபடுவாரைப் பேய்கள் சாரமாட்டா. பேய் பிடித்திருந்தாலும் விலகும். மகப்பேறு வாய்க்கும். மன விருப்பங்கள் ஈடேறுவதை இறைவர்பால் அவர் பெறுவர். சிறிதும் சந்தேகம் வேண்டா.

1984. மண்ணொடுநீ ரனல்காலோ டாகாய மதியிரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம்
பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா
விரும்பினனே.

சூரியன், சந்திரன், அக்கினி என்று மூன்று தீர்த்தங்களுடன் தலங்களைப் பார்த்தல் அரிது.

மண், நீர், அனல், காற்று, ஆகாயம், மதி, இரவி, எண்ணற்றனவாயுள்ள உயிர்கள் ஆகிய எட்டு மூர்த்தங்களுடன் இம்மை, மறுமை எண்திசை, பெண் ஆண் ஆகியனவாகவும் பெரியதில் பெருமை, சிறியதில் சிறுமை ஆகியனவாகவும் விளங்கும் புகழாளனாகிய சிவபிரான், இந்திரன் வழிபடத்திருவெண் காட்டைத் தனது இருப்பிடமாக்கிக் கொண்டு எழுந்தருளியுள்ளான்.

1985. விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின்
றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டுங் காட்சியதே.

(கெண்டை மீன்களின் அறியாமைச் செயல் கண்டு கடல் நகைத்தது)

நஞ்சுண்ட கண்டனாகிய சிவபிரான் எழுந்தருளிய வெண்காட்டை அடுத்துள்ள தண்காட்டில் மடல்விரிந்த வளைந்த தாழைமலர் நிழலைக் குருகு என்றெண்ணி நீர்நிலையில் வாழும் கெண்டைமீன்கள் தாமரைப்பூவின் அடியில் மறைய அதனைக்கண்ட கடல் முத்துக்கள் நகைப்பது போல ஒளி விடும் காட்சியால் புலப்படுகிறது.

| | |
|---|---|
| **1986.** வேலைம– தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்<br>மாலைம– வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்<br>மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன் றூதர்<br>ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே. | கடல்நீர் நிரம்பிய குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த வெண்காட்டு இறைவன் திருவடிகளை மாலைகளாலும் நிறைந்த வளமையான சந்தனத்தாலும் வழிபட்ட மறையவராகிய சுவேதகேதுவின் உயிரைக் கவரவந்த இயமனை அச்சிவன் உதைத்து அழித்ததால் அந்த இயமனுடைய தூதர்கள் சிவபிரான் அடியவர் என்றால் அஞ்சி விலகுவர். |
| **1987.** தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்<br>ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்<br>பண்மொழியால் அவன்நாமம் பலவோதப் பசுங்கிள்ளை<br>வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும்<br>வெண்காடே. | தனது சடைமுடியோடு தண்மதியையும் வெய்ய அரவையும் தாங்கியவனும் ஒளி பொருந்திய மதி போன்ற நுதலை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவனும் ஆகிய சிவபிரான், உறையும் கோயில், பசிய கிளிகள் இனிய குரலால் இறைவன் திருப் பெயர்களை ஓதிக் கொண்டு வெண்முகில் சேரும் உயரிய கரியபனை மீது வீற்றிருக்கும் வெண்காடாகும். |
| **1988.** சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்<br>அக்கரைமே லசைத்தானும் அடைந்தயிரா வதம்பணிய<br>மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும்<br>வினைதுரக்கும்<br>முக்குளநன் குடையானு முக்கணுடை யிறையவனே.<br><br>முக்குள நீரில் நீராடி, தவமிருந்ததால் மெய்கண்டார் அவதாரம் நிகழ்கிறது . நமக்கு சிவஞானபோதம் கிடைக்கிறது. மெய்கண்டார் குருவுக்கே குருவாகும் அற்புதப்பதிகம் – தலம். | திருமாலுக்குச் சக்கராயுதம் அளித்தவனும், சலந்தராசுரனைப் பிளந்து அழித்தவனும், இடையில் எலும்புமாலை அணிந்துள்ளவனும், தன்னை அடைந்து ஐராவதம் பணிய அதற்கு மிகுதியான அருளைச் சுரப்பவனும், வினைகளைப் போக்கும் முக்குளங்களை உடையவனும் திருவெண்காட்டில் எழுந்தருளிய முக்கண்ண னாகிய இறையவனே ஆவான். |
| **1989.** பண்மொய்த்த வின்மொழியாள் பயமெய்த<br>மலையெடுத்த<br>உன்மத்த னுரநெரித்தன் றருள்செய்தா னுறைகோயில்<br>கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடன் முழங்க<br>விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும்<br>வெண்காடே. | பண்ணிசை போலும் இனிய மொழியினளாகிய பார்வதிதேவி அஞ்சுமாறு கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த பித்தனாகிய இராவணனின் மார்பை நெரித்துப்பின் அருள் செய்த சிவபிரான் உறையும் கோயில், கண்கள் பொருந்திய தோகையைக் கொண்ட நீலமயில்கள் நடனமாடவும், கடல் முழங்கவும், வானளாவிய பொழி–ல் வரிவண்டுகள் இசைபாடவும் விளங்கும் திருவெண்காடாகும். |

| | |
|---|---|
| **1990.** கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா<br>னெனவிவர்கள்<br>ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து<br>முணர்வரியான்<br>வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண்<br>காட்டானென்<br>றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. | தேன் பொருந்திய செந்தாமரையில் எழுந்தருளிய நான்முகன் கட–டைத் துயிலும் திருமால் ஆகியோர் தன்முனைப்பு நீங்கிச் சிறந்த அடியவர் ஆதற் பொருட்டு மிக உயர்ந்தும் ஆழ்ந்தும் அவர்கள் உணர்தற்கு அரியவனாகிய சிவபிரான் வெள்ளானை தவஞ் செய்து வழிபடும் நிலையில் சிறந்த திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ளான் என்று மனங்கசிந்து உருகாதவரின் ஞானத்தை மதியோம். |
| **1991.** போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி<br>பொருளென்னும்<br>பேதையர்க ளவர்பிறிமின் அறிவுடையீ ரிதுகேண்மின்<br>வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண்<br>காட்டானென்<br>றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. | போதிமரத்தின் அடியில் தவம் செய்யும் புத்தர்கள், அசோக மரநிழ–ல் தவம் செய்யும் சமணர்கள் கூறும் வன்புரைகளைப் பொருளாகக் கருதும் பேதையர்களைப் பிரிவீர்களாக. அறிவுடையோரே! இதனைக் கேளுங்கள். வேதியர்கள் விரும்பும் புகழுடைய பெரிய திருவெண்காட்டில் உறையும் ஈசன் பெயர்களை ஓதியவர் ஒரு தீங்கும் இலராவர் என்று உணருமின். |
| **1992.** தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான<br>சம்பந்தன்<br>விண்பொ–வெண் பிறைச்சென்னி விகிர்தனுறை<br>வெண்காட்டைப்<br>பண்பொ–செந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்<br>மண்பொ–ய வாழ்ந்தவர்போய் வான் பொ–யப்<br>புகுவாரே. | குளிர்ந்த பொழிலால் சூழப்பட்ட சண்பை நகர்த் தலைவனாகிய தமிழ்ஞானசம்பந்தன், விண்ணிற் பொ–யும் பிறை மதி சேர்ந்த சென்னியினை உடைய விகிர்தன் உறையும் திருவெண்காட்டைப் பண்ணிசை பொ–யப்பாடிய இச்செந்தமிழ் மாலை பத்தையும் வல்லவர், மண்பொ–ய வாழ்வதோடு வான்பொ–யவும் சென்று வாழ்வர். |

## 49. சீகாழி

பண் : சீகாமரம் — பதிக எண் : 49

| | |
|---|---|
| **1993.** பண்ணி னேர்மொழி மங்கை மார்பலர்<br>பாடி யாடிய வோசை நாடொறுங்<br>கண்ணி னேரயலே<br>பொ–யுங் கடற்காழிப்<br>பெண்ணி னேரொரு பங்கு டைப்பெரு<br>மானை யெம்பெரு மானென் றென்றுன்னும்<br>அண்ண லாரடியார்<br>அருளாலுங் குறைவிலரே. | பண்ணிசை போலும் மொழிபேசும் மங்கையர் பலர் பாடி ஆடிய ஓசை கண்ணெதிரே அமைந்து விளங்கும் கடலை அடுத்துள்ள காழிப்பதியில் பெண்பாகனாக விளங்கும் பெருமானையே எம் தலைவன் என்று பலகாலும் கூறும் சிவனடியார்கள் பொருளோடு அருளாலும் குறைவிலர். |

| | |
|---|---|
| **1994.** மொண்ட லம்பிய வார்தி ரைக்கடல்<br>மோதி மீதெறி சங்க வங்கமுங்<br>கண்டலம் புடைசூழ்<br>வயல்சேர் க–க்காழி<br>வண்ட லம்பிய கொன்றை யானடி<br>வாழ்த்தி யேத்திய மாந்தர் தம்வினை<br>விண்ட லங்கெளிதாம்<br>அதுநல் விதியாமே. | நீரை முகந்து ஒ–த்து வரும் நீண்ட திரைகள் மரக்கலங்களை மோதிக் கட––ருந்து எறியும் சங்குகள் தாழைமரங்கள் சூழ்ந்த வயல்களைச் சென்றடையும் பெருமைமிக்க காழிப்பகுதியில் வண்டுகள் ஒ–க்கும் கொன்றை மாலை சூடிய சிவபிரானின் திருவடிகளை வாழ்த்தித் துதிக்கும் மக்களின் வினைகள் நீங்குதல் எளிதாம். அதுவே நல்லூழையும் தருவதாகும். |
| **1995.** நாடெ லாமொளி யெய்த நல்லவர்<br>நன்று மேத்தி வணங்கு வார்பொழிற்<br>காடெ லாமலர்<br>தேன்துளிக்குங் கடற்காழித்<br>தோடு லாவிய காது ளாய்சுரி<br>சங்க வெண்குழை யானென் றென்றுன்னும்<br>வேடங் கொண்டவர்கள்<br>வினை நீங்கலுற்றாரே. | நாடு முழுவதும் சிறக்க வேண்டுமென்று நல்லவர்கள் நன்முறையில் ஏத்தி வணங்குவதும், நீண்ட சோலைகளில் எல்லாம் மலர்கள் தேன் துளித்து விளங்குவதுமான கடற்காழியுள் தோடணிந்த காதினர், வளைந்த சங்கவெண்குழைக் காதினர் என்று பலகாலும் சொல்– நினையும் சிவவேடம் தரித்தவர்கள் வினை நீங்கப் பெறுவர். |
| **1996.** மையி னார்பொழில் சூழ நீழ–ல்<br>வாச மார்மது மல்க நாடொறும்<br>கையி னார்மலர்<br>கொண்டெழுவார் க–க்காழி<br>ஐய னேயர னேயென் றாதரித்<br>தோதி நீதியு ளேநி னைப்பவர்<br>உய்யு மாறுலகில்<br>உயர்ந்தாரி னுள்ளாரே. | கரிய பொழில் சூழ்ந்ததும், நிழ–ல் மணம் கமழும் தேன் ஒழுகி நிறைவதும், அடியவர் கைகள் நிரம்ப மலர் பறித்துக் கொண்டு எழுவதுமான பெருமையால் மிக்க காழிப்பதியை அடைந்து ஐயனே 'அரனே' என்று ஆதரித்து முறையாக நினைப்பவர் உலகில் உயர்ந்தாரில் உள்ளவராவர். |
| **1997.** ம–க டுந்திரை மேனி மிர்ந்தெதிர்<br>வந்து வந்தொளிர் நித்திலம் விழக்<br>க–க டிந்தகையார்<br>மருவுங் க–க்காழி<br>வ–ய காலனை வீட்டி மாணிதன்<br>இன்னு யிரளித் தானை வாழ்த்திட<br>மெ–யுந் தீவினைநோய்<br>அவைமேவுவார் வீடே. | நிறைந்து விரைந்து வரும் அலைகளில் எதிர்வந்து வந்து ஒளிரும் முத்துக்கள் விழுந்து நிறைவதும், வறுமை நீங்கப் பொருள் பொழியும் கையினராகிய வள்ளன்மையுடையோர் வாழ்வதுமான காழியில் வ–ய காலனை அழித்து மார்க்கண்டேயர்க்கு இன்னுயிர் அளித்த இறைவனை வாழ்த்தத் தீவினைகள் மெ–யும். வீட்டின்பம் வந்துறும். |

| | |
|---|---|
| **1998.** மற்று மிவ்வுல கத்து ளோர்களும்<br>வானு ளோர்களும் வந்து வைகலுங்<br>கற்ற சிந்தையராய்க்<br>கருதுங் க–க்காழி<br>நெற்றி மேலமர் கண்ணி னானை<br>நினைந்தி ருந்திசை பாடு வார்வினை<br>செற்றமாந் தரெனத்<br>தெளிமின்கள் சிந்தையுளே. | இவ்வுலகில் உள்ளோரும் வானுலகில் வாழ்வோரும் வைகலும் வந்து கற்றறிந்த மனம் உடையவராய்க் கருதி வழிபடும் காழிப்பதியில் நெற்றிக் கண்ணனாகிய பெருமானை நினைந்து இருந்து இசைபாடுவோர் வினைகளைப் போக்கிக் கொண்ட மாந்தர் ஆவர் எனச் சிந்தையில் தெளிவீர்களாக. |
| **1999.** தான லம்புரை வேதிய ரொடு<br>தக்க மாதவர் தாந்தொ ழுப்பயில்<br>கான–ன் விரைசேர<br>விம்முங் க–க்காழி<br>ஊனு ளாருயிர் வாழ்க்கை யாயுற<br>வாகி நின்றவொ ருவனே யென்றென்<br>றானலங் கொடுப்பார்<br>அருள்வேந்த ராவாரே. | நன்மையும் பெருமையும் அமைந்த வேதியர்களோடு தக்க மாதவர்களும் தொழுது வணங்க, சோலைகளின் மணம் சேர்ந்து விம்மும் காழிப் பதியுள் ஊனுடம்புடையோர் உயிர் வாழ்தற்குப் பயனாய் அவர்க்கு உறவாகிநின்ற ஒருவனே என்று வாழ்த்தினால் நலம் கொடுக்கும் பெருமான் விளங்குகின்றான். அவனைத் தொழுவோர் அருள் வேந்தர் ஆவர். |
| **2000.** மைத்த வண்டெழு சோலை யாலைகள்<br>சா– சேர்வய லார வைகலுங்<br>கத்து வார்கடல் சென்<br>றுலவுங் க–க்காழி<br>அத்த னேயர னேய ரக்கனை<br>யன்ற டர்த்துகந் தாயு னகழல்<br>பத்தராய்ப பரவும்<br>பயனீங்கு நல்காயே. | வண்டுகள் இசைக்கும் கரிய சோலைகள், கரும்பு ஆலைகள் நெற்பயிர் வளரும் வயல் முத–யன நிறையுமாறு வைகலும் ஒ–க்கும் கடல்நீர் சென்றுலவும் காழிப்பதியுள் விளங்கும் தலைவனே அரனே இராவணனை அன்று அடர்த்து உகந்தவனே உன் திருவடிகளைப் பத்தராய்ப் பரவும் பயனை எங்கட்கு இம்மையிலேயே அருள்வாயாக. |
| **2001.** பரும ராமொடு தெங்கு பைங்கத<br>–ப்ப ருங்கனி யுண்ண மந்திகள்<br>கருவரா லுகளும்<br>வயல்சூழ் க–க்காழித்<br>திருவி னாயக னாய மாலொடு<br>செய்ய மாமலர்ச் செல்வ னாகிய<br>இருவர் காண்பரியா<br>னெனவேத்துத –ன்பமே. | பருத்த கடப்ப மரங்களோடு தென்னை ஆகியன செறிந்தனவும், பசிய வாழையினது பெரிய கனிகளைக் குரங்குகள் உண்பனவுமான சோலைகளும், கரிய வரால் மீன்கள் துள்ளும் வயல்களும் சூழ்ந்துள்ள காழிப்பதியுள் விளங்கும் இறைவனைத் திருமகள் நாயகனான திருமால் செந்தாமரை மலரோனாகிய நான்முகன் ஆகிய இருவரும் காண்பரியானாய் விளங்குவோன் என ஏத்துதல் இன்பம் தரும். |

| | |
|---|---|
| **2002.** பிண்ட முண்டுழல் வார்க ளும்பிரி<br>யாது வண்டுகி லாடை போர்த்தவர்<br>கண்டு சேரகிலார்<br>அழகார் க—க்காழித்<br>தொண்டை வாயுமை யோடு கூடிய<br>வேடனேசுட லைப்பொ டியணி<br>அண்டவா ணனென்பார்க்<br>கடையா வல்லல்தானே. | சோற்றுத் திரளை உண்டு திரிபவர்களும், சற்றும் நீங்காது வளவிய நூலாடையைப் போர்த்துழல்பவரும் ஆகிய புறச்சமயத்தினர், கண்டு சேரும் நல்லூழ் அற்றவர். "அழகிய பெருமிதத்துடன் விளங்கும் காழிப்பதியில் கோவைக்கனி போலச் சிவந்த வாயினை உடைய உமையம்மையோடு கூடியவனே, வேட்டுவக் கோலம் கொண்டவனே சுடலைப் பொடிபூசி உலகெங்கும் நிறைந்தவனே" என்பாரை அல்லல்கள் அடையா. |
| **2003.** பெயரெ னும்மிவை பன்னி ரண்டினு<br>முண்டெ னப்பெயர் பெற்ற வூர்திகழ்<br>கயலுலாம் வயல்சூழ்ந்<br>தழகார் க—க்காழி<br>நயன டன்கழ லேத்தி வாழ்த்திய<br>ஞான சம்பந்தன் செந்த மிழுரை<br>உயருமா மொழிவார்<br>உலகத் துயர்ந்தாரே. | பன்னிரண்டு பெயர்களை உடைய ஊர் எனப் புகழ் பெற்றதும், கயல்மீன்கள் உலாவும் வயல் சூழ்ந்து அழகு பெற்றதும் ஆகிய காழிப்பதியில் அழகிய நடனம் புரிந்து உறைவோனாகிய பெருமானின் திருவடிகளைப் போற்றி வாழ்த்திய ஞானசம்பந்தரின் இவ்வுரைமாலையை உயர்வு பெறுமாறு கருதி ஓதியவர் உலகத்தில் உயர்ந்தோர் ஆவர். |

## 50. திருவாமாத்தூர்

**பண் : சீகாமரம்** **பதிக எண் : 50**

| | |
|---|---|
| **2004.** குன்ற வார்சிலை நாண ராவரி<br>வாளி கூரெரி காற்றின் மும்மதில்<br>வென்றவா றெங்ஙனே<br>விடையேறும் வேதியனே<br>தென்ற லார்மணி மாட மாளிகை<br>சூளி கைக்கெதிர் நீண்ட பெண்ணைமேல்<br>அன்றில் வந்தணையும்<br>ஆமாத்தூ ரம்மானே. | தென்றல் ஆர்கின்ற அழகிய மாட மாளிகைகளின் உச்சிக்கு மேலாக நீண்டுயர்ந்த பனை மரத்தில் அன்றில் பறவை வந்து தங்கி மகிழும் ஆமாத்தூர் இறைவனே! விடைமீது ஏறிவரும் வேதியனே! மேருமலையை நீண்ட வில்லாகவும் வரிகளை உடைய பாம்பை நாணாகவும், மிக்க எரியை அம்பாகவும், காற்றை ஈர்க்காகவும் கொண்டு முப்புரங்களை வென்றது எவ்வாறு? |
| **2005.** பரவி வானவர் தான வர்பல<br>ருங்க லங்கிட வந்த கார்விடம்<br>வெருவ வுண்டுகந்த<br>அருளென்கொல் விண்ணவனே<br>கரவின் மாமணி பொன்கொ ழித்திழி<br>சந்து காரகி றந்து பம்பைநீர்<br>அருவி வந்தலைக்கும்<br>ஆமாத்தூ ரம்மானே. | மறைவில்லாமல் சிறந்த மணிகளையும் பொன்னையும் கொழித்துக் கொண்டு, தன்பால் வீழ்ந்த சந்தனம் கரிய அகில் ஆகியவற்றை அடித்துக் கொண்டு வரும் பம்பையாற்று நீர் ஒழுக்கு வந்து அலைக்கும் ஆமாத்தூர் அம்மானே! விண்ணவனே! தேவர்களும் அசுரர்களும் கலங்கும்படித் தோன்றிய கரியவிடத்தைக் கண்டு வெருவிப்பரவ அவ்விடத்தை நீர் உண்டு மகிழ்ந்த கருணைக்குக் காரணம் யாதோ? |

| | |
|---|---|
| **2006.** நீண்ட வார்சடை தாழ நேரிழை<br>பாட நீறுமெய் பூசி மாலயன்<br>மாண்ட வார்சுடலை<br>நடமாடு மாண்பதுவென்<br>பூண்ட கேழன் மருப்ப ராவிரி<br>கொன்றை வாள்வரி யாமை பூணென<br>ஆண்ட நாயகனே<br>ஆமாத்தூ ரம்மானே. | பன்றிக் கொம்பு, பாம்பு, விரிந்த கொன்றை மலர் மாலை, ஒளியும் வரியும் பொருந்திய ஆமை ஓடு ஆகியவற்றை அணிகலனாகப் பூண்டு ஆட்கொள்ளும் தலைவனே! ஆமாத்தூர் இறைவனே! நீண்ட சடை அவிழ்ந்து தொங்க, உமையம்மை பாட, திருநீற்றை மெய்யில்பூசித் திருமால் பிரமன் முதலானோர் மாண்ட கடைஊழியில் நீண்ட சுடலையில் நடமாடும் மாட்சிக்குக் காரணம் யாதோ? |
| **2007.** சே–ன் நேரன கண்ணி வெண்ணகை<br>மான்வி ழித்திரு மாதைப் பாகம்வைத்<br>தேல மாதவ<br>நீமுயல்கின்ற வேடமிதென்<br>பா– னேர் மொழி மங்கை மார்நட<br>மாடி யின்னிசை பாட நீள்பதி<br>ஆலை சூழ்கழனி<br>ஆமாத்தூ ரம்மானே. | பாலையொத்த இனிய மொழிபேசும் மங்கையர் நடனம் ஆடி இன்னிசை பாட, கரும்பு ஆலைகள் சூழ்ந்த வயல் வளம் உடைய நீண்ட பதியான ஆமாத்தூர் அம்மானே! **சேல்போன்ற கண்ணையும்** வெண்ணகையையும் **மான்போன்ற விழியையும்** உடைய அழகிய உமையவளைப் பாகமாக வைத்துக் கொண்டு இயன்ற பெரியதவத்தை மேற்கொண்டுள்ள உன் வேடம் பொருந்துமாறு எங்ஙனம்? |
| **2008.** தொண்டர் வந்து வணங்கி மாமலர்<br>தூவி நின்கழ லேத்து வாரவர்<br>உண்டியால் வருந்த<br>விரங்காத தென்னைகொலாம்<br>வண்ட லார்கழ னிக்க லந்தும<br>லர்ந்த தாமரை மாதர் வாண்முகம்<br>அண்டவாணர் தொழும்<br>ஆமாத்தூ ரம்மானே. | வண்டல் மண் பொருந்திய வயல்களில் நெற்பயிரோடு கலந்து மலர்ந்துள்ள தாமரைகள் மாதர்களின் ஒளிபொருந்திய முகத்தைப் போலப் பூக்கும் ஆமாத்தூரில் அண்டங்களில் வாழும் தேவர் முத–யோரால் வணங்கப்பெறும் இறைவனே! மாமலர் தூவி நின் திருவடிகளை வணங்கிப் போற்றும் தொண்டர்கள் உணவின்மையால் வருந்தவும், அதற்கு இரங்காததற்குக் காரணம் யாதோ? |
| **2009.** ஓதி யாரண மாயநுண் பொருள்<br>அன்று நால்வர்முன் கேட்க நன்னெறி<br>நீதி யாலநீழல்<br>உரைக்கின்ற நீர்மையதென்<br>சோதி யேசுட ரேசு ரும்பமர்<br>கொன்றை யாய்திரு நின்றி யூருறை<br>ஆதியே யரனே<br>ஆமாத்தூ ரம்மானே. | சோதியே! சுடரே! வண்டுகள் மொய்க்கும் கொன்றை மாலையை அணிந்தவனே! திருநின்றியூரில் விளங்கும் முதல்வனே! அரனே! ஆமாத்தூர் இறைவனே! வேதங்களை ஓதி அவற்றின் நுண் பொருள் அறியாது மயங்கிய சனகாதியர் அன்று ஐயம் கேட்க அவர்கட்கு ஞானமார்க்கத்தை முறையோடு ஆல் நிழ––ருந்து உரைத்தருளிய உன் தகைமைக்குக் காரணம் யாதோ? |

| | |
|---|---|
| **2010.** மங்கை வாணுதன் மான்ம னத்திடை<br>வாடி யூடம ணங்க மழ்சடைக்<br>கங்கையா ளிருந்த<br>கருத்தாவ தென்னைகொலாம்<br>பங்க யமது வுண்டு வண்டிசை<br>பாட மாமயி லாட விண்முழ<br>வங்கையா லதிர்க்கும்<br>ஆமாத்தூ ரம்மானே. | தாமரை மலரிலுள்ள தேனை உண்டு வண்டுகள் இசைபாடப் பெரிய மயில்கள் நடனம் ஆட, விண் மேகங்களாகிய முழவை அழகிய கையால் ஒ–க்கும் இயற்கை அழகுடைய ஆமாத்தூர் அம்மானே! மங்கையாகிய **ஒளிநுதலை உடைய** மான்போன்ற பார்வதிதேவி வாடி ஊட மணம் கமழும் சடையில் கங்கையாளை வைத்துள்ளதன் காரணம் யாதோ? |
| **2011.** நின்ற டர்த்திடு மைம்பு லன்னிலை<br>யாத வண்ண நினைந்து ளத்திடை<br>வென்றடர்த் தொருபான்<br>மடமாதை விரும்புதலென்<br>குன்றெ டுத்தநி சாச ரன்திரள்<br>தோளி ருபது தானெ ரிதர<br>அன்றடர்த் துகந்தார்<br>ஆமாத்தூ ரம்மானே. | அன்று கயிலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் திரண்ட இருபது தோள்களும் நெரியுமாறு அடர்த்துப் பின் அவன் பால் கருணை காட்டியவனே! ஆமாத்தூர் இறைவனே! மாறி நின்று மயக்கும் ஐம்புலன்களை மனத்தால் வென்று அவித்தும் ஒருபாகத்தே இளம் பெண்ணை விரும்பி ஏற்றுள்ளது யாது காரணத்தாலோ? |
| **2012.** செய்ய தாமரை மே– ருந்தவ<br>னோடு மாலடி தேட நீண்முடி<br>வெய்ய வாரழலாய்<br>நிமிர்கின்ற வெற்றிமையென்<br>தைய லாளொடு பிச்சைக் கிச்சை<br>தயங்கு தோலரை யார்த்த வேடங்கொண்<br>டைய மேற்றுகந்தார்<br>ஆமாத்து ரம்மானே. | உமையம்மையோடு பிச்சையேற்பதற்கு இச்சையுடையவராய் விளங்கும், தோலாடையை இடையில் கட்டிய வேடம் மேற்கொண்டு மாதரார் இல்லங்களில் ஐயம் ஏற்று உகந்தவனே! ஆமாத்தூர் இறைவனே! செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகன், திருமால் ஆகியோர் முடியையும் அடியையும் தேட அவர்கட்கு ஒளிக்கும் வகையில் கொடிய அழலுருவாய் நிமிர்ந்த வெற்றிக்குக் காரணம் யாதோ? |
| **2013.** புத்தர் புன்சம ணாதர் பொய்ம்மொழி<br>நூல்பி டித்தலர் தூற்ற நின்னடி<br>பத்தர் பேணநின்ற<br>பரமாய பான்மையதென்<br>முத்தை வென்ற முறுவ லாளுமை<br>பங்க னென்றிமை யோர்ப ரவிடும்<br>அத்தனே யரியார்<br>ஆமாத்தூ ரம்மானே. | "முத்தைவென்ற முறுவலை உடைய உமையம்மை பங்கனே!" என்று தேவர்கள் பரவிப் போற்றும் தலைவனே! காண்டற்கு அரியவனே! ஆமாத்தூர் இறைவனே! புத்தர்களும் புல்–ய சமணர்களாகிய அறிவி–களும் பொய்ம் மொழியும் நூல்களைப் பிடித்துக் கொண்டு பழிக்கவும், அவற்றைப் பொருட்படுத்தாது பத்தர்களால் விரும்பப்படும் மேலாந்தன்மை உடையன் ஆதற்குக் காரணம் யாதோ? |

| | |
|---|---|
| 2014. வாடல் வெண்டலை மாலை யார்த்தும<br>யங்கி ருள்ளெரி யேந்தி மாநடம்<br>ஆடன் மேயதென்னென்<br>ஆமாத்தூ ரம்மானைக்<br>கோட னாக மரும்பு பைம்பொழிற்<br>கொச்சை யாரிறை ஞான சம்பந்தன்<br>பாடல் பத்தும்வல்லார்<br>பரலோகஞ் சேர்வாரே. | தசை வாடிய வெண்டலை மாலையைக் கட்டிக் கொண்டு நள்ளிருளில் எரிஏந்தி ஆடுவதன் காரணம் யாதோ என்று ஆமாத்தூர் இறைவனைக் காந்தள் நாகம் போல அலரும் பசிய பொழில் சூழ்ந்த கொச்சை வயத்தலைவனாகிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர் மேலான வீட்டுலகம் அடைவர். |

## 51. திருக்களர்
## (அடைந்தார்க்கு அருளும் நாதர் திருக்கோயில்)

பண் : சீகாமரம் பதிக எண் : 51

| | |
|---|---|
| 2015. நீரு ளார்கயல் வாவி சூழ்பொழில்<br>நீண்ட மாவய லீண்டு மாமதில்<br>தேரினார் மறுகில்<br>விழாமல்கு திருக்களருள்<br>ஊரு ளாரிடு பிச்சை பேணும்<br>ஒருவ னேயொளிர் செஞ்ச டைம்மதி<br>ஆரநின் றவனே<br>அடைந்தார்க் கருளாயே. | நீருட் பொருந்திய கயல் மீன்களோடு திகழும் வாவிகளும், பொழிலும், நீண்ட வயல்களும் நெருங்கிய மதில்களும் தேரோடும் வீதிகளும் சூழ்ந்துள்ள, விழாக்கள் பல நிகழும் திருக்களரில் ஊரவர் இடும் பிச்சையை விரும்பி ஏற்பவனாய் விளங்கும் இறைவனே! ஒளிபொருந்திய பிறைமதியைச் செஞ்சடை மீது பொருந்த அணிந்து நிற்பவனே! உன்னை அடைந்த அன்பர்க்கு அருள் புரிவாயாக. |
| 2016. தோளின் மேலொளி நீறு தாங்கிய<br>தொண்டர் வந்தடி போற்ற மிண்டிய<br>தாளினார் வளருந்<br>தவமல்கு திருக்களருள்<br>வேளி னேர்விச யற்க ருள்புரி<br>வித்த காவிரும் பும்ம டியாரை<br>ஆளுகந் தவனே<br>அடைந்தார்க் கருளாயே. | தோளின்மேல் ஒளிநீறு பூசிய தொண்டர்கள் அடி போற்றப் பெருமிதம் கொண்ட திருவடி உடையனவாய்த் திருக்களருள் எழுந்தருளி யவனே! முருகவேட்கு நிகரான அருச்சுனனுக்கு அருள்புரிந்த வித்தகனே! தன்னை விரும்பும் அடியவரை ஆளாகக் கொண்டு உகந்தவனே! உன்னை அடைந்த அன்பர்க்கு அருள் புரிவாயாக. |
| 2017. பாட வல்லநன் மைந்த ரோடு<br>பனிம லர்பல கொண்டு போற்றிசெய்<br>சேடர்வாழ் பொழில்சூழ்<br>செழுமாடத் திருக்களருள்<br>நீட வல்ல நிமல னேயடி<br>நிரைக ழல்சிலம் பார்க்க மாநடம்<br>ஆடவல் லவனே<br>அடைந்தார்க் கருளாயே. | பாடவல்ல நன்மக்களோடு நறுமலர்கொண்டு போற்றும் உயர்ந்தோர் வாழும் பொழில் சூழ்ந்த செழுமையான மாட வீடுகளைக் கொண்டுள்ள திருக்களருள் பலகாலமாக எழுந்தருளியுள்ள நிமலனே! கழலும் சிலம்பும் ஆரவாரிக்க நடம் புரியவல்ல பெருமானே! உன்னைச் சரணாக அடைந்தவர்க்கு அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2018.** அம்பி னேர்தடங் கண்ணி னாருடன்<br>ஆட வர்பயில் மாட மாளிகை<br>செம்பொ னார் பொழில்<br>சூழ்ந்தழகாய திருக்களருள்<br>என்பு பூண்டதோர் மேனி யெம்மிறைவா<br>விணையடி போற்றி நின்றவர்க்<br>கன்பு செய்தவனே<br>அடைந்தார்க் கருளாயே. | வாள் போன்று கூரிய விசாலமான கண்களை உடைய மகளிரோடு ஆடவர் மகிழும் செம்பொன் நிறைந்த மாட மாளிகைகளோடு பொழில் சூழ்ந்து அழகுற விளங்கும் திருக்களருள் என்புமாலை பூண்ட மேனியை உடைய எம் இறைவனே! உன் திருவடிகளைப் போற்றி நிற்பாரிடம் அன்பு செய்பவனே! உன்னை அடைந்தார்க்கு அருள் புரிவாயாக. |
| **2019.** கொங்கு லாமலர்ச் சோலை வண்டினங்<br>கெண்டி மாமது வுண்டி சைசெயத்<br>தெங்கு பைங்கமுகம்<br>புடைசூழ்ந்த திருக்களருள்<br>மங்கை தன்னொடுங் கூடிய மண<br>வாள னேபிணை கொண்டொர் கைத்தலத்<br>தங்கை யிற்படையாய்<br>அடைந்தார்க் கருளாயே. | தேன்நிறைந்த மலர்ச்சோலைகளில் வண்டினங்கள் மகரந்தங்களைக் கெண்டி மது உண்டு இசை பாட, தென்னை பசிய கமுகுகள் புடைசூழ்ந்து விளங்கும் திருக்களருள் எழுந்தருளிய மங்கையொடும் கூடிய மணவாளனே! மானையும் மழுவையும் அழகிய கைகளில் கொண்டுள்ளவனே! உன்னை அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |
| **2020.** கோல மாமயில் ஆலக் கொண்டல்கள்<br>சேர்பொ ழிற்குல வும்வ ய–டைச்<br>சே–ளங் கயலார்<br>புனல்சூழ்ந்த திருக்களருள்<br>நீலம் மேவிய கண்ட னேநிமிர்<br>புன்ச டைப்பெரு மானெ னப்பொ–<br>ஆல நீழலுளார்<br>அடைந்தார்க் கருளாயே. | அழகிய மயில்கள் ஆட மேகங்கள் தங்கிய பொழில் சூழ்ந்து விளங்குவதும் வயல்களில் சேலும் கயலும் சேர்ந்த நீர் சூழ்ந்ததும் ஆன திருக்களருள் எழுந்தருளிய நீலகண்டனே! நிமிர்ந்த சடையை உடைய பெருமானே! என்று அடியவர் போற்ற ஆல நீழ–ல் எழுந்தருளியவனே! அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |
| **2021.** தம்ப லம்மறி யாத வர்மதில்<br>தாங்கு மால்வரை யாலழ லெழத்<br>திண்பலங் கெடுத்தாய்<br>திகழ்கின்ற திருக்களருள்<br>வம்ப லர்மலர் தூவி நின்னடி<br>வானவர் தொழக் கூத்து கந்துபேர்<br>அம்பலத் துறைவாய்<br>அடைந்தார்க் கருளாயே. | தங்கள் பலத்தை அறியாத அசுரர்களின் முப்புரங்களை, உலகைத் தாங்கும் மேருமலையாகிய வில்லால் அழல் எழுமாறு செய்து அப்புரங்களின் திண்ணிய பலத்தைக் கெடுத்தவனே! திகழ்கின்ற திருக்களருள் புதிய மலர்களைத் தூவி வானவர் நின் திருவடிகளைப் போற்றப் பேரம்பலத்தில் உறையும் பெருமானாய் விளங்குபவனே! உன்னை அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2022.** குன்ற டுத்தநன் மாளி கைக்கொடி<br>மாட நீடுயர் கோபு ரங்கண் மேல்<br>சென்ற டுத்துயர்வான்<br>மதிதோயுந் திருக்களருள்<br>நின்ற டுத்துயர் மால்வ ரைத்திரள்<br>தோளி னாலெடுத் தான்றன் நீள்முடி<br>அன்றடர்த் துகந்தாய்<br>அடைந்தார்க் கருளாயே. | மலை போன்றுயர்ந்த நல்ல மாளிகைகளில் கட்டப்பட்ட கொடிகள் மாடங்களினும் நீண்டுயர்ந்த கோபுரங்களையும் கடந்து மேற்சென்றுயர்ந்து வானிலுள்ள மதியைப் பொருந்தும் திருக்களருள், நிலையாக நின்று பொருந்தி உயர்ந்த பெரிய கயிலை மலையைத் திரண்ட தோள் வ–யால் எடுத்த இராவணனின் நீண்ட முடிகளை அன்று அடர்த்துப் பின் அவனை உகந்து விளங்கும் பெருமானே! உன்னை அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |
| **2023.** பண்ணி யாழ்பயில் கின்ற மங்கையர்<br>பாட லாடலொ டார வாழ்பதி<br>தெண்ணி லாமதியம்<br>பொழில்சேருந் திருக்களருள்<br>உண்ணி லாவிய வொருவ னேயிரு<br>வர்க்கு நின்கழல் காட்சி யாரழல்<br>அண்ண லாயவெம்மான்<br>அடைந்தார்க் கருளாயே. | யாழில் இசைகூட்டிப் பயில்கின்ற மங்கையர் பாடியும் ஆடியும் மகிழ்கின்ற பதியாய்த், தெளிந்த நிலவைத் தரும் மதியைத் தோயுமாறு உயர்ந்த பொழில் சூழ்ந்த திருக்களருள் விளங்கும் ஆலயத்துள் எழுந்தருளிய ஒப்பற்றவனே! திருமால், பிரமர் நீண்ட திருவடி, திருமுடி தேடுமாறு அரிய அழலாய் நின்ற எம்மானே! அடைந்தவர்க்கு நின் திருவடித் தொண்டினை அருள் புரிவாயாக. |
| **2024.** பாக்கி யம்பல செய்த பத்தர்கள்<br>பாட்டொ டும்பல பணிகள் பேணிய<br>தீக்கியல் குணத்தார்<br>சிறந்தாருந் திருக்களருள்<br>வாக்கின் நான்மறை யோதி னாயமண்<br>தேரர் சொல்–ய சொற்க ளானபொய்<br>ஆக்கி நின்றவனே<br>யடைந்தார்க் கருளாயே. | நல்வினைகள் பல செய்த பத்தர்கள் பாடல்கள் பல பாடுவதோடு பணிகள் பலவற்றை விரும்பிச் செய்யவும், எரியோம்பும் இயல்பிரான அந்தணருட் சிறந்தார் வாழவும் விளங்கும் திருக்களருள் வாக்கினால் வேதங்களை அருளியவனே! சமணர் புத்தர் சொல்லும் உரைகளைப் பொய்யாக்கி எழுந்தருளி விளங்குபவனே! அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |
| **2025.** இந்து வந்தெழு மாட வீதியெ<br>ழில்கொள் காழிந் நகர்க் கவுணியன்<br>செந்து நேர்மொழியார்<br>அவர்சேருந் திருக்களருள்<br>அந்தி யன்னதொர் மேனி யானை<br>அமரர் தம்பெரு மானை ஞானசம்<br>பந்தன் சொல்–வை<br>பத்தும்பாடத் தவமாமே. | திங்களைத் தோய்ந்தெழும் மாடங்களைக் கொண்ட வீதியினை உடைய அழகிய காழி நகரில் கவுணியர் குடியில் தோன்றிய ஞானசம்பந்தன், செந்து என்ற பண்ணை ஒத்த மொழி பேசும் மகளிர் பலர் வாழும் திருக்களருள் அந்தி வானம் போன்ற செம்மேனியனை, அமரர் தலைவனைப் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடத் தவம் சித்திக்கும். |

திருக்களரில் நான்கு வேதங்களுக்கும் நான்கு பாடசாலைகள் இருந்ததாக வரலாறு உண்டு. சம்பந்தர் கூறியுள்ளது போல இன்றும் மிகப்பெரிய மதில்கள் உள்ளன.

## 52. திருக்கோட்டாறு

பண் : சீகாமரம் பதிக எண் : 52

**2026.** கருந்த டங்கண்ணின் மாத ராரிசை
செய்யக் காரதிர் கின்ற பூம்பொழிற்
குருந்த மாதவியின்
விரைமல்கு கோட்டாற்றில்
இருந்த எம்பெரு மானை யுள்கி
இணைய டிதொழு தேத்தும் மாந்தர்கள்
வருந்து மாறறியார்
நெறிசேர்வர் வானூடே.

கரிய பெரிய கண்களை உடைய மகளிர் இசை பாடவும், அதற்கேற்ப மேகங்கள் முழவொ–போல ஒ–க்கவும், அழகிய பொழி–லுள்ள குருந்தம் மாதவி ஆகியவற்றின் மணம் நிறையவும் விளங்கும் கோட்டாற்றில் வீற்றிருந்த பெருமானை நினைந்து அவருடைய இணையடி தொழுதேத்தும் மாந்தர்கள் வருந்தார். விண் வழியாக வீட்டுநெறியை எய்துவர்.

**2027.** நின்று மேய்ந்து நினைந்து மாகரி
நீரொ டும்மலர் வேண்டி வான்மழை
குன்றி னேர்ந்துகுத்திப்
பணிசெய்யுங் கோட்டாற்றுள்
என்றும் மன்னிய எம்பி ரான்கழல்
ஏத்தி வானர சாள வல்லவர்
பொன்று மாறறியார்
புகழார்ந்த புண்ணியரே.

பெரிய யானை நின்று மேய்ந்து நினைந்து நீர் மலர் வேண்டி வான்மழை பெறுதற் பொருட்டு மலைபோல எழுந்து, மேகங்களைக் குத்திக் பணிசெய்யும் கோட்டாற்றுள் எல்லாம் நிலை பெற்றிருக்கும் எம்பிரான் திருவடிகளை ஏத்தி வானுலகை அரசாள வல்லவர் அழியார். அவர் புகழ் வாய்ந்த புண்ணியர் ஆவார்.

**2028.** விரவி நாளும் விழா விடைப்பொ–
தொண்டர் வந்து வியந்து பண்செயக்
குரவ மாரு
நீழற்பொழின்மல்கு கோட்டாற்றில்
அரவ நீள்சடை யானை யுள்கிநின்
றாத ரித்துமுன் அன்பு செய்தடி
பரவு மாறுவல்
லார்பழிபற் றறுப்பாரே.

நாள்தோறும் நடைபெறும் விழாக்களில் கலந்து கொண்டு பொ–வு எய்தும் தொண்டர் புகழ்ந்து பாட, குரா மரங்களின் பொழில் நீழ–ல் அமைந்த கோட்டாற்றில் விளங்கும் பாம்பு அணிந்த நீண்ட சடையுடையவனை நினைந்து, ஆதரவுடன் அன்பு செய்து பரவுவார், பழியும் பற்றும் நீங்கப் பெறுவர்.

**2029.** அம்பி னேர்விழி மங்கை மார்பலர்
ஆட கம்பெறு மாட மாளிகைக்
கொம்பி னேர்துகி
–ன்கொடியாடு கோட்டாற்றில்
நம் பனேநட னேந லந்திகழ்
நாதனே யென்று காதல் செய்தவர்
தம்பி னேர்ந்தறி
யார்தடுமாற் றவல்வினையே.

அம்பு போன்ற விழியை உடைய மங்கையர் ஆடுமிடமாகக் கொண்ட மாட மாளிகைகளில் கொம்பிற் கோத்து உயர்த்திய துகிற்கொடிகள் ஆடும் கோட்டாற்றில் விளங்கும் நம்பனே! நடனம் புரிபவனே! நன்மைகள் பலவும் வாய்ந்த நாதனே! என்று அன்பு செய்தவர், தமக்குப் பின் தடுமாற்றம் வல்வினைகள் வருவதை அறியார்.

**2030.** பழைய தம்மடி யார்து திசெயப்
பாரு ளோர்களும் விண்ணு ளோர்தொழக்
குழலு மொந்தை
விழாவொ– செய்யுங்கோட் டாற்றில்
கழலும் வண்சிலம் பும்மொ –செயக்
கானி டைக்கண மேத்த வாடிய
அழக னென்றெழுவார்
அணியாவர் வானவர்க்கே.

பழமையான தம் அடியவர் துதி செய்யவும், மண்ணுளோர், விண்ணுளோர் தொழவும் குழல் மொந்தை முத–யன விழாஒ– செய்யவும் விளங்கும் கோட்டாற்றில் கழலும் வளமான சிலம்பும் ஒ–க்கக் கானகத்தே பேய்க்கணம் ஏத்த ஆடிய அழகன் என்று சிவபெருமானை வணங்கப் போதுவார், வானவர்க்கு அணியாவர்.

| | |
|---|---|
| **2031.** பஞ்சின் மெல்லடி மாத ராடவர்<br>பத்தர் சித்தர்கள் பண்பு வைகலும்<br>கொஞ்சி யின்மொழியால்<br>தொழின்மல்கு கோட்டாற்றில்<br>மஞ்ச னேமணி யேம ணிமிடற்<br>றண்ண லேயென வுண்ணெ கிழ்ந்தவர்<br>துஞ்சு மாறறியார்<br>பிறவாரித் தொன்னிலத்தே. | பஞ்சு போன்ற மெல்–ய அடிகளை உடைய மாதர்கள், ஆடவர்கள், பத்தர்கள், சித்தர்கள் ஆகியோர் இறைவனுடைய பண்புகளை நாள்தோறும் இன்மொழியால் தொழுகின்ற கோட்டாற்றில் மைந்தனே! மணியே! மணிமிடற்று அண்ணலே என்று உள்நெகிழ்ந்து வணங்குவோர் இனி இறத்தல் பிறத்தல் இலராவர். |
| **2032.** கலவ மாமயி லாளொர் பங்கனைக்<br>கண்டு கண்மிசை நீர்நெ கிழ்த்திசை<br>குலவு மாறுவல்லார்<br>குடிகொண்ட கோட்டாற்றில்<br>நிலவு மாமதி சேர்ச டையுடை<br>நின்ம லாவென வுன்னு வாரவர்<br>உலவு வானவரின்<br>உயர்வாகுவ துண்மையதே. | தோகையை உடைய மயில் போன்றவளாகிய பார்வதிதேவியின் பங்கனைக் கண்டு கண்ணீர் நெகிழ்ந்து இசையோடு தோத்திரம் சொல்லுவார் குடி கொண்டுள்ள கோட்டாற்றில், நிலாவொளி வீசும் பிறைமதி போன்ற சடையை உடைய நின்மலனே! என அவனை நினைவார் வானில் உலவுகின்ற வானவர்களினும் உயர்வாகுவது உண்மை. |
| **2033.** வண்ட லார்வயற் சா– யாலைவ<br>ளம்பொ –ந்திட வார்பு னற்றிரை<br>கொண்ட லார்கொணர்ந்<br>தங்குலவுந்திகழ் கோட்டாற்றில்<br>தொண்டெ லாந்துதி செய்ய நின்ற<br>தொழில னேகழ லால ரக்கனை<br>மிண்டெ லாந்தவிர்த்<br>தென்னுகந்திட்ட வெற்றிமையே. | வண்டல் மண் பொருந்திய நெல்வயல்களும் கரும்பாலைகளும் வளம் பொ–ய மிக்க தண்ணீரை மேகங்கள் கொண்டு வந்து தரும் கோட்டாற்றில் தொண்டர்களெல்லாம் துதிக்க ஐந்தொழில் புரிபவனே! திருவடியால் இராவணனின் வ–மையைக் கெடுத்துப் பின் அவனை உகந்திட்ட வெற்றிமை யாதோ? |
| **2034.** கருதி வந்தடி யார்தொ ழுதெழக்<br>கண்ண னோடயன் றேடவானையின்<br>குருதி மெய்கலப்ப<br>உரிகொண்டு கோட்டாற்றில்<br>விருதி னான்மட மாது நீயும்வி<br>யப்பொ டுமுயர் கோயில் மேவிவெள்<br>ளருதுகந் தவனே<br>யிரங்காயுன தின்னருளே. | அடியவர் கருதி வந்து தொழுது எழவும், கண்ணனோடு பிரமன் தேடவும், ஆனையின் குருதி மெய்யில் கலக்குமாறு அதன் தோலைப் போர்த்துக் கோட்டாற்றில் உயரிய புகழுரை களோடு உமையம்மையும் நீயும் வியப்போடு உயரிய கோயி–ல் எழுந்தருளி வெள்ளிய எருதை வாகனமாக உகந்த பெருமானே! உனது இனிய அருளை வழங்க இரங்குவாயாக. |

| | |
|---|---|
| **2035.** உடையி லாதுழல் கின்ற குண்டரும்<br>ஊண ருந்தவத் தாய சாக்கியர்<br>கொடையி லாமனத்தார்<br>குறையாருங் கோட்டாற்றில்<br>படையி லார்மழு வேந்தி யாடிய<br>பண்ப னேயிவ ரென்கொ லோநுனை<br>அடைகி லாதவண்ணம்<br>அருளாயுன் னடியவர்க்கே. | உடை உடுத்தாது திரியும் சமணரும், ஊண் அருந்தாத தவத்தைப் புரியும் புத்தரும் உலோபியின் மனம் போன்றவர். அவர்கள் கூறும் குறை உரைபொருந்தக் கோட்டாற்றில் படைக்கலமாக மழுவை ஏந்தி ஆடிய பண்பனே! சமண பௌத்தர்கள் உன்னை அடையாமைக் குரிய காரணம் யாது ? அதனை அடியவர்க்குக் கூறியருளுக. |
| **2036.** கால னைக்கழ லாலு தைத்தொரு<br>காம னைக்கன லாகச் சீறிமெய்<br>கோல வார்குழலாள்<br>குடிகொண்ட கோட்டாற்றில்<br>மூல னைமுடி வொன்றி லாதவெம்<br>முத்த னைப்பயில் பந்தன் சொல்–ய<br>மாலை பத்தும்வல்லார்க்<br>கெளிதாகும் வானகமே. | காலனைக் கழலணிந்த காலால் உதைத்தும், காமனை நெற்றிக் கண்ணால் கனலாகுமாறு சீறியும், மேனியின் ஒரு பாதியில் அழகிய நீண்ட கூந்தலை உடைய உமையம்மையோடு கூடிக் குடிகொண்டுள்ள கோட்டாற்றில், எல்லா பொருள்கட்கும் மூல காரணனை முடிவில்லாத முத்தனை ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இத்தமிழ் மாலை பத்தையும் வல்லவர்க்கு வானகம் எளிதாகும். |

## 53. திருப்புறவார்பனங்காட்டூர்

**பண் : சீகாமரம்** **பதிக எண் : 53**

| | |
|---|---|
| **2037.** விண்ண மர்ந்தன மும்ம தில்களை<br>வீழ வெங்கணை யாலெய் தாய்விரி<br>பண்ணமர்ந் தொ–சேர்<br>புறவார் பனங்காட்டூர்ப்<br>பெண்ண மர்ந்தொரு பாக மாகிய<br>பிஞ்ஞ காபிறை சேர்நு த–டைக்<br>கண்ணமர்ந் தவனே<br>கலந்தார்க் கருளாயே. | வானில் உலவும் வன்மை உடைய முப்புரங்களைக் கொடிய கணையால் எய்து வீழ்த்தினாய். இசை பாடுவோரின் விரிந்த பண்ணிசையொ– சேர்ந்துள்ள புறவார்பனங்காட்டூரில் உமையொரு பாகனாக வீற்றிருக்கும் பிஞ்ஞகா! பிறைசேரும் நெற்றியில் கண் பொருந்தியவனே! உன்னை நேசித்தவர்கட்கு அருள்வாயாக. |

பனை மரத்தை தலமரமாகப் பெற்றதால் பனங்காட்டூர். புறாவின் பொருட்டுத்தன் தசையை அரிந்திட்ட சிபிச்சக்கரவர்த்திக்கு அருள்செய்த பதியாதலால் புறவார்பனங்காட்டூர்.

| | |
|---|---|
| **2038.** நீடல்கோடல் அலரவெண் முல்லை<br>நீர்ம லர்நிரைத் தாத ளஞ்செயப்<br>பாடல் வண்டறையும்<br>புறவார் பனங்காட்டூர்த்<br>தோடி லங்கிய காத யன்மின்<br>துளங்க வெண்குழை துள்ள நள்ளிருள்<br>ஆடுஞ் சங்கரனே<br>அடைந்தார்க் கருளாயே. | நீண்ட காந்தள் மலரவும், வெண்முல்லை நீர்மலர் ஆகியனவற்றிலுள்ள மகரந்தங்களை வரிசையாகச் சென்று உண்ணும் மலர்களின் மகரந்தங்களை உப்பளம் போலக் குவித்து வண்டுகள் இசை பாடும் புறவார் பனங்காட்டூரில், தோடணிந்த காதின் அயலே மின்னொளிதரும் வெண்குழை ஒளிவிட நள்ளிருளில் ஆடும் சங்கரனே! உன்னை அடைந்தார்க்கு அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2039.** வாளை யுங்கய லும்மிளிர் பொய்கை<br>வார்பு னற்கரை யருகெ லாம்வயற்<br>பாளை யொண்கமுகம்<br>புறவார் பனங்காட்டூர்ப்<br>பூளை யுந்நறுங் கொன்றை யும்மத<br>மத்த மும்புனை வாய்க ழ–ணைத்<br>தாளையே பரவுந்<br>தவத்தார்க் கருளாயே. | வாளையும், கயலும் மிளிரும் பொய்கைகளையும் நீண்ட வயல்களில் நீர்க்கரைகளிலெல்லாம் பாளைகளை உடைய சிறந்த கமுக மரங்களையும் கொண்டுள்ள புறவார் பனங்காட்டூரில், பூளைப்பூ, நறுங்கொன்றை, ஊமத்தம் மலர் ஆகியவற்றை அணிந்து உன் கழல்களை அணிந்த இரண்டு திருவடிகளைப் பரவும் தவமுடையார்க்கு அருள்புரிவாயாக. |
| **2040.** மேய்ந்தி ளஞ்செந்நென் மென்க திர்கவ்வி<br>மேற்ப டுக–ன் மேதி வைகறை<br>பாய்ந்த தண்பழனப்<br>புறவார் பனங்காட்டூர்<br>ஆய்ந்த நான்மறை பாடி யாடும்<br>அடிக ளென்றென் றரற்றி நன்மலர்<br>சாய்ந்தடி பரவுந்<br>தவத்தார்க் கருளாயே. | வைகறைப் போதில் எருமைகள் இளஞ்செந்நெல் மென்கதிர்களை மேய்ந்து வயிறு நிறைதலால் தண்ணிய நீர்நிலைகளில் சென்று குளிக்கும் புறவார் பனங்காட்டூரில் ஆராய்ந்து கூறிய நான்மறைகளைப் பாடி ஆடும் அடிகளே! என்று பலமுறை சொல்– நல்ல மலர்களைத் தூவி வீழ்ந்து அடி பரவும் தவத்தினர்க்கு அருள்புரிவாயாக. |
| **2041.** செங்க யல்லொடு சேல்செ ருச்செயச்<br>சீறி யாழ்முரல் தேனி னத்தொடு<br>பங்கயம் மலரும்<br>புறவார் பனங்காட்டூர்க்<br>கங்கை யும்மதி யுங்க மழ்சடைக்<br>கேண்மை யாளொடுங் கூடி மான்மறி<br>அங்கை யாடலனே<br>அடியார்க் கருளாயே. | செங்கயல் சேல் இரண்டும் போரிட, சீறியாழ் போல ஒ–செயும் வண்டுகளோடு தாமரை மலரும் புறவார் பனங்காட்டூரில் கங்கையும் மதியும் கமழ்கின்ற சடையினனாய் உமையம்மையோடு கூடி மான்கன்றைக் கையில் ஏந்திய அழகிய கையோடு ஆடுபவனே! என்று போற்றும் அடியார்க்கு அருள் புரிவாயாக. |
| **2042.** நீரி னார்வரை கோ– மால்கடல்<br>நீடி யபொழில் சூழ்ந்து வைகலும்<br>பாரினார் பிரியாப்<br>புறவார் பனங்காட்டூர்க்<br>காரி னார்மலர்க் கொன்றை தாங்கு<br>கடவு ளென்றுகை கூப்பி நாடொறும்<br>சீரினால் வணங்குந்<br>திறத்தார்க் கருளாயே. | பெரிய கடலை எல்லையாகக் கோ– நீண்ட பொழில் சூழ்ந்து விளங்கும் இவ்வுலகில் விளங்கும் அடியவர் நாள்தோறும் பிரியாது வணங்கும் புறவார் பனங்காட்டூரில் கார்காலத்தே மலரும் கொன்றையை அணிந்த கடவுளே! என்று கை குவித்து நாள்தோறும் சிறப்பொடு வழிபடும் அடியவர்கட்கு அருள் புரிவாயாக. |

| | |
|---|---|
| **2043.** கைய ரிவையர் மெல்வி ரல்லவை<br>காட்டி யம்மலர்க் காந்த ளங்குறி<br>பையரா விரியும்<br>புறவார் பனங்காட்டூர்<br>மெய்ய ரிவையொர் பாக மாகவும்<br>மேவி னாய்கழ லேத்தி நாடொறும்<br>பொய்யிலா வடிமை<br>புரிந்தார்க் கருளாயே. | மகளிரின் மெல்–ய கைவிரல்களைக் காட்டிப் படம் பொருந்திய பாம்பு போல் காந்தள் செடி விரிந்து மலரும் புறவார் பனங்காட்டூரில் உமையம்மையைத் தனது மெய்யில் ஒரு பாகமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பவனே! எனக் கூறித் திருவடிகளைப் பரவி நாள்தோறும் மெய்த்தொண்டு புரியும் அடியவர்க்கு அருள் புரிவாயாக. |
| **2044.** தூவி யஞ்சிறை மெல்ந டையன<br>மல்கி யொல்கிய தூமலர்ப் பொய்கைப்<br>பாவில் வண்டறையும்<br>புறவார் பனங்காட்டூர்<br>மேவி யந்நிலை யாய ரக்கன<br>தோள டர்த்தவன் பாடல் கேட்டருள்<br>ஏவியெம் பெருமான்<br>என்பவர்க் கருளாயே. | அழகிய சிறகுகளோடு மென்மையான நடையை உடைய அன்னப்பறவைகள் செறிந்த தூய மலர்ப் பொய்கைகளின் பரப்பில் வண்டுகள் ஒ–செயும் புறவார்பனங்காட்டூரில் நிலையாக மேவியவனாய் இராவணனின் தோள்களை அடர்த்து அவன் பாடல் கேட்டு அருள் வழங்கிய பெருமானே! எனப் போற்றும் அடியவர்க்கு அருள்புரிவாயாக. |
| **2045.** அந்தண் மாதவி புன்னை நல்ல<br>அசோக மும்மர விந்தம் மல்–கை<br>பைந்தண் ஞாழல்கள்<br>சூழ்புறவார் பனங்காட்டூர்<br>எந்தி எம்முகில் வண்ணன் நான்முகன்<br>என்றி வர்க்கரி தாய்நி மிர்ந்ததொர்<br>சந்தம் ஆயவனே<br>தவத்தார்க் கருளாயே. | அழகும் தண்மையும் உடைய மாதவி, புன்னை, நல்ல அசோகு, தாமரை, மல்–கை, பசுமையும் தண்மையும் கொண்ட ஞாழல் ஆகியன சூழ்ந்த புறவார் பனங்காட்டூரில் இளமையை ஏந்திய முகில்வண்ணன் நான்முகன் என்ற இருவருமே அறிய இயலாதவனாய் அழகிய உருக்கொண்டு நிமிர்ந்து நின்றவனே! தவத்தினராய அடியவர்க்கு அருள்புரிவாயாக. |
| **2046.** நீண மார்முரு குண்டு வண்டினம்<br>நீல மாமலர் கவ்வி நேரிசை<br>பாணில் யாழ்முரலும்<br>புறவார் பனங்காட்டூர்<br>நாண ழிந்துழல் வார்ச மணரும்<br>நண்பில் சாக்கிய ரும்ந கத்தலை<br>ஊணுரி யவனே<br>உகப்பார்க் கருளாயே. | வண்டுகள் பெருகி நிரம்பிய தேனை உண்டு நீலமலரைக் கவ்வி நேரிசைப் பண்ணில் யாழிசைபோல முரலும் புறவார் பனங்காட்டூரில், நாணமின்றித் திரியும் சமணர்களும் அன்பற்ற புத்தர்களும் நகுமாறு, தலையோட்டில் ஊணைக் கொள்ளுதற்கு உரியவனே! உன்னைக் கண்டு மகிழ்வார்க்கு அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2047.** மையி னார்மணி போல்மி டற்றனை<br>மாசில் வெண்பொடிப் பூசும் மார்பனைப்<br>பைய தேன்பொழில்சூழ்<br>புறவார் பனங்காட்டூர்<br>ஐய னைப்புக ழான காழியுள்<br>ஆய்ந்த நான்மறை ஞான சம்பந்தன்<br>செய்யுள் பாடவல்லார்<br>சிவலோகஞ் சேர்வாரே. | கருநிறம் பொருந்திய நீலமணி போன்ற மிடற்றனை, குற்றமற்ற திருவெண்ணீற்றைப் பூசும் மார்பினனை, தேன் நிறைந்த பசுமையான பொழில்களால் சூழப்பட்ட புறவார் பனங்காட்டூர் ஐயனை, காழியுள் தோன்றிய நான்மறை வல்ல ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகச் செய்யுளைப் பாடவல்லவர் சிவலோகம் சேர்வர். |

## காந்தாரம்

குறிஞ்சிப் பெரும்பண்ணின் இரண்டாவது திறமாகிய காந்தாரத்தின் அகநிலைப் பண்ணாக 41 என்ற எண் பெற்றது. ஏழிசை வரிசையில் மூன்றாவது இசை (சுரம்) காந்தாரம். இப்பெயரையே ஞானசம்பந்தர், **"காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் இசைபாட"** என்று திருவையாற்றுத் தேவாரத்தில் பாடுகிறார். இதற்குச் சுவை பெருமிதமும் மருட்கையும், இப்பண்ணை மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 2.54-82, அப்பர் 4,
2-7, சுந்தர் 71-75.

இவையன்றித் திருவிசைப்பாவில் திருமாளிகைத்தேவர் கோயில் -4, கருவூர்த்தேவர் திரைலோக்கிய சுந்தரம் ஆகிய இரண்டும் காந்தாரப்பண். இப்பண்ணுக்குரிய யாப்பு விகற்பகம் மூன்று. சம்பந்தர் - மந்திரமாவது நீறு பன்னிரு திருப்பெயர் கூறும் பிரமனூர், வேணுபுரம், புகலி. அப்பர் - சுண்ணவெண் சந்தனச் சாந்தும், மாதர்ப் பிறைக்கண்ணி யானை, கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை ஆகிய சிறப்பான சில பாடல்கள் இப்பண்ணிலுள்ளவை. அப்பர் பாடிய பண்ணுடைய பதிகங்களே 21. அவற்றுள் 7 காந்தாரத்துக்கு என்பது தனிச்சிறப்பு.

சாரங்கதேவர் கூறும் குறிப்பினால் காந்தாரம் தேவகாந்தாரி இராகத்துக்கு இணையாகக் கருதக்கூடும். இப்போது பாடப்பெறுவது நவரோக.

**காந்தாரப் பண்ணின் இலக்கணம்**

கோத்து நிற்கும் கோவை யாப்பில்
யாழ்சீர் அந்தாதி, யாப்பு யாழில்
பண்ணியில் தன்னில் நண்ணிக் காவிந்
தாரு மாகச் சமைவ காந்தாரம்

**பொருள்**

இணையும்படி கோத்து நிற்கும் கோவை யாப்பிலும், யாழினை உணர்த்தும், சீரிலும், அந்தம் முதலாகத் தொடங்கும் நிலையிலும், யாப்பாக அமையும் சீரிலும், பண்ணின் இயல்பிலும் நெருங்கி ஒன்றும் பலவுமாக அமைவது காந்தாரப் பண்ணாகும்.

## 54. திருப்புகலி

பண் : காந்தாரம் | பதிக எண் : 54

**2048.** உருவார்ந்த மெல்–யலோர்
பாகமுடையீர் அடைவோர்க்குக்
கருவார்ந்த வானுலகங்
காட்டிக்கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தெண்கடலொண்
சங்கந்திளைக்கும் பூம்புக–த்
திருவார்ந்த கோயிலே
கோயிலாகத் திகழ்ந்தீரே.

அழகிய உமையம்மையை ஒரு பாகத்தே கொண்டவரே! தம்மை அடைவோர்க்கு அருள் நிறைந்த வானுலகை வழங்கும் கருத்தால் நீர் கரையோடு பொரும் தென் கடற்சங்கம் வந்து மகிழும் பூம்புக–யில் உள்ள அழகிய கோயிலை உமது இருப்பிடமாகக் கொண்டீர் போலும்.

**2049.** நீரார்ந்த செஞ்சடையீர்
நிரையார்கழல்சேர் பாதத்தீர்
ஊரார்ந்த சில்ப–யீ
ருழைமானுரிதோ லாடையீர்
போரார்ந்த தெண்டிரைசென்
றணையுங்கானற் பூம்புக–ச்
சீரார்ந்த கோயிலே
கோயிலாகச் சேர்ந்தீரே.

கங்கை சூடிய செஞ்சடையீர்! வரிசையாய் அமைந்த கழல்களை அணிந்த பாதத்தை உடையவரே! ஊர்தோறும் சிலவாக இடும் ப–யை ஏற்பவரே! உழையாகிய மான் தோலை ஆடையாகப் பூண்டவரே! போர் போன்றுயர்ந்து வரும் அலைகள் சென்றணையும் கடற்சோலை களைக் கொண்ட அழகிய புக–யில் உள்ள சிறப்புமிக்க கோயிலை உமது இருப்பிடமாகக் கொண்டு விளங்குகின்றீர்.

**2050.** அழிமல்கு பூம்புனலு
மரவுஞ்சடைமே லடைவெய்த
மொழிமல்கு மாமறையீர்
கறையார்கண்டத் தெண்டோளீர்
பொழின்மல்கு வண்டினங்க
ளறையுங்கானற் பூம்புக–
எழின்மல்கு கோயிலே
கோயிலாக விருந்தீரே.

மிகுதியாக நிறைந்துள்ள அழகிய கங்கையும் பாம்பும் சடைமீது பொருந்தச் சொற்கள் மிகுந்த நான்மறைகளை ஓதியவரே! கறைக்கண்டமும் எண்தோளும் உடையவரே! பொழில்களில் நிறைந்த வண்டுகள் இன்னிசைபாடும் பூம்புக–யுள் எழில் விளங்கும் கோயிலை உம் இருப்பிடமாகக் கொண்டுள்ளீர்.

**2051.** கையிலார்ந்த வெண்மழுவொன்
றுடையீர்கடிய கரியின்றோல்
மயிலார்ந்த சாயன்மட
மங்கைவெருவ மெய்போர்த்தீர்
பயிலார்ந்த வேதியர்கள்
பதியாய்விளங்கும் பைம்புக–
எயிலார்ந்த கோயிலே
கோயிலாக விசைந்தீரே.

கையில் வெண்மழு ஒன்றை உடையவரே! மயில் போன்ற சாயலை உடைய உமையம்மை அஞ்ச யானையின் தோலை மெய்யில் போர்த்தவரே! மறை பயின்ற வேதியர்களின் பதியாய் விளங்கும் அழகிய புக–யுள் மதில்களால் சூழப்பட்ட கோயிலை உம் இருப்பிடமாகக் கொண்டுள்ளீர்.

| | |
|---|---|
| **2052.** நாவார்ந்த பாடலீர்<br>ஆடலரவம் அரைக்கார்த்தீர்<br>பாவார்ந்த பல்பொருளின்<br>பயன்களானீரயன்பேணும்<br>பூவார்ந்த பொய்கைகளும்<br>வயலுஞ்சூழ்ந்த பொழிற்புக—த்<br>தேவார்ந்த கோயிலே<br>கோயிலாகத் திகழ்ந்தீரே. | நாவிற்பொருந்திய, பாடலைப் பாடுகின்றவரே! ஆடும்பாம்பை இடையிற் கட்டியவரே! பாட—ல் பொருந்திய பொருளும் பயனும் ஆனவரே! நான்முகனால் விரும்பப்பெறும் பூக்கள் நிறைந்த பொய்கைகளும் வயல்களும் சூழ்ந்துள்ள பொழில் சூழ்ந்த புக—யில் தெய்வத்தன்மை பொருந்திய கோயிலையே உம் கோயிலாகக் கொண்டு திகழ்கின்றீர். |
| **2053.** மண்ணார்ந்த மண்முழவந்<br>ததும்பமலையான் மகளென்னும்<br>பெண்ணார்ந்த மெய்மகிழப்<br>பேணியெரிகொண் டாடினீர்<br>விண்ணார்ந்த மதியமிடை<br>மாடத்தாரும் வியன்புக—க்<br>கண்ணார்ந்த கோயிலே<br>கோயிலாகக் கலந்தீரே. | மார்ச்சனை ஊட்டப்பட்ட (முகப்பு – வலந்தரை) மண்ணாலான (கொட்டு என்பவற்றோடு கூடிய) முழவம் (மிருதங்கம்) ஒ—க்க, இமவான் மகளாகிய பார்வதி தேவி திருமேனியிற் பொருந்தி விளங்க, விரும்பிக் கையில் அனல் கொண்டு ஆடுபவரே! வானத்திற் பொருந்திய மதிமிடையும் மாடங்களைக் கொண்டுள்ள விரிந்த புக—யில் கண்களுக்கு மகிழ்வு தரும் கோயிலை உம் கோயிலாகக் கொண்டு கலந்துள்ளீர். |
| **2054.** களிபுல்கு வல்லவுண<br>ரூர்மூன்றெரியக் கணைதொட்டீர்<br>அளிபுல்கு பூமுடியீர்<br>அமரரேத்த வருள்செய்தீர்<br>தெளிபுல்கு தேனினமு<br>மலருள்விரைசேர் திண்புக—<br>ஒளிபுல்கு கோயிலே<br>கோயிலாக வுகந்தீரே. | களிப்புமிக்க வ—ய அவுணர்களின் மூன்று ஊர்கள் எரியுமாறு கணை எய்தவரே! வண்டுகள் சூழும் மலர்முடியை உடையவரே! தேவர்கள் வழிபட அருள் புரிந்தவரே! வண்டுகள் சூழும் தெளிந்த தேன்நிறைந்த மலருட் பொருந்திய மணம் கமழும் புக—யில் உள்ள ஒளி பொருந்திய கோயிலை உம் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |
| **2055.** பரந்தோங்கு பல்புகழ்சே<br>ரரக்கர்கோனை வரைக்கீழிட்<br>டுரந்தோன்றும் பாடல்கேட்<br>டுகவையளித்தீ ருகவாதார்<br>புரந்தோன்று மும்மதிலு<br>மெரியச்செற்றீர் பூம்புக—<br>வரந்தோன்று கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | பரவிய பல்புகழை உடைய இராவணனைக் கயிலை மலைக்கீழ் அகப்படுத்திப் பொருள் நிறைந்த அவன் பாடலைக் கேட்டு மகிழ்ந்து வாழ்நாள் அருளியவரே! தம்மோடு மகிழ்வில்லாத அசுரர்களின் மும்மதில்களையும் எரியச் செய்தவரே! அழகிய புக—யில் அருள் நலம் தோன்றும் கோயிலை உம் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |
| **2056.** சலந்தாங்கு தாமரைமே<br>லயனுந்தரணி யளந்தானுங்<br>கலந்தோங்கி வந்திழிந்துங்<br>காணாவண்ணங் கனலானீர்<br>புலந்தாங்கி யைம்புலனுஞ்<br>செற்றார்வாழும் பூம்புக—<br>நலந்தாங்கு கோயிலே<br>கோயிலாக நயந்தீரே. | நீரிற்பொருந்திய தாமரை மேல் உறையும் பிரமனும், உலகை அளந்த திருமாலும் கூடி உயர்ந்து சென்றும் அகழ்ந்து சென்றும் காண இயலாதவாறு கனல் உருவம் கொண்டவரே! மெய்யுணர்வு பெற்று ஐம்புலன்களையும் செற்றவர் வாழும் அழகிய புக—யுள் நன்மைகளைக் கொண்ட கோயிலை உம் கோயிலாகக் கொண்டுள்ளீர். |

| | |
|---|---|
| **2057.** நெடிதாய வன்சமணு<br>நிறைவொன்றில்லாச் சாக்கியருங்<br>கடிதாய கட்டுரையாற்<br>கழறமேலோர் பொருளானீர்<br>பொடியாரு மேனியினீர்<br>புக—மறையோர் புரிந்தேத்த<br>வடிவாருங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | காலம் நீட்டித்துச் சொல்லும் வ—ய சமணர்களும், நிறைவாக ஒன்றைக் கூறாத சாக்கியரும் கடுமையான சொற்களால் பழித்துப் பேச, மேலானதொரு மெய்ப் பொருளாக விளங்குபவரே! பொடி பூசியவரே! புக—ப்பதியுள் மறையவர் விரும்பி ஏத்த அங்குள்ள அழகிய கோயிலையே உம் கோயிலாகக் கொண்டு மகிழ்ந்துள்ளீர். |
| **2058.** ஒப்பரிய பூம்புக—<br>யோங்குகோயின் மேயானை<br>அப்பரிசிற் பதியான<br>அணிகொண்ஞான சம்பந்தன்<br>செப்பரிய தண்டமிழாற்<br>றெரிந்தபாட —வைவல்லார்<br>எப்பரிசி —டர்நீங்கி<br>யிமையோருலகத் திருப்பாரே. | ஒப்பில்லாத அழகிய புக—ப்பதியுள் ஓங்கிய கோயிலுள் மேவிய இறைவனை மேலாம் தகைமை உடைய புக—யுள் தோன்றிய ஞானசம்பந்தன் சொல்லுதற்கு அருமையாக விளங்கும் தண்டமிழால் ஆராய்ந்துரைத்த பாடல்களாகிய இவற்றை ஓதவல்லவர் எவ்வகையிலும் இடர்கள் நீங்கி இமையோருலகில் நிலைத்து இருப்பார்கள். |

## 55. திருத்தலைச்சங்காடு

பண் : காந்தாரம் பதிக எண் : 55

(திருமால் சிவபெருமானைப் பூசித்து சங்கைப்பெற்ற தலம். இவ்வூர் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளதால் பழமையானதாகும்)

| | |
|---|---|
| **2059.** நலச்சங்க வெண்குழையுந்<br>தோடும்பெய்தோர் நால்வேதம்<br>சொலச்சங்கை யில்லாதீர்<br>சுடுகாடல்லாற் கருதாதீர்<br>குலைச்செங்காய்ப் பைங்கமுகின்<br>குளிர்கொள்சோலைக் குயிலாலும்<br>தலைச்சங்கைக் கோயிலே<br>கோயிலாகத் தாழ்ந்தீரே. | அழகிய சங்கவெண் குழையையும் தோட்டையும் அணிந்து ஒப்பற்ற நால்வேதங்களை ஐயம் இன்றி அருளியவரே! சுடுகாடல்லாமல் வேறோர் இடத்தைத் தாம் ஆடுதற்கு இடமாகக் கருதாதவரே! நீர்க் குலைகளாகக் காய்த்துள்ள சிவந்த காய்களை உடைய பசுமையான கமுக மரச்சோலைகளில் குயில்கள் ஆடும் சிறப்புடைய தலைச்சங்கைக் கோயிலை நீர் இருக்கும் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2060.** துணிமல்கு கோவணமுந்<br>தோலுங்காட்டித் தொண்டாண்டீர்<br>மணிமல்கு கண்டத்தீர்<br>அண்டர்க்கெல்லா மாண்பானீர்<br>பிணிமல்கு நூன்மார்பர்<br>பெரியோர்வாழுந் தலைச்சங்கை<br>அணிமல்கு கோயிலே<br>கோயிலாக அமர்ந்தீரே. | துணியால் இயன்ற கோவணத்தையும் தோல் ஆடையையும் உடுத்த கோலம் காட்டி ஆட்கொண்டவரே! நீலமணி போன்ற கண்டத்தை உடையவரே! தேவர்களுள் மாட்சிமை உடையவரே! நீர், முறுக்கிய பூணூல் மார்பினராகிய அந்தணர் வாழும் தலைச் சங்கையில் விளங்கும் அழகிய கோயிலை உமது கோயிலாகக் கொண்டு அமர்ந்துள்ளீர். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **2061.** சீர்கொண்ட பாடலீர்<br>செங்கண்வெள்ளே றூர்தியீர்<br>நீர்கொண்டும் பூக்கொண்டு<br>நீங்காத்தொண்டர் நின்றேத்தத்<br>தார்கொண்ட நூன்மார்பர்<br>தக்கோர்வாழுந் தலைச்சங்கை<br>ஏர்கொண்ட கோயிலே<br>கோயிலாக விருந்தீரே. | சிறப்புமிக்க பாடல்களைப் பாடுபவரே! சிவந்த கண்ணையுடைய திருமாலாகிய வெள்ளேற்றை ஊர்தியாகக் கொண்டவரே! நீரையும் பூவையும் கொண்டு உம்மை நீங்காத தொண்டர் நின்று வழிபட மாலையையும் பூணூலையும் அணிந்த மார்பினை உடையவரே! நீர் தக்கோர் வாழும் தலைச்சங்கையிலுள்ள அழகிய கோயிலை இடமாகக் கொண்டுள்ளீர். |
| **2062.** வேடஞ்சூழ் கொள்கையீர்<br>வேண்டிநீண்ட வெண்டிங்கள்<br>ஓடஞ்சூழ் கங்கையும்<br>உச்சிவைத்தீர் தலைச்சங்கைக்<br>கூடஞ்சூழ் மண்டபமுங்<br>குலாயவாசற் கொடித்தோன்றும்<br>மாடஞ்சூழ் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | தாமே விரும்பிப் பற்பல வடிவங்களோடு வரும் இயல்பினரே! நீண்ட வெண்டிங்களாகிய ஓடம் செல்லும் கங்கையாற்றை உச்சியில் வைத்துள்ளவரே! நீர் தலைச் சங்கையில் கூடம், மண்டபம் வாயி–ல் கொடி தோன்றும் மாடம் ஆகிய வீடுகள் சூழ்ந்த கோயிலை இருப்பிடமாகக் கொண்டு மகிழ்ந்தீர். |
| **2063.** சூலஞ்சேர் கையினீர்<br>சுண்ணவெண்ணீ றாடலீர்<br>நீலஞ்சேர் கண்டத்தீர்<br>நீண்டசடைமே னீரேற்றீர்<br>ஆலஞ்சேர் தண்கான<br>லன்னமன்னுந் தலைச்சங்கைக்<br>கோலஞ்சேர் கோயிலே<br>கோயிலாகக் கொண்டீரே. | சூலம் ஏந்திய கையை உடையவரே! பொடியாகிய வெண்ணீற்றைப் பூசி ஆடுபவரே! நீலகண்டரே! நீண்ட சடைமேல் கங்கையை ஏற்றுள்ளவரே! நீர் வளம் சேர்ந்த குளிர்ந்த சோலைகளில் அன்னங்கள் பொருந்தி வாழும் தலைச் சங்கையில் உள்ள அழகிய கோயிலை உமது கோயிலாக் கொண்டுள்ளீர். |
| **2064.** நிலநீரொ டாகாச<br>மனல்காலாகி நின்றைந்து<br>புலநீர்மை புறங்கண்டார்<br>பொக்கஞ்செய்யார் போற்றோவார்<br>சலநீத ரல்லாதார்<br>தக்கோர்வாழுந் தலைச்சங்கை<br>நலநீர கோயிலே<br>கோயிலாக நயந்தீரே. | நிலம், நீர், ஆகாயம், அனல், காற்று ஆகிய ஐம்பூத வடிவாய் நின்று ஐம்புலன்களை வென்று நிற்பவரே! பொய்யிலாரது வழிபாட்டை ஏற்பவரே! நீர் வஞ்சகமும் இழிசெயல்களும் இல்லாத தக்கோர் வாழும் தலைச் சங்கையில் அழகிய கோயிலை உமது கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2065.** அடிபுல்கு பைங்கழல்கள்<br>ஆர்ப்பப்பேர்ந்தோர் அனலேந்திக்<br>கொடிபுல்கு மென்சாயல்<br>உமையோர் பாகங்கூடினீர்<br>பொடிபுல்கு நூன்மார்பர்<br>புரிநூலாளர் தலைச்சங்கைக்<br>கடிபுல்கு கோயிலே<br>கோயிலாகக் கலந்தீரே. | திருவடியிற் பொருந்திய கழல் ஆர்க்க அனல் ஏந்தி நடனம் ஆடி, கொடி போன்ற மென்மையான சாயலை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டுள்ளவரே! நீர் வெண்பொடி பூசிப் பூணநூல் அணிந்த மார்பினராய் முப்புரி நூலணிந்த அந்தணர் வாழும் தலைச்சங்கையில் விளங்கும் மணம் கமழும் கோயிலையே உம் கோயிலாகக் கலந்துள்ளீர். |

| | |
|---|---|
| **2066.** திரையார்ந்த மாகடல்சூழ்<br>தென்னிலங்கைக் கோமானை<br>வரையார்ந்த தோளடர<br>விரலாலூன்று மாண்பினீர்<br>அரையார்ந்த மேகலையீ<br>ரந்தணாளர் தலைச்சங்கை<br>நிரையார்ந்த கோயிலே<br>கோயிலாக நினைந்தீரே. | திரைகளோடு கூடிய பெரிய கடல்சூழ்ந்த இலங்கை மன்னனை, அவனுடைய மலை போன்ற தோள்கள் நெரியுமாறு கால் விரலால் ஊன்றும் பெருவீரம் உடையவரே! இடையில் மேகலையை உடுத்த அம்மையின் பாகத்தைக் கொண்டவரே! நீர் அந்தணாளர் பல்கி வாழும் தலைச் சங்கையில் முறையாக அமைந்த கோயிலை உமது இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2067.** பாயோங்கு பாம்பணைமே<br>லானும்பைந்தா மரையானும்<br>பேயோங்கிக் காண்கிலார்<br>புறநின்றோரார் போற்றோவார்<br>தீயோங்கு மறையாளர்<br>திகழுஞ்செல்வத் தலைச்சங்கைச்<br>சேயோங்கு கோயிலே<br>கோயிலாகச் சேர்ந்தீரே. | பாயாக அமைந்த பாம்பணைமேல் பள்ளி கொள்ளும் திருமால் பசிய தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும் சென்று காண இயலாதவரே! புறச்சமயங்களில் நில்லாத அகச்சமயிகளால் அறிந்து போற்றப்படுபவரே! முத்தீ வளர்க்கும் நான்மறையாளர் வாழும் செல்வச் செழிப்புள்ள தலைச்சங்கையில் உயர்ந்து திகழும் கோயிலை உம் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2068.** அலையாரும் புனல்துறந்த<br>அமணர்குண்டர் சாக்கியர்<br>தொலையாதங் கலர்தூற்றத்<br>தோற்றங்காட்டி யாட்கொண்டீர்<br>தலையான நால்வேதந்<br>தரித்தார்வாழுந் தலைச்சங்கை<br>நிலையார்ந்த கோயிலே<br>கோயிலாக நின்றீரே. | அலைகளை உடைய நீரில் குளியாத அமணர், குண்டர், சாக்கியர் இடைவிடாது அலர்தூற்ற, தம்மை வழிபடுவார்க்குக் காட்சி தந்து ஆட்கொள்பவரே! நீர், நிலையான நால்வேதங்களை ஓதி உணர்ந்த அந்தணர் வாழும் தலைச்சங்கையில் நிலையாக உள்ள கோயிலை உம் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2069.** நளிரும் புனற்காழி<br>நல்லஞான சம்பந்தன்<br>குளிருந் தலைச்சங்கை<br>யோங்குகோயின் மேயானை<br>ஒளிரும் பிறையானை<br>யுரைத்தபாட –லைவல்லார்<br>மிளிருந் திரைசூழ்ந்த<br>வையத்தார்க்கு மேலாரே. | குளிர்ந்த நீரால் வளம் பெறும் காழியில் தோன்றிய நன்மை கருதும் ஞானசம்பந்தன், தண்மையான தலைச்சங்கையில் ஓங்கிய கோயி–ல் விளங்கும் இறைவனை, ஒளிரும் பிறையை அணிந்தவனை, போற்றி உரைத்த இப்பதிகப் பாடல்களை ஓதவல்லவர் விளங்கும் கடலால் சூழப்பட்ட மண் உலகினர்க்கு மேலான விண் உலகத்தினராவர். |

## 56. திருவிடைமருதூர்

பண் : காந்தாரம் — பதிக எண் : 56

| | |
|---|---|
| **2070.** பொங்குநூன் மார்பினீர்<br>பூதப்படையினீர் பூங்கங்கை<br>தங்குசெஞ் சடையினீர்<br>சாமவேத மோதினீர்<br>எங்குமெழிலார் மறையோர்கண்<br>முறையாலேத்த விடைமருதில்<br>மங்குல்தோய் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | திருமேனியில் விளங்கித் தோன்றும் பூணூல் அணிந்த மார்பினரே! பூதப்படைகளை உடையவரே! அழகிய கங்கை தங்கும் செஞ்சடையை உடையவரே! சாமவேதத்தைப் பாடுபவரே! நீர் அழகிய மறைகளைக் கற்றுணர்ந்த மறையவர்; எல்லா இடங்களிலும் முறையாக ஏத்த இடைமருதூரில் வானளாவிய கோயிலை உம் கோயிலாகக் கொண்டு மகிழ்ந்துள்ளீர். |

| | |
|---|---|
| **2071.** நீரார்ந்த செஞ்சடையீர்<br>நெற்றித்திருக்கண் நிகழ்வித்தீர்<br>போரார்ந்த வெண்மழுவொன்<br>றுடையீர் பூதம்பாடலீர்<br>ஏரார்ந்த மேகலையாள்<br>பாகங்கொண்டீ ரிடைமருதில்<br>சீரார்ந்த கோயிலே<br>கோயிலாகச் சேர்ந்தீரே. | கங்கை ஆர்ந்த செஞ்சடையை உடையவரே! நெற்றியில் அழகிய கண்ணைக் கொண்டுள்ளவரே! போர்க் கருவியாகிய வெண்மழு ஒன்றை ஏந்தியவரே! பூதங்கள் பாடுதலை உடையவரே! அழகிய மேகலை அணிந்த பார்வதி தேவியைப் பாகமாகக் கொண்டவரே! நீர், இடைமருதில் உள்ள சிறப்புமிக்க கோயிலை உம் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியுள்ளீர். |
| **2072.** அழன்மல்கு மங்கையில்<br>ஏந்திப்பூத மவைபாடச்<br>சுழன்மல்கு மாடலீர்<br>சுடுகாடல்லாற் கருதாதீர்<br>எழின்மல்கு நான்மறையோர்<br>முறையாலேத்த விடைமருதில்<br>பொழில்மல்கு கோயிலே<br>கோயிலாகப் பொ–ந்தீரே. | நிறைந்த தீயை, அழகிய கையில் ஏந்திப் பூதங்கள் பாடச் சுழன்று ஆடுபவரே! சுடுகாடல்லால் பிறவிடத்தை நினையாதவரே! நீர், அழகிய நான்மறையோர் முறையால் ஏந்தி வழிபட இடைமருதில் உள்ள சோலைகள் சூழ்ந்த கோயிலை உம் இருப்பிடமாகக் கொண்டு பொ–ந்துள்ளீர். |
| **2073.** பொல்லாப் படுதலையொன்<br>றேந்திப்புறங்காட் டாடலீர்<br>வில்லாற் புரமூன்றும்<br>எரித்தீர் விடையார் கொடியினீர்<br>எல்லாக் கணங்களும்<br>முறையாலேத்த விடைமருதில்<br>செல்வாய கோயிலே<br>கோயிலாகச் சேர்ந்தீரே. | பொ–வற்ற, தசைவற்றிய தலையோட்டை ஏந்திச் சுடுகாட்டில் ஆடுபவரே! வில்லால் முப்புரங்களை எரித்தவரே! விடைக்கொடி உடையவரே! நீர், எல்லாக்கணத்தினரும் முறையால் போற்ற இடைமருதில் உள்ள செல்வம் ஆன கோயிலையே உம் இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2074.** வருந்திய மாதவத்தோர்<br>வானோரேனோர் வந்தீண்டிப்<br>பொருந்திய தைப்பூச<br>மாடியுலகம் பொ–வெய்தத்<br>திருந்திய நான்மறையோர்<br>சீராலேத்த விடைமருதில்<br>பொருந்திய கோயிலே<br>கோயிலாகப் புக்கீரே. | பெருமானே! நீர், விரதங்களால் மெய்வருந்திய மாதவத்தோர் வானவர் ஏனோர் வந்து கூடித் தைப்பூச நாளில் காவிரியில் பொருந்தி நீராடி உலகவரோடு தாமும் மகிழுமாறும் திருத்தமான நான்மறைவல்ல அந்தணர்கள் முறையால் ஏத்தவும் இடைமருதில் பொருந்தியுள்ள கோயிலையே இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2075.** சலமல்கு செஞ்சடையீர்<br>சாந்தநீறு பூசினீர்<br>வலமல்கு வெண்மழுவொன்<br>றேந்திமயானத் தாடலீர்<br>இலமல்கு நான்மறையோ<br>ரினிதாவேத்த விடைமருதில்<br>புலமல்கு கோயிலே<br>கோயிலாகப் பொ–ந்தீரே. | பெருமானே! கங்கை தங்கிய செஞ்சடையீரே! சாந்தமும் நீறும் பூசியவரே! வெற்றி பொருந்திய வெண்மழு ஒன்றை ஏந்தி மயானத்தில் ஆடுபவரே! இல்லங்களில் தங்கியுள்ள நான்மறையோர் வழிபாட்டுக் காலங்களில் வந்து இனிதாகப் போற்ற இடைமருதில் ஞானமயமான கோயிலை நீர் இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |

| | |
|---|---|
| **2076.** புனமல்கு கொன்றையீர்<br>புலியினதளீர் பொலிவார்ந்த<br>சினமல்கு மால்விடையீர்<br>செய்யீர்கரிய கண்டத்தீர்<br>இனமல்கு நான்மறையோ<br>ரேத்துஞ்சீர்கொ ளிடைமருதில்<br>கனமல்கு கோயிலே<br>கோயிலாகக் கலந்தீரே. | காடுகளில் வளரும் கொன்றையினது மலர்களைச் சூடியவரே! புலித்தோலை உடுத்தியவரே! அழகிய சினம்மிக்க வெள்விடையை உடையவரே! சிவந்த மேனியரே! கரிய கண்டத்தைக் கொண்டவரே! நீர், திரளாகப் பொருந்திய நான்மறையோர் ஏத்தும் சிறப்புமிக்க இடைமருதில் மேகங்கள் தவழும் உயரிய கோயிலை நுமது இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2077.** சிலையுய்த்த வெங்கணையாற்<br>புரமூன்றெரித்தீர் திறலரக்கன்<br>தலைபத்துந் திண்டோளு<br>நெரித்தீர் தையல்பாகத்தீர்<br>இலைமொய்த்த தண்பொழிலும்<br>வயலுஞ்சூழ்ந்த விடைமருதில்<br>நலமொய்த்த கோயிலே<br>கோயிலாக நயந்தீரே. | மேருமலையாகிய வில்லில் செலுத்திய கொடிய கணையால் முப்புரங்களை எரித்தவரே! வலிமை பொருந்திய இராவணனின் பத்துத்தலைகளையும் தோள்களையும் நெரித்தவரே! மாதொரு கூறரே! இலைகள் அடர்த்த பொழில்களும் வயல்களும் சூழ்ந்த இடைமருதில் உள்ள அழகு நிறைந்த கோயிலை நுமது இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2078.** மறைமல்கு நான்முகனு<br>மாலுமறியா வண்ணத்தீர்<br>கறைமல்கு கண்டத்தீர்<br>கபாலமேந்து கையினீர்<br>அறைமல்கு வண்டினங்க<br>ளாலுஞ்சோலை யிடைமருதில்<br>நிறைமல்கு கோயிலே<br>கோயிலாக நிகழ்ந்தீரே. | வேதங்களை ஓதும் நான்முகனும் திருமாலும் அறிய இயலாத தன்மையீர்! கறைக் கண்டத்தீர்! கபாலம் ஏந்தும் கையினை உடையீர்! இசைமிழற்று வண்டுகள் பாடும் சோலைகள் சூழ்ந்த இடைமருதில் உள்ள நிறைவான கோயிலை நும் இருப்பிடமாகக் கொண்டுள்ளீர். |
| **2079.** சின்போர்வைச் சாக்கியரும்<br>மாசுசேருஞ் சமணரும்<br>துன்பாய கட்டுரைகள்<br>சொல்லி யல்லல்தூற்றவே<br>இன்பாய வந்தணர்க<br>ளேத்துமேர்கொ ளிடைமருதில்<br>அன்பாய கோயிலே<br>கோயிலாக வமர்ந்தீரே. | பெருமானே! நீர், அற்பமான போர்வை அணிந்த சாக்கியரும், அழுக்கு ஏறிய உடலினராகிய சமணரும் துன்பமயமான கட்டுரைகள் சொல்லித்தூற்ற, இன்பம் கருதும் அந்தணர்கள் ஏத்தும் அழகிய இடைமருதில் அன்பு வடிவான கோயிலையே நும் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2080.** கல்லின் மணிமாடக்<br>கழுமலத்தார் காவலவன்<br>நல்ல அருமறையான்<br>நற்றமிழ் ஞானசம்பந்தன்<br>எல்லி யிடைமருதில்<br>ஏத்துபாட லிவைபத்தும்<br>சொல்லு வார்க்குங்<br>கேட்பார்க்குந் துயரம்இல்லையே. | கல்லால் இயன்ற அழகிய மாடவீடுகளைக் கொண்ட கழுமலத்தார் தலைவனாகிய நன்மைதரும் அருமறைவல்ல நற்றமிழ் ஞானசம்பந்தன் இராப்போதில் இடைமருதை, அடைந்து ஏத்திய பாடல் இவை பத்தையும் சொல்லுவார்க்கும் கேட்பார்க்கும் துயரம் இல்லை. |

## 57. திருநல்லூர்

பண் : காந்தாரம் | பதிக எண் : 57

| பாடல் | உரை |
| --- | --- |
| **2081.** பெண்ணமருந் திருமேனி<br>யுடையீர் பிறங்குசடைதாழப்<br>பண்ணமரும் நான்மறையே<br>பாடியாடல் பயில்கின்றீர்<br>திண்ணமரும் பைம்பொழிலும்<br>வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்<br>மண்ணமருங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | உமையம்மை பொருந்திய திருமேனியை உடையவரே! விளங்கும் சடைகள் தாழ்ந்து தொங்க இசை அமைதிஉடைய நான்மறைகளைப் பாடி ஆடல்புரிகின்றவரே! நீர் உறுதியான பசிய பொழில்களும் வயல்களும் சூழ்ந்த திருநல்லூரில் மண்ணுலக மக்களால் விரும்பப்படும் கோயிலையே நும் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2082.** அலைமல்கு தண்புனலும்<br>பிறையுஞ்சூடி யங்கையில்<br>கொலைமல்கு வெண்மழுவு<br>மனலுமேந்துங் கொள்கையீர்<br>சிலைமல்கு வெங்கணையாற்<br>புரமூன்றெரித்தீர் திருநல்லூர்<br>மலைமல்கு கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | அலைகள் நிறைந்த குளிர்ந்த கங்கையையும், பிறையையும் முடியிற்சூடி அழகிய கைகளில் கொல்லும் தன்மை வாய்ந்த வெண்மழு அனல் ஆகியவற்றை ஏந்திய தன்மையீர்! வில்—ற் பொருந்திய கொடிய கணையால் முப்புரங்களை எரித்தீர்! நீர் திருநல்லூரில் மலையமைப்புடைய கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |
| **2083.** குறைநிரம்பா வெண்மதியஞ்<br>சூடிக்குளிர்புன் சடைதாழப்<br>பறைநவின்ற பாடலோ<br>டாடல்பேணிப் பயில்கின்றீர்<br>சிறைநவின்ற தண்புனலும்<br>வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்<br>மறைநவின்ற கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | என்றும் குறைநிரம்பாத வெண்மதியத்தைச்சூடி, குளிர்ந்த மென்மையான சடைகள் தாழப் பறைகள் ஒ—க்கப் பாடலோடு ஆடலை விரும்பிப் பழகும் இயல்பினரே! மடையில் நிரம்பிய குளிர்ந்த புனலோடு கூடிய வயல்கள் சூழ்ந்த திருநல்லூரில் வேதங்கள் ஒ—க்கும் கோயிலையே நும் கோயிலாக விரும்பி மகிழ்ந்து உறைகின்றீர். |
| **2084.** கூனமரும் வெண்பிறையும்<br>புனலுஞ்சூடுங் கொள்கையீர்<br>மானமரு மென்விழியாள்<br>பாகமாகு மாண்பினீர்<br>தேனமரும் பைம்பொழி—ன்<br>வண்டுபாடுந் திருநல்லூர்<br>வானமருங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | வளைந்த வெண்பிறையையும் கங்கையையும் முடியிற்சூடுபவரே! மான் போன்ற மென்மையான விழியினை உடைய உமையம்மை பாகமாக விளங்கும் மாண்புடையவரே! தேன் நிறைந்த பசிய பொழி—ல் வண்டுபாடும் திருநல்லூரில் விளங்கும் வானளாவிய கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |
| **2085.** நிணங்கவரு மூவிலையு<br>மனலுமேந்தி நெறிகுழலாள்<br>அணங்கமரும் பாடலோ<br>டாடன்மேவு மழகினீர்<br>திணங்கவரு மாடரவும்<br>பிறையுஞ்சூடித் திருநல்லூர்<br>மணங்கமழுங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | நிணம் பொருந்திய மூவிலைவேலையும், அனலையும் கைகளில் ஏந்தி நெறிப்புடைய கூந்த—னளாகிய உமையம்மையோடு கூடிப் பாடல் ஆடல் விரும்பும் அழகுடையவரே! உறுதியாகப் பிற உயிர் கவரும் பாம்பையும் பிறையையும் சூடித் திருநல்லூரில் மணங்கமழும் கோயிலையே நும் இருப்பிடமாகக் கொண்டு மகிழ்கின்றீர். |

| | |
|---|---|
| **2086** கார்மருவு பூங்கொன்றை<br>சூடிக்கமழ்புன் சடைதாழ<br>வார்மருவு மென்முலையாள்<br>பாகமாகு மாண்பினீர்<br>தேர்மருவு நெடுவீதிக்<br>கொடிகளாடுந் திருநல்லூர்<br>ஏர்மருவு கோயிலே<br>கோயிலாக விருந்தீரே. | கார்காலத்தைப் பொருந்தி மலரும் கொன்றைப் பூவைச் சூடி மணம் கமழும் புன்சடை தாழக் கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய உமையம்மை பாகமாக விளங்கும் மாண்புடையவரே! கொடிகள் அசைந்தாடும் தேர் ஓடும் நீண்ட வீதியினை உடைய திருநல்லூரில் அழகு விளங்கும் கோயிலையே நும் இருப்பிடமாகக் கொண்டு உறைகின்றீர். |
| **2087.** ஊன்றோயும் வெண்மழுவு<br>மனலுமேந்தி யுமைகாண<br>மீன்றோயுந் திசைநிறைய<br>வோங்கியாடும் வேடத்தீர்<br>தேன்றோயும் பைம்பொழி—ன்<br>வண்டுபாடுந் திருநல்லூர்<br>வான்றோயுங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | ஊன்தோயும் வெண்மழுவையும் அனலையும் கையில் ஏந்தி உமையம்மை காண விண்மீன்கள் பொருந்திய வானத்தைத் தொடும் எல்லாத் திசைகளும் நிறையும்படி ஓங்கி ஆடும் நடனக் கோலத்தைக் கொண்டவரே! தேன் பொருந்திய அழகிய பொழி—ன் கண் வண்டுகள் இசைபாடும் திருநல்லூரில் உள்ள வானளாவிய கோயிலையே நும் கோயிலாக மகிழ்ந்து உறைகின்றீர். |
| **2088.** காதமரும் வெண்குழையீர்<br>கறுத்தவரக்கன் மலையெடுப்ப<br>மாதமரு மென்மொழியாண்<br>மறுகும்வண்ணங் கண்டுகந்தீர்<br>தீதமரா வந்தணர்கள்<br>பரவியேத்துந் திருநல்லூர்<br>மாதமருங் கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | காதில் பொருந்திய வெண்குழையை உடையவரே! சினந்து வந்த இராவணன் கயிலையைப் பெயர்க்கக் காதல் விளைக்கும் மெல்—ய மொழியினை உடையாளாகிய உமையம்மை கலங்க, அதனைக் கண்டு உகந்தவரே! தீயசெயல்களை விரும்பாத அந்தணர்கள் பரவிப் போற்றும் திருநல்லூரில் உள் பெருமை பொருந்திய கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |
| **2089.** போதின்மே லயன்றிருமால்<br>போற்றியும்மைக் காணாது<br>நாதனே யிவனென்று<br>நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்<br>தீதிலா அந்தணர்கள்<br>தீமூன்றோம்புந் திருநல்லூர்<br>மாதரா ளவளோடு<br>மன்னுகோயின் மகிழ்ந்தீரே. | தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும், திருமாலும் போற்றியும் உம்மைக் காணாது பின் இவனே பரம்பொருள் என்று விரும்பி ஏத்த மகிழ்ந்து, அவர்கட்கு அருள் செய்தவரே! தீதில்லாத அந்தணர்கள் முத்தீயோம்பும் திருநல்லூரில் மன்னும் கோயி—ல் உமையம்மையாரோடு மகிழ்ந்து உறைகின்றீர். |
| **2090.** பொல்லாத சமணரொடு<br>புறங்கூறுஞ் சாக்கியரொன்<br>றல்லாதா ரறவுரைவிட்<br>டடியார்கள் போற்றோவா<br>நல்லார்க ளந்தணர்கள்<br>நாளுமேத்துந் திருநல்லூர்<br>மல்லார்ந்த கோயிலே<br>கோயிலாக மகிழ்ந்தீரே. | பொல்லாத சமணர்களோடு புறங்கூறும் சாக்கியர் என்ற ஒன்றிலும் சேராதார் கூறும் அறவுரைகளை விட்டு அடியவர்கள் வந்து வழிபடுதல் நீங்காததும், நல்லவர்களாகிய அந்தணர்கள் நாளும் வந்து வழிபடுவதும் ஆகிய திருநல்லூரில் மலையில் விளங்கும் கோயிலையே தன் கோயிலாகக் கொண்டு மகிழ்கின்றீர். |

| | |
|---|---|
| **2091.** கொந்தணவும் பொழில்புடைசூழ்<br>கொச்சைமேவு குலவேந்தன்<br>செந்தமிழின் சம்பந்தன்<br>சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்ப்<br>பந்தணவு மெல்விரலாள்<br>பங்கன்றன்னைப் பயில்பாடல்<br>சிந்தனையா லுரைசெய்வார்<br>சிவலோகஞ்சேர்ந் திருப்பாரே. | பூங்கொத்துக்கள் செறிந்த பொழில்புடை சூழ்ந்த கொச்சைவயம் என்னும் சீகாழியில் உயர் குலத்தில் தோன்றிய தலைவனாகிய செந்தமிழ் வல்ல ஞானசம்பந்தன் மடையில் சிறைப்படுத்திய வண்புனல் சூழ்ந்த திருநல்லூரில் பந்து பொருந்தும் மெல்விரலாள் பங்கனைப் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்களைச் சிந்தையோடு ஒன்றி உரைப்பவர் சிவலோகம் சேர்ந்து இனிதிருப்பர். |

## 58. திருக்குடவாயில்

பண் : காந்தாரம் பதிக எண் : 58

| | |
|---|---|
| **2092.** கலைவாழு மங்கையீர்<br>கொங்கையாருங் கருங்கூந்தல்<br>அலைவாழுஞ் செஞ்சடையி<br>லரவும்பிறையு மமர்வித்தீர்<br>குலைவாழை கமுகம்பொன்<br>பவளம்பழுக்குங் குடவாயில்<br>நிலைவாழுங் கோயிலே<br>கோயிலாக நின்றீரே. | மான் வாழும் கையினை உடையவரே! மணம் பொருந்திய கரிய கூந்தலை உடைய கங்கை தங்கிய செஞ்சடையில் பாம்பையும் பிறையையும் அணிந்தவரே! வாழை, குலைகளைத் தந்தும், கமுகு பொன்னையும் பவளத்தையும் போலப் பழுத்தும் பயன் தந்தும் வளம் செய்யும் குடவாயி–ல் நிலைத்து விளங்கும் கோயிலை நீர் விரும்பும் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2093.** அடியார்ந்த பைங்கழலுஞ்<br>சிலம்புமார்ப்ப வங்கையில்<br>செடியார்ந்த வெண்டலையொன்<br>றேந்தியுலகம் ப–தேர்வீர்<br>குடியார்ந்த மாமறையோர்<br>குலாவியேத்துங் குடவாயில்<br>படியார்ந்த கோயிலே<br>கோயிலாகப் பயின்றீரே. | திருவடிகளில் கட்டிய புதிய கழலும் சிலம்பும் ஆர்ப்ப, அகங்கையில் முடைநாற்றம் பொருந்திய வெண்டலை ஒன்றையேந்தி உலகம் முழுவதும் திரிந்து ப– ஏற்பவரே! குடியாக உள்ள சிறந்த மறையோர் கொண்டாடி ஏத்தும் குடவாயி–ல் படிகள் அமைந்த உயர்ந்த மாடக் கோயிலை நீர் விரும்பும் கோயிலாகக் கொண்டுள்ளீர். |
| **2094.** கழலார்பூம் பாதத்தீ<br>ரோதக்கட–ல் விடமுண்டன்<br>றழலாருங் கண்டத்தீ<br>ரண்டர்போற்று மளவினீர்<br>குழலார வண்டினங்கள்<br>கீதத்தொ–செய் குடவாயில்<br>நிழலார்ந்த கோயிலே<br>கோயிலாக நிகழ்ந்தீரே. | கழல் அணிந்த அழகிய திருவடியை உடையவரே! முற்காலத்தே நீர் பெருகிய கட–ல் தோன்றிய விடத்தை உண்டு அவ்விடத்தை அழல்போன்று வெம்மை செய்யும் நிலையில் கண்டத்தில் நிறுத்தியவரே! தேவர்களால் போற்றப்பெறும் தன்மையினரே! மகளிர் கூந்த–ல் பொருந்திய வண்டுகள் இசைஒ–செய்யும் குடவாயி–ல் ஒளிபொருந்திய கோயிலை நுமது இடமாகக் கொண்டுள்ளீர். |
| **2095.** மறியாருங் கைத்தலத்தீர்<br>மங்கைபாக மாகச்சேர்ந்<br>தெறியாரு மாமழுவு<br>மெரியுமேந்துங் கொள்கையீர்<br>குறியார வண்டினங்கள்<br>தேன்மிழற்றுங் குடவாயில்<br>நெறியாருங் கோயிலே<br>கோயிலாக நிகழ்ந்தீரே. | மான் பொருந்திய கையினரே! உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவராய் நெருப்பின் தன்மை கொண்ட மழுவையும், அனலையும் ஏந்தும் இயல்பினரே! வண்டினங்கள் மலர்களை அலர்த்தித் தேன் உண்ணும் குறிப்போடு இசை மிழற்றும் குடவாயி–ல் உள்ள முறையாக அமைந்த கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு வாழ்கின்றீர். |

| | |
|---|---|
| **2096.** இழையார்ந்த கோவணமுங்<br>கீளுமெழிலா ருடையாகப்<br>பிழையாத சூலம்பெய்<br>தாடல்பாடல் பேணினீர்<br>குழையாரும் பைம்பொழிலும்<br>வயலுஞ்சூழ்ந்த குடவாயில்<br>விழவார்ந்த கோயிலே<br>கோயிலாக மிக்கீரே. | நூ—ழையால் இயன்ற கோவணம், கீள் ஆகியவற்றை அழகிய உடைகளாகப் பூண்டு, கையில் தப்பாத சூலம் ஏந்தி ஆடல் பாடல்களை விரும்புபவரே! தளிர்கள் நிறைந்த பசிய பொழில்களும் வயலும் சூழ்ந்த குடவாயி—ல் விழாக்கள் பலநிகழும் கோயிலையே நும் இருப்பிடமாகக் கொண்ட பெருமிதம் உற்றீர். |
| **2097.** அரவார்ந்த திருமேனி<br>யானவெண்ணீ றாடினீர்<br>இரவார்ந்த பெய்ப—கொண்<br>டிமையோரேத்த நஞ்சுண்டீர்<br>குரவார்ந்த பூஞ்சோலை<br>வாசம்வீசுங் குடவாயில்<br>திருவார்ந்த கோயிலே<br>கோயிலாகத் திகழ்ந்தீரே. | பாம்புகளைப் பூண்டுள்ள திருமேனியில் நன்கு அமைந்த திருநீற்றை அபிடேகமாகக் கொண்டவரே! இரத்தலை மேற்கொண்டு பிறர் இடும்பிச்சை ஏற்று இமையோர் பரவ நஞ்சுண்டவரே! குராமரங்கள் நிறைந்துள்ள பூஞ்சோலையின் மணம் வீசும் குடவாயி—ல் உள்ள அழகு பொருந்திய கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு விளங்குகின்றீர். |
| **2098.** பாடலார் வாய்மொழியீர்<br>பைங்கண்வெள்ளே றூர்தியீர்<br>ஆடலார் மாநடத்தீ<br>ரரிவைபோற்று மாற்றலீர்<br>கோடலார் தும்பிமுரன்<br>றிசைமிழற்றுங் குடவாயில்<br>நீடலார் கோயிலே<br>கோயிலாக நிகழ்ந்தீரே. | வேதப் பாடல்களில் அமைந்த உண்மை வாசகங்களாக விளங்குபவரே! பசிய கண்களைக் கொண்ட வெள்ளேற்றை ஊர்தியாக உடையவரே! ஆடலாக அமைந்த சிறந்த நடனத்தைப் புரிபவரே! உமையம்மை போற்றும் ஆற்றலை உடையவரே! காந்தள் மலரிற் பொருந்திய வண்டுகள் முரன்று இசைபாடும் குடவாயி—ல் நீண்டுயர்ந்த கோயிலை நும் கோயிலாகக் கொண்டு விளங்குகின்றீர். |
| **2099.** கொங்கார்ந்த பைங்கமலத்<br>தயனுங்குறளாய் நிமிர்ந்தானும்<br>அங்காந்து தள்ளாட வழலாய்<br>நிமிர்ந்தீ ரிலங்கைக்கோன்<br>தங்காதன் மாமுடியுந்<br>தாளுமடர்த்தீர் குடவாயில்<br>பங்கார்ந்த கோயிலே<br>கோயிலாகப் பகர்ந்தீரே. | தேன் பொருந்திய பசிய தாமரையில் மேவும் பிரமனும், குறள் வடிவாய்ச் சென்றிருந்து பின் உயர்ந்த திருமாலும் வாய் திறந்து தளர்ச்சியுற அழலுருவாய் நிமிர்ந்தவரே! இராவணனின் பெரிய முடிகளையும் அடிகளையும் அடர்த்தவரே! குடவாயி—ன் ஒரு பகுதியாக விளங்கும் கோயிலை நும் கோயிலாகக் கொண்டு அறம் உரைத்தீர். |
| **2100.** தூசார்ந்த சாக்கியருந்<br>தூய்மையில்லாச் சமணரும்<br>ஏசார்ந்த புன்மொழிநீத்<br>தெழில்கொண்மாடக் குடவாயில்<br>ஆசாரஞ் செய்மறையோ<br>ரளவிற்குன்றா தடிபோற்றத்<br>தேசார்ந்த கோயிலே<br>கோயிலாகச் சேர்ந்தீரே. | அழுக்கேறிய உடையினராகிய சாக்கியரும் தூய்மையில்லாத சமணர்களும் கூறும் ஏசுதல் நிறைந்த புன் மொழிகளை வெறுத்து அழகிய மாட வீடுகளைக் கொண்டுள்ள குடவாயி—ல், தூய்மையாளர்களாகிய அந்தணர் நல்லொழுக்கமாகிய அளவில் குறையாதவராய் அடியிணைகளை ஏத்த, ஒளிநிறைந்த கோயிலையே நும் கோயிலாகக் கொண்டு சேர்ந்துள்ளீர். |

| | |
|---|---|
| 2101. நளிர்பூந் திரைமல்கு<br>காழிஞான சம்பந்தன்<br>குளிர்பூங் குடவாயிற்<br>கோயின்மேய கோமானை<br>ஒளிர்பூந் தமிழ்மாலை<br>யுரைத்தபாட —வைவல்லார்<br>தளர்வான தானொழியத்<br>தகுசீர்வானத் திருப்பாரே. | தண்மையான நீரால் சூழப்பட்ட காழிப்பதியின னாகிய ஞானசம்பந்தன் குளிர்ந்த அழகிய குடவாயிற் கோயி—ல் மேவிய இறைவனை, விளங்கும் தமிழ்மாலையாக உரைத்த பாடல்களாகிய இவற்றை வல்லவர் தளர்ச்சிகள் தாமே நீங்கத் தக்க புகழுடைய வானுலகில் இருப்பர். |

## 59. சீகாழி

பண் : காந்தாரம் பதிக எண் : 59

| | |
|---|---|
| 2102. நலங்கொண் முத்து மணியும் அணியுந்<br>திரளோதங்<br>கலங்கள் தன்னிற் கொண்டு கரைசேர்<br>க—க்காழி<br>வலங்கொண் மழுவொன் றுடையாய் விடையா<br>யெனவேத்தி<br>அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா<br>அருநோயே. | அழகிய முத்துக்கள், மணிகள், அணிகலன்கள் ஆகியவற்றை நீர்ப் பெருக்குடைய கட—ன் மரக்கலங்கள் கொண்டு வந்து கரையில் சேர்க்கும் ஆரவாரமுடைய காழிப்பதியில் வெற்றி விளைக்கும் மழு ஒன்றை ஏந்தியவனே! விடையூர்தியனே! என ஏத்தி மலர்மாலை முத—யன சூட்டி வழிபட வல்லாரைத் தீர்தற்கரிய நோய்கள் அடையா. |
| 2103. ஊரா ருவரிச் சங்கம் வங்கங்<br>கொடுவந்து<br>காரா ரோதங் கரைமே லுயர்த்துங்<br>க—க்காழி<br>நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா<br>வென்றென்று<br>பேரா யிரமும் பிதற்றத் தீரும்<br>பிணிதானே. | ஊர்தலை உடைய கடற் சங்குகளை மரக்கலங்கள் கடல் ஓதநீர் வழியே கொண்டு வந்து கரையில் சேர்க்கும் க—க்காழியில் எழுந்தருளிய கங்கை தங்கிய சடையனே! நெற்றிக்கண்ணா! என்று பலமுறையும் அவனது பேர் ஆயிரமும் பிதற்றப் பிணிகள் தீரும். |
| 2104. வடிகொள் பொழி—ன் மழலை வரிவண்<br>டிசைசெய்யக்<br>கடிகொள் போதிற் றென்ற லணையுங்<br>க—க்காழி<br>முடிகொள் சடையாய் முதல்வா வென்று<br>முயன்றேத்தி<br>அடிகை தொழுவார்க் கில்லை யல்ல<br>லவலமே. | திருத்தமான சோலைகளில் மழலையாய் வரி வண்டுகள் இசை பாட மணம் கமழும் மலர்களில் படிந்து தென்றல் வீதிகளை அடைந்து மணம் பரப்பி இதம் செய்யும் க—க்காழியில் எழுந்தருளிய முடிகொள் சடையாய்! முதல்வா என்று தவம் முயன்று ஏத்தி அவன் அடிகளைத் தொழுவார்க்கு அல்லல் அவலம் ஆகியன இல்லை. |
| 2105. மனைக்கே யேற வளஞ்செய் பவளம்<br>வளர்முத்தங்<br>கனைக்குங் கடலு ளோத மேறுங்<br>க—க்காழிப்<br>பனைக்கைப் பகட்டீ ருரியாய் பெரியா<br>யெனப்பேணி<br>நினைக்க வல்ல வடியார் நெஞ்சி<br>னல்லாரே. | ஆரவாரிக்கும் கட—ன் ஓதம் பவளங்களையும் முத்துக்களையும் வீடுகளில் கொண்டு வந்து சேர்த்து வளம் செய்யும் க—க் காழிப்பதியுள் எழுந்தருளிய, பனை போன்ற கையை உடைய யானையை ஈர்ந்து அதன் தோலைப் போர்த்தவனே! பெரியாய் என விரும்பிப் பேணி நினைக்க வல்ல நெஞ்சினை உடையார் நன்னெஞ்சுடையார் ஆவர். |

| | |
|---|---|
| 2106. பரிதி யியங்கும் பாரிற் சீரார் பணியாலே<br>கருதி விண்ணோர் மண்ணோர் விரும்புங் க—க்காழிச்<br>சுருதி மறைநான் கான செம்மை தருவானைக்<br>கருதி யெழுமின் வழுவா வண்ணந் துயர்போமே. | கதிரவன் உலாவரும் உலகின்கண், சிறப்புமிக்க தொண்டுகளோடு சுருதிகளை அறிந்த விண்ணோரும் மண்ணோரும் விரும்பி வழிபடும் க—க்காழியுள் மேவிய செவிவழியாகக் கேட்டு ஓதப்பெறும் நான்கு வேதங்களான செம்மையைத் தருபவனை நினைந்து, அவனை வழிபட, எழுந்தால் தவறாது உங்கள் துன்பங்கள் தீரும். |
| 2107. மந்த மருவும் பொழி— லெழிலார் மதுவுண்டு<br>கந்த மருவ வரிவண் டிசைசெய் க—க்காழிப்<br>பந்த நீங்க வருளும் பரனே யெனவேத்திச்<br>சிந்தை செய்வார் செம்மை நீங்கா திருப்பாரே. | தென்றல் தவழும் பொழி—ன்கண் எழுச்சியோடு தேனை உண்டு மணம் பொருந்தியனவாய் வரி வண்டுகள் இசை செய்யும் க—க்காழியில் விளங்கும், பந்தங்கள் நீங்க அருளும் பரனே! என ஏத்தி அவனைச் சிந்தையில் நினைவார், செம்மை நீங்காதிருப்பர். |
| 2108. புயலார் பூமி நாம மோதிப் புகழ்மல்கக்<br>கயலார் கண்ணார் பண்ணா ரொ—செய் க—க்காழிப்<br>பயில்வான் றன்னைப் பத்தி யாரத் தொழுதேத்த<br>முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்ற முடுகாதே. | மேகங்களால் வளம் பெறும் மண்ணுலகில் வாழும் கயல் போலும் விழிகளை உடைய பெண்கள் இறைவன் திருப்பெயர்களைப் புகழ் பொருந்த இசையோடு ஓதி ஒ— செய்யும் க—க்காழியுள் விளங்கும் அப்பெருமானை அன்பு மே—டத் தொழுது ஏத்த முயல்வார் மேல் கொடிய கூற்றுவன் வந்தடையான். |
| 2109. அரக்கன் முடிதோள் நெரிய வடர்த்தா னடியார்க்குக்<br>கரக்க கில்லா தருள்செய் பெருமான் க—க்காழிப்<br>பரக்கும் புகழான் றன்னை பணிவார்மேற்<br>பெருக்கு மின்பந் துன்பமான பிணிபோமே. | இராவணனின் முடி, தோள் ஆகியன நெரிய அடர்த்தருளிய, தன் அடியவர்கட்கு மறைக்காமல் அருளைச் செய்யும் பெருமான் எழுந்தருளிய க—க்காழியை அடைந்து உலகம் முழுதும் பரவிய அப்புகழாளனை ஏத்திப் பணிவார்க்கு இன்பங்கள் பெருகும். துன்பந்தரும் பிணிகள் போம். |
| 2110. மாணா யுலகங் கொண்ட மாலு மலரோனுங்<br>காணா வண்ண மெரியாய் நிமிர்ந்தான் க—க்காழிப்<br>பூணார் முலையாள் பங்கத்தானைப் புகழ்ந்தேத்திக்<br>கோணா நெஞ்ச முடையார்க் கில்லைக் குற்றமே. | பிரமசாரி வடிவினனாகி உலகை அளந்து கொண்ட திருமாலும் நான்முகனும் காணா வண்ணம் எரியுருவாய் நிமிர்ந்தான் உறையும் க—க்காழியை அடைந்து அணிகலன்பூண்ட தனங்களைக் கொண்ட அம்பிகை பாகனைப் புகழ்ந்து போற்றித் திருகல் இல்லாத மனமுடைய அடியவர்க்குக் குற்றம் இல்லை. |

| | |
|---|---|
| **2111.** அஞ்சி யல்லல் மொழிந்து திரிவா<br>ரமணாதர்<br>கஞ்சி காலை யுண்பார்க் கரியான்<br>க–க்காழித்<br>தஞ்ச மாய தலைவன் றன்னை<br>நினைவார்கள்<br>துஞ்ச –ல்லா நல்ல வுலகம்<br>பெறுவாரே. | அச்சத்துடன் துன்பம் தரும் பேச்சுக்களை மொழிந்து திரியும் சமணர்களாகிய அறிவி–களுக்கும் காலையில் கஞ்சியையுண்டு திரியும் தேரர்களுக்கும் அறிதற்கு அரியவன் உறையும் க–க்காழியை அடைந்து தஞ்சமாக அடைதற்குரிய அத்தலைவனை நினைபவர்கள் இறப்பும் பிறப்பும் வாராத பேரின்ப உலகம் பெறுவர். |
| **2112.** ஊழி யாய பாரி லோங்கு<br>முயர்செல்வக்<br>காழி யீசன் கழலே பேணுஞ்<br>சம்பந்தன்<br>றாழு மனத்தா லுரைத்த தமிழ்க<br>ளிவைவல்லார்<br>வாழி நீங்கா வானோ ருலகின்<br>மகிழ்வாரே. | உலக முடிவில் அழிவதான இம்மண்ணுலகில் அழியாது மிதந்த உயர் செல்வம் உடைய காழியில் எழுந்தருளிய ஈசனின் திருவடிகளைப் பேணும் ஞானசம்பந்தன் பணிவான உள்ளத்தோடு உரைத்த தமிழ் மாலையாகிய இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர் நிலையான வாழ்வுடைய வானோர் உலகில் மகிழ்ந்துறைவர். |

## 60. திருப்பாசூர்

பண் : காந்தாரம் பதிக எண் : 60

| | |
|---|---|
| **2113.** சிந்தை யிடையார் தலையின் மிசையார்<br>செஞ்சொல்லார்<br>வந்து மாலை வைகும் போழ்தென்<br>மனத்துள்ளார்<br>மைந்தா மணாளா வென்ன மகிழ்வா<br>ரூர்போலும்<br>பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த<br>பாசூரே. | மனத்திலும், தலையின்மேலும் வாக்கிலும் உறைபவர், மாலைக்காலம் வரும்போது வந்து என் மனத்தில் விளங்குபவர், மைந்தா! மணாளா! என்று அழைக்க மகிழ்பவர். அவரது ஊர் பசுமையான மாதவி படர்ந்த சோலைகள் சூழ்ந்த பாசூர் ஆகும். |
| **2114.** பேரும் பொழுதும் பெயரும் பொழுதும்<br>பெம்மானென்<br>றாருந் தனையு மடியா ரேத்த<br>வருள்செய்வார்<br>ஊரு மரவ முடையார் வாழு<br>மூர்போலும்<br>பாரின் மிசையார் பாட லோவாப்<br>பாசூரே. | இடம் விட்டுச் செல்லும் போதும், வரும் போதும் பெம்மானே என்று மனம் நிறைவுறும் அளவும் அடியவர் ஏத்த அருள் செய்பவர். ஊர்ந்து செல்லும் படப்பாம்பை அணிந்தவர். அவர் வாழும் ஊர் உலக மக்களின் பாடல்கள் ஓவாது கேட்கும் பாசூர் ஆகும். |
| **2115.** கையாற் றொழுது தலைசாய்த் துள்ளங்<br>கசிவார்கண்<br>மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும்<br>விகிர்தனார்<br>நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவு<br>மூர்போலும்<br>பைவாய் நாகங் கோடலீனும்<br>பாசூரே. | கைகளால் தொழுதும், தலையைத் தாழ்த்தியும் உள்ளம் உருகி வழிபடும் அடியவர்களின் உடற்குறைகளையும் துன்பங்களையும் தவிர்த்தருளும் விகிர்தன், நெய் முத–ய ஆனைந்தும் ஆடுதல் உடையவன், அவன் எழுந்தருளிய ஊர், பாம்பின் படம் போலக் காந்தள் பூக்கள் மலர்ந்துள்ள பாசூராகும். |

| | | |
|---|---|---|
| 2116. | பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற்<br>பொ–வெய்தக்<br>கொங்கார் கொன்றை சூடியென் னுள்ளங்<br>குளிர்வித்தார்<br>தங்கா த–யுந் தாமும் வாழு<br>மூர்போலும்<br>பைங்கான் முல்லை பல்லரும் பீனும்<br>பாசூரே. | சினந்து படம் எடுத்தாடும் பாம்பும், கங்கையும் சடையின் மேல் விளங்கித் தோன்ற, தேன் நிறைந்த கொன்றை மலரைச் சூடி என் உள்ளம் குளிர்வித்தவர். அவர் தம் காத–யாரோடு தாமும் வாழும் ஊர் பசிய காலோடு கூடிய முல்லைக் கொடிகள் பற்கள் போல அரும்புகள் ஈனும் பாசூராகும். |
| 2117. | ஆடற் புரியு மைவா யரவொன்<br>றரைச்சாத்தும்<br>சேடச் செல்வர் சிந்தையு ளென்றும்<br>பிரியாதார்<br>வாடற் றலையிற் ப–தேர் கையா<br>ரூர்போலும்<br>பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப்<br>பாசூரே. | ஆடும் ஐந்து தலைப்பாம்பை இடையிலே கட்டிக் கொண்டுள்ள மேலான செல்வர். நினைப்பவர் சிந்தையினின்றும் பிரியாதவர். ஊன்வாடிய தலையோட்டில் ப–தேரும் கையினர். அவரது ஊர், பாடும் குயில்கள் வாழும் பூஞ்சோலைகளை உடைய பாசூர் ஆகும். |
| 2118. | கானின் றதிரக் கனல்வாய் நாகங்<br>கச்சாகத்<br>தோலொன் றுடையார் விடையார் தம்மைத்<br>தொழுவார்கள்<br>மால்கொண் டோட மையல் தீர்ப்பா<br>ரூர்போலும்<br>பால்வெண் மதிதோய் மாடஞ் சூழ்ந்த<br>பாசூரே. | திருவடி ஊன்றித் தாளம் இட நாகத்தைக் கச்சாக இடையில் கட்டிக்கொண்டு தோலை ஆடையாக உடுத்தவர். விடை ஊர்தியர். தம்மைத் தொழுபவர்கள் அன்பு கொண்டு தம்மைத் தொழ அவர்களின் மயக்கங்களைத் தீர்ப்பவர். அவரது ஊர் பால் போன்ற வெண்மதிதோயும் மாட வீடுகள் சூழ்ந்த பாசூர் ஆகும். |
| 2119. | கண்ணி னயலே கண்ணொன் றுடையார்<br>கழலுன்னி<br>எண்ணுந் தனையு மடியா ரேத்த<br>வருள்செய்வார்<br>உண்ணின் றுருக வுகவை தருவா<br>ரூர்போலும்<br>பண்ணின் மொழியார் பாட லோவாப்<br>பாசூரே. | இரு கண்களுக்கு அயலே நெற்றியில் மூன்றாவதாக ஒரு கண்ணை உடையவர். தம் திருவடிகளை நினைந்து எண்ணும் போதெல்லாம் அருள் செய்வார். உள்நின்று உருகும்போது உவகைகள் தருபவர். அவரது ஊர் பண்ணிசை போல மொழிகள் பேசும் பெண்கள் பாடும் ஓசை நீங்காத பாசூராகும். |
| 2120. | தேசு குன்றாத் தெண்ணீ ரிலங்கைக்<br>கோமானைக்<br>கூச வடர்த்துக் கூர்வாள் கொடுப்பார்<br>தம்மையே<br>பேசிப் பிதற்றப் பெருமை தருவா<br>ரூர்போலும்<br>பாசித் தடமும் வயலுஞ் சூழ்ந்த<br>பாசூரே. | சூரியன் தன் மேல் செல்லாதிருப்பினும், சிவபக்தியின் முதிர்ச்சியை உடைய அரசனது ஆட்சியாத–ன் வையங்காக்கும் ஒளி குன்றாத தெளிந்த நீரை உடைய கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னன் இராவணனை மனம் கூசுமாறு அடர்த்துக் கூரிய வாளைப் பரிசாகக் கொடுத்தவர். தம்மையே பலகாலம் பேசிப் பிதற்றும் அடியவர்கட்குப் பெருமை தருபவர். அவரது ஊர் பசுமையான நீர்நிலைகளும், வயல்களும் சூழ்ந்த பாசூராகும். |

| | |
|---|---|
| 2121. நகுவாய் மலர்மே லயனு நாகத்<br>தணையானும்<br>புகுவா யறியார் புறநின் றோரார்<br>போற்றோவார்<br>செகுவா யுகுபற் றலைசேர் கையா<br>ரூர்போலும்<br>பகுவாய் நாரை யாரல் வாரும்<br>பாசூரே. | விரிந்த தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும், நாகணையில் பள்ளிகொள்ளும் திருமாலும் புகுமிடம் அறியாதவராகவும் புறம்பே நின்று அறிய இயலாதவராகவும் போற்றுதலை ஓவாதவராகவும் நிற்க அழிந்தவாயிற் பல்லுடைய தலையோடு சேர்ந்த கையினை உடையவர் சிவபெருமான். அவரது ஊர் பிளந்த வாயினை உடைய நாரைகள் ஆரல் மீன்களை வௌவி உண்ணும் பாசூராகும். |
| 2122. தூய வெயினின் றுழல்வார் துவர்தோ<br>யாடையார்<br>நாவில் வெய்ய சொல்–த் திரிவார்<br>நயமில்லார்<br>காவல் வேவக் கணையொன் றெய்தா<br>ரூர்போலும்<br>பாவைக் குரவம் பயில்பூஞ் சோலைப்<br>பாசூரே. | நல்ல வெயி–ல் நின்று உழல்பவரும், துவர் தோய்ந்த ஆடையை அணிந்தவருமாகிய சமண புத்தர்கள் நாவினால் வெய்ய சொற்களைச் சொல்–த் திரியும் நீதி அற்றவர்கள். காவல் புரியும் முப்புரங்களும் வெந்தழியுமாறு கணை ஒன்றை எய்த சிவபிரானது ஊர் பாவை போல மலரும் குராமரங்கள் செறிந்த சோலைகள் சூழ்ந்த பாசூர் ஆகும். |
| 2123. ஞான முணர்வான் காழி ஞான<br>சம்பந்தன்<br>தேனும் வண்டு மின்னிசை பாடுந்<br>திருப்பாசூர்க்<br>கானம் முறைவார் கழல்சேர் பாட<br>–வைவல்லார்<br>ஊன மிலரா யும்பர் வானத்<br>துறைவாரே. | கலைஞானம் சிவஞானம் ஆகியவற்றை உணர்ந்தவனாகிய காழி ஞானசம்பந்தன் தேனும், வண்டும் இன்னிசை பாடும் திருப்பாசூர் என்னும் காடுகள் நிறைந்த ஊரில் உறையும் இறைவனின் திருவடிகளில் சேர்ப்பிக்கும் பாடல்களாகிய இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர் குற்றம் அற்றவராய் வானுலகில் உறைவர். |

## 61. திருவெண்காடு

பண் : காந்தாரம் — பதிக எண் : 61

| | |
|---|---|
| 2124. உண்டாய் நஞ்சை யுமையோர் பங்கா<br>வென்றுள்கித்<br>தொண்டாய்த் திரியு மடியார் தங்கள்<br>துயரங்கள்<br>அண்டா வண்ண மறுப்பா னெந்தை<br>யூர்போலும்<br>வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய்<br>வெண்காடே. | நஞ்சை உண்டவனே! உமைபங்கா! என்று கூறி மனத்தில் தியானித்துத் தொண்டராகிப் பணிகள் புரியும் அடியவர்களைத் துயரங்கள் நெருங்காவண்ணம் அவற்றை அறத்தீர்த்தருளும் எந்தையினது ஊர், வெண்டாமரை மலர்களில் கருவண்டுகள் யாழ் போல ஒ–த்துத் தேனுண்ணும் திருவெண்காடாகும். |

| | |
|---|---|
| **2125.** நாத னம்மை யாள்வா னென்று<br>நவின்றேத்திப்<br>பாதம் பன்னாள் பணியு மடியார்<br>தங்கண்மேல்<br>ஏதந் தீர விருந்தான் வாழு<br>மூர்போலும்<br>வேதத் தொ–யாற் கிளிசொற் பயிலும்<br>வெண்காடே. | நாதனாகிய பெருமான் நம்மை ஆள்வான் என்று அவன் பெயரைப் பல முறையும் கூறி ஏத்திப் பல நாள்கள் திருவடிகளைப் பரவும் அடியவர்க்கு வரும் குற்றங்களைத் தீர்த்தருள எழுந்தருளி யிருப்பவனது ஊர், வேத ஒ–களைக் கிளிகள் பேசும் திருவெண்காடாகும். |
| **2126.** தண்முத் தரும்பத் தடமூன் றுடையான்<br>றனையுன்னிக்<br>கண்முத் தரும்பக் கழற்சே வடிகை<br>தொழுவார்கள்<br>உண்முத் தரும்ப வுவகை தருவான்<br>ஊர்போலும்<br>வெண்முத் தருவிப் புனல்வந் தலைக்கும்<br>வெண்காடே. | குளிர்ந்த முத்துக்கள் அரும்பும் முக்குளங்களைத் தீர்த்தங்களாகக் கொண்டுள்ளவனை நினைந்து கண்களில் முத்துக்கள் போல நீர் அரும்ப அவனுடைய கழலணிந்த சேவடிகளைக் கை தொழுவார்களின் உள்ளங்களில் முத்துக்கள் போன்று தூய நன்மை தோன்ற உவகைதரும் இறைவனது ஊர் வெண்மையான முத்துக்கள் போன்ற அருவியின் புனல் வந்து அலைக்கும் திருவெண்காடாகும். |
| **2127.** நரையார் வந்து நாளுங் குறுகி<br>நணுகாமுன்<br>உரையால் வேறா வுள்கு வார்கள்<br>உள்ளத்தே<br>கரையா வண்ணங் கண்டான்மேவு<br>மூர்போலும்<br>விரையார் கமலத் தன்ன மருவும்<br>வெண்காடே. | தலையில் நரை வந்து உடல் நாளுக்கு நாள் குறுகி மூப்பு நணுகுதற்கு முன், உரை வேறாகாது நினைபவர் உள்ளத்தே மெ–ந்து கரைந்து ஒழியாதவாறு தன்னைத் தோற்றுவிப்பவனது ஊர், மணம் கமழும் தாமரை மலரில் அன்னங்கள் தங்கி மகிழும் திருவெண்காடாகும். |
| **2128.** பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும்<br>பெம்மானென்<br>றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்க<br>ளுறுநோய்கள்<br>தள்ளிப்போக வருளுந் தலைவ<br>னூர்போலும்<br>வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும்<br>வெண்காடே. | இளம்பிறையையும் கங்கையையும் முடியிற் சூடிய பெருமான் என்று மனத்தில் நினைந்து தொழுபவர்களின் பெருகிய நோய்களைத் தள்ளிப் போகுமாறு செய்தருளும் தலைவனது ஊர் வெண்ணிறமான உள்கோடுகளை உடைய சங்குகள் உலவித் திரியும் திருவெண்காடாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2129.** ஒளிகொண் மேனி யுடையா யும்ப<br>ராளீயென்<br>றளிய ராகி யழுதுற் றூறு<br>மடியார்கட்<br>கெளியா னமரர்க் கரியான் வாழு<br>மூர்போலும்<br>வெளிய வுருவத் தானை வணங்கும்<br>வெண்காடே. | ஒளி கொண்ட திருமேனியை உடையவனே! உம்பர்களை ஆள்பவனே! என்று அன்புடையவராய் அழுது பொருந்தும் அடியவர்க்கு எளியவன். தேவர்களுக்கு அரியவன் ஆகிய சிவபிரானது ஊர் வெண்ணிறமுடைய ஐராவதம் வணங்கி அருள் பெற்ற திருவெண் காடாகும். |
| **2130.** கோள்வித் தனைய கூற்றந் தன்னைக்<br>குறிப்பினான்<br>மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த<br>மாணிக்காய்<br>ஆள்வித் தமர ருலக மளிப்பா<br>னூர்போலும்<br>வேள்விப் புகையால் வான மிருள்கூர்<br>வெண்காடே. | உயிர்கவர்வதில் வித்துப் போல்பவனாகிய கூற்றுவனை, சிவபிரானை நினையும் குறிப்பினால் மாள்வித்து அச்சிவபிரானை மகிழ்வோடு ஏத்திய சுவேத கேது முனிவரை அமருலகம் ஆளச் செய்து அணி செய்தவனது ஊர் வேள்விப் புகையால் வானம் இருள்கூர்கின்ற திருவெண்காடு ஆகும். |
| **2131.** வளையார் முன்கை மலையாள் வெருவ<br>வரையூன்றி<br>முளையார் மதியஞ் சூடி யென்று<br>முப்போதும்<br>இளையா தேத்த விருந்தா னெந்தை<br>யூர்போலும்<br>விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த<br>வெண்காடே. | வளையலணிந்த முன்கையை உடைய பார்வதி அஞ்சுமாறு பெயர்த்தகயிலை மலையைக் கால்விரல் ஊன்றி நெரித்து, முளை மதிசூடிய இறைவனே என அடியவர் முப்போதும் தளராது ஏத்துமாறு எழுந்தருளிய எந்தையாகிய சிவபெருமானது ஊர், விளைவைக் கொண்ட வயல்கள் சூழ்ந்த திருவெண்காடாகும். |
| **2132.** கரியா னோடு கமல மலரான்<br>காணாமை<br>எரியாய் நிமிர்ந்த வெங்கள் பெருமா<br>னென்பார்கட்<br>குரியா னமரர்க் கரியான் வாழு<br>மூர்போலும்<br>விரியார் பொழி—ன் வண்டு பாடும்<br>வெண்காடே. | கரிய திருமாலும் கமல மலரில் உறையும் நான்முகனும் அடி முடி காண இயலாதவாறு எரியுருவாய் நிமிர்ந்த எங்கள் பெருமானே! என்பார்கட்கு உரியவனும் அமரர்க்கு அரியவனுமான சிவபிரானது ஊர், வண்டுகள் பாடும் விரிந்த பொழில்கள் சூழ்ந்த திருவெண்காடாகும். |
| **2133.** பாடு மடியார் பலருங் கூடிப்<br>பரிந்தேத்த<br>ஆடு மரவம் சைத்த பெருமா<br>னறிவின்றி<br>மூட முடைய சமண்சாக் கியர்க<br>ளுணராத<br>வேட முடைய பெருமான் பதியாம்<br>வெண்காடே. | பாடுகின்ற அடியவர் பலரும் கூடிப் பரிவுடன் ஏத்த ஆடும் பாம்பை இடையிற்கட்டியுள்ளவனாகி, அறிவற்ற மூடர்களாகிய சமண் சாக்கியர்கள் உணர இயலாத வேடம் கொண்ட பெருமானது பதி வெண்காடாகும். |

2134. விடையார் கொடியான் மேவி யுறையும்
வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங்
காழியான்
நடையா ரின்சொல் ஞானசம் பந்தன்
தமிழ்வல்லார்க்
கடையா வினைக ளமர லோகம்
ஆள்வாரே.

விடைக் கொடியைக் கொண்ட சிவபிரான் மேவி உறையும் வெண்காட்டை கடைவாயிலை உடைய மாடவீடுகள் கலந்து விளங்கும் காழிப் பதியானாகிய ஞானசம்பந்தன் ஒழுக்கநெறியும் இன்சொல்லும் கலந்ததாக அமைந்த இப்பதிகத் தமிழை ஓத வல்லவர்களை வினைகள் அடையா. அவர் அமரலோகம் ஆள்வர்.

## 62. திருமீயச்சூர்
## (மாயச்சூர் அன்றறுத்த மைந்தன் தாதை தன் மீயச்சூர்)

பண் : காந்தாரம் பதிக எண் : 62

2135. காயச் செவ்விக் காமற் காய்ந்து
கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த
பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன்
றாதைதன்
மீயச் சூரே தொழுது வினையை
வீட்டுமே.

அழகிய உடலை உடைய காமனைக் காய்ந்து, கங்கையை விரிந்த புன்சடையிற் பாயுமாறு செய்து, பதித்த பரமேட்டியும் சூரபன்மன் மாயும்படி அழித்த முருகப்பெருமானின் தந்தையும் ஆகிய சிவபிரானது மீயச்சூரைத் தொழுது வினையைத் தீர்த்தொழியுங்கள்.

2136. பூவார் சடையின் முடிமேற் புனல
ரனல்கொள்வர்
நாவார் மறையர் பிறையர் நறவெண்
டலையேந்தி
ஏவார் மலையே சிலையாக் கழியம்
பெரிவாங்கி
மேவார் புரமூன் றெரித்தார்
மீயச் சூராரே.

திருமீயச்சூர் இறைவர் மலர் அணிந்துள்ள சடை முடியில் கங்கையைச் சூடியவர். கையில் அனலைக் கொண்டவர். நாவால் வேதங்களை அருளியவர். பிறை சூடியவர். நாற்றமுடைய வெள்ளிய தலையோட்டை ஏந்தியவர். பெருமை பொருந்திய மேரு மலையாகிய வில்—ல் திருமாலைக் கழியம்பாகவும் அக்கினியை அம்பின் முனையாகவும் கொண்டு வில்லை வளைத்துப் பகைவரின் முப்புரங்களை எரித்தவர்.

2137. பொன்னேர் கொன்றை மாலை புரளு
மகலத்தான்
மின்னேர் சடைக ளுடையான் மீயச்
சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால்
வணங்குவார்
அந்நே ரிமையோ ருலக மெய்தற்
கரிதன்றே.

பொன் போன்ற கொன்றை மாலை புரளும் மார்பினனும், மின்னல் போன்ற சடைகளை உடையவனும் தனக்கு ஒப்பார் பிறர் இல்லாதவனும் ஆகிய மீயச்சூர் இறைவனைத் தலையால் வணங்குவார் அழகும் நேர்மையும் உடைய தேவர் உலகத்தை எய்துதல் அரிதன்று.

| | |
|---|---|
| **2138.** வேக மதநல் –யானை வெருவ<br>வுரிபோர்த்துப்<br>பாக முமையோ டாகப் படிதம்<br>பலபாட<br>நாக மரைமே லசைத்து நடமா<br>டியநம்பன்<br>மேக முரிஞ்சும் பொழில்சூழ மீயச்<br>சூரானே. | வேகமும் மதமும் உடைய நல்ல யானையை வெருவுமாறு கொன்று அதன் தோலை உரித்துப் போர்த்து உமைபாகராக அவ்வம்மையார் பாடப் பாம்பை இடையின் மேல் கச்சாகக் கட்டிக் கொண்டு நடனமாடிய பெருமான் மேகந்தோயும் பொழில்சூழ்ந்த மீயச்சூர் இறைவன் ஆவான். |
| **2139.** விடையார் கொடியார் சடைமேல் விளங்கும்<br>பிறைவேடம்<br>படையார் பூதஞ் சூழப் பாட<br>லாடலார்<br>பெடையார் வரிவண் டணையும் பிணைசேர்<br>கொன்றையார்<br>விடையார் நடையொன் றுடையார் மீயச்<br>சூராரே. | திருமீயச்சூர் இறைவர், விடைக்கொடியை உடையார், சடைமேல் விளங்கும் பிறைவேடத்தை உடையவர். படைகளாக அமைந்த பூதங்கள் சூழப் பாடியும் ஆடியும் மகிழ்பவர். பெடைகளோடு கூடி ஆண் வண்டுகள் அணையும் கொன்றை மாலையை அணிந்தவர். காளை போன்ற நடையை உடையவர். |
| **2140.** குளிருஞ் சடைகொண் முடிமேற் கோல<br>மார்கொன்றை<br>ஒளிரும் பிறையொன் றுடையா னொருவன்<br>கைகோடி<br>நளிரும் மணிசூழ் மாலை நட்ட<br>நவினம்பன்<br>மிளிரும் மரவ முடையான் மீயச்<br>சூரானே. | திருமீயச்சூர் இறைவன் குளிர்ந்த சடைகளைக் கொண்டுள்ள முடிமீது அழகிய கொன்றை மாலை, விளங்கும் பிறை ஆகியவற்றைச் சூடியவன். ஒப்பற்றவன். மணிகள் அமைந்த மாலையுடன் கைகளை வளைத்து நடனம் புரிபவன். விளங்கும் அரவினை அணிந்தவன். |
| **2141.** நீல வடிவர் மிடறு நெடியர்<br>நிகரில்லார்<br>கோல வடிவு தமதாங் கொள்கை<br>யறிவொண்ணார்<br>காலர் கழலர் கரியி னுரியர்<br>மழுவாளர்<br>மேலர் மதியர் விதியர் மீயச்<br>சூராரே. | திருமீயச்சூர் இறைவர் நீலகண்டர். நீண்டவர். ஒப்பில்லாதவர். அழகிய பலபல வடிவங்கள் தம்முடையனவாகக் கொண்டு அறிதற்கு அரியராயிருப்பவர். கா–ற் கழல் அணிந்தவர். யானையின் தோலைப் போர்த்தவர். மழுவேந்தியவர். மேன்மையானவர். மதியை அணிந்தவர். உலகைப் படைப்பவர். |
| **2142.** பு–யி னுரிதோ லாடை பூசும்<br>பொடிநீற்றர்<br>ஒ–கொள் புனலோர் சடைமேற் கரந்தா<br>ருமையஞ்ச<br>வ–ய திரடோள் வன்க ணரக்கர்<br>கோன்றன்னை<br>மெ–ய வரைக்கீ ழடர்த்தார் மீயச்<br>சூராரே. | திருமீயச்சூர் இறைவர் பு–யின் தோலாகிய ஆடையையும் பூசும் திருநீற்றுப் பொடியையும் அணிந்தவர். ஆரவாரித்து வந்த கங்கையை ஓர் சடைமேற் கரந்தவர். உமையம்மை அஞ்ச வ–மையான திரண்ட தோள்களையும் வன்கண்மையையும் உடைய அரக்கர்கோனை மெ–யுமாறு மலையின் கீழ் அடர்த்தவர். |

| | |
|---|---|
| **2143.** காதின் மிளிருங் குழையர் கரிய<br>கண்டத்தார்<br>போதி லவனு மாலுந் தொழப்பொங்<br>கெரியானார்<br>கோதி வரிவண் டறைபூம் பொய்கைப்<br>புனல்மூழ்கி<br>மேதி படியும் வயல்சூழ் மீயச்<br>சூராரே. | வரிவண்டுகள் மலர்களைக் கோதி ஒ–செய்யும் பூம்பொய்கைப் புன–ல் எருமைகள் மூழ்கி வயல் கரைகளில் சென்று படுக்கும் திருமீயச்சூரில் மேவும் இறைவர், காதில் விளங்கும் குழையை அணிந்தவர். கரிய கண்டத்தினர். தாமரையோனாகிய பிரமனும் திருமாலும் தொழப் பொங்கிய எரிவடிவாய் நின்றவர். |
| **2144.** கண்டார் நாணும் படியார் க–ங்க<br>முடைபட்டைக்<br>கொண்டார் சொல்லைக் குறுகா ருயர்ந்த<br>கொள்கையார்<br>பெண்டான் பாக முடையார் பெரிய<br>வரைவில்லா<br>விண்டார் புரமூன் றெரித்தார் மீயச்<br>சூராரே. | கண்டவர் நாணும்படியாக ஆடையின்றித் திரியும் சமணர், க–ங்கமாகிய பட்டாடையை உடுத்த தேரர் ஆகியோர் கூறுவனவற்றை உயர்ந்த சிவநெறிக் கொள்கையர் குறுகார். திருமீயச்சூர் இறைவர் பெண்ணைப் பாகமாக உடையவர். பெரிய மலையாகிய வில்லால் பகைவரின் முப்புரங்களை எரித்தவர். |
| **2145.** வேட முடைய பெருமா னுறையு<br>மீயச்சூர்<br>நாடும் புகழார் புக– ஞான<br>சம்பந்தன்<br>பாட லாய தமிழீ ரைந்து<br>மொழிந்துள்கி<br>ஆடு மடியா ரகல்வா னுலகம்<br>அடைவாரே. | பற்பல வடிவங்களைக் கொண்டருளிய பெருமான் உறையும் திருமீயச்சூரை விரும்பும் புகழார்ந்த புக– ஞானசம்பந்தன் அருளிய பாடலாகிய தமிழ் ஈரைந்தையும் மொழிந்தும் நினைந்தும் ஆடும் அடியவர் அகன்ற வானுலகை அடைவர். |

## 63. திருவரிசிற்கரைப்புத்தூர்

பண் : காந்தாரம் பதிக எண் : 63

| | |
|---|---|
| **2146.** மின்னுஞ் சடைமே –ளவெண் டிங்கள்<br>விளங்கவே<br>துன்னுங் கடனஞ் சிருடோய் கண்டர்<br>தொன்மூதூர்<br>அன்னம் படியும் புனலா ரரிசில்<br>அலைகொண்டு<br>பொன்னும் மணியும் பொருதென்<br>கரைமேற் புத்தூரே. | மின்னல் போல ஒளிரும் சடைமேல் இளம்பிறை விளங்கக் கட–ல் பொருந்திய நஞ்சினது கருமை தோய்ந்த கண்டத்தராய் விளங்கும் பெருமானது பழமையான ஊர் அன்னங்கள் படிந்து ஆடும் நீரை உடைய அரிசிலாற்றின் அலை பொன்னையும் மணியையும் கொண்டு வீசும் தென்கரையின் மேல் விளங்கும் புத்தூராகும். |
| **2147.** மேவா வசுரர் மேவெயில் வேவ<br>மலைவில்லால்<br>ஏவா ரெரிவெங் கணையா லெய்தா<br>னெய்துமூர்<br>நாவா னாத னாம மோதி<br>நாடோறும்<br>பூவா னீராற் பூசுரர் போற்றும்<br>புத்தூரே. | பொருந்தாத அசுரர் வாழும் மூன்று கோட்டைகளும் வெந்து அழியுமாறு மலைவில்லால் அம்பாகப் பொருந்திய எரியாகிய கொடிய கணையால் எய்தவனது ஊர், பூசுரர்கள் நாவினால் நாதன் நாமங்களை நாடொறும் ஓதிப் பூவாலும் நீராலும் போற்றி வழிபடும் புத்தூர் ஆகும். |

| | |
|---|---|
| **2148.** பல்லார் தலைசேர் மாலை சூடிப் பாம்பும்பூண்<br>டெல்லா விடமும் வெண்ணீ றணிந்தோ ரேறேறிக்<br>கல்லார் மங்கை பங்க ரேனுங் காணுங்கால்<br>பொல்லா ரல்ல ரழகியர் புத்தூர்ப் புனிதரே. | புத்தூர்ப் புனிதர் பற்களோடு கூடிய தலை மாலையைச்சூடிப் பாம்பையும் அணிந்து உடல் முழுதும் வெண்ணீறு பூசி ஒப்பற்ற விடை மீது ஏறி இமவான் மகளான பார்வதி பங்கராக இருப்பவர். ஆராயுமிடத்து அவர் பொல்லாதவர் அல்லர். அழகியவர். |
| **2149.** வரியேர் வளையா ளரிவை யஞ்ச வருகின்ற<br>கரியே ருரிவை போர்த்த கடவுள் கருதுமூர்<br>அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய<br>பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே. | வரிகளும் அழகும் பொருந்திய வளையல்களை அணிந்த அம்பிகை அஞ்சுமாறு வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்த கடவுள் கருதும் ஊர், நெல்லரிகளைக் கொண்ட வயல்கள் சூழ்ந்து அழகிய நெற் பொரிகள் போல புன்கமரங்கள் பூக்களைச் சொரியும் சோலைகள் சூழ்ந்த புத்தூர் ஆகும். |
| **2150.** என்போ டரவ மேனத் தெயிறோ டெழிலாமை<br>மின்போற் புரிநூல் விரவிப் பூண்ட மணிமார்பர்<br>அன்போ டுருகு மடியார்க் கன்ப ரமருமூர்<br>பொன்போ தலர்கோங் கோங்கு சோலைப் புத்தூரே. | எலும்பு, பாம்பு, பன்றிப்பல், அழகிய ஆமை ஓடு ஆகியவற்றை மின்னல் போன்ற பூணநூலோடு மாலையாகக் கலந்தணிந்த அழகிய மார்பினர். அன்போடு உருகி வழிபடும் அடியவர்கட்கு அன்பர். அவர் எழுந்தருளிய ஊர் பொன் போல மலரும் கோங்கமலர்கள் ஓங்கிய சோலைகளை உடைய புத்தூர் ஆகும். |
| **2151.** வள்ளி முலைதோய் குமரன் றாதை வன்றோயும்<br>வெள்ளி மலைபோல் விடையொன் றுடையான் மேவுமூர்<br>தெள்ளி வருநீ ரரிசிற் றென்பால் சிறைவண்டும்<br>புள்ளு ம–பூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே. | வள்ளி மணாளனாகிய முருகனின் தந்தையாய் வான்தோயும் கயிலைமலை போன்ற வெள்விடையை உடையவன் எழுந்தருளிய ஊர், தெளிவாக வரும் நீரை உடைய அரிசிலாற்றின் தென்கரையில் சிறைவண்டும் பறவைகளும் நிறைந்து வாழும் அழகிய பொய்கைகள் சூழ்ந்த புத்தூர் ஆகும். |
| **2152.** நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான்<br>சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தானூர்<br>அலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்<br>புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. | நிலம், தண்ணீர், அனல், காற்று விசும்பு ஆகிய ஐம்பூதங்களின் இயல்பை உடையவன். சிலந்தியைக் கோச்செங்கட் சோழனாகப் பிறக்கச் செய்தவன். அவனது ஊர் வறுமையுற்ற புகழ்த் துணையார் என்னும் சிவமறையவர் அன்றைக் கன்று ஒரு காசினை அருளப் பெற்றுப் புலர்ந்த காலையிலும் மாலையிலும் போற்றி வழிபட்ட புத்தூராகும். |
| **2153.** இத்தே ரேக விம்மலை பேர்ப்ப னென்றேந்தும்<br>பத்தோர் வாயான் வரைக்கீ ழலறப் பாதந்தான்<br>வைத்தா ரருள்செய் வரதன் மருவு மூரான<br>புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே. | இந்தத் தேர் செல்லுதற்குத் தடையாக உள்ள இந்த மலையைப் பெயர்ப்பேன் என்று கூறிச் சிவபிரான் எழுந்தருளிய திருக்கயிலையைப் பெயர்த்து ஏந்திய பத்து வாய்களை உடைய இராவணன் மலைக்கீழ் அகப்பட்டு அலறுமாறு தம் பாதத்தைச் சிறிது ஊன்றி அடர்த்துப் பின் அவனுக்கு அருள் செய்யும் வரதனாகிய சிவபிரான் மருவும் ஊரான புத்தூரைத் தரிசிக்கச் செல்வார் வினைகள் போகும். |

| | |
|---|---|
| **2154.** முள்ளார் கமலத் தயன்மான் முடியோடு<br>அடிதேட<br>ஒள்ளா ரெரியா யுணர்தற் கரியா<br>னூர்போலும்<br>கள்ளார் நெய்தல் கழுநீ ராம்பல்<br>கமலங்கள்<br>புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும்<br>புத்தூரே. | முட்கள் பொருந்திய தண்டினை உடைய தாமரை மலரின் மேல் உறையும் நான்முகன், திருமால் ஆகியோர் முடியோடு அடிதேட, ஒளி பொருந்திய எரி உருவினனாய், உணர்தற்கு அரியவனாய் விளங்கிய சிவபிரானது ஊர், தேன் பொருந்திய நெய்தல், கழுநீர், ஆம்பல், தாமரை ஆகியவற்றை உடைய பறவைகள் நிறைந்த பொய்கைகளில் பூக்கள் நிறைந்து தோன்றும் புத்தூர் ஆகும்.<br>புகழ்த்துணை நாயனார் முக்தி பெற்ற தலம். |
| **2155.** கையார் சோறு கவர்குண் டர்களுந்<br>துவருண்ட<br>மெய்யார் போர்வை மண்டையர் சொல்லு<br>மெய்யல்ல<br>பொய்யா மொழியா லந்தணர் போற்றும்<br>புத்தூரில்<br>ஐயா வென்பார்க் கையுறவின்றி<br>யழகாமே. | கையில் வாங்கிச் சோற்றை உண்ணும் குண்டர்களும், துவர்நிறம் ஊட்டிய ஆடையை மெய்யிற் போர்த்தி மண்டையில் உணவு வாங்கி உண்ணும் தேரர்களும் கூறும் சொற்கள் உண்மையல்லாதவை. மெய்ம்மொழியால் அந்தணர்கள் போற்றும் புத்தூரில் எழுந்தருளிய தலைவனே! என்று போற்றுவார்க்கு ஐயுறவு இன்றி அழகு உண்டாம். |
| **2156.** நறவங் கமழ்பூங் காழி ஞான<br>சம்பந்தன்<br>பொறிகொ ளரவம் பூண்டா னாண்ட<br>புத்தூர்மேல்<br>செறிவண் டமிழ்செய் மாலை செப்ப<br>வல்லார்கள்<br>அறவன் கழல்சேர்ந் தன்போ டின்ப<br>மடைவாரே. | தேன் மணம் கமழும் அழகிய காழி நகரில் தோன்றிய ஞானசம்பந்தன், புள்ளிகளைக் கொண்ட பாம்பினைப் பூண்ட சிவபிரான் ஆட்சிபுரியும் புத்தூர் மேல் வளமை செறிந்த தமிழால் செய்த இம்மாலையைச் செப்ப வல்லவர்கள் அறவடிவினனான சிவபிரான் திருவடிகளை அடைந்து அன்பும் இன்பமும் அடைவார்கள். |

## 64. திருமுதுகுன்றம்
## (விருத்தாச்சலம்)

**பண் : காந்தாரம்** **பதிக எண் : 64**

| | |
|---|---|
| **2157.** தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய்<br>பெரியோனே<br>ஆவா வென்றங் கடியார் தங்கட்<br>கருள்செய்வாய்<br>ஓவா வுவரிகொள்ள வுயர்ந்தா<br>யென்றேத்தி<br>மூவா முனிவர் வணங்கும் கோயின்<br>முதுகுன்றே. | அழிவற்ற முனிவர்கள், தேவனே! பெரியோனே! சிறியோமாகிய எங்கள் பிழையைப் பொறுத்தருள்வாயாக. அடியவர் துன்புற நேரின், ஆ! ஆ! எனக் கூறி இரங்கி அவர்கட்கு அருள்புரிபவனே! ஒழியாது கடல் பெருகி உலகைக் கொள்ள முற்பட்டபோது உயர்ந்தவனே! என்று ஏத்தி வணங்கும் கோயிலை உடையது முதுகுன்றாகும். |

| | |
|---|---|
| **2158.** எந்தை யிவனென் றிரவி முதலா<br>விறைஞ்சுவார்<br>சிந்தை யுள்ளே கோயி லாகத்<br>திகழ்வானை<br>மந்தி யேறி யினமா மலர்கள்<br>பலகொண்டு<br>முந்தித் தொழுது வணங்குங் கோயின்<br>முதுகுன்றே.<br><br>சிவபெருமானால் முத–ல் படைக்கப்பட்ட குன்று – முதுகுன்று | எமக்குத் தந்தையாவான் இவனே என்று, சூரிய பூசையை முத–ற்கொண்டு சிவபூசை செய்து வழிபடும் அடியவர்களின் சிந்தையைக் கோயிலாகக் கொண்டு அதன் உள்ளே திகழ்பவனைக் குரங்குகள் கூட்டமாய் மரங்களில் ஏறிப் பல மலர்களைக் கொண்டு முற்பட்டுத் தொழுது வணங்கும் கோயிலை உடையது முதுகுன்றமாகும். மந்திகள் மக்களுக்கு முந்தி மலர் வழிபாடு செய்யும் சிறப்பு உணர்த்தப்பட்டது. |
| **2159.** நீடு மலரும் புனலும் கொண்டு<br>நிரந்தரம்<br>தேடு மடியார் சிந்தை யுள்ளே<br>திகழ்வானைப்<br>பாடுங் குயி– னயலே கிள்ளை<br>பயின்றேத்த<br>மூடுஞ் சோலை முகிறோய் கோயின்<br>முதுகுன்றே. | மிகுதியான மலர்களையும் தண்ணீரையும் கொண்டு எப்பொழுதும் பூசித்துத் தேடும் அடியவர் சிந்தையுள்ளே விளங்கும் இறைவனை, பாடும் குயில்களும் அயலே கிள்ளைகளும் பழகி ஏத்தச் சோலைகளும் முகில்களும் தோய்ந்து மூடும் கோயிலை உடையது முதுகுன்றாகும். |
| **2160.** தெரிந்த வடியார் சிவனே யென்று<br>திசைதோறும்<br>குருந்த மலருங் குரவி னலருங்<br>கொண்டேந்தி<br>இருந்து நின்று மிரவும் பகலு<br>மேத்துஞ்சீர்<br>முரிந்து மேகந் தவழுஞ் சோலை<br>முதுகுன்றே. | அறிந்த அடியார்கள் சிவனே என்று திசைதோறும் நின்று குருந்த மலர்களையும் குரா மலர்களையும் கொண்டு பூசித்து ஏத்தி அமர்ந்தும் நின்றும் இரவும் பகலும் ஏத்தும் சீரையுடையதும் விட்டு விட்டு மேகங்கள் தவழும் உயர்ந்த கோயிலை உடையதும் முதுகுன்றாகும். |
| **2161.** வைத்த நிதியே மணியே யென்று<br>வருந்தித்தம்<br>சிந்த நைந்து சிவனே யென்பார்<br>சிந்தையார்<br>கொத்தார் சந்துங் குரவும் வாரிக்<br>கொணர்ந்துந்து<br>முத்தா றுடைய முதல்வர் கோயின்<br>முதுகுன்றே.<br><br>மணியாலும், முத்தாலும் கலந்து ஓடும் ஆறு மணிமுத்தாறு. | சேம வைப்பாக வைக்கப்பெற்ற நிதி போன்றவனே! மணி போன்றவனே! என்று கூறி, போற்றாத நாள்களுக்கு வருந்தித் தம் சிந்தை நைந்து சிவனே என்று அழைப்பவரின் சிந்தையில் உறைபவர் சிவபெருமான். சந்தனக் கொத்துக்களையும் குரா மரங்களையும் வாரிக் கொணர்ந்து கரையில் சேர்ப்பிக்கும் மணிமுத்தாற்றை உடைய அம்முதல்வரின் கோயில் முதுகுன்றாகும். |

| | |
|---|---|
| **2162.** வம்பார் கொன்றை வன்னி மத்த<br>மலர்தூவி<br>நம்பா வென்ன நல்கும் பெருமா<br>னுறைகோயில்<br>கொம்பார் குரவு கொகுடி முல்லை<br>குவிந்தெங்கும்<br>மொய்ம்பார் சோலை வண்டு பாடு<br>முதுகுன்றே. | மணமுடைய கொன்றை மலர், வன்னியிலை, ஊமத்த மலர் ஆகியவற்றைத் தூவி நம்பனே! என்று அழைக்க அருள் நல்கும் பெருமான் உறைகோயில், கொம்புகளை உடைய குராமரம், கொகுடி வகை முல்லை ஆகிய மரம் கொடி முத–யவை செறிந்து மொய்ம்புடையவாய் விளங்கும் சோலைகளை உடைய முதுகுன்றாகும். |
| **2163.** வாசங் கமழும் பொழில்சூ ழிலங்கை<br>வாழ்வேந்தை<br>நாசஞ் செய்த நங்கள் பெருமா<br>னமர்கோயில்<br>பூசைசெய்து வடியார் நின்று<br>புகழ்ந்தேத்த<br>மூசி வண்டு பாடுஞ் சோலை<br>முதுகுன்றே. | மணம் கமழும் பொழில் சூழ்ந்த இலங்கை வாழ் வேந்தனாகிய இராவணனின் வ–மையை அழித்த நம்பெருமான் அமர்கின்ற கோயில், அடியவர் பூசை செய்து நின்று புகழ்ந்து போற்ற விளங்குவதும், வண்டுகள் மொய்த்துப்பாடும் சோலைகளை உடையதுமான முதுகுன்றாகும். |
| **2164.** அல்– மலர்மே லயனு மரவின்<br>அணையானும்<br>சொல்–ப் பரவித் தொடர வொண்ணாச்<br>சோதியூர்<br>கொல்லை வேடர் கூடி நின்று<br>கும்பிட<br>முல்லை யயலே முறுவல் செய்யும்<br>முதுகுன்றே. | அக இதழ்களை உடைய தாமரை மலர்மேல் உறையும் பிரமனும், பாம்பணையிற் பள்ளி கொள்ளும் திருமாலும் தோத்திரம் சொல்– வாழ்த்தித் தொடர, அவர்களால் அறிய ஒண்ணாத சோதியாய் நின்றவனது ஊர், முல்லை நிலத்தில் வேடர்கள் கூடிநின்று கும்பிட அதனைக் கண்டு முல்லைக்கொடிகள்அரும்புகளால் முறுவல் செய்யும் முதுகுன்றாகும். |
| **2165.** கருகு முடலார் கஞ்சி யுண்டு<br>கடுவேதின்<br>றுருகு சிந்தை யில்லார்க்கயலா<br>னுறைகோயில்<br>திருகல் வேய்கள் சிறிதே வளையச்<br>சிறுமந்தி<br>முருகின் பணைமே –ருந்து நடஞ்செய்<br>முதுகுன்றே. | கரிய உட–னராய், கஞ்சி உண்டு கடுக்காய் தின்று இரக்கமற்ற மனமுடையவராய்த் திரியும் சமண புத்தர்கட்கு அயலானாய் விளங்கும் சிவபிரான் உறையும் கோயில், கோணலை உடைய மூங்கில்கள் சிறிதே வளைந்திருக்கச் சிறிய மந்திகள் அகில் மரங்களின் கிளைகளின் மேல் நின்று நடனம் புரியும் முதுகுன்றமாகும். |

| | |
|---|---|
| **2166.** அறையார் கடல்சூ ழுந்தண் காழிச்<br>சம்பந்தன்<br>முறையான் முனிவர் வணங்குங் கோயின்<br>முதுகுன்றைக்<br>குறையாப் பனுவல் கூடிப் பாட<br>வல்லார்கள்<br>பிறையார் சடையெம் பெருமான் கழல்கள்<br>பிரியாரே. | ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட அழகும் தண்மையும் வாய்ந்த சீகாழிப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் முனிவர்கள் முறையால் வணங்கும் திருமுதுகுன்றத்துக் கோயிலை நிறைவாகப் பாடிய இப்பனுவலைக் கூடிப்பாட வல்லவர்கள் பிறை பொருந்திய சடையினை உடைய எம்பெருமானின் திருவடிகளைப் பிரியார். |

## 65. திருப்பிரமபுரம்

பண் : காந்தாரம் பதிக எண் : 65

| | |
|---|---|
| **2167.** கறையணி வேலிலர் போலுங்<br>கபாலந் தரித்திலர் போலும்<br>மறையு நவின்றிலர் போலு<br>மாசுண மார்த்திலர் போலும்<br>பறையுங் கரத்திலர் போலும்<br>பாசம் பிடித்திலர் போலும்<br>பிறையுஞ் சடைக்கிலர் போலும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிரமபுரம் அமர்ந்த பெருமான் சொரூப நிலையில் எல்லாம் அற்றவராக இருப்பினும், தடத்த நிலையில் கறை பொருந்திய வேலை உடையவர். கபாலம் தரித்தவர். வேதங்களை அருளியவர். பாம்புகளை இடையில் கட்டியவர். உடுக்கைப்பறை ஏந்திய கரத்தினர். கயிற்றைக் கையில் பிடித்தவர். பிறையணிந்த சடைமுடியினர் போலும் என்பதனை வினாப்பொருளதாகக் கொண்டு இங்குக் கூறிய செய்திகள் யாவும் உறுதிப் படுமாற்றை உணரலாம். |
| **2168.** கூரம் பதுவிலர் போலுங்<br>கொக்கி னிறகிலர் போலும்<br>ஆரமும் பூண்டிலர் போலு<br>மாமை யணிந்திலர் போலுந்<br>தாருஞ் சடைக்கிலர் போலுஞ்<br>சண்டிக் கருளிலர் போலும்<br>பேரும் பலவிலர் போலும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிரமபுரம் அமர்ந்த பெருமான் கூரிய அம்பினை உடையவர். கொக்கின் இறகை அணிந்தவர். ஆரங்கள் பூண்டவர். ஆமையோட்டைத் தரித்தவர். சடைமுடியில் மாலை அணிந்தவர். சண்டேசுரருக்கு அருள்புரிந்தவர். பல பெயர்களை உடையவர். |
| **2169.** சித்த வடிவிலர் போலுந்<br>தேசந் திரிந்திலர் போலுங்<br>கத்தி வருங்கடுங் காளி<br>கதங்கள் தவிர்த்திலர் போலும்<br>மெய்த்த நயன மிடந்தார்க்<br>காழி யளித்திலர் போலும்<br>பித்த வடிவிலர் போலும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிரமபுரம் அமர்ந்த பெருமான், சித்தர் வடிவம் போன்ற உருவினர், பல தேசங்களுக்கும் சென்று திரிந்தவர், சத்தமிட்டு வந்த காளியின் கோபாவேசத்தைத் தவிர்த்தவர். தன் உடம்பிலுள்ள கண்களில் ஒன்றைப் பெயர்த்தணிவித்த திருமாலுக்குச் சக்கராயுதம் அளித்தவர். பித்தர் வடிவம் போன்ற வடிவினர். |

| | |
|---|---|
| **2170.** நச்சர வாட்டிலர் போலு<br>நஞ்ச மிடற்றிலர் போலுங்<br>கச்சுத் தரித்திலர் போலுங்<br>கங்கை தரித்திலர் போலு<br>மொய்ச்சவன் பேயிலர் போலு<br>முப்புர மெய்திலர் போலும்<br>பிச்சை யிரந்திலர் போலும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிரமபுரம் அமர்ந்த பெருமான் நஞ்சினை உடைய பாம்பைப் பிடித்து ஆடச் செய்தவர். நஞ்சினை மிடற்றில் உடையவர். பாம்பைக் கச்சாக அணிந்தவர். கங்கையை முடியில் தரித்தவர். சூழ்ந்துள்ள வ–யபேய்க் கணங்களை உடையவர். முப்புரங்களை எய்து எரித்தவர். பிச்சை இரப்பவர். |
| **2171.** தோடு செவிக்கிலர் போலுஞ்<br>சூலம் பிடித்திலர் போலும்<br>ஆடு தடக்கை வ–ய<br>யானை யுரித்திலர் போலும்<br>ஓடு கரத்திலர் போலு<br>மொள்ளழல் கையிலர் போலும்<br>பீடு மிகுத்தெழு செல்வப்<br>பிரம புரமமர்ந் தாரே. | பீடுமிகுந்த செல்வப் பிரமபுரம், அமர்ந்த பெருமான் ஒருசெவியில் தோடணிந்தவர். கையில்சூலம் பிடித்தவர். அசைகின்ற நீண்ட கையை உடைய யானையை உரித்தவர். தலையோட்டைக் கையில் ஏந்தியவர். ஒளிபொருந்திய அழலைக் கையில் உடையவர். |
| **2172.** விண்ணவர் கண்டிலர் போலும்<br>வேள்வி யழித்திலர் போலும்<br>அண்ண லயன்றலை வீழ<br>வன்று மறுத்திலர் போலும்<br>வண்ண வெலும்பி னொடக்கு<br>வடங்க டரித்திலர் போலும்<br>பெண்ணின மொய்த்தெழு செல்வ<br>பிரம புரமமர்ந் தாரே. | மகளிர் கூட்டம் சூழ்ந்து போற்றும் பிரமபுரம் அமர்ந்த பெருமான், தேவர்களால் அறியப் பெறாதவர். தக்கன் வேள்வியை அழித்தவர். தலைமைத் தன்மையுடைய பிரமனின் தலைகளில் ஒன்றைக் கொய்தவர். அழகிய எலும்புகளோடு உருத்திராக்க வடங்கள் தரித்தவர். |
| **2173.** பன்றியின் கொம்பிலர் போலும்<br>பார்த்தற் கருளிலர் போலுங்<br>கன்றிய காலனை வீழக்<br>கால்கொடு பாய்ந்திலர் போலுந்<br>துன்று பிணஞ்சுடு காட்டி<br>லாடித் துதைந்திலர் போலும்<br>பின்றியும் பீடும் பெருகும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிற்காலத்தும் பெருமைகள் பெருகும் பிரமபுரம் அமர்ந்த பெருமான், பன்றியின் கொம்பைத் தரித்தவர். பார்த்தனுக்குப் பாசுபதம் அளித்து அருள் புரிந்தவர். சினந்துவந்த காலன் வீழுமாறு கால்கொடு பாய்ந்தவர். பிணங்கள் செறிந்த சுடுகாட்டில் ஆடித் திளைப்பவர். |
| **2174.** பரசு தரித்திலர் போலும்<br>படுதலை பூண்டிலர் போலும்<br>அரச னிலங்கையர் கோனை<br>யன்று மடர்த்திலர் போலும்<br>புரைசெய் புனத்திள மானும்<br>பு–யி னதளிலர் போலும்<br>பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த<br>பிரம புரமமர்ந் தாரே. | தேன் பொருந்திய மலர்கள் செறிந்த பொழில் சூழ்ந்த பிரமபுரம் அமர்ந்த பெருமான், கையில் மழுவைத் தரித்தவர். வீழ்ந்து பட்ட பிரமனது தலையோட்டைக் கையில் ஏந்தியவர். இலங்கையர் தலைவனாக விளங்கிய இராவணனை அக்காலத்தே அடர்த்தவர். பரண் அமைத்துக் காக்கும் புனத்தில் வரும் இளமான் பு– ஆகியவற்றின் தோல்களை உடுத்தவர். |

| | |
|---|---|
| **2175.** அடிமுடி மாலயன் றேட<br>வன்று மளப்பிலர் போலுங்<br>கடிமல ரைங்கணை வேளைக்<br>கனல விழித்திலர் போலும்<br>படிமலர்ப் பாலனுக் காகப்<br>பாற்கட லீந்திலர் போலும்<br>பிடிநடை மாதர் பெருகும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பெண்யானை போன்ற நடையினை உடைய மாதர்கள் பெருகிய பிரமபுரம் அமர்ந்த பெருமான், அன்று திருமால் பிரமர்கள் அடிமுடிதேடி அளக்கலாகாத திருவுருவம் கொண்டவர். மணம் கமழும் மலர்கள் ஐந்தினைக் கணைகளாகக் கொண்ட மன்மதன் எரியுமாறு விழித்தவர். மண்ணுலகில் தந்தையிடம் பால்கேட்ட மலர்போன்ற மென்மையான இளம் பாலகனுக்குப் பாற்கடல் ஈந்தவர். |
| **2176.** வெற்றரைச் சீவரத் தார்க்கு<br>வெளிப்பட நின்றிலர் போலும்<br>அற்றவ ரானிழ னால்வர்க்<br>கறங்க ளுரைத்திலர் போலும்<br>உற்றல ரொன்றிலர் போலு<br>மோடு முடிக்கிலர் போலும்<br>பெற்றமு மூர்ந்திலர் போலும்<br>பிரம புரமமர்ந் தாரே. | பிரமபுரம் அமர்ந்த பெருமான், வெற்றுடலோடும், சீவரம் அணிந்தும் திரியும் சமண புத்தர்கட்குப் புலனாகாதவர். ஆல் நிழற் கீழ்ப் பற்றற்றவர் களாகிய சனகாதி முனிவர் நால்வர்க்கு அறங்கள் உரைத்தவர். எதனையும் சார்ந்து நில்லாதவர். ஒன்றுமில்லாதாரைப் போலத் தோன்றுபவர். தலையோட்டை முடியில் தரித்தவர். விடை ஊர்ந்து வருபவர். |
| **2177.** பெண்ணுரு வாணுரு வல்லாப்<br>பிரம புரநகர் மேய<br>அண்ணல்செய் யாதன வெல்லா<br>மறிந்து வகைவகை யாலே<br>நண்ணிய ஞானசம் பந்த<br>னவின்றன பத்தும்வல் லார்கள்<br>விண்ணவ ரோடினி தாக<br>வீற்றிருப் பாரவர் தாமே. | பெண்ணுருவமும் ஆணுருவமும் அல்லாத (மாதொருபாகராக) பிரமபுரநகரில் உகந்தருளிய தலைமையை உடைய சிவபிரான் செய்யாத செயல்களைச் செய்தனபோலக் கூறும் இயல்புகளையெல்லாம் அறிந்து வகைவகையாக விரும்பிய ஞானசம்பந்தன் நவின்ற இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்கள் விண்ணவர்களோடு இனிதாக வீற்றிருப்பர். |

## 66. திருவாலவாய்

பண் : காந்தாரம் (திருநீற்றுப்பதிகம்) பதிக எண் : 66

| | |
|---|---|
| **2178.** மந்திர மாவது நீறு<br>வானவர் மேலது நீறு<br>சுந்தர மாவது நீறு<br>துதிக்கப் படுவது நீறு<br>தந்திர மாவது நீறு<br>சமயத்தி லுள்ளது நீறு<br>செந்துவர் வாயுமை பங்கன்<br>திருவால வாயான் திருநீறே. | சிவந்த பவளம் போன்ற வாயினை உடைய உமைபங்கன் ஆகிய திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானது திருநீறு, மந்திரம் போல நினைப்பவரைக் காப்பது. வானவர் தம் மேனிமேல் பூசிக்கொள்ளப்படுவது. அழகு தருவது. எல்லா நூல்களாலும் புகழப்படுவது. ஆகமங்களில் புகழ்ந்து சொல்லப்படுவது. சிவசமயத்தில் நிலைத்துள்ளது. |
| **2179.** வேதத்தி லுள்ளது நீறு<br>வெந்துயர் தீர்ப்பது நீறு<br>போதந் தருவது நீறு<br>புன்மை தவிர்ப்பது நீறு<br>ஓதத் தகுவது நீறு<br>வுண்மையி லுள்ளது நீறு<br>சீதப் புனல்வயல் சூழ்ந்த<br>திருவால வாயான் திருநீறே. | குளிர்ந்த நீர் நிரம்பிய வயல்கள் சூழ்ந்த திருஆலவாயி–ல் விளங்கும் சிவபிரானது திருநீறு, வேதங்களில் புகழ்ந்து ஓதப் பெறுவது. கொடிய துயர்களைப் போக்குவது. சிவ ஞானத்தைத் தருவது. அறியாமை முத–யவற்றைப் போக்குவது. புகழ்ந்து போற்றத்தக்கது. உண்மையாக நிலைபெற்றிருப்பது. |

| | |
|---|---|
| **2180.** முத்தி தருவது நீறு<br>முனிவ ரணிவது நீறு<br>சத்திய மாவது நீறு<br>தக்கோர் புகழ்வது நீறு<br>பத்தி தருவது நீறு<br>பரவ வினியது நீறு<br>சித்தி தருவது நீறு<br>திருவால வாயான் திருநீறே. | திரு ஆலவாயான் திருநீறு வீடுபேறு அளிப்பது. முனிவர்களால் அணியப் பெறுவது. நிலையாக எப்போதும் உள்ளது. தக்கோர்களால் புகழப்படுவது. இறைவனிடம் பக்தியை விளைப்பது. வாழ்த்த இனியது. எண்வகைச் சித்திகளையும் தரவல்லது. |
| **2181.** காண வினியது நீறு<br>கவினைத் தருவது நீறு<br>பேணி யணிபவர்க் கெல்லாம்<br>பெருமை கொடுப்பது நீறு<br>மாணந் தகைவது நீறு<br>மதியைத் தருவது நீறு<br>சேணந் தருவது நீறு<br>திருவால வாயான் திருநீறே. | திரு ஆலவாயான் திருநீறு கண்களுக்கு இனிமை தருவது. அழகைக் கொடுப்பது. விரும்பி அணிவார்க்குப் பெருமை கொடுப்பது. இறப்பைத் தடுப்பது. அறிவைத் தருவது. உயர்வு அளிப்பது. |
| **2182.** பூச வினியது நீறு<br>புண்ணிய மாவது நீறு<br>பேச வினியது நீறு<br>பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்<br>ஆசை கெடுப்பது நீறு<br>அந்தம தாவது நீறு<br>தேசம் புகழ்வது நீறு<br>திருவால வாயான் திருநீறே. | திருஆலவாயன் திருநீறு, பூசுதற்கு இனிமையானது, புண்ணியத்தை வளர்ப்பது. பேசுதற்கு இனியது. பெருந்தவம் செய்யும் முனிவர்கட்கு ஆசையை அறுப்பது. முடிவான பேரின்ப நிலையை அளிப்பது. உலகோரால் புகழப்படுவது. |
| **2183.** அருத்தம தாவது நீறு<br>அவல மறுப்பது நீறு<br>வருத்தந் தணிப்பது நீறு<br>வான மளிப்பது நீறு<br>பொருத்தம தாவது நீறு<br>புண்ணியர் பூசும்வெண் ணீறு<br>திருத்தகு மாளிகை சூழ்ந்த<br>திருவால வாயான் திருநீறே. | அழகிய மாளிகைகள் சூழ்ந்த திரு ஆலவாயான் திருநீறு செல்வமாக இருப்பது. துன்பம் போக்குவது. மன வருத்தத்தைத் தணிப்பது. துறக்க இன்பத்தை அளிப்பது. எல்லோருக்கும் பொருத்தமாக இருப்பது. புண்ணியரால் பூசப் பெறுவது. |
| **2184.** எயிலது வட்டது நீறு<br>விருமைக்கு முள்ளது நீறு<br>பயிலப் படுவது நீறு<br>பாக்கியமாவது நீறு<br>துயிலைத் தடுப்பது நீறு<br>சுத்தம தாவது நீறு<br>அயிலைப் பொ—தரு சூலத்<br>திருவால வாயான் திருநீறே. | கூர்மைக்கு விளக்கம் தருகின்ற சூலப்படையினை ஏந்திய திருஆலவாயன் திருநீறு, திரிபுரங்களை எரிக்கச் செய்தது. இம்மை மறுமை இன்பம் தர இருப்பது. பிறரோடு பழகும் பயன் அளிப்பது. செல்வமாக விளங்குவது. உறக்கநிலையைத் தடுப்பது. தூய்மையை அளிப்பது. |

| | |
|---|---|
| **2185.** இராவணன் மேலது நீறு<br>வெண்ணத் தகுவது நீறு<br>பராவண மாவது நீறு<br>பாவ மறுப்பது நீறு<br>தராவண மாவது நீறு<br>தத்துவ மாவது நீறு<br>அராவணங் குந்திரு மேனி<br>யால வாயான் திருநீறே. | பாம்புகள் வளைந்து தவழும் திருமேனியனாகிய திருஆலவாயான் திருநீறு. இராவணன் பூசிப் பயன் பெற்றது. நல்லவர்களால் எண்ணத்தக்கது. பராசக்தி வடிவமானது. பாவம் போக்குவது. தத்துவங்களாக இருப்பது. மெய்ப்பொருளை உணர்த்துவது. |
| **2186.** மாலொ டயனறி யாத<br>வண்ணமு முள்ளது நீறு<br>மேலுறை தேவர்கள் தங்கண்<br>மெய்யது வெண்பொடி நீறு<br>ஏல வுடம்பிடர் தீர்க்கு<br>மின்பந் தருவது நீறு<br>ஆலம துண்ட மிடற்றெம்<br>மால வாயன் றிருநீறே. | நஞ்சுண்ட கண்டனாகிய திருஆலவாயான் திருநீறு, திருமால் பிரமர்களால் அறியப் பெறாத தன்மையை உடையது. வானுலகில் வாழும் தேவர்கள் தங்கள் மேனிகளில் பூசிக் கொள்வது. பிறவியாகிய இடரைத் தவிர்த்து நிலையான இன்பம் அளிப்பது. |
| **2187.** குண்டிகைக் கையர்க ளோடு<br>சாக்கியர் கூட்டமுங் கூடக்<br>கண்டிகைப் பிப்பது நீறு<br>கருத வினியது நீறு<br>எண்டிசைப் பட்ட பொருளா<br>ரேத்துந் தகையது நீறு<br>அண்டத் தவர்பணிந் தேத்து<br>மால வாயான் றிருநீறே. | மேல் உலகில் வாழ்வோர் பணிந்து போற்றும் திரு ஆலவாயான் திருநீறு, குண்டிகை ஏந்திய கையர்களாகிய சமணர்கள் சாக்கியர்களின் கண்களைத் திகைக்கச் செய்வது. தியானிக்க இனியது. எட்டுத் திசைகளிலும் வாழும் மெய்ப் பொருளுணர்வுடையோரால் ஏத்தப்பெறும் தகைமைப்பாடு உடையது. |
| **2188.** ஆற்ற லடல்விடை யேறு<br>மால வாயான்றிரு நீற்றைப்<br>போற்றிப் புக– நிலாவும்<br>பூசுரன் ஞானசம் பந்தன்<br>தேற்றித் தென்ன னுடலுற்ற<br>தீப்பிணி யாயின தீரச்<br>சாற்றிய பாடல்கள் பத்தும்<br>வல்லவர் நல்லவர் தாமே. | ஆற்றலும், பிறரைக் கொல்லும் வ–மையும் உடைய விடையின்மீது ஏறிவரும் ஆலவாயான் திருநீற்றைப் போற்றிப் புக–யில் விளங்கும் பூசுரனாகிய ஞானசம்பந்தன் சைவத்தின் பெருமையைத் தெளிவித்துப் பாண்டியன் உட–ல் பற்றிய தீமை விளைத்த பிணி தீருமாறு சாற்றிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர் நல்லவராவார். |

## 67. திருப்பெரும்புலியூர்

பண் : காந்தாரம் (பு—க்கால் முனிவரால் பூசிக்கப்பெற்றது) பதிக எண் : 67

| | |
|---|---|
| 2189. மண்ணுமோர் பாக முடையார்<br>மாலுமோர் பாக முடையார்<br>விண்ணுமோர் பாக முடையார்<br>வேத முடைய விமலன்<br>கண்ணுமோர் பாக முடையார்<br>கங்கை சடையிற் கரந்தார்<br>பெண்ணுமோர் பாக முடையார்<br>பெரும்பு— யூர்பிரி யாரே.<br><br>(நான்கு பு—யூர்களில் ஒன்று) | திருப்பெரும்பு—யூரைப் பிரியாதுறையும் இறைவர், தாம் கொண்டருளிய பேருருவில் மண்விண் ஆகிய உலகங்களை ஒவ்வொரு பாகமாகக் கொண்டவர். திருமாலை ஒருபாகமாக ஏற்றவர். உமையம்மையை இடப்பாகமாகக் கொண்டவர். வேதங்களை உடையவர். விமலர். உமையம்மைக்குத் தம்முட—ல் ஒருபாகத்தை அளித்ததால் கண்களிலும் ஒருபாதியையே பெற்றவர். கங்கையைச் சடையில் கரந்தவர். |
| 2190. துன்னு கடற்பவ ளஞ்சேர்<br>தூயன நீண்டதிண் டோள்கள்<br>மின்னு சுடர்க்கொடி போலும்<br>மேனியி னாளொரு கங்கைக்<br>கன்னி களின்புனை யோடு<br>கலைமதி மாலை கலந்த<br>பின்னு சடைப்பெரு மானார்<br>பெரும்பு— யூர்பிரி யாரே. | கட—ல் பொருந்திய பவளம் போன்ற தூயனவாகிய நீண்ட தோள்களையும், மின்னுகின்ற ஒளி பொருந்திய கொடி போன்ற மேனியையும் உடைய கங்கையைப், பிற நதிக் கன்னியரின் நீரோடு, கலை வளரும் மாலை போன்ற பிறைமதியைப் புனைந்த பின்னிய சடையை உடைய பெருமான் பெரும்பு—யூரில் பிரியாது உறைகின்றார். |
| 2191. கள்ள மதித்த கபாலங்<br>கைதனி லேமிக வேந்தித்<br>துள்ள மிதித்துநின் றாடுந்<br>தொழில ரெழின்மிகு செல்வர்<br>வெள்ள நகுதலை மாலை<br>விரிசடை மேன்மிளிர் கின்ற<br>பிள்ளை மதிப்பெரு மானார்<br>பெரும்பு— யூர்பிரி யாரே. | கள்ளங்கருதிய பிரமனது கபாலத்தைக் கையில் ஏந்தித் துள்ளி மிதித்து நின்றாடும் தொழிலராகிய அழகிய செல்வரும், கங்கை சிரிக்கும் தலைமாலை ஆகியன மிளிர்கின்ற விரிசடைமேல் பிள்ளைமதியையும் புனைந்துள்ளவரும் ஆகிய பெருமான் பெரும்பு—யூரில் பிரியாது உறைகின்றார். |
| 2192. ஆட —லைய முடையார்<br>அருமறை தாங்கியா றங்கம்<br>பாட —லைய முடையார்<br>பன்மை யொருமைசெய் தஞ்சும்<br>ஊட —லைய முடையார்<br>யோகெனும் பேரொளி தாங்கிப்<br>பீட —லைய முடையார்<br>பெரும்பு— யூர்பிரி யாரே. | நடனலயம் உடையவர். அரிய நான்கு மறைகளைத் தாங்கிப் போற்றும் ஆறு அங்கங்களாகிய இலயம் உள்ள பாடல்களைப் பாடுபவர். பன்மையும் ஒருமையுமாகிய கோலத்தைச் செய்து, ஐம்புலனடக்கம் இன்மையால் நாம் ஐயுறுமாறு இருப்பவர். யோகம் என்னும் ஒளிநெறியை மேற்கொண்டு பெருமை பொருந்திய நள்இரவில் நடனம் புரிபவர். அவர் பெரும்பு—யூரைப் பிரியாது உறைகின்றார். |

| | |
|---|---|
| **2193.** தோடுடை யார்குழைக் காதிற்<br>சுடுபொடி யாரன லாடக்<br>காடுடை யாரெரி வீசுங்<br>கையுடை யார்கடல் சூழ்ந்த<br>நாடுடை யார்பொரு ளின்ப<br>நல்லவை நாளு நயந்த<br>பீடுடை யார்பெரு மானார்<br>பெரும்பு– யூர்பிரி யாரே. | பெரும்பு–யூரைப் பிரியாதுறையும் இறைவர், ஒரு காதில் தோட்டையும் ஒரு காதில் குழையையும் உடையவர். சாம்பலைப் பூசியவர். அன–ல் நின்று ஆடுதற்கு இடுகாட்டை இடமாக உடையவர். எரிவீசும் கையுடையார். கடலால் சூழப்பட்ட நாடுகள் அனைத்தையும் உடையவர். பொருள் இன்பம் ஆகிய நல்லனவற்றை நாள்தோறும் விரும்பிய பெருமை உடையவர். எல்லோர்க்கும் தலைவராயிருப்பவர். அவர் பெரும்பு–யூரைப் பிரியாது உறைகிறார். |
| **2194.** கற்ற துறப்பணி செய்து<br>காண்டுமென் பாரவர் தங்கண்<br>முற்றி தறிதுமென் பார்கண்<br>முத–யர் வேதபு ராணர்<br>மற்றி தறிதுமென் பார்கண்<br>மனத்திடை யார்பணி செய்யப்<br>பெற்றி பெரிது முகப்பார்<br>பெரும்பு– யூர்பிரி யாரே. | கல்வி கற்றதன் பயனை அறிந்து பணி செய்து கடவுளைக் காண்போம் என்பார்க்குக் கண்ணாயிருப்பவர். இதனை முற்றும் அறிவோம் என்பார்க்கு முதல்வராய் இருப்பவர். வேத புராணங்களாய் விளங்குபவர். இதனைப் பின் அறிவோம் என்பார் மனத்தில் இருப்பவர். தொண்டர்களைப் பெரிதும் உகப்பவர். அவர் பெரும்பு–யூரைப் பிரியாது உறைகின்றார். |
| **2195.** மறையுடை யாரொ– பாடன்<br>மாமலர்ச் சேவடி சேர்வார்<br>குறையுடை யார்குறை தீர்ப்பார்<br>குழக ரழகர்நஞ் செல்வர்<br>கறையுடை யார்திகழ் கண்டங்<br>கங்கை சடையிற் கரந்தார்<br>பிறையுடை யார்சென்னி தன்மேற்<br>பெரும்பு– யூர்பிரி யாரே. | வேதம் ஓதுகின்றவர்கள், ஒ–க்கின்ற பாடல்களால் திருவடிகளை இடைவிடாது நினைப்பவர், மனக்குறை உடையவர் ஆகியோர் குறைகளைத் தீர்ப்பவர். இளமைத்தன்மையவர். அழகர். நம் செல்வராயிருப்பவர். கண்டத்தில் விடக்கறை உடையவர். கங்கையைச் சடையில் கரந்தவர். சென்னியின்மேல் பிறை உடையவர். |
| **2196.** உறவியு மின்புறு சீரு<br>மோங்குதல் வீடெளி தாகித்<br>துறவியுங் கூட்டமுங் காட்டித்<br>துன்பமு மின்பமுந் தோற்றி<br>மறவியஞ் சிந்தனை மாற்றி<br>வாழவல் லார்தமக் கென்றும்<br>பிறவி யறுக்கும் பிரானார்<br>பெரும்பு– யூர்பிரி யாரே. | உறவும் இன்பமும் ஓங்குமாறு செய்து வீட்டின் பத்தை எளிதாகத் தந்து துறவுள்ளமும் பற்றுள்ளமும் காட்டித் துன்ப இன்பங்களைத் தந்து மறத்தலுடைய சிந்தனையை மாற்றி மறவாமையுடன் வாழவல்லார் தமக்கென்றும் பிறவியைப் போக்கும் பிரானார் பெரும்பு–யூரை பிரியாதுறைகின்றார். |

**2197.** சீருடை யாரடி யார்கள்
சேடரொப் பார்சடை சேரும்
நீருடை யார்பொடிப் பூசு
நினைப்புடை யார்விரி கொன்றைத்
தாருடை யார்விடை யூர்வார்
தலைவரைந் நூற்றுப்பத் தாய
பேருடை யார்பெரு மானார்
பெரும்பு– யூர்பிரி யாரே.

புகழுடைய அடியவர்களுக்குப் பெரியோரைப் போல்பவர். சடையில் கங்கையை உடையவர். திருநீறுபூசும் நினைவுடையவர். விரிந்த கொன்றை மாலையைச் சூடியவர். விடையை ஊர்ந்து வருபவர். தலைமைத்தன்மை உடையவர். ஆயிரக்கணக்கான பெயருடையவர். பெருமானாக விளங்குபவர். அவ்விறைவர் பெரும்பு–யூரைப் பிரியாது உறைகின்றார்.

**2198.** உரிமை யுடையடி யார்கள்
உள்ளுற வுள்கவல் லார்கட்
கருமை யுடையன காட்டி
யருள்செயு மாதி முதல்வர்
கருமை யுடைநெடு மாலுங்
கடிமல ரண்ணலுங் காணாப்
பெருமை யுடைப்பெரு மானார்
பெரும்பு– யூர்பிரி யாரே.

உரிமையுடைய அடியவர்கட்கும், மனம் பொருந்த நினைப்பவர்கட்கும் காண இயலாதனவற்றைக் காட்டி அருள் செய்யும், ஆதிக்கும் ஆதியாய முதல்வர். கரிய திருமாலும் மணமுடைய தாமரை மலர் மேலுறையும் நான்முகனும் காணாப் பெருமையுடைய பெருமான். அவ்விறைவர் பெரும் பு–யூரில் பிரியாது உறைகின்றார்.

**2199.** பிறைவள ரும்முடிச் சென்னிப்
பெரும்பு– யூர்ப்பெரு மானை
நறைவள ரும்பொழிற் காழி
நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள ருந்தமிழ் மாலை
வல்லவர் தந்துயர் நீங்கி
நிறைவளர் நெஞ்சின ராகி
நீடுல கத்திருப் பாரே.

பிறைவளரும் முடியினை உடைய சென்னிப் பெரும்பு–யூர்ப் பெருமானை, தேன் பெருகும் பொழில் சூழ்ந்தகாழிப் பதியில் தோன்றிய நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் போற்றி அருளிய வேதமாக வளரும் இத்தமிழ்மாலையால் பரவ வல்லவர்கட்குத் துயர் நீக்கமும் நெஞ்சு வளர் நிறையும் உளவாம். அவர்கள் நீடிய பேரின்ப உலகில் வாழ்வார்கள்.

## 68. திருக்கடம்பூர்

பண் : காந்தாரம் பதிக எண் : 68

| பாடல் | பொருள் |
|---|---|
| **2200.** வானமர் திங்களு நீரு<br>மருவிய வார்சடை யானைத்<br>தேனமர் கொன்றையி னானைத்<br>தேவர் தொழப்படு வானைக்<br>கானம ரும்பிணை புல்கிக்<br>கலைபயி லுங்கடம் பூரில்<br>தானமர் கொள்கையி னானைத்<br>தாள்தொழ வீடெளி தாமே. | வானிற் பொருந்திய திங்களும் கங்கையும் மருவிய நீண்ட சடையை உடையவனும், தேன் பொருந்திய கொன்றை மாலையைச் சூடியவனும், தேவர்களால் தொழப்படுபவனும், காடுகளில் பெண்மானைத் தழுவி ஆண்மான்கள் மகிழும் கடம்பூரில் எழுந்தருளிய இயல்பினனும் ஆகிய பெருமான் திருவடிகளைத் தொழின் வீடு எளிதாகும். |
| **2201.** அரவினொ டாமையும் பூண்டு<br>வந்துகில் வேங்கை யதளும்<br>விரவுந் திருமுடி தன்மேல்<br>வெண்டிங்கள் சூடி விரும்பிப்<br>பரவுந் தனிக்கடம் பூரிற்<br>பைங்கண்வெள் ளேற்றண்ணல் பாதம்<br>இரவும் பகலும் பணிய<br>வின்ப நமக்கது வாமே. | பாம்பு, ஆமையோடு ஆகியவற்றைப் பூண்டு, அழகிய ஆடையாகப் பு-த்தோலை உடுத்து அழகிய முடிமீது பொருந்திய வெண்பிறையைச் சூடிப் பலராலும் விரும்பிப் பரவப் பெறும் சிறந்த கடம்பூரில் எழுந்தருளிய பசிய கண்களை உடைய வெள்ளேற்று அண்ண-ன் திருவடிகளை இரவும் பகலும் பணிய நமக்கு இன்பம் உளதாம். |
| **2202.** இளிபடு மின்சொ- னார்க<br>ளிருங்குழன் மே-சைந் தேறத்<br>தெளிபடு கொள்கை கலந்த<br>தீத்தொழி லார்கடம் பூரில்<br>ஒளிதரு வெண்பிறை சூடி<br>யொன்னுத லோடுட னாகிப்<br>பு-யத ளாடை புனைந்தான்<br>பொற்கழல் போற்றுது நாமே. | இளி என்னும் இசை இனிமையும் சொல்-னிமையும் உடைய மகளிர் தம் கரிய கூந்த-ல் புகை படியுமாறு அந்தணர் ஆகுதி வேட்கும் கடம்பூரில் ஒளிபொருந்திய வெண்பிறைசூடி உமையம்மையோடு உடனாய்ப் பு-த்தோலுடுத்து எழுந்தருளியுள்ள இறைவனின் பொற்கழலை நாம் போற்றுவோம். |
| **2203.** பறையொடு சங்க மியம்பப்<br>பல்கொடி சேர்நெடு மாடம்<br>கறையுடை வேல்வரிக் கண்ணார்<br>கலையொ- சேர்கடம் பூரில்<br>மறையொ- கூடிய பாடன்<br>மருவிநின் றாடன் மகிழும்<br>பிறையுடை வார்சடை யானைப்<br>பேணவல் லார்பெரி யோரே. | பறை சங்கம் முத-யன ஒ-க்கப் பலவகையான கொடிகள் கட்டிய மாட வீடுகளில் மகளிர் ஆடும் ஒ- நிறைந்த கடம்பூரில் வேதஒ-யோடு கூடிய பாடல்கள் பாடி, ஆடி மகிழும் பிறைசூடிய நீண்ட சடையை உடைய பெருமானைப் பேண வல்லவர் பெரியோர் ஆவர். |

| | |
|---|---|
| **2204.** தீவிரி யக்கழ லார்ப்பச்<br>சேயெரி கொண்டிடு காட்டில்<br>நாவிரி கூந்தனற் பேய்கள்<br>நகைசெய்ய நட்ட நவின்றோன்<br>காவிரி கொன்றை கலந்த<br>கண்ணுத லான்கடம் பூரில்<br>பாவிரி பாடல் பயில்வார்<br>பழியொடு பாவ மிலாரே. | தீப்போலும் சடைவிரியக் கழல்கள் ஆர்க்கக் கையில் அனல் ஏந்திச் சுடுகாட்டில் பேய்க்கணம் நகைக்க நடனம் ஆடுபவனும் கொன்றைமாலை அணிந்த நுதல்விழியானும் ஆகிய சிவபெருமானது கடம்பூரை அடைந்து ஓசையின்பம் உடைய பாடல்களைப் பாடிப் போற்றுவார் பழிபாவங்கள் இலராவர். |
| **2205.** தண்புன னீள்வய றோறுந்<br>தாமரை மேலனம் வைகக்<br>கண்புணர் காவில்வண் டேறக்<br>கள்ளவி ழுங்கடம் பூரில்<br>பெண்புனை கூறுடை யானைப்<br>பின்னு சடைபெரு மானைப்<br>பண்புனை பாடல் பயில்வார்<br>பாவமி லாதவர் தாமே. | குளிர்ந்த நீர்நிறைந்த வயல்களில் முளைத்த தாமரைகள் தோறும் அன்னங்கள் வைகிமகிழவும், கண்கவரும் சோலைகளில் வண்டுகள் மொய்க்க மலர்கள் தேன்பி–ற்றவும் அமைந்த கடம்பூரில் மாதொரு பாகனாய்ப் பின்னிய சடையினனாய் விளங்கும் பெருமானைப் பண்ணமைந்த பாடல்கள் பாடிப் பரவுவார் பாவம் இல்லாதவராவர். |
| **2206.** ப–கெழு செம்மலர் சாரப்<br>பாடலொ டாட லறாத<br>க–கெழு வீதி கலந்த<br>கார்வயல் சூழ்கடம் பூரில்<br>ஒ–திகழ் கங்கை கரந்தா<br>னொண்ணுத லாளுமை கேள்வன்<br>பு–யத ளாடையி னான்றன்<br>புனைகழல் போற்றல் பொருளே. | சிவபூசகர்கள் பூசைக்கு வேண்டும் செம்மையான மலர்களைக் கொய்து பாடியும் ஆடியும் மகிழும் ஒ–நிறைந்த வீதிகளையும் நீர் நிரம்பிய வயல்களையும் உடைய கடம்பூரில் கங்கையை முடியில் மறைத்தவனாய், உமைபாகனாய், பு–த்தோல் உடுத்தவனாய் விளங்கும் பெருமான் புகழைப் போற்றுதலே பொருள் உடைய செயலாகும். |
| **2207.** பூம்படு கிற்கயல் பாயப்<br>புள்ளிரி யப்புறங் காட்டில்<br>காம்படு தோளியர் நாளுங்<br>கண்கவ ருங்கடம் பூரில்<br>மேம்படு தேவியொர் பாக<br>மேவியெம் மானென வாழ்த்தித்<br>தேம்படு மாமலர் தூவித்<br>திசைதொழத் தீய கெடுமே. | அழகிய நீர் நிலைகளில் கயல்கள் பாய, அதனால் பறவை இரிந்தோட விளங்கும் கடம்பூரில் மூங்கில் போன்ற தோள்களை உடைய மகளிர் மனங்கவரும் இயல்பினனாய் விளங்குவோனும் புறங்காட்டில் ஆடுபவனுமாகிய பெருமானது கடம்பூரை அடைந்து மாதொருபாகனே! எம்மானே! எனக்கூறி மலர்தூவித் தொழத் தீயன கெடும். |

**2208.** திருமரு மார்பி லவனுந்
திகழ்தரு மாமல ரோனும்
இருவரு மாயறி வொண்ணா
வெரியுரு வாகிய வீசன்
கருவரை கா– லடர்த்த
கண்ணுத லான்கடம் பூரில்
மருவிய பாடல் பயில்வார்
வானுல கம்பெறு வாரே.

திருமகள் மருவிய மார்பினனாகிய திருமாலும், தாமரை மலர்மேல் விளங்கும் நான்முகனும் ஆகிய இருவரும் அறிய முடியாதவாறு எரியுருவான ஈசனும் கரியமலை போன்ற இராவணனைக் காலால் அடர்த்தவனும் ஆகிய பெருமானது கடம்பூரை அடைந்து, பொருந்திய பாடல்களைப் பாடிப் போற்றுவார் வானுலகம் பெறுவர்.

**2209.** ஆடை தவிர்த்தறங் காட்டு
மவர்களு மந்துவ ராடைச்
சோடைக ணன்னெறி சொல்லார்
சொல்–னுஞ் சொல்லல கண்டீர்
வேடம் பலபல காட்டும்
விகிர்தனம் வேத முதல்வன்
காட தனினட மாடுங்
கண்ணுத லான்கடம் பூரே.

ஆடையின்றி அறங்கூறும் அமணர்களும், துவராடை உடுத்து அறநெறிபோதிக்கும் பதர்களாகிய புத்தர்களும் நன்னெறிகூறிச் சொன்னாலும் அவை மெய்ச்சொற்களல்ல. பல்வேறு வடிவங்களைக் கொண்டருளும் சிவபிரானும், நம் வேதமுதல்வனும் சுடுகாட்டுள் நடனமாடும் கண்ணுதலோனுமாகிய பெருமான் எழுந்தருளியிருப்பது கடம்பூராகும்.

**2210.** விடைநவி லுங்கொடி யானை
வெண்கொடி சேர்நெடு மாடம்
கடைநவி லுங்கடம் பூரிற்
காதல னைக்கடற் காழி
நடைநவின் ஞானசம் பந்தன்
நன்மையா லேத்திய பத்தும்
படைநவில் பாடல் பயில்வார்
பழியொடு பாவ மிலாரே.

விடைச்சின்னத்தை அறிவிக்கும் கொடியை உடையவனை, வெண்கொடிகள் சேர்ந்த உயரிய வாயில்களைக் கொண்ட மாடவீடுகளை உடைய கடம்பூரில் விருப்புடையவனை, கடலை அடுத்துள்ள காழிமாநகரில் தோன்றிய நன்னடை உடைய ஞானசம்பந்தன் நன்மை அருளுமாறு வேண்டிப் பாடிய சாதனமாகிய பாடல்களை ஓதுவார் பழிபாவம் இலாராவர்.

## 69. திருப்பாண்டிக்கொடுமுடி

பண் : காந்தாரம் பதிக எண் : 69

**2211.** பெண்ணமர் மேனியி னாரும்
பிறைமல்கு செஞ்சடை யாருங்
கண்ணமர் நெற்றியி னாருங்
காதம ருங்குழை யாரும்
எண்ணம ருங்குணத் தாரு
மிமையவ ரேத்தநின் றாரும்
பண்ணமர் பாட– னாரும்
பாண்டிக் கொடுமுடி யாரே.

பாண்டிக்கொடுமுடி இறைவர் மாதொரு கூறர். பிறைசூடிய சடையார். கண் பொ–ந்த நெற்றியர். காதில் குழை அணிந்தவர். எண்குணத்தவர். இமையவர் போற்ற நிற்பவர். இசையமைதியோடு கூடிய பாடல்களைப் பாடுபவர்.

| | |
|---|---|
| **2212.** தனைக்கணி மாமலர் கொண்டு<br>தாள்தொழு வாரவர் தங்கள்<br>வினைப்பகை யாயின தீர்க்கும்<br>விண்ணவர் விஞ்சையர் நெஞ்சில்<br>நினைத்தெழு வார்துயர் தீர்ப்பார்<br>நிரைவளை மங்கை நடுங்கப்<br>பனைக்கைப் பகட்டுரி போர்த்தார்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், தம்மைக் கொன்றை மலர் கொண்டு பூசித்து வணங்குபவர்களின் பகையாய்த் துயர் செய்யும் வினைகளைத் தீர்த்தருளும் மேலானவர். ஞானவடிவினர். நெஞ்சில் நினைத்து வணங்க எழும் அன்பர்களின் துயரங்களைத் தீர்ப்பவர். உமையம்மை அஞ்சப் பனை போன்ற கையை உடைய யானையை உரித்துப் போர்த்தவர். |
| **2213.** சடையமர் கொன்றையி னாருஞ்<br>சாந்தவெண் ணீறணிந் தாரும்<br>புடையமர் பூதத்தி னாரும்<br>பொறிகிளர் பாம்பசைத் தாரும்<br>விடையம ருங்கொடி யாரும்<br>வெண்மழு மூவிலைச் சூலப்<br>படையமர் கொள்கையி னாரும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், சடையில் கொன்றை தரித்தவர். சந்தனமாக வெண்ணீற்றை அணிந்தவர். பூதப்படைகளை உடையவர். புள்ளிகளைக் கொண்ட பாம்பை இடையில் கட்டியவர். விடைக்கொடி உடையவர். வெண்மழு, மூவிலைச் சூலம் ஆகியவற்றைப் படைக் கலன்களாக உடையவர். |
| **2214.** நறைவளர் கொன்றையி னாரு<br>ஞாலமெல் லாந்தொழு தேத்தக்<br>கறைவளர் மாமிடற் றாருங்<br>காடரங் காக்கன லேந்தி<br>மறைவளர் பாட– னோடு<br>மண்முழ வங்குழன் மொந்தை<br>பறைவளர் பாட– னாரும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், தேன் பொருந்திய கொன்றைமலர் மாலையை அணிந்தவர். உலகமெல்லாம் வணங்க நஞ்சுண்டு கறுத்த கண்டத்தை உடையவர். இடுகாட்டை அரங்கமாகக் கொண்டு கையில் கனலேந்தி வேதப் பாடல்களோடு முழவம், குழல், மொந்தை, பறை ஒ–க்கப் பாடி ஆடுபவர். |
| **2215.** போகமு மின்பமு மாகிப்<br>போற்றியென் பாரவர் தங்கள்<br>ஆகமு றைவிட மாக<br>வமர்ந்தவர் கொன்றையி னோடும்<br>நாகமுந் திங்களுஞ் சூடி<br>நன்னுதன் மங்கைதன் மேனிப்<br>பாகமு கந்தவர் தாமும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், போகமும் அதனால் எய்தும் இன்பமும் ஆனவர். போற்றி என்று கூறுவார் உடலை உறைவிடமாகக் கொண்டு அமர்பவர். கொன்றை, பாம்பு, திங்கள் ஆகியனவற்றை முடியில் சூடி உமைபாகம் உகந்தவர். |

| | |
|---|---|
| **2216.** கடிபடு கூவிள மத்தங்<br>கமழ்சடை மேலுடை யாரும்<br>பொடிபட முப்புரஞ் செற்ற<br>பொருசிலை யொன்றுடை யாரும்<br>வடிவுடை மங்கைதன் னோடு<br>மணம்படு கொள்கையி னாரும்<br>படிபடு கோலத்தி னாரும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், மணம் பொருந்திய வில்வம், ஊமத்தை ஆகியவற்றைச் சடையின்மேல் உடையவர். முப்புரங்களைப் பொடிபடுமாறு செய்த வில்–னை உடையவர்.. அழகிய பார்வதி தேவியாரை மணம் புரிந்தவர். உலக உயிர்கள் வடிவம் கொள்ளுதற்கு முன்படிவமாக விளங்குபவர். |
| **2217.** ஊனமர் வெண்டலை யேந்தி<br>யுண்ப–க் கென்றுழல் வாரும்<br>தேனம ரும்மொழி மாது<br>சேர்திரு மேனியி னாரும்<br>கானமர் மஞ்ஞைக ளாலுங்<br>காவிரிக் கோலக் கரைமேல்<br>பானல நீறணி வாரும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், ஊன் பொருந்திய வெண்தலையை ஏந்திப் ப–யேற்கத் திரிபவர். தேன்மொழி மாதாகிய பார்வதியம்மை சேர்ந்த திருமேனியர். காடுகளில் வாழும் மயில்கள் ஆடும் காவிரியின் அழகிய கரைமேல் பால் போன்ற திருநீறு அணிந்து திகழ்பவர். |
| **2218.** புரந்தரன் றன்னோடு வானோர்<br>போற்றியென் றேத்தநின் றாரும்<br>பெருந்திறல் வாளரக் கன்னைப்<br>பேரிடர் செய்துகந் தாரும்<br>கருந்திரை மாமிடற் றாருங்<br>காரகில் பன்மணி யுந்திப்<br>பரந்திழி காவிரிப் பாங்கர்ப்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | பாண்டிக்கொடுமுடி இறைவர், இந்திரனோடு ஏனைய தேவர் பலரும் போற்றி என்று ஏத்த நிற்பவர். மிக்க வ–மையை உடைய இராவணனை முத–ல் அடர்த்துப் பின் அருள் செய்தவர். கரிய கட–ல் தோன்றிய நஞ்சினை உண்டு நிறுத்திய கண்டத்தினர். கரிய அகில், பல்வகைமணிகள் ஆகியவற்றை அடித்துக்கொண்டு பரந்து கிழிந்து வரும் காவிரியின் அருகில் உறைபவர். |
| **2219.** திருமகள் காத– னானுந்<br>திகழ்தரு மாமலர் மேலைப்<br>பெருமக னும்மவர் காணாப்<br>பேரழ லாகிய பெம்மான்<br>மரும– மென்மலர்ச் சாந்து<br>வந்திழி காவிரி மாடே<br>பருமணி நீர்த்துறை யாரும்<br>பாண்டிக் கொடுமுடி யாரே. | திருமகள் கேள்வனும், தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும் காணாதவாறு பேரழற் பிழம்பாய் எழுந்து நின்ற பெருமானார், மணம் கமழும் மென்மலர்கள், சந்தனம் ஆகியவற்றுடன் வரும் காவிரித்துறையில் விளங்கும் பாண்டிக் கொடுமுடி இறைவராவார். |

**2220.** புத்தரும் புந்தியி லாத
சமணரும் பொய்ம்மொழி யல்லான்
மெய்த்தவம் பேசிட மாட்டார்
வேடம் பலபல வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச்
செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்கள் தாம்பணிந் தேத்தும்
பாண்டிக் கொடுமுடி யாரே.

புத்தர் சமணர் ஆகியோர் பொய்மொழியல்லால் உண்மைத் தவநெறிகளைப் பேசிடமாட்டார். அவருடைய பலப்பல திருவடிவங்களைச் சித்தர் தேவர் முத–யோருடன் பத்தர்கள் நல்ல செழுமையான மலர் கொண்டு பணிந்தேத்த விளங்குபவர் பாண்டிக் கொடுமுடி இறைவர்.

**2221.** கலமல்கு தண்கடல் சூழ்ந்த
காழியுண் ஞானசம் பந்தன்
பலமல்கு வெண்டலை யேந்தி
பாண்டிக் கொடுமுடி தன்னைச்
சொலமல்கு பாடல்கள் பத்துஞ்
சொல்லவல் லார்துயர் தீர்ந்து
நலமல்கு சிந்தைய ராகி
நன்னெறி யெய்துவர் தாமே.

மரக்கலங்களைக் கொண்டுள்ள குளிர்ந்த கடல் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன், உயிர்க்கட்குப் பயன் நல்க வெண்தலையைக் கையில் ஏந்தி விளங்கும் இறைவனின் கொடுமுடி நகரைப் பரவிய பாடல்கள் பத்தையும் சொல்ல வல்லவர்கள், துயர் தீர்ந்து நன்மை நிரம்பிய சிந்தையராய் நன்னெறி எய்துவர்.

## 70. திருக்கழுமலம்
## (திருச்சக்கரமாற்று)

பண் : காந்தாரம் பதிக எண் : 70

**2222.** பிரமனூர் வேணுபுரம் புக– வெங்குருப்
பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம்
புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங்
காதியாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம்
பரவு மூரே.

இத்திருப்பதிகம் சீகாழியின் பிரமபுரம், வேணுபுரம், புக–, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்ற பன்னிரு திருப்பெயர்களைத் தனித்தனியே முத–ற் கொண்டு பன்னிரு பாடல்களாக அமைந்துள்ளது. கழுமலத்தின் பெயரை மட்டும் பெரும்பாலும் முடிவாகக் கொண்டுள்ளது. நாம் பரவும் ஊர் பிரமனூர் முதலாகக் கொச்சைவயம் உள்ளிட்ட பன்னிரண்டு திருப்பெயர்களை உடைய கழுமலமாகும்.

**2223.** வேணுபுரம் பிரமனூர் புக–பெரு வெங்குரு
வெள்ளத் தோங்குந்
தோணிபுரம் பூந்தராய் தூநீர்ச் சிரபுரம்
புறவங் காழி
கோணிய கோட்டாற்றுக் கொச்சை வயஞ்சண்பை
கூருஞ் செல்வங்
காணிய வையகத்தா ரேத்துங் கழுமலநாங்
கருது மூரே.

நாம் கருதும் ஊர் வேணுபுரம் முதலாக சண்பைச் உள்ளிட்ட பன்னிரு திருப்பெயர்களைக் கொண்டு செல்வம் கருதிய வையகத்தார் ஏத்தும் கழுமலமாகும்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2224.** புக– சிரபுரம் வேணுபுரஞ் சண்பை புறவங் காழி<br>நிகரில் பிரமபுரங் கொச்சைவய நீர்மேல் நின்ற மூதூர்<br>அக–ய வெங்குருவோ டந்தண் டராயமரர் பெருமாற் கின்பம்<br>பகரு நகர்நல்ல கழுமலநாங் கைதொழுது பாடு மூரே. | நாம் கைதொழுது பாடும் ஊர் புக– முதலாக பூந்தராய் உள்ளிட்ட பன்னிரு திருப்பெயர்களைக் கொண்ட, சிவபெருமானுக்கு இன்பம் தரும் நல்ல கழுமலமாகும். ஒவ்வொரு ஊழிக்காலத்துக்கும் ஒரு பெயர். பன்னிரு பெயர்களையும் வரிசைக்கிரமமாக உச்சரிப்பதும் ஒரு மந்திரமாகும். |
| **2225.** வெங்குருத் தண்புக– வேணுபுரஞ் சண்பை வெள்ளங் கொள்ளத்<br>தொங்கிய தோணிபுரம் பூந்தராய் தொகுபிரம புரந்தொல் காழி<br>தங்கு பொழிற்புறவங் கொச்சை வயந்தலைபண் டாண்ட மூதூர்<br>கங்கை சடைமுடிமே லேற்றான் கழுமலநாங் கருது மூரே. | நாம் கருதும் ஊர் வெங்குரு முதலாக சிரபுரம் உள்ளிட்ட பன்னிரு திருப்பெயர்களை உடையதும், கங்கையணிந்த சடைமுடியினை உடைய சிவபிரான் எழுந்தருளியதும் ஆகிய கழுமலமாகும். |
| **2226.** தொன்னீரிற் றோணிபுரம் புக– வெங்குருத் துயர்தீர் காழி<br>இன்னீர வேணுபுரம் பூந்தராய் பிரமனூர் எழிலார் சண்பை<br>நன்னீர் பூம்புறவங் கொச்சை வயஞ்சிலம்பன் நகரானல்ல<br>பொன்னீர் புன்சடையான் பூந்தண் கழுமலநாம் புகழு மூரே. | நாம் புகழும் ஊர், கடல்மேல் மிதந்த தோணிபுரம் முதலாகச் சிரபுரம் உள்ளிட்ட பன்னிரு பெயர்களைக் கொண்டதும், நல்ல பொன் போன்ற சடையினை உடையான் எழுந்தருளியதுமான பொ–வுடைய கழுமலமாகும். |
| **2227.** தண்ணந் தராய்புக– தாமரையா னூர்சண்பை தலைமு னாண்ட<br>வண்ண நகர்கொச்சை வயந்தண் புறவஞ்சீர் அணியார் காழி<br>விண்ணியல்சீர் வெங்குருநல் வேணுபுரந் தோணிபுர மேலா லேந்து<br>கண்ணுதலான் மேவியநற் கழுமலநாங் கைதொழுது கருது மூரே. | நாம் கைதொழுது கருதும் ஊர், தண்மையான பூந்தராய் முதலாகத் தோணிபுரம் உள்ளிட்ட பன்னிரு திருப்பெயர்களை உடைய இருகண்களுக்கு மேல் நெற்றியில் நிமிர்ந்துள்ள கண்ணை உடையோனாகிய சிவபிரான் மேவிய கழுமலமாகும். |

| | |
|---|---|
| **2228.** சீரார் சிரபுரமுங் கொச்சைவயஞ் சண்பையொடு<br>புறவ நல்ல<br>ஆராத் தராய்பிரம னூர்புக– வெங்குருவொ<br>டந்தண் காழி<br>ஏரார் கழுமலமும் வேணுபுரந் தோணிபுர<br>மென்றென் றுள்கிப்<br>பேரா னெடியவனு நான்முகனுங் காண்பரிய<br>பெருமா னூரே. | சீர் பொருந்திய சிரபுரம் முதலாகத் தோணிபுரம் நிறைவாய்ப் பன்னிரு திருப்பெயர்களை நினைந்து இவ்வூரைப் பிரியாதவனாய், திருமாலும் பிரமனும் வழிபட்டும் காண்பரிய பெருமானாய் உள்ள சிவபிரானது ஊர் கழுமலம். |
| **2229.** புறவஞ் சிரபுரமுந் தோணிபுரஞ் சண்பைமிகு<br>புக– காழி<br>நறவ மிகுசோலைக் கொச்சை வயந்தராய்<br>நான்முகன் றனூர்<br>விறலாய வெங்குருவும் வேணுபுரம் விசயன்<br>மேலம் பெய்து<br>திறலாலரக்கனைச் செற்றான்றன் கழுமலநாஞ்<br>சேரு மூரே. | நாம் சேர்வதற்குரிய ஊர் புறவம் முதலாக வேணுபுரம் உள்ளிட்ட பன்னிரு திருப்பெயர்களைக்கொண்டது. அது அருச்சுனனோடு விற்போர் செய்தவனும் இராவணனை அடர்த்தவனும் ஆகிய சிவபிரானது கழுமலமாகும். |
| **2230.** சண்பை பிரமபுரந் தண்புக– வெங்குருநற்<br>காழி சாயாப்<br>பண்பார் சிரபுரமுங் கொச்சை வயந்தராய்<br>புறவம் பார்மேல்<br>நண்பார் கழுமலஞ்சீர் வேணுபுரந் தோணிபுர<br>நாணி லாத<br>வெண்பற் சமணரொடு சாக்கியரை வியப்பழித்த<br>விமல னூரே. | நாணமற்ற வெண்பற்களைக் கொண்ட சமணர்கள், சாக்கியர்கள் ஆகியோரின் பெருமைகளை அழித்த விமலனது ஊர், சண்பை முதலாகத் தோணிபுரம் ஈறாகப் பன்னிரு பெயர்களைக் கொண்ட ஊராகும். |
| **2231.** செழும–ய பூங்காழி புறவஞ் சிரபுரஞ்சீர்ப்<br>புக– செய்ய<br>கொழுமலரா னன்னகரந் தோணிபுரங் கொச்சைவயஞ்<br>சண்பை யாய<br>விழுமியசீர் வெங்குருவொ டோங்குதராய் வேணுபுர<br>மிகுநன் மாடக்<br>கழுமலமென் றின்னபெயர்பன்னிரண்டுங்<br>கண்ணுதலான் கருது மூரே. | செழுமையான அழகிய காழி முதலாக வேணுபுரம் ஈறாகப் பன்னிரு பெயர்களைக் கொண்டது கண்ணுதலோன் கருதும் ஊராகும். "தேவரீர் திருப்பதி யாது ?" என மதுரையில் வினவிய கூன் பாண்டியனுக்குத் தமது ஊரின் பெருமைகளைத் திருஞானசம்பந்தர் செப்பிய பதிகம். |

| | |
|---|---|
| 2232. கொச்சை வயம்பிரம னூர்புக– வெங்குருப்<br>புறவங் காழி<br>நிச்சல் விழவோவா நீடார் சிரபுரநீள்<br>சண்பை மூதூர்<br>நச்சினிய பூந்தராய் வேணுபுரந் தோணிபுர<br>மாகி நம்மேல்<br>அச்சங்கள் தீர்த்தருளு மம்மான் கழுமலநாம்<br>அமரு மூரே. | நாம் விரும்பும் ஊர், கொச்சைவயம் முதலாகத் தோணிபுரம் உள்ளிட்ட பன்னிரு பெயர்களைக் கொண்டதும் நம்மேல் வரும் அச்சங்கள் தீர்த்தருளும் அம்மான் எழுந்தருளியிருப்பதுமான கழுமலமாகும். |
| 2233. காவி மலர்புரையுங் கண்ணார் கழுமலத்தின்<br>பெயரை நாளும்<br>பாவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற்<br>பனுவன் மாலை<br>நாவி னலம்புகழ்சீர் நான்மறையான் ஞானசம்<br>பந்தன் சொன்ன<br>மேவியிசை மொழிவார் விண்ணவரி லெண்ணுதலை<br>விருப்பு ளாரே. | குவளை மலர் போலும் கண்களை உடைய மகளிர் வாழும் கழுமலத்தின் பெயர்களை நாள்தோறும் புகழ்மிக்க பன்னிரு நூல்கள் போல நாவினால் நலம் புகழ்ந்து ஞானசம்பந்தன் பாடிய இப்பனுவல் மாலையை இசையோடு மொழிபவர் விண்ணவர்களில் ஒருவராக எண்ணப்பெறும் மேலான விருப்புடையவர் ஆவர். |

## 71. திருக்குறும்பலா

பண் : காந்தாரம் (குறும்பலா என்பது பலா வகைகளுள் ஒன்று) பதிக எண் : 71

| | |
|---|---|
| 2234. திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து<br>தேவிபாகம்<br>பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல்<br>புரிந்தசெல்வர்<br>இருந்த விடம்வினவி லேலங்கமழ் சோலையின<br>வண்டியாழ்செய்<br>குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற்<br>குறும்பலாவே. | பிறைமதியை அழகுறப் புனைந்து, கங்கையைச் சடையில் கரந்து உமாதேவியை இடப்பாகமாகக் கொண்டு, பொருந்தாத வேடத்தோடு இடுகாட்டில் உறைதலை விரும்பிய செல்வர் எழுந்தருளியுள்ள இடம் யாதென வினவில், ஏல மணம் கமழ்வதும், சோலைகளில் வண்டுகள் யாழிசை போல ஒ–க்கக் குருந்தமரம் மணம் வீசும், குன்றுகள் அருகே சூழ்ந்துள்ளதுமான குளிர்ந்த சாரலை உடைய குறும்பலாவாகும். |
| 2235. நாட்பலவுஞ் சேர்மதியஞ் சூடிப் பொடியணிந்த<br>நம்பானம்மை<br>ஆட்பலவுந் தானுடைய வம்மா னிடம்போலும்<br>அந்தண்சாரல்<br>கீட்பலவும் கீண்டுகிளை கிளையன் மந்திபாய்ந்<br>துண்டுவிண்ட<br>கோட்பலவின் றீங்கனியை மாக்கடுவ னுண்டுகளுங்<br>குறும்பலாவே. | பதினாறு கலைகளும் வளர்தற்குரிய பிறைமதியை முடியில் சூடித் திருநீற்றுப் பொடியணிந்த நம்மேல் விருப்புடைய இறைவன், நம்பால் வந்து நம்மை அடிமையாகக் கொண்டருளும் அம்மான். அவனது இடம், அழகிய குளிர்ந்த மலைச் சார–ல் கீளத்தக்க பலவின் கனிகளை மந்திகள் கீறித்தம் கிளைகள் பலவற்றோடு உண்டு வீழ்த்திய சுவையான பலவின் இனிய சுளைகளை ஆண்குரங்குகள் உண்டு மகிழும் குறும்பலாவாகும். |

| | |
|---|---|
| **2236.** வாடற் றலைமாலை சூடிப் பு–த்தோலை வ–த்துவீக்கி<br>ஆட லரவசைத்த வம்மா னிடம்போலும் அந்தண்சாரல்<br>பாடற் பெடைவண்டு போதலர்த்தத் தாதவிழ்ந்து பசும்பொனுந்திக்<br>கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. | ஊன் வாடிய தலைமாலையைச் சூடிப் பு–த்தோலை உடுத்து ஆடும் பாம்பை அறையில் கட்டிய அம்மானது இடம், அழகிய குளிர்ந்த சார–ல் பாடும் பெண்வண்டுகள் அரும்புகளைப் போதாக அலர்த்த மகரந்தப் பொடிகள் பசும்பொன் போல உதிரக் காந்தள் மலர்ந்து மணம் பரப்பும் குன்றுகள் சூழ்ந்த குறும்பலாவாகும். |
| **2237.** பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடியாடிக்<br>கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்<br>நீல மலர்க்குவளை கண்டிறக்க வண்டரற்றும் நெடுந்தண்சாரல்<br>கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங் குறும்பலாவே. | பால் போன்ற வெண்மையான மதியை முடியிற் சூடி, ஒருபாகத்தே உமையம்மையைக் கூடிநின்று ஆடிப்பாடி, மார்க்கண்டேயர் பொருட்டுக் காலனின் உடல் கிழியும்படி அவனைச் சினந்த பெருமானது இடம், கற்கள் சூழ்ந்த வெற்பிலுள்ள சுனைகளில் கருங்குவளைகள் கண் போல மலரவும், வண்டுகள் இசைபாடவும் நெடிய குளிர்ந்த சார–ல் அழகிய மயில்கள் பெண் மயில்களோடு ஆடி மகிழும் குறும்பலாவாகும். |
| **2238.** தலைவாண் மதியங் கதிர்விரியத் தண்புனலைத் தாங்கித்தேவி<br>முலைபாகங் காத–த்த மூர்த்தி யிடம்போலும் முதுவேய்சூழ்ந்த<br>மலைவா யசும்பு பசும்பொன் கொழித்திழியும் மல்குசாரல்<br>குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந் தேன்பி–ற்றுங் குறும்பலாவே. | தலையில் ஒளிவிரியும் வெண்மையான பிறையையும் கங்கையையும் தாங்கி, உமாதேவியைக் காத–த்து ஒரு பாகமாகக் கொண்டுள்ள சிவமூர்த்தியின் இடம், முதிய மூங்கில் சூழ்ந்துள்ள மலையிடத்து நீர்க் கசிவுகள் பேருருவியாகப் பொன் கொழித்து ஒழுகுவதும் பொருந்திய சாரலகத்தே வாழைக்குலையும் மாங்கனிகளும் தேன் பி–ற்றுவதுமான குறும்பலா என்னும் கோயிலாகும். |
| **2239.** நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக்கண்ணார்<br>கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங் குளிர்சூழ்வெற்பில்<br>ஏற்றேன மேன மிவையோ டவைவிரவி யிழிபூஞ்சாரற்<br>கோற்றே னிசைமுரலக் கேளாக் குயில்பயிலுங் குறும்பலாவே. | திருநீற்றைப் பொருந்தி விளங்கும் முப்புரிநூலை அணிந்தவரும் தண்மதியரும் நெற்றிக் கண்ணரும் காலனைக் கடிந்தவரும் ஆகிய சிவபிரானது இடம், குளிர்ந்த மலையின்கண் ஆண் பன்றி, பெண் பன்றியோடு கலந்து கீழிறங்கும் சார–ன்கண் கொம்புத் தேன் சேகரிக்கும் வண்டுகள் இசைபாட அதனைக் கேட்டுக் குயில் கூவும் குறும்பலாவாகும். |

| | |
|---|---|
| **2240.** பொன்றொத்த கொன்றையும் பிள்ளை மதியும் புனலுஞ்சூடிப்<br>பின்றொத்த வார்சடையெம் பெம்மா னிடம்போலும் பிலயந்தாங்கி<br>மன்றத்து மண்முழவ மோங்கி மணிகொழித்து வயிரமுந்திக்<br>குன்றத் தருவி யயலே புனறதும்புங் குறும்பலாவே. | பொன் போன்ற கொன்றை மலர்க் கொத்துக்களையும் இளமதியையும் கங்கையையும் சூடி, பின்னே கொத்தாக அமைந்த நீண்ட சடையை உடைய எம்பெருமானது இடம், பிரளய வெள்ளம் போலப் பெருகி மன்றத்தே அடிக்கப்படும் முழவம் போல ஒ–த்து, மணி, வயிரம் முத–யவற்றுடன் சொரியும் அருவியின் புனல்ததும்பும் குறும்பலாவாகும். |
| **2241.** ஏந்து திணிதிண்டோ ளிராவணனை மால்வரைக்கீழ் அடரவூன்றிச்<br>சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ் சாரற்சாரல்<br>பூந்தணறு வேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொ–யவேந்திக்<br>கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங் குறும்பலாவே. | உயர்ந்த திண்ணிய தோள்களை உடைய இராவணனைக் கயிலைமலையின் கீழ் அடர்த்தவரும், சாந்தமெனத் திருநீற்றை விரவப் பூசியவருமாகிய சைவரது இடம், மழைச்சாரலை உடைய மலைச்சார–ல் வேங்கைப் பூங்கொத்துக்களை ஒடித்து மத்தகத்தே அழகுற ஏந்திப் பெண் யானையோடு ஆண் யானைகள் சேர்ந்து வணங்கும் குறும்பலாவாகும். |
| **2242.** அரவி னணையானு நான்முகனுங் காண்பரிய அண்ணல்சென்னி<br>விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் விரிபூஞ்சாரல்<br>மரவ மிருகரையு மல்–கையுஞ் சண்பகமு மலர்ந்துமாந்தக்<br>குரவ முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. | பாம்பணையானாகிய திருமாலும், நான்முகனும் காணுதற்கு அரியவராக விளங்கிய தலைவரும், முடியில் பொருந்த இளம் பிறையைச் சூடியவரும் ஆகிய விகிர்தருக்கு உரிய இடம், விரிந்த பூக்களை உடைய மலைச்சார–ல் மரவம், மல்–கை, சண்பகம் ஆகியன மலர்ந்து நிற்க அவற்றின் தேனை உண்ணக் குரவமலர்ப் பாவை முறுவல் செய்வது போல மலரும் குன்றினை அடுத்துள்ள குறும்பலாவாகும். |
| **2243.** மூடிய சீவரத்தர் முன்கூறுண் டேறுதலும் பின்கூறுண்டு<br>காடி தொடுசமணைக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்<br>நீடுயர் வேய்குனியப் பாய்கடுவ னீள்கழைமேல் நிருத்தஞ்செய்யக்<br>கூடிய வேடுவர்கள் குய்விளியாக் கைமறிக்குங் குறும்பலாவே. | உடலை மூடிய சீவரம் என்னும் ஆடையை அணிந்தவர்களும் முன்னால் அறுசுவை உணவுண்டு பின்னால் காடியைக் கூறாக்கி உண்போரும் ஆகிய சமணர்களை வெறுத்த சைவராகிய சிவபிரானது இடம் கற்கள் நிறைந்த மலையகத்தே நீண்ட மூங்கில்கள் வளைந்து நிற்க, அவற்றில் குரங்குகள் நின்று ஆட, வேடர்கள் குய் என்ற ஒ–க்குறிப்போடு கூவிக் கை குவிக்கும் குறும்பலாவாகும். |

| | |
|---|---|
| **2244.** கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற்றண்ணல்<br>நம்பா னடிபரவு நான்மறையான் ஞானசம் பந்தன்சொன்ன<br>இன்பாய பாட –வைபத்தும் வல்லார் விரும்பிக்கேட்பார்<br>தம்பால தீவினைகள் போயகல நல்வினைகள் தளராவன்றே. | பூங்கொம்புகளைக் கொண்ட மலர்ச்சோலை களைக் கொண்ட குறும்பலாவில் மேவிய கொல்லேற்றுத் தலைவனும், நம்மால் விரும்பப்படுபவனுமாகிய சிவபெருமானின் திருவடிகளைப் பரவும் நான்மறைவல்ல ஞானசம்பந்தன் அருளிய இன்பம் தரும் இப்பதிகப் பாடல்களை ஓதவல்லவரும் விரும்பிக் கேட்பவரும் தம்பால் உள்ள தீவினைகள் நீங்கப் பெற்ற நல்வினைப் பயன்களைத் தளராது பெறுவர். |

## 72. திருநணா

பண் : காந்தாரம் | பதிக எண் : 72

(வழிபடுவோருக்கு யாதொரு தீங்கும் நண்ணாத பதியாத–ன் நணா எனப்படுகிறது)

| | |
|---|---|
| **2245.** பந்தார் விரன்மடவாள் பாகமா நாகம்பூண் டேறதேறி<br>அந்தா ரரவணிந்த வம்மா னிடம்போலும் அந்தண் சாரல்<br>வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழி–ல் வண்டுபாடச்<br>செந்தேன் றெளியொளிரத் தேமாங் கனியுதிர்க்குந் திருநணாவே. | பந்தாடும் விரலை உடைய உமையம்மை ஒரு பாகமாக விளங்க, பாம்பை அணிகலனாகப் பூண்டு, எருதேறி, அழகிய மாலையாக அரவத்தைப் பூண்டுள்ள சிவபிரானது இடம், அழகிய குளிர்ந்த மலைச்சார–ன் அருகே மந்திகள் நடனமாடவும், பூம்பொழி–ல் வண்டுகள் பாடவும் செந்தேனின் தெளிவில் தோய்ந்த மாங்கனிகள் உதிரும் வளமுடைய திருநணாவாகும். |
| **2246.** நாட்டம் பொ–ந்திலங்கு நெற்றியினான் மற்றொருகை வீணையேந்தி<br>ஈட்டுந் துயரறுக்கு மெம்மா னிடம்போலும் இலைசூழ்கானில்<br>ஓட்டந் தருமருவி வீழும் விசைகாட்ட முந்தூழோசைச்<br>சேட்டார் மணிக ளணியுந் திரைசேர்க்குந் திருநணாவே. | அழகியதொரு கண் பொ–ந்து விளங்கும் நெற்றியினரும், ஒரு கையில் வீணை ஏந்தியவரும், பழவினைத்தொகுப்பினைத் தீர்த்தருள்பவரும் ஆகிய எம் இறைவனது இடம், இலைகள் அடர்ந்த காட்டில் மலை அருவி இசை காட்ட, மூங்கில்கள் உராய்ந்து ஓசை எடுப்ப உயர்ந்த மணிகளை வாரி அலைகள் கரைகளில் சேர்க்கும் திருநணாவாகும். |
| **2247.** நன்றாங் கிசைமொழிந்து நன்னுதலாள் பாகமாய் ஞாலமேத்த<br>மின்றாங்கு செஞ்சடையெம் விகிர்தர்க் கிடம்போலும் விரைசூழ்வெற்பில்<br>குன்றோங்கி வன்றிரைகண் மோத மயிலாலுஞ் சாரற்செவ்வி<br>சென்றோங்கி வானவர்க ளேத்தி யடிபணியுந் திருநணாவே. | திருத்தமான இசையுடன் வேதங்களை அருளி, உமையொரு பாகராய் மின்னல் போன்ற செஞ்சடையினராய் விளங்கும் சிவபிரான் உலகம் ஏத்த விளங்கும் இடம், மணம் கமழும் மலையகத்தே குன்றுகள் போல அருவியின் திரைகள் எழுந்து மோத மயில்கள் ஆட வானவர்கள் சாரலை அடைந்து ஏத்தி வணங்கும் சிறப்பினதாகிய திருநணாவாகும். |

| | |
|---|---|
| **2248.** கையின் மழுவேந்திக் கா–ற் சிலம்பணிந்து<br>கரித்தோல்கொண்டு<br>மெய்யின் முழுதணிந்த விகிர்தக்கிடம்போலு<br>மிடைந்துவானோர்<br>ஐய வரனே பெருமா னருளென்றென்<br>றாதரிக்கச்<br>செய்ய கமலம் பொழிதே னளித்தியலுந்<br>திருநணாவே. | கையின் மழுவை ஏந்தி, கா–ல் சிலம்பை அணிந்து, யானையின் தோலைப் போர்த்து விளங்கும் விகிர்தனுக்குரிய இடம், தேவர்கள் கூடிநின்று 'ஐயனே! அரனே! பெருமானே! அருள்புரிக' என்று விரும்பிப் போற்றுவதும், செந்தாமரை மலர்கள் தேனைத் தருவதுமாகிய திருநணாவாகும். |
| **2249.** முத்தேர் நகையா ளிடமாகத் தம்மார்பில்<br>வெண்ணூல்பூண்டு<br>தொத்தேர் மலர்சடையில் வைத்தா ரிடம்போலுஞ்<br>சோலைசூழ்ந்த<br>அத்தே னளியுண் களியா –சைமுரல<br>ஆலத்தும்பி<br>தெத்தே யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந்<br>திருநணாவே. | முத்துப் போன்ற பற்களை உடைய உமையம்மை ஒருபாகமாக விளங்கத் தம் மார்பில் வெண்ணூல் பூண்டு பூங்கொத்துக்களைச் சடைமிசைச் சூடியுள்ள சிவபிரானது இடம், சோலைகளில் சூழ்ந்த வண்டுகள் தேனுண்ணும் விருப்பினால் இசைபாடி ஆட, தும்பிகள் 'தெத்தே' என்று ஒ–க்குறிப்போடு முரல் விளங்கும் அழகுடைய தும் பெயர் சொல்லக் கேட்டார் வினைகளைக் கொடுப்பதும் ஆகிய திருநணாவாகும். |
| **2250.** வில்லார் வரையாக மாநாக நாணாக<br>வேடங்கொண்டு<br>புல்லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும்<br>பு–யுமானும்<br>அல்லாத சாதிகளு மங்கழன்மேற் கைகூப்ப<br>அடியார்கூடிச்<br>செல்லா வருநெறிக்கே செல்ல வருள்புரியுந்<br>திருநணாவே. | மேருமலை வில்லாகப் பொருந்த, வாசுகி என்னும் பெரிய பாம்பு நாணாக அமைய, தான் பெருவீரனாக வேடம்புனைந்து அவுணர்தம் முப்புரங்களையும் எரித்தவனது இடம், பு–, மான் இவையும் அல்லாத பிற விலங்கினங்கள் யாவும் திருவடிகளைக் கைகூப்பி வணங்க, அடியவர்கூடி வழிபடுவதும், யாரும் செல்ல இயலாத வீட்டு நெறிக்குச் செல்ல இறைவன் அருள் புரிவதும் ஆகிய திருநணாவாகும். |
| **2251.** கானார் களிற்றுரிவை மேன்மூடி யாடரவொன்<br>றரைமேற்சாத்தி<br>ஊனார் தலையோட்டி லூணுகந்தான் றானுகந்த<br>கோயிலெங்கும்<br>நானா விதத்தால் விரதிகணன் னாமமே<br>யேத்திவாழ்த்தத்<br>தேனார் மலர்கொண்டடியா ரடிவணங்குந்<br>திருநணாவே. | காட்டில் வாழும் யானையின் தோலால் உடலை மூடி, ஆடும்பாம்பினை அரைமேல் கட்டி, ஊன் பொருந்திய தலையோட்டில் ப– ஏற்று உகப்பவராகிய சிவபிரான் உவப்புடன் மேவும் கோயில் தவவிரதிகள் எங்கும் பல்வேறு வகைகளில் திருப்பெயர்களைச் சொல்– வாழ்த்த அடியவர் தேன்சிறந்த மலர்களைக் கொண்டு மகிழ்ந்து அடி வணங்குவதாகிய திருநணாவாகும். |

| | |
|---|---|
| **2252.** மன்னீரிலங்கையர்தங் கோமான் வ–தொலைய விரலாலூன்றி<br>முந்நீர்க் கடனஞ்சை யுண்டார்க் கிடம்போலு முனைசேர்சீயம்<br>அன்னீர் மைகுன்றி யழலால் விழிகுறைய வழியுமுன்றிற்<br>செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்குந் திருநணாவே. | பெருகிய கடல் நீரால் சூழப்பட்ட இலங்கை மன்னன் இராவணனின் வ–மை அழியுமாறு கால் விரலை ஊன்றி அடர்த்தவரும், கட–டையே தோன்றிய நஞ்சினை உண்டவருமாகிய சிவபெருமானுக்குரிய இடம், மலைக் குகையில் வாழும் சிங்கம் தன் தன்மை குன்றி அழல் பொழியும் தன் விழி குறைய அதனோடு போரிட்டு முன்றி–ல் படிந்த அதனது குருதியைக் கண்டு தன் வ–மையில் பெருமை பெற்ற யானை சென்று மறையும் திருநணாவாகும். |
| **2253.** மையார் மணிமிடறன் மங்கையோர் பங்குடையான் மனைகடோறும்<br>கையார் ப–யேற்ற கள்வ னிடம்போலுங் கழல்கணேடிப்<br>பொய்யா மறையானும் பூமிய ளந்தானும் போற்றமன்னிச்<br>செய்யா ரெரியா முருவ முறவணங்குந் திருநணாவே. | கரிய நீலமணி போன்ற மிடற்றினனும், உமைபாகனும் வீடுகள் தோறும் ப–யேற்றுப் ப–யிடுவோர் உள்ளங்களைக் கவரும் கள்வனும் ஆகிய சிவபெருமானது இடம் திருமுடி திருவடிகளைத் தேடி வேதங்களை ஓதும் நான்முகனும் நிலம் அளந்த திருமாலும் போற்ற நிலைபேறுடைய செந்தீயுருவாய் உருவம் பெற அவர்கள் இருவரும் அப்பெருமானது அடிமுடி காணல் ஆற்றாது வந்து வழிபடும் திருநணாவாகும். |
| **2254.** ஆடை யொழித்தங் கமணே திரிந்துண்பார் அல்லல்பேசி<br>மூடுருவ முகந்தா ருரை யகற்று மூர்த்திகோயில்<br>ஓடு நதிசேரு நித்திலமு மொய்த்தகிலுங் கரையிற்சாரச்<br>சேடர் சிறந்தேத்தத் தோன்றி யொளிபெருகுந் திருநணாவே. | ஆடையின்றி அம்மணமாகத் திரிந்து இரந்து உண்பவரும் துன்பமான செய்திகளைப் பேசி உடலைப் போர்த்தித் திரிபவரும் ஆகிய அமணர், உரைகளைச் செவி மடுக்காத சிவமூர்த்தியின் கோயில், பெருகி ஓடும் நதி, முத்து, அகில் முத–யவற்றைக் கரையில் சேர்ப்பதும், பெரியோர் சிறப்புடன் வந்து வழிபடுவதும், கட்புலனாய் ஒளிபெருகி விளங்குவதுமாகிய திருநணாவாகும். |
| **2255.** கல்வித் தகத்தாற் றிரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார்<br>நல்வித் தகத்தா –னிதுணரு ஞானசம் பந்தனெண்ணும்<br>சொல்வித் தகத்தா –றைவன் றிருநணா வேத்துபாடல்<br>வல்வித் தகத்தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே. | கரையை அகழும் வித்தகத்தோடு அலைகள் சூழும் கடலை அடுத்துள்ள காழிப்பதியில் கவுணியர் குலத்தில் தோன்றி நல்ல ஞானத்தால் எல்லாவற்றையும் இனிதுணரும் ஞானசம்பந்தன் கருதிச் சொல் வித்தகத்துடன் இறைவனது திருநணாவை ஏத்திய இப்பதிகப் பாடல்களை மேம்பட்ட இசைத் திறமையால் பாடிப் போற்றுவார் இவ்வுலகில் பழியிலராவர். |

## 73. திருப்பிரமபுரம்
### (திருச்சக்கரமாற்று)

பண் : காந்தாரம் | பதிக எண் : 73

2256. விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
புக–வெங் குருமேற்சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம்வண் புறவமண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
கொச்சைகழு மலமென்றின்ன
விளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர்தம்
பகையெறிவித் திறைவனூரே.

இத்திருப்பதிகம் சீகாழியின் பன்னிரு திருப்பெயர்களை மாறிமாறிவரப் பாடியருளியது. இளங்குமரனாகிய முருகக்கடவுளைப் பெற்றுத் தேவர்களின் பகைவர்களாகிய சூரபன்மன் முதலானோரை அழியச் செய்தருளிய சிவபிரானது ஊர், விளங்கிய புகழை உடைய பிரமனூர் வேணுபுரம் முதலான பன்னிரு பெயர்களை உடைய சீகாழிப் பதியாகும்.

2257. திருவளருங் கழுமலமே கொச்சை
தேவேந்திரனூர் அயனூர்தெய்வத்
தருவளரும் பொழிற்புறவஞ் சிலம்பனூர்
காழிதகு சண்பையொண்பா
வுருவளர்வெங் குருப்புக– யோங்குதராய்
தோணிபுர முயர்ந்ததேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள்
கண்டத்தோன் விரும்புமூரே.

பாற்கடலைக் கடையும் காலத்து உயர்ந்த தேவர்கள் அஞ்சப் பெருகி எழுந்த நஞ்சினை உண்டு அழகிய கண்டத்தோனாகிய சிவபிரான் விரும்பும் ஊர், திருமகள் வளரும் கழுமலம் முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும்.

2258. வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்வாழூர்
ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழிற்
காழியிறை கொச்சையம்பொன்
வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய
மிக்கயனூர் அமரர்கோனூர்
ஆய்ந்தகலை யார்புக– வெங்குருவ
தரனாளும் அமருமூரே.

சிவபிரான் நாள்தோறும் எழுந்தருளிய ஊர், புகழ் பெற்றதும் வேதங்கள் வளர்வதுமான தோணிபுரம் முதலான பன்னிரு திருப்பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும்.

2259. மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப்
புக–தராய் தோணிபுரம்வான்
சேமமதில் புடைதிகழுங் கழுமலமே
கொச்சைதேவேந் திரனூர்சீர்ப்
பூமகனூர் பொ–வுடைய புறவம்விறற்
சிலம்பனூர் காழிசண்பை
பாமருவு கலையெட்டெட் டுணர்ந்தவற்றின்
பயன்நுகர்வோர் பரவுமூரே.

பாக்களில் பொருந்திய அறுபத்து நான்கு கலைகளையும் உணர்ந்து அவற்றின் பயனை நுகரும் அறிஞர்கள் போற்றும் ஊர், மலையான் மகளாகிய பார்வதி தேவியாரின் கணவராகிய பெருமானார் விரும்பும் வெங்குரு முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும்.

| | |
|---|---|
| **2260.** தரைத்தேவர் பணிசண்பை தமிழ்க்காழி<br>வயங்கொச்சை தயங்குபூமேல்<br>விரைச்சேருங் கழுமலமெய் யுணர்ந்தயனூர்<br>விண்ணவர்தங் கோனூர்வென்றித்<br>திரைச்சேரும் புனற்புக– வெங்குருச்<br>செல்வம்பெருகு தோணிபுரஞ்சீர்<br>உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவ<br>முலகத்தி லுயர்ந்தவூரே. | உலகின்கண் உயர்ந்த ஊர், தரைத்தேவராகிய அந்தணர் பணியும் சண்பை முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப்பதியாகும். |
| **2261.** புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு<br>சிரபுரம்பூங் காழிசண்பை<br>எண்டிசையோ ரிறைஞ்சியவெங் குருப்புக–<br>பூந்தராய் தோணிபுரஞ்சீர்<br>வண்டமரும் பொழின்மல்கு கழுமலநற்<br>கொச்சைவா னவர்தங்கோனூர்<br>அண்டயனூ ரிவையென்ப ரருங்கூற்றை<br>யுதைத்துகந்த வப்பனூரே. | வெல்லுதற்கு அரிய கூற்றுவனை உதைத்து உகந்த சிவபெருமானது ஊர், தாமரை மலர்களால் நிறைந்த வயல்கள் சூழ்ந்த புறவம் முதலான பன்னிரு திருப்பெயர்கள் பெற்ற சீகாழிப் பதியாகும். |
| **2262** வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங்<br>கோனூர்வண் புக–யிஞ்சி<br>வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு<br>சண்பைவியன் காழிகொச்சை<br>கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந்<br>தோணிபுரம் பூந்தராய்சீர்ப்<br>பண்ம–யுஞ் சிரபுரம்பார் புகழ்புறவம்<br>பால்வண்ணன் பயிலுமூரே. | வெண்ணீறு பூசிப் பால் போன்ற நிறமுடையோனாகிய சிவபெருமான் எழுந்தருளிய ஊர், கொடைத்தன்மை நிரம்பியோர் வாழும் மேன்மையான பிரமபுரம் முதலான பன்னிரு திருப்பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும். |
| **2263.** மோடிபுறங் காக்குமூர் புறவஞ்சீர்ச்<br>சிலம்பனூர் காழிமூதூர்<br>நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை<br>வேணுபுரங் கமலநீடு<br>கூடியவ னூர்வளர்வெங் குருப்புக–<br>தராய்தோணி புரங்கூடப்போர்<br>தேடியுழ லவுணர்பயி றிரிபுரங்கள்<br>செற்றமலைச் சிலையனூரே. | போர் உடற்றத்தேடித் திரிந்த அவுணர்வாழும் திரிபுரங்களைச் செற்ற சிவபிரானது ஊர், துர்க்கையால் காவல் செய்யப்பெறும் புறவம் முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும். |

| | |
|---|---|
| **2264.** இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம்<br>பூந்தராய் சிலம்பன்றன்னூர்<br>நிரக்கவரு புனற்புறவ நின்றதவத்<br>தயனூர்சீர்த் தேவர்கோனூர்<br>வரக்கரவாப் புக–வெங் குருமாசி<br>லாச்சண்பை காழிகொச்சை<br>அரக்கன்விற லழித்தருளி கழுமலமந்<br>தணர்வேத மறாதவூரே. | அந்தணர்களால் ஓதப்பெறும் வேதம் இடையறவு படாத ஊர், கருணையே வடிவான சிவபிரானது தோணிபுரம் முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும். |
| **2265.** மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங்<br>கொச்சையிந் திரனூர்மெய்மை<br>நூலோது மயன்றனூர் நுண்ணறிவார்<br>குருப்புக– தராய்தூநீர்மேல்<br>சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ்<br>சிலம்பனூர் செருச்செய்தன்று<br>மாலோடு மயனறியான் வண்காழி<br>சண்பைமண்ணோர் வாழ்த்துமூரே. | உலகினுள்ளோர் வாழ்த்தும் ஊர், மேலானதாக ஓதப்பெறும் கழுமலம் முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும். |
| **2266.** ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர்<br>கொச்சைகழு மலமன்பானூர்<br>ஒக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய்<br>சிரபுரமொண் புறவநண்பார்<br>பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர்<br>புக–வெங் குருவுமென்பர்<br>சாக்கியரோ டமண்கையர் தாமறியா<br>வகைநின்றான் றங்குமூரே. | சாக்கியர் சமணர்களால் அறியப் பெறாதவனாகிய சிவபிரான் தங்கும் ஊர், ஆக்கம் மிக்க ஊராகிய சண்பை முதலான பன்னிரு பெயர்களைப் பெற்ற சீகாழிப் பதியாகும். |
| **2267.** அக்கரஞ்சேர் தருமனூர் புக–தராய்<br>தோணிபுர மணிநீர்ப்பொய்கை<br>புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர்<br>புகழ்க்காதி சண்பைதொல்லூர்<br>மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம்<br>வேணுபுர மயனூர்மே–ச்<br>சக்கரஞ்சீர்த் தமிழ்விரகன் றான்சொன்ன<br>தமிழ்தரிப்போர் தவஞ்செய்தோரே. | புகழ்மிக்க தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தன் திருவருளில் திளைத்துச் சக்கரமாகச் சொன்ன இத்தமிழ் மாலையைப் போற்றி நாவில் தரிப்போர் தவஞ்செய்தோர் ஆவர். |

## 74. திருப்பிரமபுரம்
## (திருக்கோமூத்திரி அந்தாதி)

பண் : காந்தாரம் — பதிக எண் : 74

2268. பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்
குறைவிலாப் புக–பூமேன்
மாமகளூர் வெங்குருநற் றோணிபுரம்
பூந்தராய் வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை
புகழ்ச்சண்பை காழிகொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர்
கழுமலநாங் கருதுமூரே.

நாம் கருதும் ஊர் பிரமபுரம் முதலான பன்னிரு பெயர்களையுடைய கழுமலமாகும்.

2269. கருத்துடைய மறையவர்சேர் கழுமலமெய்த்
தோணிபுரங் கனகமாட
உருத்திகழ்வெங் குருப்புக– யோங்குதரா
யுலகாருங் கொச்சைகாழி
திருத்திகழுஞ் சிரபுரந்தே வேந்திரனூர்
செங்கமலத் தயனூர்தெய்வத்
தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பைசடை
முடியண்ணல் தங்குமூரே.

சடைமுடியை உடைய அண்ணலாகிய சிவபிரான் தங்கும் ஊர் நல்ல, எண்ணமுடைய மறையவர் வாழும் கழுமலம் முதலான பன்னிரு பெயர்களை உடைய காழிப்பதியாகும்.

2270. ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை
யொளிமருவு காழிகொச்சை
கார்ம–யும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த்
தோணிபுரங் கற்றோரேத்துஞ்
சீர்மருவு பூந்தராய் சிரபுரமெய்ப்
புறவமய னூர்பூங்கற்பத்
தார்மருவு மிந்திரனூர் புக–வெங்
குருக்கங்கை தரித்தோனூரே.

கங்கையைச் சடையில் தரித்த சிவபிரானது ஊர் விண்ணில் ஊர்ந்து செல்லும் மதியைத் தொடுமாறு உயர்ந்த மதில்களை உடைய சண்பை முத–ய பன்னிரு பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியாகும்.

2271. தரித்தமறை யாளர்மிகு வெங்குருச்சீர்த்
தோணிபுரந் தரியாரிஞ்சி
எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந்
தராய்புக– யிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சீர் திகழ்காழி
சண்பைசெழு மறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோ
னூருலகில் விளங்குமூரே.

உலகில் விளங்கும் ஊர், வேதங்களை நாவில் தரித்த அந்தணர்கள் மிகுந்த வெங்குரு முத–ய பன்னிரு பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியாகும்.

| | |
|---|---|
| **2272.** விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை<br>வேணுபுர மேகமேய்க்கும்<br>இளங்கமுகம் பொழிற்றோணி புரங்காழி<br>யெழிற்புக– புறவமேரார்<br>வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச்<br>சிரபுரம்வன் னஞ்சமுண்டு<br>களங்கம– களத்தவன்சீர்க் கழுமலங்கா<br>மன்னுடலங் காய்ந்தோனூரே. | காமன் உடலைக் காய்ந்த சிவபிரானது ஊர், விளங்கும் பிரமபுரம் முத–ய பன்னிரு பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியாகும். |
| **2273.** காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர்<br>கழுமலமாத் தோணிபுரஞ்சீர்<br>ஏய்ந்தவெங் குருப்புக– யிந்திரனூ<br>ரிருங்கமலத் தயனூரின்பம்<br>வாய்ந்தபுற வந்திகழுஞ் சிரபுரம்பூந்<br>தராய்கொச்சை காழிசண்பை<br>சேந்தனைமுன் பயந்துலகிற் றேவர்கடம்<br>பகைகெடுத்தோன் றிகழுமூரே. | முருகப் பெருமானைப் பெற்றெடுத்து உலகில் தேவர்களின் பகைவனாகிய சூரபன்மனை அழித்தருளியவனும் சினந்துவந்த காலனை அன்று உதைத்தவனும் ஆகிய சிவபிரானது ஊர், கழுமலம் முத–ய பன்னிரு பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியாகும். |
| **2274.** திகழ்மாட ம–சண்பை பூந்தராய்<br>பிரமனூர் காழிதேசார்<br>மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம்<br>வயங்கொச்சை புறவம்விண்ணோர்<br>புகழ்புக– கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங்<br>குருவெம்போர் மகிடற்செற்று<br>நிகழ்நீ– நின்மலன்றன் னடியிணைகள்<br>பணிந்துலகி னின்றவூரே. | கொடிய போரில் மகிடாசுரனைக் கொன்று விளங்கும் நீ–யாகிய துர்க்கை சிவபிரான் அடியிணைகளைப் பணிந்து தனது கொலைப் பழியைப் போக்கிக் கொண்டு நின்ற ஊர், விளங்கும் மாடவீடுகளைக் கொண்ட சண்பை முத–ய பன்னிரு பெயர்களை உடைய சீகாழிப் பதியாகும். |
| **2275.** நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி<br>புரநிகழும் வேணுமன்றில்<br>ஒன்றுகழு மலங்கொச்சை யுயர்காழி<br>சண்பைவளர் புறவமோடி<br>சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந்<br>தராய்புக– தேவர்கோனூர்<br>வென்றிமக– பிரமபுரம் பூதங்க<br>டாங்காக்க மிக்கவூரே. | பூதங்களால் தாங்கப் பெறும் ஆக்கம் மிக்க ஊர், நிலைத்துநின்ற மதில்களால் சூழப்பட்ட வெங்குரு முதலான பன்னிரு பெயர்களை உடைய சீகாழிப் பதியாகும். |

| | |
|---|---|
| **2276.** மிக்ககம லத்தயனூர் விளங்குபுற<br>வஞ்சண்பை காழிகொச்சை<br>தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம்<br>பூந்தராய் சிலம்பன்சேரூர்<br>மைக்கொள்பொழில் வேணுபுர மதிற்புக–<br>வெங்குருவல் லரக்கன் றிண்டோள்<br>ஒக்கவிரு பதுமுடிக ளொருபதுமீ<br>டழித்துகந்த வெம்மானூரே. | வ–ய அரக்கனாகிய இராவணனின் திண்ணிய தோள்கள் இருபது, முடிகள் பத்து ஆகியவற்றின் பெருமையை அழித்த எம் தலைவனாகிய சிவபிரானது ஊர், அழகுமிக்க தாமரை மலர்மேல் உறையும் பிரமனது தலம் என்பது முதலான பன்னிரு பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியாகும். |
| **2277.** எம்மான்சேர் வெங்குருச்சீர்ச் சிலம்பனூர்<br>கழுமலநற் புக–யென்றும்<br>பொய்ம்மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந்<br>தரனூர்நற் றோணிபுரம்போர்க்<br>கைம்மாவை யுரிசெய்தோன் காழியய<br>னூர்தராய் சண்பைகாரின்<br>மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழலாய்<br>விளங்கியவெம் மிறைவனூரே. | மேகம் போன்ற கரிய மேனியனாகிய திருமால், தாமரைமலர் மேல் உறையும் நான்முகன் ஆகியோர் உணராத வகையில் தழல் உருவாய் நின்ற இறைவனது ஊர், எம் தலைவனாகிய சிவபிரான் எழுந்தருளிய வெங்குரு முதலான பன்னிரு பெயர்களை உடைய சீகாழிப் பதியாகும். |
| **2278.** இறைவனமர் சண்பையெழிற் புறவமய<br>னூரிமையோர்க் கதிபன்சேரூர்<br>குறைவில்புகழ்ப் புக–வெங் குருத்தோணி<br>புரங்குணமார் பூந்தராய்நீர்ச்<br>சிறைம–நற் சிரபுரஞ்சீர்க் காழிவளர்<br>கொச்சைகழு மலந்தேசின்றிப்<br>பறிதலையோ டமண்கையர் சாக்கியர்கள்<br>பரிசறியா வம்மானூரே. | ஒளியின்றி மயிரைப் பறித்தெடுத்த முண்டிதராய அமண் கீழோர் சாக்கியர் ஆகியோரால் அறிய முடியாத தலைவராகிய சிவபெருமானது ஊர், இறைவனமர் சண்பை முதலான பன்னிரு பெயர்களை உடைய சீகாழிப் பதியாகும். |
| **2279.** அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங்<br>குருக்கொச்சை புறவமஞ்சீர்<br>மெய்ம்மானத் தொண்புக– மிகுகாழி<br>தோணிபுரந் தேவர்கோனூர்<br>அம்மான்மன் னுயர்சண்பை தராயயனூர்<br>வழிமுடக்கு மாவின்பாச்சல்<br>தம்மானொன் றியஞான சம்பந்தன்<br>றமிழ்கற்போர் தக்கோர்தாமே. | அம்மானாகிய சிவபிரான் எழுந்தருளிய கழுமலம் முதலான பன்னிரு திருப்பெயர்களைக் கொண்ட சீகாழிப்பதியின் மீது வழியில் மாறிமாறி பாய்ந்துள்ள கோமூத்திரியின் அமைப்பில் அங்குள்ள சிவபிரான் மேல் ஒன்றிய மனமுடைய ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ் மாலையைக் கற்போர் தக்கவராவர். |

## 75. சீகாழி

பண் : காந்தாரம் — பதிக எண் : 75

| பாடல் | விளக்கம் |
|---|---|
| 2280. விண்ணியங்கு மதிக்கண்ணி யான்விரி யுஞ்சடைப்<br>பெண்ணயங்கொள் திருமேனி யான்பெரு மானனற்<br>கண்ணயங்கொள் திருநெற்றி யான்க–க் காழியுண்<br>மண்ணயங்கொண் மறையாள ரேத்துமலர்ப் பாதனே. | ஆரவாரம் நிறைந்த காழிப்பதியுள், உலகம் நலம்பெற மறைவல்ல அந்தணர் ஏத்தும் மலர் போன்ற திருவடிகளை உடைய இறைவன், விண்ணில் இயங்கும் பிறைமதிக் கண்ணியன்; விரியும் சடையோடு பெண்ணொரு பாகங்கொண்ட மேனியன் : பெரியோன் : அனல் விழியைக் கொண்ட நெற்றியன். |
| 2281. வ–ய காலனுயிர் வீட்டினான்மட வாளொடும்<br>ப–வி ரும்பியதொர் கையினான்பர மேட்டியான்<br>க–யை வென்றமறை யாளர்தங்க–க் காழியுள்<br>ந–ய வந்தவினை தீர்த்துகந்தவெந் நம்பனே. | வறுமை முத–யவற்றைத் தவிர்க்க வேள்வி முத–யன செய்யும் மறையவர் வாழும் சீகாழிப் பதியுள் நம்மை ந–ய வரும் வினைகளைத் தீர்த்து மகிழும் நம்பனாகிய இறைவன், வ–ய காலன் உயிரைப் போக்கியவன்; உமையம்மை யோடு கூடியிருப்பவன்: ப–யேற்கும் கையினை உடையவன்: மேலானவன். |
| 2282. சுற்ற லாநற்பு–த்தோலசைத்தயன் வெண்டலைத்<br>துற்ற லாயதொரு கொள்கையான்சுடு நீற்றினான்<br>கற்றல் கேட்டலுடை யார்கள்வாழ்க–க் காழியுண்<br>மற்ற யங்குதிர டோளெம்மைந்தனவ நல்லனே. | கல்வி கேள்விகளில் வல்ல பெரியோர் வாழும் காழிப்பதியுள் மற்போர் செய்யத்தக்க திரண்ட தோள்களை உடைய வ–யோனாகிய சிவபிரான் நல்லன். பு–த்தோலை இடையிற்சுற்றிப் பிரமனது தலையோட்டில் உண்ப–தேரும் இயல்பினன். |
| 2283. பல்ல யங்குதலை யேந்தினான்படு கானிடை<br>மல்ல யங்குதிர டோள்களாரநட மாடியுங்<br>கல்ல யங்குதிரை சூழநீள்க–க் காழியுட்<br>தொல்ல யங்குபுகழ் பேணநின்றசுடர் வண்ணனே. | கற்களையும் அசையச்செய்யும் கடல் அலை நீர் சூழும் காழிப்பதியுள் பழமையாகப் பரவிய புகழ் விரும்பிச்சேர்தற்கு உரிய ஒளி வண்ணனாகிய சிவபிரான், பற்கள் விளங்கும் தலையோட்டை ஏந்தியவன்: பலரும் இறந்தபின் எரிக்கப்படும் சுடுகாட்டில், மற்போருடற்ற வல்ல திரண்ட தோள்கள் அசைய நடனம் ஆடுபவன். |
| 2284. தூநயங்கொடிரு மேனியிற் பொடிப்பூசிப்போய்<br>நாநாயங்கொண்மறை யோதிமா தொருபாகமாக்<br>கானயங்கொள்புனல் வாசமார் க–க்காழியுட்<br>டேனயங்கொண்முடி யானைந்தாடிய செல்வனே. | மாதொருபாகனாய், காடுகளில் படிந்துவரும் மணம்மிக்க நீர் சூழ்ந்த காழிப்பதியுள் தேன் மணம் கமழும் திருவடியில் ஆனைந்தாடிய செல்வனாகிய சிவபிரான், தூய அழகிய திருமேனியில் திருநீறு பூசியவன்: நாநயம் பெற வேதங்களை அருளியவன். |

| | |
|---|---|
| **2285.** சுழியி லங்கும்புனற் கங்கையாள்சடை யாகவே<br>மொழியி லங்கும்மட மங்கைபாக முகந்தவன்<br>கழியி லங்குங்கடல் சூழுந்தண்க–க் காழியுட்<br>பழியிலங்குந்துய ரொன்றிலாப் பரமேட்டியே. | உப்பங்கழிகளோடு கூடிய கடல் சூழ்ந்திலங்கும் குளிர்ந்த காழிப்பதியுள் பிறர் பழிக்கும் துன்பம் ஒன்றுமில்லாத மேன்மையோனாகிய சிவபிரான், சுழிகளைக் கொண்ட கங்கையைச் சடையில் கொண்டுள்ளதன் மேலும் இனிய மொழியினளாகிய உமைமங்கையை ஒரு பாகமாக உகந்தவன். |
| **2286.** முடியி லங்கும்முயர் சிந்தையான்முனி வர்தொழ<br>வடியி லங்குங்கழ லார்க்கவேயன லேந்தியுங்<br>கடியி லங்கும்பொழில் சூழுந்தண்க–க் காழியுட்<br>கொடியி லங்கும்மிடை யாளொடுங்குடி கொண்டதே. | முடியின் மே–டத்தில் சிந்தையைச் செலுத்தும் முனிவர்கள் தொழ, நன்றாக வடிக்கப்பெற்று விளங்கும் கழல் கா–ல் ஆர்க்க அனலைக் கையில் ஏந்தி ஆடும் இறைவன், மணம் பொருந்திய பொழில்கள் சூழ்ந்த காழிப்பதியுள் கொடிபோலும் இடையினளாகிய பார்வதி தேவியோடு குடி கொண்டுள்ளான். |
| **2287.** வல்ல ரக்கன்வரை பேர்க்கவந் தவன்றோண்முடி<br>கல்ல ரக்கிவ்விறல் வாட்டினான்க–க் காழியுள்<br>நல்லொ ருக்கியதொர் சிந்தையார்மலர் தூவவே<br>தொல்– ருக்கும்மறை யேத்துகந்துடன் வாழுமே. | கயிலைமலையைப் பெயர்க்க வந்த வ–ய அரக்கனாகிய இராவணனின் தோள் முடி ஆகியவற்றை அம்மலையாலேயே அடர்த்து அவனது வ–மையைச் செற்ற சிவபிரான், ஒருமைப்பாடுடைய நற்சிந்தையார் மலர்தூவிப் போற்றவும் தொன்மையான இருக்கு வேத மொழிகளைப் பாடி வழிபடவும் மகிழ்ந்து உமையம்மையோடு விளங்குகின்றான். |
| **2288.** மருவு நான்மறை யோனுமாமணி வண்ணனும்<br>இருவர் கூடியிசைந் தேத்தவேயெரி யான்றனூர்<br>வெருவ நின்றதிரை யோதம்வார்வியன் முத்தவை<br>கருவை யார்வயற் சங்குசேர்க–க் காழியே. | பொருந்திய நான்மறைகளை ஓதுபவனாகிய பிரமன், நீலமணி போன்ற நிறத்தினை உடைய திருமால் ஆகிய இருவரும் கூடி ஏத்த எரிஉருவாய் நின்ற சிவபிரானது ஊர், அஞ்சுமாறு வரும் கடல் அலைகளையும் அதனால் பெருகும் ஓதநீரையும் பெரிய முத்துக்கள், சங்குகள் சேரும் கரிய வைக்கோலைக் கொண்டுள்ள வயல்களையும் உடைய காழியாகும். |
| **2289.** நன்றியொன்றுமுண ராதவன் சமண்சாக்கியர்<br>அன்றியங்கவர் சொன்னசொல் லவைகொள்கிலான்<br>கன்றுமேதியிளங் கானல்வாழ்க–க் காழியுள்<br>வென்றி சேர்வியன் கோயில்கொண்ட விடையாளனே. | கன்றும் அதன் தாயாகிய எருமையும் இளங்கான–ல் வாழும் காழிப்பதியுள் வெற்றி பொருந்திய பெரிய கோயிலை இடமாகக் கொண்ட விடையூர்தியானாகிய சிவபிரான் நன்மையைச் சிறிதும் உணராத வ–ய சமணர்களும் சாக்கியர்களும் தம்முள் மாறுபட்டுப் பேசும் பேச்சுக்களைக் கொள்ளாதவன். |

| | |
|---|---|
| 2290. கண்ணு மூன்றுமுடை யாதிவாழ்க–க் காழியுள்<br>அண்ண லந்தண்ணருள் பேணிஞானசம் பந்தன்சொல்<br>வண்ண மூன்றுந்தமி ழிற்றெரிந்திசை பாடுவார்<br>விண்ணு மண்ணும்விரி கின்றதொல்புக ழாளரே. | மூன்று கண்களை உடைய முதலோனாகிய சிவபிரான் வாழும் காழிப்பதியுள் அத்தலைவனின் தண்ணருளைப் பேணி ஞானசம்பந்தன் சொல்–ய இப்பாடல்களை மூவகை வண்ணங்களையும் தெரிந்து இசையோடு பாடுவார் விண்ணுலகும் மண்ணுலகும் விரிகின்ற புகழாளர் ஆவர். |

## 76. திருவகத்தியான்பள்ளி

பண் : காந்தாரம் — பதிக எண் : 76

| | |
|---|---|
| 2291. வாடிய வெண்டலை மாலைசூடி மயங்கிருள்<br>நீடுயர் கொள்ளி விளக்குமாக நிவந்தெரி<br>ஆடிய வெம்பெரு மானகத்தியான் பள்ளியைப்<br>பாடிய சிந்தையி னார்கட்கில்லை யாம்பாவமே.<br>சிவபெருமானின் திருமணக் கோலக்காட்சியைக் காணும் பொருட்டு அகத்தியர் தங்கித் தவஞ்செய்த பதி. | தசைவற்றிய வெண்டலை மாலையைச் சூடிச் செறிந்த இருளில், பெருகி உயர்கின்ற தீக்கொள்ளி விளக்காக உயர்ந்த இடுகாட்டு எரியில் நின்றாடிய எம்பெருமானது அகத்தியான் பள்ளியை மனம் ஒன்றிப் பாடுவோர்க்குப் பாவம் இல்லை. |
| 2292. துன்னங்கொண்ட வுடையான் றுதைந்தவெண்<br>ணீற்றினான்<br>மன்னுங்கொன்றை மதமத்தஞ் சூடினான் மாநகர்<br>அன்னந்தங்கு பொழில்சூழ் அகத்தியான் பள்ளியை<br>உன்னஞ்செய்தமனத்தார்கள் தம் வினையோடுமே. | தைத்த உடையை அணிந்தவன். வெண்மை செறிந்த திருநீற்றைப் பூசியவன். பொருந்திய கொன்றை, ஊமத்தை மலர்களைச் சூடியவன். அப்பெருமான் எழுந்தருளியதும் அன்னங்கள் வாழும் பொழில்கள் சூழ்ந்ததுமான அகத்தியான் பள்ளியை நினையும் மனம் உடையவர்களின் வினைகள் நீங்கும். |
| 2293. உடுத்ததுவும் பு–த்தோல் ப– திரிந் துண்பதுங்<br>கடுத்துவந்த கழற்காலன் தன்னையுங் கா–னால்<br>அடுத்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்<br>றொடுத்தது வுஞ்சர முப்புரந் துகளாகவே. | உடுத்துள்ளது பு–த்தோல். உண்பது ப–யேற்றுத் திரிந்து. கொன்றது சினந்து வந்த கழலணிந்த காலனைக் கா–னால். அவ்விறைவன் வாழ்வது பொழில்கள் சூழ்ந்த அகத்தியான்பள்ளி. சரம் தொடுத்தது துகளாகுமாறு திரிபுரங்களை. |
| 2294. காய்ந்ததுவு மன்றுகாமனை நெற்றிக் கண்ணினால்<br>பாய்ந்ததுவுங் கழற்காலனைப் பண்ணி னான்மறை<br>ஆய்ந்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்<br>ஏய்ந்ததுவு மிமவான் மகளொரு பாகமே. | அன்று நெற்றிக்கண்ணால் சினந்தது காமனை. பாய்ந்து கொன்றது கழலணிந்த காலனை. பண்களோடு ஆராய்ந்தது வேதங்களை. ஒரு பாகத்தே ஏய்ந்து கொண்டது இமவான் மகளை. அத்தகையோன் அகத்தியான்பள்ளி இறைவன் ஆவான். |

| | |
|---|---|
| **2295.** போர்த்ததுவுங் கரியின் னுரிபு—த் தோலுடை<br>கூர்த்ததோர் வெண்மழு வேந்திக்கோளர வம்மரைக்<br>கார்த்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்<br>பார்த்ததுவும் அரணம் படரெரி மூழ்கவே. | போர்த்துள்ளது யானைத்தோல். உடுத்துள்ளது பு—த்தோல். ஏந்தியுள்ளது கூரிய வெண்மழு. அரையில் கட்டியுள்ளது பாம்பு. பரந்த எரியுள் மூழ்குமாறு பார்த்தது முப்புரம். அத்தகையோன் அகத்தியான்பள்ளி இறைவன் ஆவான். |
| **2296.** தெரிந்ததுவுங் கணையொன்று முப்புரஞ் சென்றுடன்<br>எரிந்ததுவும் முன்னெழிலார் மலருறை வான்றலை<br>அரிந்ததுவும்பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்<br>புரிந்ததுவும் உமையாளொர் பாகம் புனைதலே. | தெரிவு செய்தது கணை ஒன்று. அக்கணை சென்று உடன் எரியச் செய்தது முப்புரங்களை. முற்காலத்தில் அரிந்தது அழகிய தாமரை மலர் மேல் உறையும் பிரமனின் தலையை. விரும்பி ஒரு பாகமாகப் புனைந்தது உமையவளை. அத்தகையோன் பொழில்கள் சூழ்ந்த அகத்தியான்பள்ளி இறைவன் ஆவான். |
| **2297.** ஓதியெல்லாம் உலகுக்கொர் ஒண்பொரு ளாகிமெய்ச்<br>சோதியென்று தொழுவார் அவர்துயர் தீர்த்திடும்<br>ஆதியெங்கள் பெருமான் அகத்தியான் பள்ளியை<br>நீதியாற் றொழுவார் அவர்வினை நீங்குமே. | வேதங்களை ஓதியவனே! உலகுக்கெல்லாம் ஒண் பொருளாகி விளங்குபவனே! நிலையான சோதி வடிவினனே! என்று கூறித் தொழுவாரவர் துயர் தீர்த்திடும் முதல்வனாகிய எங்கள் தலைவன் விளங்கும் அகத்தியான்பள்ளியை முறையாகத் தொழுபவர் வினைகள் நீங்கும். |
| **2298.** செறுத்ததுவுந் தக்கன் வேள்வியைத் திருந்தார்புரம்<br>ஒறுத்ததுவும் மொளிமா மலருறை வான்சிரம்<br>அறுத்ததுவும்பொழில்சூழ் அகத்தி யான்பள்ளியான்<br>இறுத்ததுவும் அரக்கன்றன் தோள்கள் இருபதே. | சினந்து அழித்தது தக்கன் வேள்வியை. ஒறுத்து எரித்தது பகைவர்தம் திரிபுரங்களை. அறுத்தது ஒளிபொருந்திய சிறந்த தாமரைமலர் மேலுறையும் பிரமனின் தலையை. நெரியச் செய்தது இராவணனின் இருபது தோள்களை. அத்தகையோன் அகத்தியான் பள்ளி இறைவன் ஆவான். |
| **2299.** சிரமுநல்ல மதிமத்த முந்திகழ் கொன்றையும்<br>அரவுமல்குஞ் சடையான் அகத்தியான் பள்ளியைப்<br>பிரமனோடு திருமாலுந் தேடிய பெற்றிமை<br>பரவவல்லார் அவர்தங்கள் மேல்வினை பாறுமே. | தலைமாலையையும், பிறையையும், ஊமத்தை மலரையும், விளங்கும் கொன்றை மலரையும் பாம்பையும் அணிந்துள்ள சடையினனாகிய அகத்தியான்பள்ளியில் உறையும் இறைவனைப் பிரமனும் திருமாலும் தேடிக்காண முடியாத தன்மையைக் கூறிப் பரவ வல்லவர் தங்கள் மேல்வரும் வினைகள் அழியும். |

| | |
|---|---|
| **2300.** செந்துவ ராடையினாரும் வெற்றரை யேதிரி<br>புந்தியி லார்களும் பேசும்பேச்சவை பொய்ம்மொழி<br>அந்தணன் எங்கள்பிரான் அகத்தியான் பள்ளியைச்<br>சிந்திமின் நும்வினை யானவைசிதைந் தோடுமே. | சிவந்த துவராடையை அணிந்து, ஆடையின்றி வெற்றுடல்களோடு திரியும் அறிவற்றவர்களாகிய சமண புத்தர்கள் பேசும் பேச்சுக்கள் பொய் மொழிகளாகும். அவற்றை விடுத்து அழகிய கருணையாளனும் எங்கள் தலைவனும் ஆகிய அகத்தியான்பள்ளி இறைவனைச் சிந்தியுங்கள். வினைகள் சிதைந்து ஓடும். |
| **2301.** ஞாலம் மல்குந்தமிழ் ஞானசம்பந்தன் மாமயில்<br>ஆலுஞ்சோலை புடைசூழ் அகத்தியான் பள்ளியுள்<br>சூல நல்லபடையான் அடிதொழு தேத்திய<br>மாலைவல்லா ரவர்தங்கண் மேல்வினை மாயுமே. | உலகம் முழுதும் பரவிய புகழாளனாகிய ஞானசம்பந்தன் சிறந்த மயில்கள் ஆடும் சோலைகள் சூழ்ந்த அகத்தியான் பள்ளியுள் விளங்கும் நல்ல சூலப்படையானின் திருவடிகளைத் தொழுது போற்றிப் பாடிய இத்தமிழ்மாலையை ஒத வல்லவர்கள் மேல் வரும் வினைகள் மாயும். |

## 77. திருவறையணிநல்லூர்

பண் : காந்தாரம் | பதிக எண் : 77

| | |
|---|---|
| **2302.** பீடினாற்பெரி யோர்களும்<br>பேதைமைகெடத் தீதிலா<br>வீடினாலுயர்ந் தார்களும்<br>வீடிலாரிள வெண்மதி<br>சூடினார்மறை பாடினார்<br>சுடலைநீறணிந் தாரழல்<br>ஆடினாரறை யணிநல்லூர்<br>அங்கையாற்றொழு வார்களே. | அழிவற்றவரும், இளவெண்பிறையைச் சூடியவரும், வேதங்களை அருளியவரும், சுடலைப் பொடி பூசியவரும், அழ—ன் கண் நின்று ஆடுபவரும் ஆகிய அறையணிநல்லூர் இறைவரைத் தம் அம் கையால் தொழுபவர் பீடினால் பெரியோர் ஆவர். பாசங்கள் கெடப் பற்றற்றவராய் உயர்ந்தவர்கள் ஆவர். |
| **2303.** இலையினார்சூல மேறுகந்<br>தேறியேயிமை யோர்தொழ<br>நிலையினாலொரு காலுறச்<br>சிலையினான்மதி லெய்தவன்<br>அலையினார் புனல்சூடிய<br>அண்ணலாரறை யணிநல்லூர்<br>தலையினாற்றொழு தோங்குவார்<br>நீங்குவார்தடு மாற்றமே. | இலைவடிவமான முத்தலைச் சூலத்தை ஏந்தி, ஆன் ஏற்றில் விரும்பி ஏறி வருபவன். இமையவர் வேண்ட நிலைத்த ஒரு திருவடியால் வில்லை ஊன்றித் திரிபுரங்களை எய்தவன். அலைகளோடு கூடிய கங்கையை முடிமிசைச் சூடிய தலைவன். அப்பெருமான் எழுந்தருளிய அறையணிநல்லூர் சென்று அவனைத் தலையினால் தொழும் பெருமை மிக்கவர் தடுமாற்றம் நீங்குவர். |

| | |
|---|---|
| **2304.** என்பினார்கனல் சூலத்தார்<br>இலங்குமாமதி யுச்சியான்<br>பின்பினாற்பிறங் குஞ்சடைப்<br>பிஞ்ஞகன்பிறப் பி–யென்று<br>முன்பினார்மூவர் தாந்தொழு<br>முக்கண்மூர்த்திதன் றாள்களுந்<br>கன்பினாரறை யணிநல்லூர்<br>அங்கையாற்றொழு வார்களே. | என்பு மாலை அணிந்தவர். கனலும் சூலத்தை ஏந்தியவர். விளங்கும் சிறந்த பிறைமதியை உச்சியில் சூடியவர். பின்னே தாழ்ந்து தொங்கும் சடையினர். தலைக்கோலம் உடையவர். பிறப்பற்றவர் என்று அறையணிநல்லூர் இறைவரைக் கைகூப்பித் தொழுபவரே வ–மைமிக்க மும்மூர்த்திகளும் தொழுது வணங்கும் முக்கண் மூர்த்தி தன் திருவடிகளில் அன்புடையவர் ஆவர். |
| **2305.** விரவுநீறுபொன் மார்பினில்<br>விளங்கப்பூசிய வேதியன்<br>உரவுநஞ்சமு தாகவுண்<br>டுறுதிபேணுவ தன்றியும்<br>அரவுநீள்சடைக் கண்ணியார்<br>அண்ணலாரறை யணிநல்லூர்<br>பரவுவார்பழி நீங்கிடப்<br>பறையுந்தாஞ்செய்த பாவமே. | அழகிய மார்பில் திருநீற்றை விரவப்பூசிய வேதியனும், வ–ய நஞ்சினை அமுதாக உண்டு உலகிற்கு அழியாமை தந்தவனும், பாம்பை நீண்ட சடைக்கு முடிக்கண்ணியாகக் கொண்டவனும் ஆகிய அண்ணல் உறையும் அறையணி நல்லூரைப் பரவுவார் பழி பாவங்கள் நீங்கப் பெறுவர். |
| **2306.** தீயினார்திகழ் மேனியாய்<br>தேவர்தாந்தொழு தேவன்நீ<br>ஆயினாய்கொன்றை யாயன<br>லங்கையாயறை யணிநல்லூர்<br>மேயினார்தம தொல்வினை<br>வீட்டினாய்வெய்ய காலனைப்<br>பாயினாயதிர் கழ–னாய்<br>பரமனேயடி பணிவனே. | தீப்போல விளங்கும் செம்மேனியனே! தேவர்களால் தொழப்பெறும் தேவனாக நீயே ஆனவனே! கொன்றை மலர் அணிந்தவனே! அனலைக்கையில் ஏந்தியவனே! அறையணி நல்லூரை அடைந்து வழிபடுவோரின் பழவினைகளைத் தீர்ப்பவனே! கொடிய காலனைக் காய்ந்தவனே! ஒ–க்கும் கழலணிந்தவனே! பரமனே உன் திருவடிகளைப் பணிகின்றேன். |
| **2307.** விரையினார்கொன்றை சூடியும்<br>வேகநாகமும் வீக்கிய<br>அரையினாரறை யணிநல்லூர்<br>அண்ணலாரழ காயதோர்<br>நரையினார்விடை யூர்தியார்<br>நக்கனார்நறும் போதுசேர்<br>உரையினாலுயர்ந் தார்களு<br>முரையினாலுயர்ந் தார்களே. | மணம் கமழும் கொன்றை மாலையைச் சூடியவர். சினம் மிக்க பாம்பினை அரையில் கட்டியவர். அறையணிநல்லூரில் விளங்கும் தலைமையாளர். அழகிய வெண்ணிறமான விடையை ஊர்தியாக உடையவர். திகம்பரர். அப்பெருமானை மலர் தூவி உரையினால் போற்றுபவர் புகழாளர் ஆவர். அர்ச்சனையில் உயர்வது புகழில் உயர்வதாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2308.** வீரமாகிய வேதியர்<br>வேகமாகளி யானையின்<br>ஈரமாகிய வுரிவைபோர்த்<br>தரிவைமேற்சென்ற வெம்மிறை<br>ஆரமாகிய பாம்பினார்<br>அண்ணலாரறை யணிநல்லூர்<br>வாரமாய்நினைப் பார்கள்தம்<br>வல்வினையவை மாயுமே. | ஞானமே வடிவான வேதியர். சினந்து வந்த பெரிய களிற்று யானையின் ஈரம் உடைய தோலைப் போர்த்து உமையம்மையார்பாற் சென்றவர். பாம்பினை ஆரமாகக் கொண்டவர். அறையணி நல்லூரில் விளங்கும் தலைமையாளர். அவரை அன்போடு நினைப்பவர்களின் வ–ய வினைகள் மாயும். |
| **2309.** தக்கனார்பெரு வேள்வியைத்<br>தகர்த்துகந்தவன் றாழ்சடை<br>முக்கணான்மறை பாடிய<br>முறைமையான்முனி வர்தொழ<br>அக்கினோடெழி லாமைபூண்<br>அண்ணலாரறை யணிநல்லூர்<br>நக்கனாரவர் சார்வலால்<br>நல்குசார்விலோம் நாங்களே. | தக்கனது பெருவேள்வியைத் தகர்த்துகந்தவர். தாழ்ந்து தொங்கும் சடைகளையும் மூன்று கண்களையும் உடையவர். முனிவர்கள் தொழ வேதங்களை முறையோடு அருளியவர். என்பு மாலைகளையும் அழகிய ஆமை ஓட்டினையும் அணிந்த தலைமையாளர். அறையணிநல்லூரில் விளங்கும் திகம்பரர். நாங்கள் அவரது சார்பன்றி நலம் செய்யும் வேறு சார்பிலோம். |
| **2310.** வெய்யநோயிலர் தீதிலர்<br>வெறியராய்ப்பிறர் பின்செலார்<br>செய்வதேயலங் காரமா<br>மிவையிவைதேறி யின்புறில்<br>ஐயமேற்றுணுந் தொழிலரா<br>மண்ணலாரறை யணிநல்லூர்ச்<br>சைவனாரவர் சார்வலால்<br>யாதுஞ்சார்விலோம் நாங்களே. | வெம்மையான நோய்கள் எவையும் இல்லாதவர். வெறிபிடித்தவர் போலப் பிறர் பின் செல்லாதவர். அவர் செய்வதே அலங்காரம் ஆகும். இவற்றை முறையே தெளிந்து இன்புற வேண்டின் ஐயமேற்றுண்ணும் தொழிலரும் தலைமை யாளரும் ஆகிய அறையணிநல்லூர்ச் சைவராகிய சிவபெருமானே நமக்குச் சார்வு ஆவார் : வேறு எதனையும் நாம் சாரோம் என்று எண்ணுக. |
| **2311.** வாக்கியஞ்சொல்– யாரொடும்<br>வகையலாவகை செய்யன்மின்<br>சாக்கியஞ்சம ணென்றிவை<br>சாரேலும்மர ணம்பொடி<br>ஆக்கியம்மழு வாட்படை<br>யண்ணலாரறை யணிநல்லூர்ப்<br>பாக்கியங்குறை யுடையீரேற்<br>பறையுமாஞ்செய்த பாவமே. | நீண்ட தொடர்களைப் பேசி யாரோடும் வகையல்லாதவற்றைச் செய்யாதீர். சாக்கியர் சமணர் நெறிகளைச் சாராதீர். திரிபுரங்களைப் பொடியாகச் செய்த மழுவாட்படை அண்ணலார் உறைகின்ற அறையணிநல்லூரை அடைந்து பாக்கியமாகிய தேவையை நிறைவு செய்து கொள்ள விரும்புவீராயின் அதனை அடைதலே அன்றிப் பாவங்களும் கழியப்பெறுவீர். |

| | |
|---|---|
| 2312. கழியுலாங்கடற் கானல்சூழ்<br>கழுமலம்அமர் தொல்பதிப்<br>பழியிலாமறை ஞானசம்<br>பந்தனல்லதோர் பண்பினார்<br>மொழியினாலறை யணிநல்லூர்<br>முக்கண்மூர்த்திதன் றாள்தொழக்<br>கெழுவினாரவர் தம்மொடுங்<br>கேடில்வாழ்பதி பெறுவரே. | உப்பங்கழிகள் உலாவும் கடற்சோலைகள் சூழ்ந்த தொல்பதியாகிய கழுமலத்தில் தோன்றிய குற்றமற்ற மறை வல்ல ஞானசம்பந்தன் அருளிய பதிகத்தை ஓதும் நற்பண்பினராய அறையணி நல்லூரை அடைந்து முக்கண் மூர்த்தியாகிய சிவபிரான் திருவடிகளைத் தொழுது போற்றப் பொருந்தியவர்கள் குற்றமற்றவர் வாழும் சிவலோகத்தை அடைவர். |

## 78. திருவிளநகர்

பண் : காந்தாரம் பதிக எண் : 78

| | |
|---|---|
| 2313. ஒளிரிளம்பிறை சென்னிமேல்<br>உடையர்கோவண வாடையர்<br>குளிரிளம்மழை தவழ்பொழிற்<br>கோலநீர்மல்கு காவிரி<br>நளிரிளம்புனல் வார்துறை<br>நங்கைகங்கையை நண்ணினார்<br>மிளிரிளம்பொறி யரவினார்<br>மேயதுவிள நகரதே. | விளங்குகின்ற இளம்பிறை சென்னிமேல் உடையவர். கோவண ஆடை உடுத்தவர். கங்கை நங்கையை விரும்பியவர். ஒளியும் புள்ளிகளும் பொருந்திய இளநாகம் அணிந்தவர். அவ்விறைவர் விரும்பி உறையும் தலம், தண்ணிய மழை பொழியத்தக்க மேகங்கள் தவழும் பொழில்களைக் கொண்டதும், அழகிய நீர் நிறைந்ததும் குளிர்ந்த புதிய புனலைக் கொண்டு நீண்ட துறையுடன் விளங்குவதுமான விளநகராகும். |
| 2314 அக்கரவ்வணி கலனென<br>அதனொடார்த்ததொ ராமைபூண்<br>டுக்கவர்சுடு நீறணிந்<br>தொளிமல்குபுனற் காவிரிப்<br>புக்கவர்துயர் கெடுகெனப்<br>பூசுவெண்பொடி மேவிய<br>மிக்கவர்வழி பாடுசெய்<br>விளநகரவர் மேயதே. | எலும்பையும் பாம்பையும் அணிந்து, அவ்வணி கலனோடு ஆமை ஓட்டையும் பூண்டு இறந்தவரை எரித்த சுடுகாட்டு நீற்றை அணிந்து விளங்கும் பெருமான் மேவிய தலம் ஒளி நிறைந்த நீரை உடைய காவிரியில் மூழ்கிய அடியவர் துயர் கெடுமாறு நீறு பூசியவராய் வழிபாடு செய்கின்ற விளநகராகும். |
| 2315. வாளிசேரடங் கார்மதி<br>தொலையநூறிய வம்பின்வேய்த்<br>தோளிபாகம் அமர்ந்தவர்<br>உயர்ந்ததொல்கட னஞ்சுடன்<br>காளமல்கிய கண்டத்தர்<br>கதிர்விரிசுடர் முடியினர்<br>மீளியேறுகந் தேறினார்<br>மேயதுவிள நகரதே. | அம்பினைச் சேர்ப்பித்துப் பகைவரின் முப்புரங்களை அழியுமாறு செய்தவரும், புதிய மூங்கில் போலும் தோள்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாக விரும்பி ஏற்றவரும், உயர்ந்த பழமையான கட—ன்கண் தோன்றிய நஞ்சினை உண்டதோடு அதன் கரிய நிறம் மல்கிய கண்டத்தை உடையவரும், ஒளிவிரிந்த கழல் போலும் சடையினரும், வ—ய விடையேற்றை உகந்து ஏறி வருபவரும் ஆன சிவபிரான் மேவியது விளநகர். |

| பாடல் | பொருள் |
|---|---|
| **2316.** கால்விளங்கெரி கழ–னார்<br>கையிலங்கிய வே–னார்<br>நூல்விளங்கிய மார்பினார்<br>நோயிலார்பிறப் பும்மிலார்<br>மால்விளங்கொளி மல்கிய<br>மாசிலாமணி மிடறினார்<br>மேல்விளங்குவெண் பிறையினார்<br>மேயதுவிள நகரதே. | கா–ல் விளங்கும் கழலணிந்தவர். கையில் விளங்கும் சூலத்தை உடையவர். பூணநூல் விளங்கும் மார்பினர். துன்புறும் நோயும் பிறத்தலும் இல்லாதவர். கருமை விளங்கும் ஒளி நிரம்பிய குற்றமற்ற நீலமணி போலும் கண்டத்தினர். வானவெளியில் விளங்கும் வெள்ளிய பிறையைச் சூடியவர். அவ்விறைவர் மேயது விளநகர். |
| **2317.** பன்னினார்மறை பாடினார்<br>பாயசீர்ப்பழங் காவிரித்<br>துன்னுதண்டுறை முன்னினார்<br>தூநெறிபெறு வாரெனச்<br>சென்னிதிங்களைப் பொங்கராக்<br>கங்கையோடுடன் சேர்த்தினார்<br>மின்னுபொன்புரி நூ–னார்<br>மேயதுவிள நகரதே.. | வேதங்களை அருளியவர். அவ்வேதங்களைப் பாடுபவர். முடியில் திங்கள், சினம்மிக்க பாம்பு, கங்கை ஆகியவற்றைச் சூடியவர். மின்னுகின்ற பொன்போலும் முப்புரிநூலை அணிந்தவர். அவ்விறைவர் அன்பர்கள் வணங்கித் தூநெறி பெறும் பொருட்டு எழுந்தருளியிருக்குமிடம் பரவிய புகழையுடைய காவிரியின் துறைகளை உடைய கரையில் அமைந்த விளநகராகும். |
| **2318.** தேவரும்மம ரர்களுந்<br>திசைகண்மேலுள தெய்வமும்<br>யாவரும்மறி யாததோ<br>ரமைதியாற்றழ லுருவினார்<br>மூவரும்மவ ரென்னவும்<br>முதல்வரும்மிவ ரென்னவும்<br>மேவரும்பொரு ளாயினார்<br>மேயதுவிள நகரதே, | தேவரும், அமரரும், திசைக்காவல் தெய்வங்களும் முதலான யாவராலும் அறிதற்கரிய இயல்பினர். தழல் போலும் உருவினர். திருமால், பிரமன், உருத்திரன் ஆகிய மூவரும் இவரே என்று கூறுமாறும் அவர்களின் தலைவராய விளங்குவார் இவரே என்னுமாறும் பொருந்த அரிய பொருளாய் விளங்குபவர். அவ்விறைவர் மேவிய இடம் விளநகராகும். |
| **2319.** சொற்றருமறை பாடினார்<br>சுடர்விடுஞ்சடை முடியினார்<br>கற்றருவடங் கையினார்<br>காவிரித்துறை காட்டினார்<br>மற்றருதிர டோளினார்<br>மாசில்வெண்பொடிப் பூசினார்<br>விற்றருமணி மிடறினார்<br>மேயதுவிள நகரதே. | எழுதி உணர்த்தாது சொல்லப்பட்டே வரும் வேதங்களை அருளியவர். ஒளிவிடும் சடைமுடியை உடையவர். செபமணி மாலையைக் கையில் கொண்டவர். மற்போர் செய்தற்கு ஏற்ற திரண்ட தோள்களை உடையவர். குற்றமற்ற வெண்மையான திருநீற்றுப் பொடி பூசியவர். ஒளிதரும் நீலமணி போலும் மிடறுடையவர். அவ்விறைவர் மேவியது காவிரித்துறையில் அமைந்த விளநகராகும். |

| | |
|---|---|
| **2320.** படர்தருஞ்சடை முடியினார்<br>பைங்கழலடி பரவுவார்<br>அடர்தரும்பிணி கெடுகென<br>அருளுவார்அர வரையினார்<br>விடர்தரும்மணி மிடறினார்<br>மின்னுபொன்புரி நூ–னார்<br>மிடறரும்படை மழுவினார்<br>மேயதுவிள நகரதே. | பரவிய சடைமுடியை உடையவர். தம் கழல் அடிகளைப் பரவும் அடியவர்களை வருத்தும் பிணிகள் கெடுவனவாக என அருள் செய்பவர். பாம்பினை இடையில் கட்டியவர். மலைப் பிளவில் இருந்து கிட்டும் நீலமணி போலும் மிடற்றை உடையவர். மின்னுகின்ற பொன் போன்ற முப்புரி நூலை அணிந்தவர். வ–ய படைக்கலனாக மழுவை ஏந்தியவர். அவ்விறைவர் மேவியது விளநகராகும். |
| **2321.** கையிலங்கிய வே–னார்<br>தோ–னார்கரி கா–னார்<br>பையிலங்கர வல்குலாள்<br>பாகமாகிய பரமனார்<br>மையிலங்கொளி மல்கிய<br>மாசிலாமணி மிடறினார்<br>மெய்யிலங்குவெண் ணீற்றினார்<br>மேயதுவிள நகரதே. | கையில் விளங்கும் சூலத்தை உடையவர். தோலாடை உடுத்தவர். முற்றழிப்புக் காலத்தில் தாம் ஒருவரே அழியாது நிற்பவர். பாம்பின் படம் போலும் அல்குலை உடைய உமையம்மையை இடப்பாகமாக உடைய பரமர். கரிய ஒளி நிறைந்த குற்றமற்ற நீலமணி போன்ற மிடற்றினை உடையவர். திருமேனியில் விளங்கும் திருவெண்ணீற்றை அணிந்தவர். அவ்விறைவர் மேவியிருப்பது விளநகர் ஆகும். |
| **2322.** உள்ளதன்றனைக் காண்பன்கீ<br>ழென்றமாமணி வண்ணனும்<br>உள்ளதன்றனைக் காண்பன்மே<br>லென்றமாமலர் அண்ணலும்<br>உள்ளதன்றனைக் கண்டிலார்<br>ஒளியார் தருஞ்சடை முடியின்மேல்<br>உள்ளதன்றனைக் கண்டிலா<br>வொளியார் விளநகர் மேயதே. | கீழ் உள்ள திருவடியை யான் காண்பேன் என்று சென்ற கரிய மணிவண்ணனாகிய திருமாலும், மேல் உள்ள திருமுடியை யான் காண்பேன் என்று சென்ற தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும் உள்பொருளாய் விளங்கும் சிவபிரானைக் கண்டிலர். ஒளி பொருந்திய சடைமுடியின் மேல் விளங்கும் பிறை முத–யவற்றை யாரும் காண இயலாத சோதிப் பிழம்பாய்த் தோன்றும் அப்பெருமானார் தம்மை அன்பர்கள் கண்டு வழிபட விளநகரில் எழுந்தருளியுள்ளார். |
| **2323.** மென்சிறைவண் டியாழ்முரல்<br>விளநகர்த்துறை மேவிய<br>நம்பிறைநுத லண்ணலைச்<br>சண்பைஞானசம் பந்தன்சீர்<br>இன்புறுதமி ழாற்சொன்ன<br>ஏத்துவார்வினை நீங்கிப்போய்த்<br>துன்புறுதுய ரம்மிலர்<br>தூநெறிபெறு வார்களே. | மெல்–ய சிறகுகளை உடைய வண்டுகள் யாழ் போல முரலும் விளநகரில் காவிரித்துறையில் எழுந்தருளிய பிறை சூடிய பெருமானை, சண்பைப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் சிறப்பும் இனிமையும் பொருந்திய தமிழால் புனைந்த இப்பாடல்களைக் கூறி ஏத்துகின்றவர் வினைகள் நீங்கித் துன்பமும் துயரமும் அடைதல் இலர். தூய வீட்டு நெறியைப் பெறுவார்கள். |

## 79. திருவாரூர்

பண் : காந்தாரம் | பதிக எண் : 79

2324. பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச்
சட்ட வுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ
வெள்கி னாயே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய
காள கண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண்
டஞ்ச னெஞ்சே.

பெருமூச்சு வாங்கும் நிலையை அடைந்து வறட்சி நிலை எய்தி, நா எழாதுலர்ந்து பிறர் பஞ்சில் தோய்த்துப்பால் முத–யவற்றைப் பிழிய உண்டு மரணமுறுங்காலத்தில் சிவபெருமானின் திருவடிகளைச் சிந்தியாது இறக்கும் அஞ்ஞானியரைப் போல நமக்கும் இந்நிலை வருமா என நெஞ்சே நீ நாணுகின்றாய். கவனத்தோடு பாய்ந்து செல்லும் விடை ஏற்றில் ஏறிவரும் நீலகண்டனாகிய சிவபிரானது ஆரூரைச் சென்று தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே!

2325. தந்தையார் போயினார் தாயரும் போயினார்
தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார்
கொண்டுபோவார்
எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா
லேழை நெஞ்சே
அந்தணா ரூர்தொழு துய்யலா மையல்கொண்
டஞ்ச னெஞ்சே.

ஏழை நெஞ்சே! தந்தை தாயர் இறந்தனர். தாமும் ஒருநாள் இறக்கத்தான் போகின்றார். இயம தூதர்கள் வேலைக் கையில் கொண்டு குத்தி உயிர் போக்கப் பார்த்துக் கொண்டுள்ளனர். இப்படி வாழ்க்கை நிலையாமையில் இருத்தலால் நெஞ்சே இறவாமல் வாழ்வதற்கு எந்த நாள் மனம் வைப்பாய்? ஆரூர் இறைவனைத் தொழுதால் நீ உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே!

2326. நிணங்குடர் தோனரம் பென்புசே ராக்கைதா
னிலாய தன்றால்
குணங்களார்க் கல்லது குற்றநீங் காதெனக்
குலுங்கி னாயே
வணங்குவார் வானவர் தானவர் வைகலு
மனங்கொ டேத்தும்
அணங்கனா ரூர்தொழு துய்யலா மையல்கொண்
டஞ்ச னெஞ்சே.

நிணம், குடல், தோல், நரம்பு, என்பு இவற்றால் இயன்ற ஆக்கை நிலையானது அன்று. நல்ல குணங்கள் உடையார்க்கன்றித் தீய குணங்கள் உடையார்க்கு உளதாகும் குற்றங்கள் நீங்கா. நீயோ நடுங்கி நின்றாய். தேவர் அசுரர் முதலானோர் அனைவரும் வந்து வணங்கி மனம் கொண்டு வழிபடும் ஆரூர் இறைவனைத் தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே!

2327. நீதியால் வாழ்கிலை நாள்செலா நின்றன
நித்த நோய்கள்
வாதியா வாதலா னாளுநா ளின்பமே
மருவி னாயே
சாதியார் கின்னரர் தருமனும் வருணர்க
ளேத்து முக்கண்
ஆதியா ரூர்தொழு துய்யலா மையல்கொண்
டஞ்ச னெஞ்சே.

நெஞ்சே! நீ நீதிவழியே வாழவில்லை. வாழ்நாள்கள் பல செல்லா நின்றன. நாள்தோறும் நோய்கள் பல துன்பம் செய்யாவாய் உள்ளன. ஆதலால் ஒவ்வொரு நாளும் நீ இன்பத்தையே கருதி நிற்கின்றாய். நற்குலத்தில் தோன்றிய கின்னரர், தருமன், வருணன் முத–யோர் வழிபட்டுப் போற்றும் ஆரூர் ஆதி முதல்வனாய முக்கண் மூர்த்தியைத் தொழுதால் நோய்கள் செய்ய உள்ள துயர்களி–ருந்து உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே!

| | |
|---|---|
| **2328.** பிறவியால் வருவன கேடுள வாதலாற்<br>பெரிய வின்பத்<br>துறவியார்க் கல்லது துன்பநீங் காதெனத்<br>தூங்கி னாயே<br>மறவனீ மார்க்கமே நண்ணினாய் தீர்த்தநீர்<br>மல்கு சென்னி<br>அறவனா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே. | நெஞ்சே! பிறவியால் கேடுகளே விளையும். பெரிய இன்பத்தை அடைய விரும்பும் துறவியர்க்கு அல்லது துன்பம் நீங்காது என மனம் சோர்கின்றாய். இறைவனை ஒருபோதும் மறவாதே! பெரியோர் கூறும் நல்வழிகளையே நீ பின்பற்றி வாழ்கின்றாய். புனிதமான கங்கை தங்கிய சடையினனாகிய அறவாழி அந்தணன் ஆரூர் சென்று தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |
| **2329.** செடிகொள்நோ யாக்கையைம் பாம்பின் வாய்த்<br>தேரைவாய்ச்சிறு பறவை<br>கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புற லாமென்று<br>கருதி னாயே<br>முடிகளால் வானவர் முன்பணிந் தன்பரா<br>யேத்து முக்கண்<br>அடிகளா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே. | முடைநாற்றம் கொண்ட உடலகத்தே ஐம்பாம்பின் வாயில் அகப்பட்ட தேரையின் வாயில் அகப்பட்ட வண்டு, மணம் கமழும் பூந்தேனைச் சுவைத்து இன்புறக் கருதுவது போல உலகியல் இன்பங்களை நுகரக் கருதுகின்றாய். தேவர்கள் முடிதாழ்த்திப் பணிந்து அன்பராய்ப் போற்றும் ஆரூர் முக்கண் அடிகளைத் தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |
| **2330.** ஏறுமால் யானையே சிவிகையந் தளகமீச்<br>சோப்பி வட்டின்<br>மாறிவா ழுடம்பினார் படுவதோர் நடலைக்கு<br>மயங்கி னாயே<br>மாறிலா வனமுலை மங்கையோர் பங்கினர்<br>மதியம் வைத்த<br>ஆறனா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே | நெஞ்சே! உலாவரும் பெரிய யானை, சிவிகை, கவசம், விருது முத–யவற்றை ஆடைகளை மாற்றுவது போல மாற்றப்படும் பல பிறவிகள் எடுக்கும் உடலை உடையார் தற்கா–கமாகப் பெறும் துன்பமயமான வாழ்வைக்கண்டு மயங்குகின்றாய். ஒப்பற்ற அழகிய தனபாரங்களைக் கொண்ட உமையம்மை பங்கினரும், பிறைமதியையும் கங்கையையும் சூடிய முடியினரும் ஆகிய ஆரூர் இறைவரைத் தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |
| **2331.** என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந்<br>திதுநம் மில்லம்<br>புன்புலா னாறுதோல் போர்த்துப்பொல் லாமையான்<br>முகடு கொண்டு<br>முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின்<br>மூழ்கி டாதே<br>அன்பனா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே. | நெஞ்சே! எலும்புகளாய கழிகளைக் கட்டி இறைச்சியாகிய மண் சுவர் எழுப்பி, அற்பமான புலால் மணம் கமழும் தோலைப் போர்த்துப் பொல்லாமையாகிய முகடு வேய்ந்தமைத்து நம் இல்லமாகிய உடல் பண்டு தொட்டு ஒன்பது வாயில்களை உடைய நம் உடலைப் பேணுதலாகிய முயற்சியிலேயே மூழ்கிவிடாமல் நம் மேல் அன்புடையனாய் ஆரூர் இறைவனை வணங்கினால் உய்தி பெறலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |

| | |
|---|---|
| **2332.** தந்தைதாய் தன்னுடன் றோன்றினார் புத்திரர்<br>தார மென்னும்<br>பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப்<br>பற்றி னாயே<br>வெந்தநீ றாடியா ராதியார் சோதியார்<br>வேத கீதர்<br>எந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே. | நெஞ்சே! தந்தை, தாய், உடன்பிறந்தார், புத்திரர், மனைவி ஆகிய பந்தங்களி–ருந்து விடுபடாதவர்க்கு உய்தி அடையும் உபாயம் இல்லை எனத் தெளிந்து, வெந்த வெண்பொடி பூசியவரும், ஆதியானவரும் சோதியாரும் வேதப்பாடல்களைப் பாடுபவரும், எந்தையும் ஆகிய ஆரூர் இறைவனைத் தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |
| **2333.** நெடியமால் பிரமனு நீண்டுமண் ணிடந்தின்ன<br>நேடிக் காணாப்<br>படியனார் பவளம்போல் உருவனார் பனிவளர்<br>மலையாள் பாக<br>வடிவனார் மதிபொதி சடையனார் மணியணி<br>கண்டத் தெண்டோள்<br>அடிகளா ரூர்தொழு துய்யலா மையல்கொண்<br>டஞ்ச னெஞ்சே. | நெஞ்சே! நெடிய உருவெடுத்த திருமால், பன்றி உருவெடுத்து மண்ணிடத்தும், பிரமன் அன்ன வடிவெடுத்துப் பறந்து சென்றும் இன்றுவரை தேடிக் காணாத நிலையில் தன்மையால் உயர்ந்தவரும், பவளம் போன்ற உருவினரும் இமவான் மகளாகிய பார்வதி தேவியைப் பாகமாகக் கொண்ட வடிவினரும், பிறையணிந்த தலைமுடியினரும் நீலமணி போன்ற அழகிய கண்டத்தினரும் எட்டுத் தோள்களைக் கொண்டுள்ளவருமாகிய ஆரூர் அடிகளைத் தொழுதால் உய்யலாம். மையல் கொண்டு அஞ்சாதே! |
| **2334.** பல்–தழ் மாதவி யல்–வண் டியாழ்செயுங்<br>காழி யூரன்<br>நல்லவே நல்லவே சொல்–ய ஞானசம்<br>பந்த னாரூர்<br>எல்–யம் போதெரி யாடுமெம் மீசனை<br>யேத்து பாடல்<br>சொல்லவே வல்லவர் தீதிலா ரோதநீர்<br>வைய கத்தே. | பலவாகிய இதழ்களையுடைய மாதவி மலரின், அக இதழ்களில் வண்டுகள் யாழ் போல ஒ–செய்து தேனுண்டு மகிழும் காழிப் பதியூரனும், நல்லனவற்றையே நாள்தோறும் சொல்–வருபவனும் ஆகிய ஞானசம்பந்தன் இராப்போதில் எரியில் நின்று ஆடும், ஆரூரில் எழுந்தருளிய எம் ஈசனை ஏத்திப் போற்றிய இப்பதிகப் பாடல்களைச் சொல்– வழிபட வல்லவர்கள் கடல் நீரால் சூழப்பட்ட இவ்வையத்தில் தீதிலர். |

## 80. திருக்கடவூர் மயானம்

பண் : காந்தாரம் (சிவபெருமான் பிரமனை நீறாக்கி அவரை மறுபடியும் உயிர்ப்பித்து அவருக்கு படைப்புத்தொழிலை கொடுத்த தலம். பிரம ஒடுக்கம் நிகழ்ந்ததால் மயானம் ) பதிக எண் : 80

| பாடல் | உரை |
|---|---|
| **2335.** வரியமறையார் பிறையார்<br>மலையோர்சிலையா வணக்கி<br>எரியமதில்கள் எய்தார்<br>எறியுமுசலம் உடையார்<br>கரியமிடறு முடையார்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பெரியவிடைமேல் வருவார்<br>அவரெம்பெருமா னடிகளே. | இசைப்பாடல்களாக அமைந்த வேதங்களை அருளியவர். பிறையணிந்தவர். மலையை ஒரு வில்லாக வளைத்து முப்புரங்களை எரியுமாறு கணை தொடுத்தவர். பகைவரை அழிப்பதற்கு எறியப்படும் உலக்கை ஆயுதத்தை உடையவர். கரிய மிடற்றை உடையவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். பெரிய விடைமீது ஏறி வருபவர். அவர் எம்பிரானாராகிய அடிகள் ஆவார். |
| **2336.** மங்கைமணந்த மார்பர்<br>மழுவாள்வலனொன் றேந்திக்<br>கங்கைசடையிற் கரந்தார்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>செங்கண்வெள்ளே றேறிச்<br>செல்வஞ்செய்யா வருவார்<br>அங்கையேறிய மறியார்<br>அவரெம்பெருமா னடிகளே. | உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட மார்பினர். மழுவாகிய வாள் ஒன்றை வலக்கரத்தில் ஏந்தியவர். கங்கையைச் சடையின் மீது மறைத்துள்ளவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். சிவந்த கண்களை உடைய வெள்ஏற்றில் ஏறிச் செல்வர் போல் அருட்காட்சி தருபவர். அழகிய கையில் மானை ஏந்தியவர். அவர் எம் பெருமானாராகிய அடிகள் ஆவார். |
| **2337.** ஈட—டப மிசைய<br>வேறிமழுவொன் றேந்திக்<br>காடதிடமா வுடையார்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பாட—சைகொள் கருவி<br>படுதம்பலவும் பயில்வார்<br>ஆடலரவ முடையார்<br>அவரெம்பெருமா னடிகளே. | ஒப்பற்ற இடபத்தின் மேல் ஏறி, மழு ஒன்றை ஏந்தி, சுடுகாட்டை இடமாகக் கொண்டவர். அவர், கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். பாடல் இசைக்கருவிகளோடு கூத்தாடுதல் பலவற்றையும் புரிபவர்; ஆடும் பாம்பை அணிகலனாக உடையவர். அவர் எம் பெருமான் அடிகள் ஆவார். |
| **2338.** இறைநின் றிலங்கு வளையா<br>ளிளையாளொருபா லுடையார்<br>மறைநின் றிலங்கு மொழியார்<br>மலையார்மனத்தின் மிசையார்<br>கறைநின் றிலங்கு பொழில்சூழ்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பிறைநின் றிலங்கு சடையார்<br>அவரெம்பெருமா னடிகளே. | முன் கையில் நின்று விளங்கும் வளையல்களை அணிந்த இளமைத் தன்மை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவர். வேத வசனங்கள் திகழும் மொழியினை உடையவர். தெளிந்த ஞானிகளின் மனத்தின்கண் வந்து தங்குபவர். கருமை விளங்கும் பொழில் சூழ்ந்த கடவூர் மயானத்தே எழுந்தருளியிருப்பவர். பிறை விளங்கும் சடைமுடியினர். அவர் எம் பெருமானாராகிய அடிகள் ஆவார். |

| | |
|---|---|
| 2339. வெள்ளையெருத்தின் மிசையார்<br>விரிதோடொருகா திலங்கத்<br>துள்ளுமிளமான் மறியார்<br>சுடர்பொற்சடைகள் துளங்கக்<br>கள்ளநகுவெண் டலையார்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பிள்ளைமதிய முடையார்<br>அவரெம்பெருமா னடிகளே. | வெண்மை நிறமுடைய எருதின் மேல் வருபவர். ஒளிவிரியும் தோடு ஒரு காதில் விளங்க, துள்ளும் இளமான் கன்றைக் கையில் ஏந்தியவர். ஒளிவிடும் பொன்னிறமான சடை விளங்க அதன்மிசைக் கள்ளமாக நகும் வெண்மையான தலைமாலையைச் சூடியவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். இளம் பிறையைச் சூடியவர். அவர் எம் பெருமானாராகிய அடிகள் ஆவர். |
| 2340. பொன்றாதுதிரு மணங்கொள்<br>புனைபூங்கொன்றை புனைந்தார்<br>ஒன்றாவெள்ளே றுயர்த்த<br>துடையாரதுவே யூர்வார்<br>கன்றாவினஞ்சூழ் புறவிற்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பின்றாழ்சடைய ரொருவர்<br>அவரெம்பெருமா னடிகளே. | பொன்னிறமான மகரந்தம் உதிரும் மணம் பொருந்திய அழகிய கொன்றைமாலையை அணிந்தவர். சிறப்புடைய வெள்ளேற்றினைக் கொடியாக உயர்த்தவர். அதனையே ஊர்தியாகவும் கொண்டவர். கன்றுகளோடு கூடிய பசுக்கள் மேயும் காடுகளை உடைய கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். பின்னால் தாழ்ந்து தொங்கும் சடைமுடியினை உடையவர். ஒப்பற்றவர். அவர் பெருமானாராகிய அடிகள் ஆவார். |
| 2341. பாசமான களைவார்<br>பரிவார்க்கமுத மனையார்<br>ஆசைதீரக் கொடுப்பா<br>ரலங்கல்விடைமேல் வருவார்<br>காசைமலர்போன் மிடற்றார்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>பேசவருவா ரொருவர்<br>அவரெம்பெருமா னடிகளே. | பாசங்களைப் போக்குபவர். அன்பர்க்கு அமுதம் போல இனிப்பவர். ஆசை அகலுமாறு அருள் கொடுப்பவர். மாலையணிந்த விடை மீது வருபவர். காயாமலர் போலும் மிடற்றினை உடையவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். அவரது புகழைப் பலரும் பேசி வணங்க வரும் ஒப்பற்றவர். அவர் எம் பெருமானாராகிய அடிகள் ஆவார். |
| 2342. செற்றவரக்க னலறத்<br>திகழ்சேவடிமெல் விரலாற்<br>கற்குன்றடர்த்த பெருமான்<br>கடவூர்மயான மமர்ந்தார்<br>மற்றொன்றிணையில் வ–ய<br>மாசில் வெள்ளி மலைபோல்<br>பெற்றொன்றேறி வருவார்<br>அவரெம்பெருமா னடிகளே. | சினம் மிக்க இராவணன் அலறுமாறு விளங்கும் தம் சேவடி விரலால் கயிலைமலையின் கீழ் அவனை அகப்படுத்தி அடர்த்தவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். உவமையாகச் சொல்லுவதற்கு வேறொரு பொருள் இல்லாத குற்றமற்ற வெள்ளிமலை போன்ற விடைமீது ஏறி வருபவர். அவர் எம் பெருமானாராகிய அடிகள் ஆவார். |

2343. வருமாகரியி னுரியார்
வளர்புன்சடையார் விடையார்
கருமானுரிதோ லுடையார்
கடவூர்மயான மமர்ந்தார்
திருமாலொடுநான் முகனுந்
தேர்ந்துங்காணமுன் னொண்ணாப்
பெருமானெனவும் வருவார்
அவரெம்பெருமா னடிகளே.

தம்மைக் கொல்ல வந்த பெரிய யானையின் தோலை உரித்துப் போர்த்தவர். நீண்டு வளர்ந்த மென்மையான சடையினை உடையவர். விடை ஊர்தியை உடையவர். கரிய மானின் தோலை உடையாக அணிந்தவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். திருமாலும் நான்முகனும் தேடியும் காண ஒண்ணாத பெருமான் எனவும் பேசுமாறு வருபவர். அவர் எம்பெருமானாராகிய அடிகள் ஆவார்.

2344. தூயவிடைமேல் வருவார்
துன்னாருடைய மதில்கள்
காயவேவச் செற்றார்
கடவூர்மயான மமர்ந்தார்
தீயகருமஞ் சொல்லுஞ்
சிறுபுன்றேர ரமணர்
பேய்பேயென்ன வருவார்
அவரெம்பெருமா னடிகளே.

தூய விடை மீது வருபவர். பகைவர் தம் முப்புரங்களும் காய்ந்து வேகுமாறு சினந்தவர். கடவூர் மயானத்தில் எழுந்தருளியிருப்பவர். தீய செயல்களைச் செய்யுமாறு சொல்லும் சிறுமையாளராகிய தேரர் அமணர்கள் தம்மைப் பேய் என்று பயந்து ஒதுங்க வருபவர். அவர் எம் பெருமான் அடிகள் ஆவார்.

2345. மரவம்பொழில்சூழ் கடவூர்
மன்னுமயான மமர்ந்த
அரவமசைத்த பெருமா
னகலமறிய லாகப்
பரவுமுறையே பயிலும்
பந்தன்செஞ்சொன் மாலை
இரவும்பகலும் பரவி
நினைவார்வினைக ளிலரே.

குங்கும மரங்கள் செறிந்த பொழில் சூழ்ந்த கடவூரை அடுத்த மயானத்தில் விளங்கும், அரவணிந்த பெருமானின் பெருமைகள் முழுவதையும் அறியலாகாதெனினும் இயன்றவரை கூறிப் பரவுமாறு ஞானசம்பந்தன் சொல்லும் இப்பதிகச் செஞ்சொல் மாலையை இரவும் பகலும் ஓதிப்பரவி நினைபவர் வினைகள் இலராவர்.

## 81. திருவேணுபுரம்

பண் : காந்தாரம் | பதிக எண் : 81

2346. பூதத்தின் படையினீர்
பூங்கொன்றைத் தாரினீர்
ஓதத்தி னொ–யொடு
மும்பர்வா னவர்புகுந்து
வேதத்தி னிசைபாடி
விரைமலர்கள் சொரிந்தேத்தும்
பாதத்தீர் வேணுபுரம்
பதியாகக் கொண்டீரே.

பூதப்படைகளை உடையவரே! கொன்றை மலர் மாலை அணிந்தவரே! கடல் ஒ–யோடு உம்பரும் வானவரும் வந்து வேதகீதம் பாடி மணம் பொருந்திய மலர்களைத் தூவி வழிபடும் திருவடிகளை உடையவரே! நீர் வேணுபுரத்தைப் பதியாகக் கொண்டுள்ளீர்.

| | |
|---|---|
| **2347.** சுடுகாடு மேவினீர்<br>துன்னம்பெய் கோவணந்தோல்<br>உடையாடை யதுகொண்டீ<br>ருமையாளை யொருபாகம்<br>அடையாள மதுகொண்டீ<br>ரங்கையினிற் பரசுவெனும்<br>படையாள்வீர் வேணுபுரம்<br>பதியாகக் கொண்டீரே. | சுடுகாட்டில் எழுந்தருளியிருப்பவரே, நைந்த கோவணத்துடன் பு–த்தோலை உடுத்தும் ஆடையாகக் கொண்டவரே, அருள் வழங்கும் அடையாளமாக உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரே, அழகிய கையில் மழுப்படையை உடையவரே. நீர் வேணுபுரத்தைப் பதியாகக் கொண்டுள்ளீர். |
| **2348.** கங்கைசேர் சடைமுடியீர்<br>காலனைமுன் செற்றுகந்தீர்<br>திங்களோ டிளவரவந்<br>திகழ்சென்னி வைத்துகந்தீர்<br>மங்கையோர் கூறுடையீர்<br>மறையோர்க ணிறைந்தேத்தப்<br>பங்கயஞ்சேர் வேணுபுரம்<br>பதியாகக் கொண்டீரே. | கங்கையணிந்த சடைமுடியை உடையவரே காலனைச் செற்றுப்பின் உகந்து அருள் செய்தவரே, திங்களையும் பாம்பையும் பகை நீக்கித் திகழும் முடிமீது வைத்து மகிழ்பவரே, உமையம்மையை ஒரு கூறாக உடையவரே, நீர் மறைவல்ல அந்தணர்கள் நிறைந்து ஏத்தத் தாமரை பூத்த தடாகங்களும் வயல்களும் சூழ்ந்த வேணுபுரத்தைப் பதியாகக் கொண்டுள்ளீர். |
| **2349.** நீர்கொண்ட சடைமுடிமே<br>னீண்மதியம் பாம்பினொடும்<br>ஏர்கொண்ட கொன்றையினோ<br>டெழின்மத்த மிலங்கவே<br>சீர்கொண்ட மாளிகைமேற்<br>சேயிழையார் வாழ்த்துரைப்பக்<br>கார்கொண்ட வேணுபுரம்<br>பதியாகக் கலந்தீரே. | கங்கையணிந்த சடைமுடிமேல் இருமுனையாக நீண்டபிறை, பாம்பு, அழகிய கொன்றை மலர், எழிலுடைய ஊமத்தை மலர் ஆகியன இலங்க, நீர் அணிகலன் புனைந்த மகளிர் மாளிகைகளின் மேல் ஏறி வாழ்த்த மேகம் தவழும் மூங்கிலைத் தலமரமாகக் கொண்ட வேணுபுரத்தைப் பதியாகக் கொண்டு எழுந்தருளியுள்ளீர். |
| **2350.** ஆலைசேர் தண்கழனி<br>யழகாக நறவுண்டு<br>சோலைசேர் வண்டினங்க<br>ளிசைபாடத் தூமொழியார்<br>காலையே புகுந்திறைஞ்சிக்<br>கைதொழமெய் மாதினொடும்<br>பாலையாழ் வேணுபுரம்<br>பதியாகக் கொண்டீரே. | கரும்பாலைகளைக் கொண்ட தண்ணிய கழனிகளை உடையதும், சோலைகளில் வண்டுகள் தேனுண்டு இசை பாடி மகிழ்விப்பதும், காலை நேரங்களில் இனிய மொழிகள் பேசுமகளிர் ஆலயம் வந்து கைகூப்பித் தொழ, பாலையாழ் ஒ–க்கும் சிறப்பினதுமாகிய வேணுபுரத்தை நீர் உமையம்மையோடு கூடிய திருமேனியராய் எழுந்தருளும் பதியாகக் கொண்டுள்ளீர். |

| | |
|---|---|
| **2351.** மணிமல்கு மால்வரைமேன்<br>மாதினொடு மகிழ்ந்திருந்தீர்<br>துணிமல்கு கோவணத்தீர்<br>சுடுகாட்டி லாட்டுகந்தீர்<br>பணிமல்கு மறையோர்கள்<br>பரிந்திறைஞ்ச வேணுபுரத்<br>தணிமல்கு கோயிலே<br>கோயிலாக வமர்ந்தீரே. | மணிகள் பதித்த பெரிய திருத்தோணி மலை மீது உமையம்மையாரோடு மகிழ்ந்து உறைபவரே, கிழித்த கோவண ஆடையை உடுத்தவரே, சுடு காட்டில் ஆடுவதை மகிழ்வாகக் கொள்பவரே, நீர் தொண்டில் விருப்புடைய அந்தணர்கள் அன்புடன் வணங்க வேணுபுரத்தில் விளங்கும் தன்மை மிக்க கோயிலே நுமக்குரிய கோயில் எனக் கொண்டு அமர்ந்துள்ளீர். |
| **2352.** நீலஞ்சேர் மிடற்றினீர்<br>நீண்டசெஞ் சடையினீர்<br>கோலஞ்சேர் விடையினீர்<br>கொடுங்காலன் றனைச்செற்றீர்<br>ஆலஞ்சேர் கழனி<br>யழகார்வேணு புரமமருங்<br>கோலஞ்சேர் கோயிலே<br>கோயிலாக் கொண்டீரே. | நீல நிறம் சேர்ந்த கண்டத்தை உடையவரே, நீண்டு சிவந்துள்ள சடைகளைக் கொண்டவரே, அழகிய விடையூர்தியை உடையவரே, கொடிய காலனை அழித்தவரே, நீர், தண்ணீர் நிரம்பிய கழனிகளை உடைய அழகிய வேணுபுரத்தில் உள்ள வேலைப்பாடுகளால் விளங்கித் தோன்றும் கோயிலையே நுமக்குரிய கோயில் எனக் கொண்டு அமர்ந்துள்ளீர். |
| **2353.** இரைமண்டிச் சங்கேறுங்<br>கடல்சூழ்தென் னிலங்கையர்கோன்<br>விரைமண்டு முடிநெரிய<br>விரல்வைத்தீர் வரைதன்னிற்<br>கரைமண்டிப் பேரோதங்<br>கலந்தெற்றுங் கடற்கவினார்<br>விரைமண்டு வேணுபுர<br>மேயமர்ந்து மிக்கீரே. | சங்குகள் இரைகளை மிகுதியாக உண்டு கரைகளில் ஏறி இளைப்பாறும், கடலால் சூழப்பட்ட தென்திசையிலுள்ள இலங்கையர் மன்னனாகிய இராவணனின் மணம் மிக்க முடிகள் பத்தும் நெரியுமாறு கயிலைமலையின் கீழ் அகப்படுத்திக் கால் விரலை ஊன்றி அடர்த்தவரே, நீர் ஓதம் பெருகி கரையை அலைக்கும் கடலை அடுத்துள்ள அழகிய மணம் மிக்க வேணுபுரத்தையே நுமக்குரிய பதியாகக் கொண்டு அமர்ந்து பெருமையால் சிறந்து விளங்குகின்றீர். |
| **2354.** தீயோம்பு மறைவாணர்க்<br>காதியாந் திசைமுகன்மால்<br>போயோங்கி யிழிந்தாரும்<br>போற்றரிய திருவடியீர்<br>பாயோங்கு மரக்கலங்கள்<br>படுதிரையான் மொத்துண்டு<br>சேயோங்கு வேணுபுரஞ்<br>செழும்பதியாத் திகழ்ந்தீரே. | முத்தீயோம்பும் அந்தணர்கட்கு முதல்வனாகிய பிரமன், திருமால் ஆகியோர் வானில்பறந்தும், நிலத்தை அகழ்ந்தும் காணுதற்கு அரிய திருமுடி திருவடிகளை உடையவரே! நீர், அலைகளால் மோதப் பெறும் பாய்மரக்கலங்களைக் கொண்ட கடலை அடுத்துள்ளதும் நீண்டு வளர்ந்த மூங்கிலைத் தலமரமாகக் கொண்டுள்ளதுமாகிய வேணுபுரத்தையே நுமக்குரிய வளமையான பதியாகக் கொண்டு விளங்குகின்றீர். |

| | |
|---|---|
| **2355.** நிலையார்ந்த வுண்டியினர்<br>நெடுங்குண்டர் சாக்கியர்கள்<br>புலையானா ரறவுரையைப்<br>போற்றாதுன் பொன்னடியே<br>நிலையாகப் பேணீநீ<br>சரணென்றார் தமையென்றும்<br>விலையாக வாட்கொண்டு<br>வேணுபுரம் விரும்பினையே. | பெருமானே! நீர், நின்றுண்ணும் இயல்பினராய் இழிந்த சமணர்கள் சாக்கியர்கள் கூறும் அறிவுரைகளைப் பொருட்படுத்தாது உம் பொன்னடிகளை விரும்பி நீயே சரண் என்று அடைந்தவர்களை எப்பொழுதும் நும்மைத் தந்து அவர்களைக் கொள்ளும் விலையீட்டில் ஆட்கொள்ள வேணுபுரத்தை நுமக்குரிய தலமாக விரும்பியுள்ளீர். |

## 82. திருத்தேவூர்

பண் : காந்தாரம் — பதிக எண் : 82

| | |
|---|---|
| **2356.** பண்ணி லாவிய மொழியுமை<br>பங்கனெம் பெருமான்<br>விண்ணில் வானவர் கோன்விம<br>லன்விடை யூர்தி<br>தெண்ணி லாமதி தவழ்தரு<br>மாளிகைத் தேவூர்<br>அண்ணல் சேவடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | இனிய மொழியினளாகிய உமையம்மை பங்கனும், எம் தலைவனும், விண்ணுலகில் வாழும் வானவர் தலைவனும், குற்றமற்றவனும், விடையூர்தியும் ஆகிய தெளிந்த நிலவொளியைத் தரும் மதி தவழும் மாளிகைகளைக் கொண்ட தேவூரில் விளங்கும் அண்ணலின் சேவடிகளை நாம் அடைந்துள்ளோம். ஆதலால் நாம் அல்லல்கள் இலராயினோம். |

அல்லலின்றி வாழலாம் என்று 11 பாடல்களிலும் உறைப்பாகத் திருஞானசம்பந்தர் அருளியுள்ளார்.

| | |
|---|---|
| **2357.** ஓதி மண்டலத் தோர்முழு<br>துய்யவெற் பேறு<br>சோதி வானவன் றுதிசெய<br>மகிழ்ந்தவன் றூநீர்த்<br>தீதில் பங்கயந் தெரிவையர்<br>முகமலர் தேவூர்<br>ஆதி சேவடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | நிலவுலகில் வாழ்வோர் ஓதிஉய்ய, உதயகிரியில் ஏறிவரும் கதிரவனால் வழிபடப்பட்ட வானவர் தலைவனாய் விளங்குவோனும், தன்னைத் துதிப்பாரைக் கண்டு மகிழ்ந்து உடனே அருள் புரிபவனும் ஆகிய குற்றமற்ற தாமரை மலர்கள் மகளிர்முகம் போல மலரும் சிறப்பினதாகிய தேவூரில் விளங்கும் முழுமுதற் கடவுளின் திருவடிகளை நாம் அடைந்துள்ளோம். ஆதலால் நாம் அல்லல்கள் சிறிதும் இலராயினோம். |
| **2358.** மறைக ளான்மிக வழிபடு<br>மாணியைக் கொல்வான்<br>கறுவு கொண்டவக் காலனைக்<br>காய்ந்தவெங் கடவுள்<br>செறுவில் வாளைகள் சேலவை<br>பொருவயற் றேவூர்<br>அறவன் சேவடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | வேதவிதிப்படி மிக்க வழிபாடுகளை இயற்றிய மார்க்கண்டேயரின் உயிரைக் கவர்தற்குச் சினந்து வந்த காலனைக் காய்ந்த கடவுளும், சேற்றில் வாழும் வாளைமீன்களும் சேல்களும் சண்டையிடுகின்ற வயல்களை உடைய தேவூரில் விளங்கும் அறவனும் ஆகிய சிவபிரான் திருவடிகளை நாம் அடைந்துள்ளோம். ஆதலால் நாம் அல்லல்கள் சிறிதும் இலராயினோம். |

| | |
|---|---|
| **2359.** முத்தன் சில்ப–க் கூர்தொறு<br>முறைமுறை திரியும்<br>பித்தன் செஞ்சடைப் பிஞ்ஞகன்<br>றன்னடி யார்கள்<br>சித்தன் மாளிகை செழுமதி<br>தவழ்பொழிற் றேவூர்<br>அத்தன் சேவடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | பாசங்களின் இயல்பாகவே விடுபட்டவனும், சிலவாக இடும் உணவுக்கு ஊர்கள் தோறும் முறையாகப் ப–யேற்கும் பித்தனும், சிவந்த சடையைக் கொண்டுள்ள பிஞ்ஞகனும், தம் அடியவர்களின் சித்தத்தில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய மாளிகைகளையும், மதி தவழும் பொழில்களையும் உடைய தேவூர்ப் பெருமான் திருவடிகளை நாம் அடைந்துள்ளோம். ஆதலால் அல்லல்கள் சிறிதும் இலரானோம். |
| **2360.** பாடு வாரிசை பல்பொருட்<br>பயனுகந் தன்பால்<br>கூடு வார்துணைக் கொண்டதம்<br>பற்றறப் பற்றித்<br>தேடு வார்பொரு ளானவன்<br>செறிபொழிற் றேவூர்<br>ஆடு வானடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | இசைபாடுபவர்க்கும், பல்பொருள் பயனாக அவன் இருத்தலை அறிந்துணர்ந்து அன்போடு கூடுவார்க்கும், உலகில் துணையாகக் கொண்டுள்ளவர்கள் மேல் செலுத்தும் பற்றுக்களை விட்டு அவனையே பற்றித் தேடுவார்க்கும் பொருளாயிருப்பவனும், செறிந்த பொழில்களை உடைய தேவூரில் நடனம் புரிபவனுமாகிய சிவபிரான் திருவடிகளை அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் இலரானோம். |
| **2361.** பொங்கு பூண்முலைப் புரிகுழல்<br>வரிவளைப் பொருப்பின்<br>மங்கை பங்கினன் கங்கையை<br>வளர்சடை வைத்தான்<br>திங்கள் சூடிய தீநிறக்<br>கடவுடென் றேவூர்<br>அங்க ணன்றனை யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | கிளர்ந்து எழுந்த அணிகலன் பூண்டுள்ள தனங்களையும், நெறிந்த கூந்தலையும், வரிவளையல்களையும் கொண்டுள்ள மலைமங்கை பங்கினனும், கங்கையை வளர்ந்த சடைமீது வைத்தவனும், திங்கள் சூடியவனும், தீப்போன்ற செந்நிறமுடைய கடவுளும் ஆகிய, அழகிய தேவூரில் எழுந்தருளிய அழகிய கருணையாளனை அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் சிறிதும் இலரானோம். |
| **2362.** வன்பு யத்தவத் தானவர்<br>புரங்களை யெரியத்<br>தன்பு யத்துறத் தடவரை<br>வளைத்தவன் றக்க<br>தென்ற மிழ்க்கலை தெரிந்தவர்<br>பொருந்திய தேவூர்<br>அன்பன் சேவடி யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | வ–ய தோள்களை உடைய அவுணர் தம் புரங்கள் எரியுமாறு தன் தோள்களால் பெரிய மேருமலையை வில்லாகப் பொருந்த வளைத்தவனும், தென்தமிழ்க் கலைகளை நன்குணர்ந்தவர் வாழும் தேவூரில் விளங்கும் அன்பனுமாகிய சிவபிரானின் சேவடிகளை அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் சிறிதும் இலரானோம். |

| | |
|---|---|
| **2363.** தருவு யர்ந்தவெற் பெடுத்தவத்<br>தசமுக னெரிந்து<br>வெருவ வூன்றிய திருவிர<br>னெகிழ்த்துவாள் பணித்தான்<br>தெருவு தோறுநற் றென்றல்வந்<br>துலவிய தேவூர்<br>அரவு சூடியை யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | சிறப்புடைய மரங்கள் உயர்ந்து வளர்ந்த கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த பத்துத் தலைகளை உடைய இராவணன் நெரிந்து வெருவுமாறு ஊன்றிய கால்விரலை, அவன் பாடல் கேட்டு நெகிழச் செய்து, அவனுக்கு வாள் முத–யவற்றை வழங்கியவனும், தெருக்கள் தோறும் நல்ல தென்றல் வந்துலவும், தேவூரில் பாம்பணிந்தவனாய் விளங்குவோனுமாகிய சிவபிரானைச் சரணாக அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் இலரானோம். |
| **2364.** முந்திக் கண்ணனு நான்முக<br>னும்மவர் காணா<br>எந்தை திண்டிற –ருங்களி<br>றுரித்தவெம் பெருமான்<br>செந்தி னத்திசை யறுபத<br>முரறிருத் தேவூர்<br>அந்தி வண்ணனை யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | திருமால் பிரமர்கள் அடிமுடி காண்போம் என முற்பட்டுத் தேடிக் காணாது தொழுத எந்தையும், திண்ணிய வ–மை பொருந்திய பெரிய யானையை உரித்த எம்பெருமானும், செந்து என்னும் இசைவகையை இசைத்து வண்டுகள் முரலும் தேவூரில் விளங்கும் அந்திவண்ணனும் ஆகிய சிவபிரானைச் சரணாக அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் இலரானோம். |
| **2365.** பாறு புத்தருந் தவமணி<br>சமணரும் பலநாள்<br>கூறி வைத்ததோர் குறியினைப்<br>பிழையெனக் கொண்டு<br>தேறி மிக்கநஞ் செஞ்சடைக்<br>கடவுடென் றேவூர்<br>ஆறு சூடியை யடைந்தன<br>மல்லலொன் றிலமே. | ஓடித் திரியும் புத்தர்களும், தவத்தை மேற்கொண்ட சமணரும் பல நாள்களாகக் கூறிவரும் இலக்குப் பிழையானது எனத் தெளிவுற்று, எங்கும் மிகுந்து தோன்றும் நம் செஞ்சடைக் கடவுள் எழுந்தருளிய தேவூரை அடைந்து கங்கையை அணிந்துள்ள சிவபிரானைச் சரணாக அடைந்தோம். ஆதலால் அல்லல்கள் சிறிதும் இலரானோம். |
| **2366.** அல்ல –ன்றிவிண் ணாள்வர்கள்<br>காழியர்க் கதிபன்<br>நல்ல செந்தமிழ் வல்லவன்<br>ஞானசம் பந்தன்<br>எல்லை யில்புகழ் மல்கிய<br>வெழில்வளர் தேவூர்த்<br>தொல்லை நம்பனைச் சொல்–ய<br>பத்தும்வல் லாரே. | காழிவாழ் மக்களுக்குத் தலைவனும், நல்ல செந்தமிழ் வல்லவனும் ஆகிய ஞானசம்பந்தன் எல்லையற்ற புகழ் பொருந்திய அழகிய தேவூரில் விளங்கும் பழமையான இறைவனைப் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர் துன்பங்கள் இன்றி விண்ணுலகை ஆள்வர். |

## பியந்தைக் காந்தாரம்

இது மருதப் பெரும்பண்ணின் நான்காவது திறமாகிய செய்திறத்தின் அகநிலைப் பண், 81 என்னும் எண்ணுக்குரியது. இதற்குரிய சுவை மருட்கை சமநிலை என்று சொல்லப்படும். இது காலைப்பண்களில் ஒன்று. இதற்கு இராகம், ஹெஜ்ஜஜ்ஜி என்றும் இச்சிச்சி என்றும் சொல்லப்படும். ஆனால் நவரோசில் பாடப்படுகிறது. இதில் பதிகம் 2:83 - 96, அப்பர் ஒரே பதிகம், 8 சுந்தரர் ஒரே பதிகம், 76 ஆக 16 பதிகங்கள், சம்பந்தருடைய கோளறு திருப்பதிகம் - வேயுறு தோளிபங்கன், எந்தை யீசன் எம்பெருமான், அப்பர் சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில், ஆகியவை பண் சிறப்புடைய பதிகங்கள். பியந்தை என்று சொல்லப்படுவதும் பியந்தைக் காந்தாரமும் ஒன்றென்றே கருதப்படுகிறது.

**இப்பண்ணின் (இலக்கணம்)**

கோவை கொள்ள கோத்தும் யாத்தும்
தரவு கொண்டும் தண்பூ நறும்பூ
ஏய்ந்ததாக வாய்ந்த இயற்கை
தருநற் காவும் தாரும் தோன்றலாற்
பூயேய்ந் துள்ள பியைந்தை என்றிக்
காந்தா ரப்பெயர் காட்டப் பெற்றது.

**பொருள்**

சீர்கள் கோவை கொள்ளுமாறு அவற்றைக் கோத்தும், யாப்பாகிய சீரால் யாப்புறுத்தியும், ஆசிரியத் தரவு கொள்ளுமாறு அமைத்தும், தண்பூச்சீரும், நறும்பூச்சீரும் இயையும் வண்ணம் அமைந்த இயல்பில் காவும், தாரும் தோன்றும் படி பூயேய்ந்துள்ள பியந்தை என்று காந்தாரப் பண்ணானது காட்டப் பெற்றது.

## 83. திருக்கொச்சைவயம்

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 83

2367. நீலநன் மாமிடற்ற னிறைவன் சினத்தன்
நெடுமா வுரித்த நிகரில்
சேலன கண்ணிவண்ண மொருகூறுருக்கொள்
திகழ்தேவன் மேவு பதிதான்
வேலன கண்ணிமார்கள் விளையாடு மோசை
விழவோசை வேத வொ-யின்
சாலநல் வேலையோசை தருமாட வீதி
கொடியாடு கொச்சை வயமே.

நீல நிறம் பொருந்திய கண்டத்தினனும், வ-மை நிறைந்த சினம் மிக்க பெரிய யானையை உரித்தவனும், சேல்மீன் போன்ற கண்ணினளாகிய ஒப்பற்ற உமையம்மையை ஒரு கூற்றாகக் கொண்ட வடிவினனும் ஆகிய சிவபிரான் மேவிய பதி, வேல்போன்ற கண்களைக் கொண்ட அழகிய பெண்கள் விளையாடும் ஒ-யும், விழாக்களின் ஆரவாரமும், வேத ஒ-யும், கடல் ஓசையும் நிறைந்த கொடி ஆடும் மாட வீதிகளைக் கொண்டுள்ள கொச்சைவயமாகும்.

| | |
|---|---|
| **2368.** விடையுடை யப்பனொப்பி னடமாட வல்ல<br>விகிர்தத் துருக்கொள் விமலன்<br>சடையிடை வெள்ளெருக்க மலர்கங்கை திங்கள்<br>தகவைத்த சோதி பதிதான்<br>மடையிடை யன்னமெங்கும் நிறையப் பரந்து<br>கமலத்து வைகும் வயல்சூழ்<br>கொடையுடை வண்கையாளர் மறையோர்க ளென்றும்<br>வளர்கின்ற கொச்சை வயமே. | விடையை ஊர்தியாகக் கொண்ட தந்தையும், ஒப்பற்ற நடனங்கள் புரிபவனும், பல்வேறு வடிவங்களைக் கொண்ட விமலனும், சடையில் வெள் எருக்கமலர் கங்கை திங்கள் ஆகியவற்றைப் பொருந்தச் சூடிய ஒளிவடிவினும் ஆகிய சிவபிரானது பதி, மடைகளில் அன்னப் பறவைகள் நிறைந்து பரவித் தாமரை மலர்கள் மேல் தங்கும் வயல்கள் சூழ்ந்ததும், கொடை வள்ளல்களாய் மறையவர்கள் வாழ்வதுமாகிய கொச்சை வயமாகும். |
| **2369.** படவர வாடுமுன்கை யுடையா னிடும்பை<br>களைவிக்கும் எங்கள் பரமன்<br>இடமுடை வெண்தலைக்கை ப–கொள்ளும்இன்பன்<br>இடமாய வேர்கொள் பதிதான்<br>நடமிட மஞ்ஞைவண்டு மதுவுண்டு பாடு<br>நளிர்சோலை கோலு கனகக்<br>குடமிடு கூடமேறி வளர்பூவை நல்ல<br>மறையோது கொச்சை வயமே. | படம் பொருந்திய பாம்பு ஆடும் முன்கையை உடையவனும், துன்பங்களைப் போக்கும் எம் தலைவனும், அகன்ற வெள்ளிய தலையோட்டைக் கையில் ஏந்திப் ப–கொள்ளும் இன்பனும் ஆகிய சிவபிரானுக்கு இடமாக விளங்கும் அழகிய தலம், மயில்கள் நடனமாட வண்டுகள் மது உண்டு பாடும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்ததும், பொற்கலசம் பொருந்திய கூடங்களில் நாகணவாய்ப் பறவைகள் வேதங்களை ஓதுவதுமாகிய கொச்சை வயமாகும். |
| **2370.** எண்டிசை பாலரெங்கு மிக–ப் புகுந்து<br>முயல்வுற்ற சிந்தை முடுகிப்<br>பண்டொளி தீபமாலை யிடுதூப மோடு<br>பணிவுற்ற பாதர் பதிதான்<br>மண்டிய வண்டன்மிண்டி வருநீர பொன்னி<br>வயல்பாய வாளை குழுமிக்<br>குண்டகழ் பாயுமோசை படைநீட தென்ன<br>வளர்கின்ற கொச்சை வயமே. | எண்டிசைப் பாலகர்களாகிய இந்திரன் முதலானோர் எங்கும் சூழ்ந்து புகழ்ந்து மன எழுச்சியோடு விளக்குகளை வரிசையாக ஏற்றித் தூபம் இட்டு வழிபடும் திருவடிகளை உடைய சிவபிரானது பதி, செறிந்த வண்டல் மணலோடு வரும் பொன்னி நதியின் நீர் வயல்களில் பாய வாளை மீன்கள் கூடி ஆழமான இடங்களில் பாய்ந்து விளையாடும் ஓசை, படைகள் வரும் ஓசைபோல வளர்கின்ற கொச்சைவயமாகும். |

| | |
|---|---|
| **2371.** பனிவளர் மாமலைக்கு மருகன் குபேர<br>னொடுதோழ மைக்கொள் பகவன்<br>இனியன வல்லவற்றை யினிதாக நல்கும்<br>இறைவன் னிடங்கொள் பதிதான்<br>முனிவர்கள் தொக்குமிக்க மறையோர்க ளோமம்<br>வளர்தூம மோடி யணவிக்<br>குனிமதி மூடிநீடு முயர்வான் மறைத்து<br>நிறைகின்ற கொச்சை வயமே. | பனிபடர்ந்த மலைக்கு மன்னனாகிய இமவானின் மருகனும், குபேரனோடு தோழமை கொண்ட பகவனும், இனியன அல்லாதவற்றையும் இனிதாக ஏற்று அருள் நல்குபவனுமாகிய இறைவன் இடமாகக் கொண்டருளும் தலம், முனிவர் குழாங்களோடு அந்தணர்கள் வளர்க்கும் வேள்விப்புகை சென்று பரவி வளைந்த பிறையையும் வானையும் மறைத்து நிறையும் கொச்சை வயமாகும். |
| **2372.** பு–யதள் கோவணங்க ளுடையாடை யாக<br>வுடையா னினைக்கு மளவில்<br>ந–தரு முப்புரங்க ளெரிசெய்த நாத<br>னலமா விருந்த நகர்தான்<br>க–கெட வந்தணாளர் கலைமேவு சிந்தை<br>யுடையார் நிறைந்து வளரப்<br>பொ–தரு மண்டபங்க ளுயர்மாட நீடு<br>வரைமேவு கொச்சை வயமே. | பு–த்தோலையும் கோவணத்தையும், தான் பெற்றுடைய ஆடையாகக் கொண்டவனும், நினைக்கும் ஒரு நொடிப் பொழுதில் உலகை ந–வு செய்து வந்த முப்புரங்களை எரி செய்தழித்த நாதனும் ஆகிய சிவபிரான் மகிழ்வோடு விளங்கும் தலம். க–கெட வேள்வி செய்யும் அந்தணர்களும் கலையுள்ளம் கொண்டவர்களும் நிறைந்து வாழ்வதும் அழகிய மண்டபங்களும் உயர்ந்த மாடங்களும் நீண்ட மலைகள் போலத் தோன்றுவதுமாய கொச்சை வயமாகும். |
| **2373.** மழைமுகில் போலுமேனி யடல்வா ளரக்கன்<br>முடியோடு தோள்க ணெரியப்<br>பிழைகெட மாமலர்ப்பொன் னடிவைத்த பேயொ<br>டுடனாடி மேய பதிதான்<br>இழைவள ரல்குன்மாத ரிசைபாடி யாட<br>விடுமூச லன்ன கமுகின்<br>குழைதரு கண்ணிவிண்ணில் வருவார் கடங்க<br>ளடிதேடு கொச்சை வயமே. | மழைமுகில் போன்ற கரிய மேனியையும், வ–ய வாளையும் உடைய அரக்கனாகிய இராவணன் தன் தலைகளோடு தோள்களும் நெரியவும், அவனது பிழை நீங்கவும் சிறந்த மலர் போன்ற திருவடியைச் சிறிதே ஊன்றியவனும், பேய்களோடு உடனாடி மகிழ்பவனும் ஆய சிவபிரான் எழுந்தருளியபதி, மேகலையணிந்த அல்குலை உடைய மகளிர் இசைபாடி ஆட, வானளாவ உயர்ந்த கமுக மரத்தழைகள் விண்ணில் செல்வார் அடிகளை வருடுமாறு உயர்ந்துள்ள கொச்சைவயமாகும். |
| **2374.** வண்டமர் பங்கயத்து வளர்வானும் வைய<br>முழுதுண்ட மாலு மிக–க்<br>கண்டிட வொண்ணுமென்று கிளறிப் பறந்து<br>மறியாத சோதி பதிதான்<br>நண்டுண நாரைசெந்நெல் நடுவே யிருந்து<br>விரைதேர போது மதுவிற்<br>புண்டரி கங்களோடு குமுதம் மலர்ந்து<br>வயன்மேவு கொச்சை வயமே. | வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர்மேல் எழுந்தருளிய பிரமனும், உலகம் முழுவதையும் உண்ட திருமாலும் தம்முள் மாறுபட்டு அடி முடிகளைக் காண்போம் என்று திருமால் பன்றியாய் நிலத்தைக் கிளறியும் பிரமன் அன்னமாய்ப் பறந்து சென்றும், அறிய முடியாதவாறு சோதிவடிவாய் நின்ற சிவபிரானது பதி, நண்டு உண்ணவும் நாரைகள் செந்நெல் நடுவே இருந்து இரைதேட, நிரம்பிய தேனுடன் தாமரை மலரோடு குவளை மலர்கள் வய–டையே மலரும் கொச்சை வயமாகும். |

| | |
|---|---|
| **2375.** கையினி லுண்டுமேனி யுதிர்மாசர் குண்ட<br>ரிடுசீவ ரத்தி னுடையார்<br>மெய்யுரை யாதவண்ணம் விளையாட வல்ல<br>விகிர்தத் துருக்கொள் விமலன்<br>பையுடை நாகவாயில் எயிறார மிக்க<br>குரவம் பயின்று மலரச்<br>செய்யினில் நீலமொட்டு விரியக்கமழ்ந்து<br>மணநாறு கொச்சை வயமே. | கையில் உணவை ஏற்று உண்டு உட–னின்று உதிரும் அழுக்கினரும், குண்டர்களும், சீவர உடையினராகிய சமணரும், புத்தரும் மெய்யுரையாதவாறு செய்து விளையாடவல்ல வேறுபட்ட பல்வகை உருக்கொண்டருளும் பரமனாகிய சிவபிரானது பதி, படப் பாம்பின் எயிறு போன்று குரவம் மலர, வயல்களில் நீல மலர்கள் அலர, இவற்றால் மணம் சிறந்து விளங்கும் கொச்சைவயமாகும். |
| **2376.** இறைவனை ஒப்பிலாத வொளிமேனி யானை<br>யுலகங்க ளேழு முடனே<br>மறைதரு வெள்ளமேவி வளர்கோயின் மன்னி<br>யினிதா விருந்த மணியைக்<br>குறைவில ஞானமேவு குளிர்பந்தன் வைத்த<br>தமிழ்மாலை பாடுமவர் போய்<br>அறைகழ லீசனாளு நகர்மேவி யென்றும்<br>அழகா விருப்ப தறிவே. | எங்கும் நிறைந்தவனை, ஒப்பில்லாத ஒளிமயமான திருமேனியனை, ஏழுலகங்களையும் மறைக்குமாறு ஊழி வெள்ளம் பரவிய காலத்தும் அழியாது மிதந்து வளர்ந்த திருத்தோணி மலைக் கோயி–ல் மன்னி இனிதாக இருந்த மாணிக்கத்தைக் குறைவற்ற ஞானம்பெற்ற இனிய ஞானசம்பந்தன் பாடிப்பரவிய தமிழ் மாலைப் பத்தையும் பாடிப் போற்றுபவர் ஒ–க்கின்ற கழல் அணிந்த ஈசன் ஆட்சி செய்யும் சிவலோகத்தை அடைந்து இனிதாக ஞான வடிவினராய் வீற்றிருப்பர். |

## 84. திருநனிபள்ளி

(திருஞானசம்பந்தரின் தாயார் பகவதியம்மையார் திருஅவதாரத்தலம்.
பாலை நெய்தலான இடம்)

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 84

| | |
|---|---|
| **2377.** காரைகள் கூகைமுல்லை களவாகை யீகை<br>படர்தொடரி கள்ளி கவினிச்<br>சூரைகள் பம்மிவிம்மு சுடுகா டமர்ந்த<br>சிவன்மேய சோலை நகர்தான்<br>தேரைக ளாரைசாய மிதிகொள்ள வாளை<br>குதிகொள்ள வள்ளை துவள<br>நாரைக ளாரல்வாரி வயன்மேதி வைகும்<br>நனிபள்ளி போலும் நமர்காள். | நமர்காள்! காரை, கூகை, முல்லை, களவாகை, ஈகை, படர்ந்த தொடரி, கள்ளி ஆகிய தாவரங்கள் அழகுச் செய்யச் சூரை செறிந்த சுடுகாட்டை விரும்பும் சிவபிரான் எழுந்தருளிய சோலைகள் சூழ்ந்த நகர், தேரைகள் ஆரைக் கொடிகளை மிதித்துத்தள்ள அதனைக் கண்ட வாளைமீன்கள் துள்ள, அதனால் வள்ளைக் கொடிகள் துவள, நாரைகள் ஆரல் மீன்களை வாரி உண்ணுமாறு அமைந்த வயல்களில் எருமைகள் படிந்து மகிழும் நனி பள்ளியாகும். |

| | |
|---|---|
| **2378.** சடையிடைப் புக்கொடுங்கி யுளதங்கு வெள்ளம்<br>வளர்திங்கள் கண்ணி அயலே<br>இடையிடைவைத்ததொக்கு மலர்தொத்து மாலை<br>யிறைவன் னிடங்கொள் பதிதான்<br>மடையிடை வாளைபாய முகிழ்வாய் நெரிந்து<br>மணநாறு நீலம் மலரும்<br>நடையுடை யன்னம்வைகு புனலம் படப்பை<br>நனிபள்ளி போலும் நமர்காள். | சடையிடைப்புக்கு ஒடுங்கியுள்ளதாய்த் தங்கிய கங்கையையும், வளரும் பிறையாகிய கண்ணியையும், இடையிடையே விரவிய கொத்தாகிய மாலையையும் உடைய இறைவன் இடங்கொண்டருளும் பதி, மடையிடையே வாளைமீன்கள் துள்ள, முகிழ்ந்துள்ள வாய் விரிந்து மணம் வீசும் குவளை மலர்களுடையன வாய் நடையில் சிறந்த அன்னங்கள் வாழும் நீர்நிலைகளை உடைய தோட்டங்கள் சூழ்ந்த நனிபள்ளியாகும். |
| **2379.** பெறுமலர் கொண்டுதொண்டர் வழிபாடு செய்யல்<br>ஒழிபா டிலாத பெருமான்<br>கறுமலர் கண்டமாக விடமுண்ட காளை<br>யிடமாய காதல் நகர்தான்<br>வெறுமலர் தொட்டுவிட்ட விசைபோன கொம்பின்<br>விடுபோ தலர்ந்த விரைசூழ்<br>நறுமல ரல்—புல்— யொ—வண் டுறங்கு<br>நனிபள்ளி போலும் நமர்காள். | அடியவர்கள் தங்களுக்குக் கிடைத்த மலர்களைக் கொண்டு வழிபட அதனை ஒழியாது ஏற்றருளும் தலைவனும், கருங்குவளை மலர் போலத் தனது கண்டம் நிறம் உறுமாறு விடத்தை உண்ட காளையும் ஆகிய சிவபிரான் விரும்பி உறையும் இடம், வண்டுகள் தங்கித் தேன் உண்டு விட்ட வெறுமலர்களோடு கூடி விசைத்து எழும் கொம்புகளில் விரியும் பருவத்துள்ள மணம் பொருந்திய மலர்களின் தேன் உண்டு அக இதழ்களில் வண்டுகள் உறங்கும் பொழில்களை உடைய நனிபள்ளியாகும். |
| **2380.** குளிர்தரு கங்கைதங்கு சடைமா டிலங்கு<br>தலைமாலை யோடு குலவி<br>ஒளிர்தரு திங்கள்சூடி யுமைபாக மாக<br>வுடையா னுகந்த நகர்தான்<br>குளிர்தரு கொம்மலோடு குயில்பாடல் கேட்ட<br>பெடைவண்டு தானும் முரல<br>நளிர்தரு சோலைமாலை நரைகுருகு வைகு<br>நனிபள்ளி போலும் நமர்காள். | குளிர்ந்த கங்கை தங்கிய சடையின்கண் விளங்கிய தலைமாலையோடு கூடி, ஒளிதரும் திங்களைச் சூடி, உமையம்மையை ஒரு பாகமாக உடைய பெருமான் உகந்து எழுந்தருளிய நகர், குளிர்ந்த, கொம்பு என்னும் இசைக்கருவியின் பாடல்களோடு குயில் கூவும் இசையையும் கேட்ட பெடை வண்டு தானும் முரல நண்ணிய சோலைகளில் வரிசையாக நாரைகளும் குருகுகளும் வைகும் நனிபள்ளியாகும். |

| | |
|---|---|
| **2381.** தோடொரு காதனாகி யொருகா திலங்கு<br>சுரிசங்கு நின்று புரளக்<br>காடிட மாகநின்று கனலாடும் எந்தை<br>யிடமாய காதல் நகர்தான்<br>வீடுடன் எய்துவார்கள் விதியென்று சென்று<br>வெறிநீர் தெளிப்ப விரலால்<br>நாடுட னாடுசெம்மை யொ–வெள்ள மாரு<br>நனிபள்ளி போலும் நமர்காள். | ஒரு காதில் தோடணிந்தவனாய், ஒரு காதில் வளைந்த சங்கைக் குழைதாழ நின்று புரளுமாறு அணிந்தவனாய்ச் சுடுகாட்டைத் தனது இருப்பிடமாகக் கொண்டு அன–டை ஆடும் எந்தையாகிய சிவபிரானது பதி, வீடு அடைய விரும்பும் அடியவர்கள் விதி முறையிது என்று தெரிந்து நீராடி மணம் பொருந்திய நீரை விரலால் தெளித்து அர்க்கியம்தர, ஒ–யோடு பெரு வெள்ளமாய்ப் பெருகி நாடு முழுவதும் பரவி வரும் காவிரியின் கரையில் விளங்கும் நனிபள்ளியாகும். |
| **2382.** மேகமொ டோடுதிங்கண் மலரா அணிந்து<br>மலையான் மடந்தை மணிபொன்<br>ஆகமொர் பாகமாக அனலாடும் எந்தை<br>பெருமான் அமர்ந்த நகர்தான்<br>ஊகமொ டாடுமந்தி யுகளுஞ் சிலம்ப<br>அகிலுந்தி யொண்பொன் இடறி<br>நாகமொ டாரம்வாரு புனல்வந் தலைக்கு<br>நனிபள்ளி போலும் நமர்காள். | மேகங்களோடு ஒடும் திங்களைக் கண்ணியாகச் சூடி, மலைமகளை அழகிய பொன்மயமான திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு அழ–ன்கண் நின்று ஆடும் எந்தையாகிய பெருமான் எழுந்தருளிய நகர் கருங்குரங்குகளும், மந்திகளும் விளையாடும் மலையின்கண் உள்ள அகில் மரங்களையும், ஒளி பொருந்திய பொன்னையும் நாகமரம் சந்தன மரம் ஆகியவற்றையும் புரட்டியும் எற்றியும் ஓடிவரும் காவிரிநீர் வந்து அலைக்கும் நனிபள்ளியாகும். |
| **2383.** தகைம– தண்டுசூலம் அனலுமிழு நாகங்<br>கொடுகொட்டிவீணை முரல<br>வகைம– வன்னிகொன்றை மதமத்தம் வைத்த<br>பெருமான் உகந்த நகர்தான்<br>புகைம– கந்தமாலை புனைவார்கள் பூசல்<br>பணிவார்கள் பாடல் பெருகி<br>நகைம– முத்திலங்கு மணல்சூழ் கிடக்கை<br>நனிபள்ளி போலும் நமர்காள். | பெருமை பொருந்திய தண்டு, சூலம், அனல் உமிழும் நாகம் ஆகியவற்றை உடையவராய், வகையாக அமைந்த வன்னி கொன்றை ஊமத்தை ஆகியவற்றை அணிந்து கொடுகொட்டி என்னும் திருக்கூத்தியற்றிய பெருமான் உகந்த நகர், புகையாக எழுந்த மணத்துடன் மாலை புனைவார்கள் புகழும் ஓசையும், பணிந்து போற்றுவார் பாடும் பாடல் ஓசையும் பெருகி ஒளிவீசும் முத்துக்கள் இலங்கும் மணல் சூழ்படப்பைகளை உடைய நனி பள்ளியாகும். |
| **2384.** வலமிகு வாளன்வேலன் வளைவா ளெயிற்று<br>மதியா வரக்கன் வ–யோ<br>டுலமிகு தோள்கள்ஒல்க விரலா லடர்த்த<br>பெருமான் உகந்த நகர்தான்<br>நிலமிகு கீழுமேலு நிகராது மில்லை<br>யெனநின்ற நீதி யதனை<br>நலமிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யும்<br>நனிபள்ளி போலும் நமர்காள். | வ–மை மிக்க வாள் வேல் ஆகியவற்றையும் வளைந்த ஒளி மிக்க பற்களையும் உடைய மதியா அரக்கனாகிய இராவணன் உடல் வ–மையோடு கற்றூண் போன்ற தோள் வ–யும் இழக்குமாறு கால் விரலால் அடர்த்த பெருமான் உகந்த நகர், கீழுலகிலும் மேலுலகிலும் தனக்கு நிகர் யாருமில்லை என்கின்ற நீதி வடிவினனாகிய அவனை நன்மைமிக்க தொண்டர்கள் நாளும் திருவடிகளைப் பரவும் நனிபள்ளியாகும். |

| | |
|---|---|
| **2385.** நிறவுரு வொன்றுதோன்றி யெரியொன்றி நின்ற<br>தொருநீர்மை சீர்மை நினையார்<br>அறவுறு வேதநாவன் அயனோடுமாலு<br>மறியாத அண்ணல் நகர்தான்<br>புறவிரி முல்லைமௌவல் குளிர்பிண்டி புன்னை<br>புனைகொன்றை துன்று பொதுளி<br>நறவிரி போதுதாது புதுவாச நாறும்<br>நனிபள்ளி போலும் நமர்காள். | நிறம் பொருந்தியதொரு எரிவடிவம் தோன்றித் தங்களிடையே நிற்க அதன் நீர்மை சீர்மை ஆகியவற்றை நினையாதவராய் அறம் பொருந்திய வேதங்களை ஓதும் நாவினனாகிய பிரமனும் திருமாலும் முடி அடிகளைத் தேட முயன்று அறியாதவராய் நின்ற தலைவனது நகர், முல்லை நிலத்தில் விரிந்த முல்லை, மல்–கை, அசோகு, புன்னை, கொன்றை ஆகியன செறிந்த சோலைகளில் பூத்த மலர்களில் புதுமணம் கமழும் நனிபள்ளியாகும். |
| **2386.** அனமிகு செல்குசோறு கொணர்கென்று கையில்<br>இடவுண்டு பட்ட அமணும்<br>மனமிகு கஞ்சிமண்டை யதிலுண்டு தொண்டர்<br>குணமின்றி நின்ற வடிவும்<br>வினைமிகு வேதநான்கும் விரிவித்த நாவின்<br>விடையான் உகந்த நகர்தான்<br>நனமிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யு<br>நனிபள்ளி போலும் நமர்காள். | அன்னமாக, வயிற்றுக்குட் செல்லும் சோறு கொணர்க எனக் கேட்டுக் கையில் இட உண்டு திரியும் அமணரும், மனம் விரும்பிக் கஞ்சியைப் பனைமட்டையா–யன்ற மண்டையில் ஏற்றுண்டு தொண்டர்க்குரிய குணமின்றி நிற்கும் புத்தரும் கூறுவனவற்றைக் கொள்ளாது கிரியைகள் மிகுந்த வேதங்கள் நான்கையும் ஓதிய நாவினை உடைய விடையூர்தியான் விரும்பிய நகர், தெளிந்த ஞானமுடைய தொண்டர்கள் நாள்தோறும் திருவடிகளைப் பரவிப் போற்றும் நனிபள்ளியாகும். |
| **2387.** கடல்வரை யோதமல்கு கழிகானல் பானல்<br>கமழ்காழி யென்று கருதப்<br>படுபொரு ளாறுநாலும் உளதாக வைத்த<br>பதியான ஞான முனிவன்<br>இடுபறை யொன்ற**வத்தர் பியன்மே –ருந்தின்**<br>இசையா லுரைத்த பனுவல்<br>நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளி யுள்க<br>வினை கெடுதலாணை நமதே. | கடல் எல்லையில் உள்ள வெள்ளம் மிக்க கழிகளையும் சோலைகளையும் உடையதாய்க் குவளை மலரின் மணம் கமழும் காழி என்று கருதப்படும் பதியின்கண் நால்வேத, ஆறங்கங்களை அறிந்துணர்ந்தவனாய்த் தோன்றிய ஞானமுனிவன் தந்தையார் தோள்மேல் இருந்து இன்னிசையோடு உரைத்த இப்பதிகத்தை ஓதிப்பறை ஓசையோடு நள்ளிருளில் நடனமாடும் எந்தை நனிப்பள்ளியை உள்க வினைகள் கெடும் என்பது நமது ஆணையாகும். |

**அத்தர் பியன்மே –ருந்து –** தந்தையார் திருத்தோள் மிசை அமர்ந்து.
திருஞானசம்பந்தரின் வாழ்வுக்கு அகச் சான்று.

## 85. பொது
### (கோளறு பதிகம்)

பண் : பியந்தைக்காந்தாரம் — பதிக எண் : 85

| | |
|---|---|
| **2388.** வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்<br>மிகநல்ல வீணை தடவி<br>மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழம் வெள்ளி<br>சனிபாம் பிரண்டு முடனே<br>ஆசறுநல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | மூங்கில் போன்ற தோளினை உடைய உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவனும் விடம் உண்ட கண்டனும் ஆகிய சிவபிரான் திங்கள் கங்கை ஆகியவற்றை முடிமேல் அணிந்தவனாய் மகிழ்ச்சியுற்ற நிலையில் வீணையை மீட்டிக்கொண்டு என் உளம் புகுந்து தங்கியுள்ள காரணத்தால் ஞாயிறு, திங்கள் முதலான ஒன்பான் கோள்களும் குற்றம் அற்ற நலத்தைச் செய்வனவாம். அவை அடியார் களுக்கும் மிகவும் நல்லனவே செய்யும். |
| **2389.** என்பொடு கொம்பொடாமை யிவைமார் பிலங்க<br>எருதேறி யேழை யுடனே<br>பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொ டாறும்<br>உடனாய நாள்க ளவைதாம்<br>அன்பொடு நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | என்பு, பன்றிக்கொம்பு, ஆமையோடு ஆகியன மார்பின்கண் இலங்கப் பொன் போன்ற மகரந்தம் பொருந்திய ஊமத்தை மலர்மாலை, கங்கை ஆகியனவற்றை முடிமேல் சூடி உமையம்மையாரோடு எருதேறி வந்து என் உளம் புகுந்து எழுந்தருளியிருத்தலால், அசுவினி முதலாக உள்ள நாள்களில் ஆகாதனவாகிய ஒன்பது,பத்து, பதினாறு, பதினெட்டு, ஆறு ஆகிய எண்ணிக்கையில் வருவனவும் பிறவுமான நட்சத்திரங்கள் அன்போடு மிக நல்லனவே செய்யும். அடியவர்கட்கும் மிக நல்லனவே செய்யும். |
| **2390.** உருவளர் பவளமேனி யொளிநீ றணிந்து<br>உமையோடும் வெள்ளை விடைமேல்<br>முருகலர் கொன்றைதிங்கண் முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>திருமகள் கலையதூர்தி செயமாது பூமி<br>திசைதெய்வ மான பலவும்<br>அருநெறி நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | அழகிய பவளம் போன்ற திருமேனியில் ஒளி பொருந்திய திருவெண்ணீற்றை அணிந்து மணம் பொருந்திய கொன்றை, திங்கள் ஆகியவற்றை முடிமேல் அணிந்து சிவபிரான் உமையம்மையாரோடு வெள்ளை விடைமீது ஏறிவந்து என் உளம் புகுந்துள்ள காரணத்தால் திருமகள், துர்க்கை, செயமகள், நிலமகள், திசைத் தெய்வங்கள் ஆன பலவும் அரிய செல்வங்களையே நல்லனவாகத் தரும். அடியாரவர்கட்கும் மிகவும் நல்லனவாகவே தரும். |

| | |
|---|---|
| **2391.** மதிநுதன் மங்கையோடு வடபா –ருந்து<br>மறையோது மெங்கள் பரமன்<br>நதியொடு கொன்றைமாலை முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்<br>கொடுநோய்க ளான பலவும்<br>அதிகுணம் நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | பிறை போன்ற நுதலை உடைய உமையம்மையாரோடு ஆ–ன்கீழ் இருந்து வேதங்களை அருளிய எங்கள் பரமன், கொன்றை மாலை ஆகியனவற்றை முடிமேல் அணிந்து என் உளம் புகுந்துள்ள காரணத்தால், சினம் மிக்க காலன், அக்கினி, யமன், யமதூதர், கொடிய நோய்கள் முத–ய அனைத்தும் மிக்க குணமுடையனவாய் நல்லனவே செய்யும். அடியவர்களுக்கும் மிகவும் நல்லனவே செய்யும். |
| **2392.** நஞ்சணி கண்டன்எந்தை மடவாள்த னோடும்<br>விடையேறு நங்கள் பரமன்<br>துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>வெஞ்சின அவுணரோடு உருமிடியும் மின்னும்<br>மிகையான பூத மவையும்<br>அஞ்சிடு நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | நஞ்சணிந்த கண்டனும், எந்தையும், உமையம்மை யாரோடு விடையேறி வரும் எம் தலைவனுமாகிய சிவபிரான், இருள் செறிந்த வன்னி இலை, கொன்றை மாலை ஆகியவற்றை முடிமேல் அணிந்து என் உளம் புகுந்துள்ள காரணத்தால் கொடிய சினமுடைய அவுணர், இடி, மின்னல், செருக்குடைய பூதங்கள் ஆகியன நம்மைக் கண்டு அஞ்சி நல்லனவே செய்யும். அடியவர்கட்கும் மிக நல்லனவே செய்யும். |
| **2393.** வாள்வரிய தளதாடை வரிகோ வணத்தர்<br>மடவாள் தனோடு உடனாய்<br>நாண்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>கோளரி யுழுவையோடு கொலையானை கேழல்<br>கொடுநாக மோடு கரடி<br>ஆளரி நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | ஒளியும் வரியும் பொருந்திய பு–த்தோலாடையை உடுத்து வரிந்து கட்டிய கோவண ஆடையராய் உள்ள பெருமானார் உமையம்மையாரோடும் உடனாய் அன்றலர்ந்த மலர்கள், வன்னி, கொன்றை, கங்கை ஆகியவற்றை முடி மிசைச் சூடிவந்து என் உளத்தின் கண் புகுந்துள்ள காரணத்தால் வ–ய குரங்கு, பு–, கொலை யானை, பன்றி, கொடிய பாம்பு, கரடி, சிங்கம் ஆகியன நமக்கு நல்லனவே செய்யும்! அடியார்கட்கும் மிக நல்லனவே செய்யும். |
| **2394.** செப்பிள முலைநன்மங்கை யொருபாக மாக<br>விடையேறு செல்வ னடைவார்<br>ஒப்பிள மதியுமப்பும் முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்<br>வினையான வந்து ந–யா<br>அப்படி நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | செப்புப் போன்ற இள நகில்களை உடைய உமை நங்கை ஒருபாகத்தே விளங்க விடையேறிவரும் செல்வனாகிய சிவபிரான் தன்னை அடைந்த இளமதியையும், கங்கையையும் முடிமேல் அணிந்தவனாய், என் உள்ளத்தின்கண் புகுந்து எழுந்தருளிய காரணத்தால், வெம்மை தண்மை வளி மிகுந்த பித்தம் வினைகள் இவற்றால் வரும் துன்பங்கள் நம்மை வந்து ந–யா. அடியார்களுக்கும் அவை நல்லனவே செய்யும். |

| | |
|---|---|
| **2395.** வேள்பட விழிசெய்தன்று விடைமே –ருந்து<br>மடவாள் தனோடு உடனாய்<br>வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>ஏழ்கடல் சூழிலங்கை அரையன்ற னோடும்<br>இடரான வந்து ந–யா<br>ஆழ்கடல் நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | மன்மதன் அழியுமாறு நெற்றி விழியைத் திறந்து எரித்து விடைமீது உமைமங்கையோடும் உடனாய் இருந்து, முடிமிசை ஒளிபொருந்திய பிறை, வன்னி, கொன்றைமலர் ஆகியனவற்றைச் சூடிச் சிவபெருமான் வந்து உன் உளம்புகுந்துள்ள காரணத்தால் ஏழ்கடல்களால் சூழப்பட்ட இலங்கை மன்னன் இராவணனாலும் பிறராலும் வரும் இடர்கள் நம்மை வந்து ந–யா. ஆழ்ந்த கடலும் நமக்கு நல்லனவே செய்யும். அடியார்களுக்கும் அவை நல்லனவே புரியும். |
| **2396.** பலபல வேடமாகும் பரனாரி பாகன்<br>பசுவேறும் எங்கள் பரமன்<br>சலமக ளோடெருக்கு முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>மலர்மிசை யோனுமாலு மறையோடு தேவர்<br>வருகால மான பலவும்<br>அலைகடல் மேருநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | பல்வேறு கோலங்கொண்டருளும் தலைவனும், உமைபாகனும், எருதேறிவரும் எங்கள் பரமனுமாகிய சிவபிரான், முடிமீது கங்கை, எருக்கமலர் ஆகியவற்றை அணிந்து வந்து என் உளம் புகுந்துள்ள காரணத்தால் தாமரை மலர் மேல் உறையும் பிரமன், திருமால், வேதங்கள், தேவர்கள் ஆகியோராலும், கெட்ட காலங்கள், அலைகடல், மேரு ஆகியவற்றாலும் வரும் தீமைகள் எவையாயினும் நமக்கு நல்லனவாகவே அமையும். அடியார்களுக்கும் அவை மிகவும் நல்லனவே செய்யும். |
| **2397.** கொத்தலர் குழ–யோடு விசையற்கு நல்கு<br>குணமாய வேட விகிர்தன்<br>மத்தமு மதியுநாக முடிமே லணிந்தென்<br>உளமே புகுந்த அதனால்<br>புத்தரொ டமணைவாதில் அழிவிக்கும்அண்ணல்<br>திருநீறு செம்மை திடமே<br>அத்தகு நல்லநல்ல வவைநல்ல நல்ல<br>அடியா ரவர்க்கு மிகவே. | பூங்கொத்துக்கள் அணிந்த கூந்த–னளாகிய உமையம்மையாரோடு சென்று குணம் காட்டி அருச்சுனனுக்கு அருள்புரிந்த வேடவடிவம் கொண்ட சிவபிரான் முடிமேல் ஊமத்தை மலர், பிறை, பாம்பு ஆகியவற்றை அணிந்து, என் உளம் புகுந்துள்ள காரணத்தால், புத்தர்களையும் அமணர்களையும் அவ்வண்ண–ன் திருநீறு வாதில் தோற்றோடச் செய்யும். நமக்கு வரும் அத்தகைய தீமைகள் நல்லனவற்றையே செய்யும். அடியார்களுக்கும் அவ்வாறே நல்லனவே செய்யும். |
| **2398.** தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல் துன்னி<br>வளர்செம்பொன் எங்கும் நிகழ<br>நான்முகன் ஆதியாய பிரமா புரத்து<br>மறைஞான ஞான முனிவன்<br>தானுறு கோளுநாளும் அடியாரை வந்து<br>ந–யாத வண்ணம் உரைசெய்<br>ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்<br>அரசாள்வர் ஆணை நமதே. | தேன் பொருந்திய பொழில்களைக் கொண்டதும், கரும்பு, விளைந்த செந்நெல் ஆகியன நிறைந்துள்ளதும், வளரும் செம்பொற்குவியல் எங்கும் நிறைந்திருப்பதும், நான்முகனால் முதன் முதல் படைக்கப்பட்டதுமான பிரமாபுரத்துத் தோன்றி மறைஞானம் பெற்ற ஞான முனிவன் ஆகிய ஞானசம்பந்தன் வினைப்பயனால் தாமே வந்துறும் கோளும் நாளும் பிறவும் அடியவரை வந்து ந–யாத வண்ணம் பாடிய சொல்லான் இயன்ற மாலையாகிய இப்பதிகத்தை ஓதும் அடியவர்கள் வானுலகில் அரசு புரிவர். இது நமது ஆணை. |

## 86. திருநாரையூர்

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 86

| | |
|---|---|
| **2399.** உரையினில் வந்தபாவ முணர்நோய்களும்ம<br>செயறீங்கு குற்ற முலகில்<br>வரையினி லாமைசெய்த வவைதீரும் வண்ண<br>மிகவேத்தி நித்த நினைமின்<br>வரைசிலை யாகவன்று மதின்மூன் றெரித்து<br>வளர்கங்குல் நங்கை வெருவத்<br>திரையொ– நஞ்சமுண்ட சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களைச் செற்று, வளரும் கங்கு–ல் உமையம்மை அஞ்சக் கடல் நஞ்சினை உண்ட சிவன் மேவிய செல்வத் திருநாரையூரைக் கையால் தொழுதால் வாக்கு; மனம் காயம் ஆகியவற்றால் விளைந்த பாவங்கள் தீரும். அங்குள்ள பெருமானை அவ்வாறு தீருமாறு மிக ஏத்தி நித்தமும் நினைவீராக. |
| **2400.** ஊனடை கின்றகுற்ற முதலாகி யுற்ற<br>பிணிநோ யொருங்கு முயரும்<br>வானடை கின்றவெள்ளை மதிசூடு சென்னி<br>விதியான வேத விகிர்தன்<br>கானிடை யாடிபூதப் படையா னியங்கு<br>விடையா னிலங்கு முடிமேல்<br>தேனடை வண்டுபாடு சடையண்ணல் நண்ணு<br>திருநாரை யூர்கை தொழவே. | உயரிய வானத்தில் விளங்குகின்ற வெள்ளிய மதியைச் சூடிய சென்னியினனும், விதிகளைக் கூறும் வேதங்களை அருளிய விகிர்தனும், இடுகாட்டில் பூதப் படையோடு ஆடுபவனும், இயங்கும் விடையூர்தியினனும், விளங்கும் தலைமீது வண்டு பாடும் தேனடைந்த மலர்களைச் சூடிய சடையினனும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய திருநாரையூரைக் கைகளால் தொழுதால் உடலால் செய்யப்பெறும் குற்றம் முதலானவும், அவ்வுடலைப் பற்றிய பிணி நோய்களும் கெடும். |
| **2401.** ஊரிடை நின்றுவாழும் உயிர்செற்ற காலன்<br>றுயருற்ற தீங்கு விரவிப்<br>பாரிடை மெள்ளவந்து பழியுற்ற வார்த்தை<br>யொழிவுற்ற வண்ண மகலும்<br>போரிடை யன்றுமூன்று மதிலெய்த ஞான்று<br>புகழ்வானு ளோர்கள் புணரும்<br>தேரிடை நின்றவெந்தை பெருமா னிருந்த<br>திருநாரை யூர்கை தொழவே. | திரிபுரத்தசுரரோடு போர் செய்து மும்மதில்களைக் கணையால் எய்த காலத்தில் புகழ்பெற்ற தேவர்கள் கூடியமைத்த தேரில் நின்ற எந்தை பெருமான் எழுந்தருளிய திருநாரையூரைக் கைகளால் தொழுதால், ஊரின் கண் நின்று வாழ்ந்த உயிர் கவரும் காலனால் வரும் தீங்கும், உலகவர் கூடி மெள்ளப் பழித்துரைக்கும் வார்த்தைகளும் ஒழிவுறும். |
| **2402.** தீயுற வாயவாக்கை யதுபற்றி வாழும்<br>வினைசெற்ற வுற்ற வுலகின்<br>தாயுறு தன்மையாய தலைவன்றன் நாமம்<br>நிலையாக நின்று மருவும்<br>பேயுற வாயகானில் நடமாடி கோல<br>விடமுண்ட கண்டன் முடிமேல்<br>தேய்பிறை வைத்துகந்த சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | இடுகாட்டில் பேய்களோடு உறவுகொண்டு நடன மாடுபவனும் விடமுண்ட அழகிய கண்டத்தினனும் முடிமேல் தேய்ந்த பிறைச் சூடியவனும் ஆகிய சிவபிரான் மேவிய திருநாரையூரை வணங்கினால் தீவினையால் உலகிற் பிறந்து அடையும் துன்பங்கள் அகலும். தாயாய்த் தலையளி செய்யும் அவன் நாமங்கள் நும் உள்ளத்தில் மருவும். |

| | |
|---|---|
| **2403.** வசையப ராதமாய வுவரோதம் நீங்குந்<br>தவமாய தன்மை வரும்வான்<br>மிசையவ ராதியாய திருமார் பிலங்கு<br>விரிநூலர் விண்ணு நிலனும்<br>இசையவ ராசிசொல்ல விமையோர்க ளேத்தி<br>யமையாத காத லொடுசேர்<br>திசையவர் போற்றநின்ற சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | மேலான வீட்டுலகில் இருப்பவர். எல்லார்க்கும் முன்னே தோன்றியவர். அழகிய மார்பில் இலங்கும் முப்புரிநூலர். விண்ணும் மண்ணும் நிறைந்தவர். இமையவர்கள் ஏத்த அவர்கட்கு ஆசி சொல்பவர். அன்போடு திசைப்பாலகர் போற்ற நிற்பவர் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய திருநாரையூரைத் தொழின் கடலளவு பெருகிய பழிகள் இடையூறுகள் நீங்கும். தவம் வரும். |
| **2404.** உறைவள ரூனிலாய வுயிர்நிற்கும் வண்ணம்<br>உணர்வாக்கும் உண்மை யுலகில்<br>குறைவுள வாகிநின்ற குறைதீர்க்கு நெஞ்சில்<br>நிறைவாற்று நேசம் வளரும்<br>மறைவளர் நாவன்மாவி னுரிபோர்த்த மெய்யன்<br>அரவார்த்த வண்ணல் கழலே<br>திறைவளர் தேவர்தொண்டி னருள்பேண நின்ற<br>திருநாரை யூர்கை தொழவே. | வேதம் வளரும் திருநாவினன் யானைத் தோலை மெய்யில் போர்த்தவன். பாம்பைக் கச்சையாகக் கட்டியவன். தலைமைத் தன்மை உடையோன். அப்பெருமான் திருவடிகளையே திறைப்பொருளாக வளர்கின்ற தேவர்கள் தம் தொண்டால் அவன் அருளைப் பெற நிற்கும் திருநாரையூரைத் தொழுதால் உறையாக நிற்கும் உட—ல் விளங்கும் உயிர் நிலை பெறும். நல் உணர்வைத் தரும். குறைகளைப் போக்கும். நெஞ்சில் நிறைவைத் தரும். நேசம் வளரும். |
| **2405.** தனம்வரு நன்மையாகுந் தகுதிக் குழந்து<br>வருதிக் குழன்ற வுட—ன்<br>இனம்வள ரைவர்செய்யும் வினயங்கள் செற்று<br>நினைவொன்று சிந்தை பெருகும்<br>முனமொரு காலமூன்று புரம்வெந்து மங்கச்<br>சரமுன் றெரிந்த அவுணர்<br>சினமொரு காலழித்த சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | முன்னொரு காலத்தில் முப்புரங்கள் அழியுமாறு சரம் விடுத்து அவுணரின் சினத்தை அழித்த சிவபெருமான் மேவிய செல்வத் திருநாரையூரைக் கைகளால் தொழுதால் தனம் வரும். நன்மையாகும். பெருமை பெறுதற்குத் திசைதோறும் அலைந்து உழன்று உட—ன்கண் பொருந்திய ஐம்பொறிகளால் ஆகும் வஞ்சகங்களை அழித்துப் பெருமான் திருவடிகளில் நினைவு ஒன்றும் சிந்தை உண்டாகும். |
| **2406.** உருவரை கின்றநாளி லுயிர்கொள்ளுங் கூற்ற<br>நனியஞ்சு மாத லுறநீர்<br>மருமலர் தூவியென்றும் வழிபாடு செய்ம்மின்<br>இழிபா டிலாத கட—ன்<br>அருவரை சூழிலங்கை யரையன்றன் வீரம்<br>மழியத் தடக்கை முடிகள்<br>திருவிரல் வைத்துகந்த சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | அழிவில்லாத கடலாலும் அரிய மலைகளாலும் சூழப்பட்ட இலங்கை மன்னன் இராவணனின் வீரம் அழியவும், நீண்ட கைகள் முடிகள் நெரியவும், திருவிரலை ஊன்றி, உகந்த சிவன் மேவிய திருநாரையூரைக் கைகளால் தொழ உடல் நீங்கும் காலத்தில் உயிர் கொள்ள வரும் இயமன் மிகவும் அஞ்சுவான். ஆத—ன் நீர் மணமலர்களைத் தூவி அப்பெருமானை வழிபாடு செய்வீர்களாக. |

| | |
|---|---|
| 2407. வேறுயர் வாழ்வுதன்மை வினைதுக்க மிக்க<br>பகைதீர்க்கு மேய வுட–ல்<br>தேறிய சிந்தைவாய்மை தெளிவிக்க நின்ற<br>கரவைக் கரந்து திகழும்<br>சேறுயர் பூவின்மேய பெருமானும் மற்றைத்<br>திருமாலு நேட எரியாய்ச்<br>சீறிய செம்மையாகுஞ் சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | சேற்றில் உயர்ந்து தோன்றும் தாமரை மலரில் விளங்கும் நான்முகனும், திருமாலும் தேடச் சிவந்த எரியுருவாய்ச் சீறி எழுந்த சிவபிரான் மேவிய திருநாரையூரைக் கையால் தொழப் பிறப்பு இறப்பற்ற தன்மை கிடைக்கும். வினையாகிய துக்கம், மிக்க பகை இவற்றைத் தீர்க்கும். தெளிந்த சிந்தையில் வாய்மை விளங்கித் திகழ மறைந்து நிற்கும் சிவனது வெளிப்பாடு கிடைக்கும். |
| 2408. மிடைபடு துன்பமின்ப முளதாக்கு முள்ளம்<br>வெளியாக்கு முன்னி யுணரும்<br>படையொரு கையிலேந்திப் ப–கொள்ளும் வண்ண<br>மொ–பாடி யாடி பெருமை<br>உடையினை விட்டுளோரு முடல்போர்த்து ளோரும்<br>உரைமாயும் வண்ண மழியச்<br>செடிபட வைத்துகந்த சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழவே. | சூலப்படையைக் கையில் ஏந்திப் ப–யேற்கும் தன்மையனாய் இசைபாடி ஆடிச் செல்லும் இறைவனது பெருமையை உடையின்றியும் உடை போர்த்தும் திரியும் சமண் சாக்கியர் கூறுவன மாயுமாறு செய்து காக்கும் சிவன் மேவிய செல்வத் திருநாரையூரைக் கை தொழத் துன்பம் நீங்கும். இன்பம் உளதாகும். உள்ளம் ஒளியாக்கும். ஆத–ன் அத்தலத்தை உன்னி உணருங்கள். |
| 2409. எரியொரு வண்ணமாய வுருவானை யெந்தை<br>பெருமானை யுள்கி நினையார்<br>திரிபுர மன்றுசெற்ற சிவன்மேய செல்வத்<br>திருநாரை யூர்கை தொழுவான்<br>பொருபுனல் சூழ்ந்தகாழி மறைஞான பந்தன்<br>உரைமாலை பத்து மொழிவார்<br>திருவளர் செம்மையாகி யருள்பேறு மிக்க<br>துளதென்பர் செம்மை யினரே. | தீயைப் போலச் சிவந்த நிறத்தை உடையவனாய், எம் தந்தையாகிய பெருமானாய் மனமுருகி நினையாத அசுரர்களின் திரிபுரத்தை அக்காலத்தில் அழித்துக் காத்த சிவபிரான் எழுந்தருளிய திருநாரையூரைக் கை தொழுது நீர் வளம் நிறைந்த காழி மறைஞான சம்பந்தன் உரைத்த இத்தமிழ்மாலையை மொழிபவர் திருவளரும் திருவருட்பேற்றுடன் செம்மை யினராவர். |

## 87. திருநறையூர்ச்சித்தீச்சரம்

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 87

| | |
|---|---|
| 2410. நேரிய னாகுமல்ல னொருபாலு மேனி<br>யரியான்மு னாய வொளியான்<br>நீரியல் காலுமாகி நிறைவானு மாகி<br>யுறுதீயு மாய நிமலன்<br>ஊரியல் பிச்சைபேணி யுலகங்க ளேத்த<br>நல்குண்டு பண்டு சுடலை<br>நாரியொர் பாகமாக நடமாட வல்ல<br>நறையூரின் நம்ப னவனே. | ஊர்கள் தோறும் சென்று, பிச்சையேற்று உலகங்கள் போற்ற நல்குவதை உண்டு, முற்காலத்தே சுடலையில் மாதொரு பாகனாக நடனமாடவல்ல, நறையூரில் விளங்கும் நம்பனாகிய சிவபெருமான், நுண்ணியன், பேருருவினன், தன்னொரு பாகத்தை அளித்த திருமால் முன் சோதிப்பிழம்பு ஆனவன். நீர், காற்று முதலான ஐம்பூத வடிவினன். |

| | |
|---|---|
| **2411.** இடமயி லன்னசாயன் மடமங்கை தன்கை<br>யெதிர்நாணி பூண வரையில்<br>கடும்அயி லம்புகோத்து எயில்செற் றுகந்து<br>வமரார்க் களித்த தலைவன்<br>மடமயில் ஊர்திதாதை யெனநின்றுதொண்டர்<br>மனநின்ற மைந்தன் மருவும்<br>நடமயி லாலநீடு குயில்கூவு சோலை<br>நறையூரின் நம்ப னவனே. | பொருந்திய மயில்கள் நடனம் ஆடி அகவவும், புகழ் நீடிய குயில்கள் கூவவும், விளங்கும் சோலை சூழ்ந்த நறையூரில் விளங்கும் நம்பனாகிய அப்பெருமான், இடப்பாகத்தே மயிலன்ன சாயலுடன் விளங்கும் மலைமங்கை யோடு தன் கையில் உள்ள மலைவில்–ல் அரவு நாணைப் பூட்டிக் கடிதானகூரிய அம்பினைக் கோத்து, மூவெயில்களைச் செற்று மகிழ்ந்து தேவர்கட்கு வாழ்வளித்த தலைவன். இளைய மயிலூர்தியைக் கொண்ட முருகனின் தந்தை என்று தொண்டர் எதிர்நின்று போற்ற அவர்கள் மனத்திலே எழுந்தருளும் மைந்தன் ஆவான். |
| **2412.** சூடக முன்கைமங்கை யொருபாக மாக<br>வருள்கார ணங்கள் வருவான்<br>ஈடக மானநோக்கி யிடுபிச்சை கொண்டு<br>படுபிச்ச னென்று பரவத்<br>தோடக மாயொர்காதும் ஒருகா திலங்கு<br>குழைதாழ வேழ வுரியன்<br>நாடக மாகவாடி மடவார்கள் பாடும்<br>நறையூரின் நம்ப னவனே. | இளம் பெண்கள் நாட்டியம் ஆடிப்பாடி போற்றும் நறையூரில் எழுந்தருளிய நம்பனாகிய அப்பெருமான் வளையல் அணிந்தமுன் கைகளை உடைய மலைமங்கை ஒரு பாகமாக விளங்க அருள்புரிய வருபவன். பெரிய வீடுகளை நோக்கிச் சென்று அவர்கள் இடும் பிச்சையை ஏற்று, மிக்க ஈடுபாடு உடையவன் என்று அடியவர் பரவி ஏத்த, இரு காதுகளிலும் தோடும் குழையும் அணிந்து யானையின் தோலைப் போர்த்துள்ளவன். |
| **2413.** சாயனன் மாதொர்பாகன் விதியாய சோதி<br>கதியாக நின்ற கடவுள்<br>ஆயக மென்னுள்வந்த வருளாய செல்வன்<br>இருளாய கண்ட னவனித்<br>தாயென நின்றுகந்த தலைவன் விரும்பு<br>மலையின்கண் வந்து தொழுவார்<br>நாயக னென்றிறைஞ்சி மறையோர்கள் பேணும்<br>நறையூரின் நம்ப னவனே. | தாங்கள் விரும்பிய மலையின்கண் இருந்து தவம் முயலும் சித்தர்கள் இறங்கி வந்து வழிபடுகின்ற, சித்தர்கட்கு ஈசுவரன் என்று மறையவரால் போற்றிப் பேணும் நறையூர்ச் சித்தீச்சரத்து இறைவனாகிய அவன், அழகிய மலைமாதினை ஒரு பாகமாகக் கொண்டவன். எல்லோர்க்கும் ஊழை வரையறுக்கும் சோதி. சிவகதியாக நிற்கும் கடவுள். என் மனத்திடை வந்து அருள் புரியும் செல்வன். இருண்ட கண்டத்தினன். தாயெனத் தலையளி செய்யும் தலைவன். |
| **2414.** நெதிபடு மெய்யெமைய னிறைசோலை சுற்றி<br>நிகழம்ப லத்தின் நடுவே<br>அதிர்பட ஆடவல்ல லமரர்க் கொருத்தன்<br>எமர்சுற்ற மாய இறைவன்<br>மதிபடு சென்னிமன்னு சடைதாழ வந்து<br>விடையேறி யில்ப– கொள்வான்<br>நதிபட வுந்திவந்து வயல்வாளை பாயும்<br>நறையூரின் நம்ப னவனே. | வாளைமீன்கள் நதி வழியாக நீந்தி வந்து வயல் களிற் பாயும் நறையூரில் எழுந்தருளிய இறைவன், சேமநிதியாகக் கருதப்படும் மெய்ப்பொருள், எமக்குத் தலைவன், நிறைந்த சோலைகள் சூழ்ந்த அம்பலத்தில் அதிர்பட ஆடுபவன். அமரர்க்குத் தலைவன். அடியவர்க்குச் சுற்றமாய் விளங்குபவன். பிறை பொருந்திய சடை தாழ்ந்து தொங்க விடை ஏறி வந்து வீடுகள் தோறும் ப– ஏற்பவன். |

| | |
|---|---|
| **2415.** கணிகையொர் சென்னிமன்னு மதுவன்னி கொன்றை<br>மலர்துன்று செஞ் சடையினான்<br>பணிகையின் முன்னிலங்க வருவேட மன்னு<br>பலவாகி நின்ற பரமன்<br>அணுகிய வேதவோசை யகலங்க மாறின்<br>பொருளான ஆதி யருளான்<br>நணுகிய தொண்டர்கூடி மலர்தூவி யேத்து<br>நறையூரின் நம்ப னவனே. | அருள் பெற தன்னை நண்ணிய தொண்டர்கள் மலர் தூவி ஏத்த நறையூரில் விளங்கும் இறைவன். கங்கை தங்கிய முடி மீது வன்னி, கொன்றை மலர் முத–யன பொருந்திய சடையினை உடையவன். வணங்குதற்கு முன்னரே அவர்கள் விரும்பும் வடிவங்கள் பலவாகத் தோன்றி அருள்புரிபவன். தன்னை அணுகிய வேதங்களின் ஓசை, அகன்ற ஆறு அங்கங்களின் பொருளாக விளங்கும் கருணையாளன். |
| **2416.** ஒளிர்தரு கின்றமேனி யுருவெங்கு மங்க<br>மவையார ஆட லரவம்<br>மிளிர்தரு கையிலங்க வனலேந்தி யாடும்<br>விகிர்தன் விடங்கொண் மிடறன்<br>துளிதரு சோலையாலை தொழின்மேவ வேத<br>மெழிலார வென்றி யருளும்<br>நளிர்மதி சேருமாட மடவார்க ளாரு<br>நறையூரின் நம்ப னவனே. | தேன் துளிக்கும் சோலைகளையும், கரும்பினைப் பிழிந்து வெல்லம் ஆக்கும் தொழிலையும் வேத முழக்கங்களின் எழுச்சியையும், வெற்றி வழங்கும் செல்வவளம் உடைய வானளாவிய, மடவார்கள் வாழும் மாடவீடுகளையும் உடைய நறையூரில் எழுந்தருளிய இறைவன் ஒளிதரும் தன் திருமேனியிலுள்ள அங்கங்கள் எங்கும் அரவுகள் ஆட, கையில் விளங்கும் அனலை ஏந்தி ஆடும் விகிர்தன். விடம் பொருந்திய கண்டத்தினன். |
| **2417.** அடலெரு தேறுகந்த வதிருங் கழற்கள்<br>ளெதிருஞ் சிலம்பொ டிசையக்<br>கட–டை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன்<br>முனிவுற் றிலங்கை யரையன்<br>உடலொடு தோளனைத்து முடிபத் திறுத்தும்<br>இசைகேட் டிரங்கி யொருவாள்<br>நடலைகள் தீர்த்துநல்கி நமையாள வல்ல<br>நறையூரின் நம்ப னவனே. | இலங்கை மன்னனாகிய இராவணனின் உடல் தோள் பத்துத் தலைகள் ஆகியவற்றை நெரித்துப் பின் அவனது இசையைக் கேட்டு இரங்கி அவன் துன்பங்களைத் தவிர்த்து ஒப்பற்ற வாளைத் தந்து கருணை காட்டியவனாய் நம்மை ஆளுதற் பொருட்டு நறையூரில் எழுந்தருளிய இறைவன் வ–ய எருதினை உகந்தவன். அதிரும் கழல்களோடு ஒருபாதியில் சிலம்பு ஒ–க்க வருபவன். கட–டையே தோன்றிய நஞ்சினை உண்டு கனிவு பொருந்தக் கண்டத்தில் நிறுத்தியோன். |
| **2418.** குலமலர் மேவினானும் மிகுமாய னாலும்<br>எதிர்கூடி நேடி நினைவுற்<br>றிலபல வெய்தொணாமை யெரியா யுயர்ந்த<br>பெரியா னிலங்கு சடையன்<br>சிலபல தொண்டர்நின்று பெருமைக்கள் பேச<br>வருமைத் திகழ்ந்த பொழி–ன்<br>நலமலர் சிந்தவாச மணநாறு வீதி<br>நறையூரின் நம்ப னவனே. | சிலபல தொண்டர்கள் நின்று பெருமைகள் பேசிப் பரவக் கரியமேகங்கள் விளங்கும் பொழி–ன் நல்ல மலர்கள் சிந்துதலால் மணம் வீசும் வீதிகளை உடைய நறையூரில் எழுந்தருளிய நம்பனாகிய இறைவன் மலர்களிற் சிறந்த தாமரை மலர் மேல் விளங்கும் பிரமனும் புகழ்மிக்க திருமாலும் எதிர்கூடித் தேடியும் அவர்கள் நினைப்பில் உற்றிலாத பல சிறப்பினனாய் அவர்கள் காணமுடியாதபடி, தீயாய் ஓங்கிய பெரியோன், விளங்கும் சடைமுடியை உடையவன். |

**2419.** துவருறுகின்ற ஆடை யுடல்போர்த் துழன்ற
அவர்தாமும் அல்ல சமணும்
கவருறு சிந்தையாள ருரைநீத் துகந்த
பெருமான் பிறங்கு சடையன்
தவம— பத்தர்சித்தர் மறையாளர் பேண
முறைமாதர் பாடி மருவும்
நவமணி துன்றுகோயி லொளிபொன்செய் மாட
நறையூரின் நம்ப னவனே.

தவம் நிறைந்த பத்தர்கள், சித்தர்கள், மறை வல்லோர் விரும்பி வழிபடவும், மாதர்கள் முறையாகப் பாடி அடையவும், நவமணிகள் செறிந்த கோயிலையும் ஒளிதரும் பொன்னால் இயன்ற மாடவீடுகளையும் கொண்டுள்ள நறையூரில் விளங்கும் இறைவன், துவர் ஏற்றிய ஆடையை உட–ல் போர்த்துத் திரியும் தேரரும் அவரல்லாத சமணர்களும் ஆகிய மாறுபட்ட மனம் உடையோர் உரைகளைக் கடந்து நிற்கும் பெருமான் ஆவன். அவன் விளங்கும் சடைமுடி உடையோன்.

**2420.** கான லுலாவி ஓதம் எதிர்மல்கு காழி
மிகுபந்தன் முந்தி யுணர
ஞான முலாவுசிந்தை அடிவைத் துகந்த
நறையூரின் நம்ப னவனை
ஈனமி லாதவண்ணம் இசையா லுரைத்த
தமிழ்மாலை பத்து நினைவார்
வானநி லாவவல்லர் நிலமெங்கு நின்று
வழிபாடு செய்யு மிகவே.

ஓதநீர் கடற்கரைச் சோலைகளைக் கடந்து வந்து நிறையும் காழிப்பதியில் தோன்றிய புகழ் மிகு ஞானசம்பந்தன் இளமையில் உணரும் வண்ணம் ஞானம் உலாவுகின்ற மனத்தில் தன் திருவடிகளைப் பதிய வைத்து உகந்த நறையூரில் விளங்கும் இறைவனை, குற்றமற்ற வகையில் இசையால் உரைத்த தமிழ் மாலையாகிய இப்பத்துப் பாடல்களையும் உணர வல்லவர் நிலவுலகம் நின்று வழிபடுமாறு வானம் நிலாவ வல்லவர் ஆவர்.

## 88. தென்திருமுல்லைவாயில்

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 88

**2421.** துளிமண்டி யுண்டு நிறம்வந்த கண்டன்
நடமன்னு துன்னு சுடரோன்
ஒளிமண்டி யும்பர் உலகங் கடந்த
உமைபங்கன் எங்க ளரனூர்
களிமண்டு சோலை கழனிக் கலந்த
கமலங்கள் தங்கு மதுவிற்
தெளிமண்டி யுண்டு சிறைவண்டு பாடும்
திருமுல்லை வாயி –துவே.

விடத்தினை விரும்பி உண்டு அதனால் கருமை நிறம் பெற்ற கண்டத்தினனும், நடனமாடும் ஒளி பொருந்திய வடிவினனும் பேரொளிப் பிழம்பாய் உம்பர் உலகத்தைக் கடந்த உமைபங்கனும் ஆகிய எங்கள் அரனது ஊர், களிப்புத்தரும் சோலையை அடுத்துள்ள வயல்களில் மலர்ந்த தாமரைகளில் தங்கிய மதுவின் தெளிவை வயிறார உண்டு சிறை வண்டுகள் பாடும் திருமுல்லை வாயிலாகிய இத்தலம் ஆகும்.

| | |
|---|---|
| **2422.** பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன்<br>அயனைப் படைத்த பரமன்<br>அரவத் தொடங்க மவைகட்டி யெங்கு<br>மரவிக்க நின்ற வரனூர்<br>உருவத்தின் மிக்க வொளிர்சங்கொ டிப்பி<br>யவையோத மோத வெருவித்<br>தெருவத்தில் வந்து செழுமுத் தலைக்கொள்<br>திருமுல்லை வாயி —துவே. | பக்குவம் வந்த காலத்தில் வந்து பேரின்பப் பயன் அருளவல்ல பண்பினனும், அயனைப் படைத்த பரமனும், பாம்பினை உடல் முழுதும் கட்டிக் கொண்டு எல்லோராலும் போற்றிப் புகழப் படுவோனுமாகிய அரனது ஊர், உருவத்தால் பெரிய சங்குகளும் சிப்பிகளும் ஒத நீர் மோதுவதைக் கண்டு வெருவித் தெருவில் வந்து செழுமையான முத்துக்களைப் பல இடங்களிலும் ஈனும் திருமுல்லை வாயிலாகிய இத்தலமாகும். |
| **2423.** வாராத நாடன் வருவார்தம் வில்—ன்<br>உருமெல்கி நாளு முருகில்<br>ஆராத வின்ப னகலாத அன்பன்<br>அருண்மேவி நின்ற வரனூர்<br>பேராத சோதி பிரியாத மார்பின்<br>அலர்மேவு பேதை பிரியாள்<br>தீராத காத னெதிநேர நீடு<br>திருமுல்லை வாயி —துவே. | மீண்டும் வாராத பேரின்ப நாடுடையவன். உலகிற் பிறந்தோர் வானவில் போன்று விரைவில் தோன்றி மறையும் இவ்வுடல் மெ—யுமாறு உருகி வழிபடில் ஆராத இன்பம் அருள்பவன். அகலாத அன்புடையவன். அத்தகைய அரன் அருள் செய்ய எழுந்தருளியுள்ள ஊர், நீங்கா ஒளியுடைய திருமால் மார்பை விடுத்துப் பிரியாத திருமகளின் அன்புடன் செல்வம் தழைத்தோங்கும் பெருமை மிக்க திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |
| **2424.** ஒன்றொன்றொ டொன்று மொருநான்கொ டைந்து<br>மிருமூன்றோ டேழு முடனாய்<br>அன்றின்றொ டொன்று மறிவான வர்க்கும்<br>அறியாமை நின்ற வரனூர்<br>குன்றொன்றொ டொன்று குலையொன்றொ டொன்று<br>கொடியொன்றொ டொன்று குழுமிச்<br>சென்றொன்றொ டொன்று செறிவா னிறைந்த<br>திருமுல்லை வாயி —துவே. | ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கு. புருட தத்துவம் இருபத்தைந்தாவது தத்துவம். இவ்விருபத்தைந்து தத்துவங்கட்கும் வேறாய் நிற்பவன் இறைவன். இதனை அறியாதார் இருபத்தைந்தாவதாய் உள்ள உயிரையே பதி என மயங்குவர். இவ்வாறு தத்துவ ஆராய்ச்சியாளர்கள் அறியாது தடுமாறுகின்ற நிலையில் விளங்கும் அரனது ஊர், குன்றுகள் ஒன்றோடு ஒன்று இணைவன போலும் மாடவீடுகளும், குலைகளும் கொடிகளும் ஒன்றோடு ஒன்று குழுமிச் செறிவால் நிறைந்துள்ள திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |
| **2425.** கொம்பன்ன மின்னி னிடையாளொர் கூறன்<br>விடைநாளு மேறு குழகன்<br>நம்பன்னெ மன்பன் மறைநாவன் வானின்<br>மதியேறு சென்னி யரனூர்<br>அம்பன்ன வொண்க ணவரா டரங்கின்<br>அணிகோ புரங்க ளழகார்<br>செம்பொன்ன செவ்வி தருமாட நீடு<br>திருமுல்லை வாயி —துவே. | பூங்கொம்பு போன்றவளும் மின்னல் போலும் இடையினளும் ஆகிய உமையம்மையை ஒரு கூற்றாகக் கொண்டவன். நாள்தோறும் விடைமீது ஏறிவரும் இளையோன். நம் மேல் அன்புடையோன். மறையோதும் நாவினன். வானில் செல்லும் மதி பொருந்திய சென்னியை உடைய அவ்வரனது ஊர், அம்பு போன்ற ஒளி பொருந்திய கண்ணினை உடைய குலமகளிர் ஆடும் அரங்குகளும், அழகிய கோபுரங்களும் உடையதாய்ச் செம் பொன்னின் அழகைத் தரும் மாடவீடுகள் கொண்ட திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |

| | |
|---|---|
| **2426.** ஊனேறு வே– னுருவேறு கண்ணி<br>யொளியேறு கொண்ட வொருவன்<br>ஆனேற தேறி யழகேறு நீறன்<br>அரவேறு பூணு மரனூர்<br>மானேறு கொல்லை மயிலேறி வந்து<br>குயிலேறு சோலை மருவித்<br>தேனேறு மாவின் வளமேறி யாடு<br>திருமுல்லை வாயி –துவே. | ஊன் பொருந்திய வேல் போன்ற கண்ணினள் ஆகிய உமையம்மையின் கருநிற ஒளியைப் பெற்றவன். ஆனேற்றின் மிசை ஏறி, அழகு தரும் திருநீற்றை அணிந்தவன். பாம்பினை அணிகலனாகப் பூண்டவன். அவ்வரனது ஊர், மான்கள் துள்ளி ஆடும் முல்லை நிலத்தையும், மயிலும் குயிலும் வாழும் சோலைகளையும், தேனைப் பொருந்திய வண்டுகளைக் கொண்ட வளத்தையும் உடைய திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |
| **2427.** நெஞ்சார நீடு நினைவாரை மூடு<br>வினைதேய நின்ற நிமலன்<br>அஞ்சாடு சென்னி அரவாடு கையன்<br>அனலாடு மேனி யரனூர்<br>மஞ்சாரு மாட மனைதோறும் ஐயம்<br>உளதென்று வைகி வரினுஞ்<br>செஞ்சா– நெல்–ன் வளர்சோ றளிக்கொள்<br>திருமுல்லை வாயி –துவே. | மனம் பொருந்த நீடு நினையும் அடியவர்களின் வினைகளைப் போக்கியருள்பவன். ஆனைந்தாடுபவன். அரவு ஆடும் கையன். அனல் போன்ற மேனியன். அவ்அரனது ஊர், மேகங்கள் தங்கும் உயரிய மாடங்களைக் கொண்ட மனைகள் தோறும் பிச்சையேற்க யார்வரினும் செந்நெற் சோறளித்து மகிழ்வோர் வாழும் திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |
| **2428.** வரைவந் தெடுத்த வ–வா ளரக்கன்<br>முடிபத்து மிற்று நெரிய<br>உரைவந்த பொன்னி னுருவந்த மேனி<br>உமைபங்க னெங்க ளரனூர்<br>வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து<br>மிளிர்கின்ற பொன்னி வடபால்<br>திரைவந்து வந்து செறிதேற லாடு<br>திருமுல்லை வாயி –துவே. | கயிலைமலையை வந்தெடுத்த வ–ய வாளை உடைய அரக்கனாகிய இராவணனின் முடிகள் பத்தையும் நெரியச் செய்தவனும், உரைத்துக் காணப் பெறும் பொன்போலும் மேனியனாகிய உமையம்மை பங்கனும் ஆகிய எங்கள் அரனது ஊர், மலையி–ருந்து சந்தனம் அகில் ஆகியவற்றை அடித்து வந்து விளங்கும் பொன்னியாற்றின் திரைகள் வீசும் வடகரையில் செறிந்த தேன் அடைகள் ஆடும் திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |
| **2429.** மேலோடி நீடு விளையாடல் மேவு<br>விரிநூலன் வேத முதல்வன்<br>பாலாடு மேனி கரியானு முன்னி<br>யவர்தேட நின்ற பரனூர்<br>காலாடு நீல மலர்துன்றி நின்ற<br>கதிரேறு செந்நெல் வய–ற்<br>சேலோடு வாளை குதிகொள்ள மல்கு<br>திருமுல்லை வாயி –துவே. | திருமேனிமேல் நீண்டு ஓடி விளையாடலைப் பொருந்திய முப்புரிநூலை உடையவன். வேத முதல்வன். பிரமனும் திருமாலும் தேடிக்காணாது திகைக்குமாறு உயர்ந்து நின்றோன். அவனது ஊர், காற்றில் அசையும் நீலமலர்கள் நிறைந்து நிற்பதாய், கதிர் மிகுந்த செந்நெல் வயல்களில் சேலும் வாளையும் குதிகொள்ளும் திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும். |

**2430.** பனைமல்கு திண்கை மதமா வுரித்த
பரமன்ன நம்பன் அடியே
நினைவன்ன சிந்தை யடையாத தேரர்
அமண்மாய நின்ற வரனூர்
வனமல்கு கைதை வகுளங்க ளெங்கு
முகுளங்க ளெங்கு நெரியச்
சினைமல்கு புன்னை திகழ்வாச நாறு
திருமுல்லை வாயி –துவே.

பனைபோன்ற திண்ணிய துதிக்கையை உடைய மதயானையை உரித்த பரமன். நம்பால் அன்புடையவன். தன் திருவடியை நினையாத சமணர், தேரர் ஆகியோர் அழிந்தொழிய நிற்பவன். அப்பெருமானது ஊர், வனங்களில் தாழை மரங்கள், மகிழ மரங்கள் ஆகியன எங்கும் நிறைந்த மொட்டுக்களைத் தரவும், அரும்புகளை உடைய புன்னை மரங்களின் மணம் வீசவும் விளங்கும் திருமுல்லை வாயிலாகிய இத்தலமேயாகும்.

**2431.** அணிகொண்ட கோதை யவணன்று மேத்த
வருள்செய்த வெந்தை மருவார்
திணிகொண்ட மூன்று புரமெய்த வில்–
திருமுல்லை வாயி –தன்மேல்
தணிகொண்ட சிந்தை யவர்காழி ஞான
மிகுபந்தன் ஒண் தமிழ்களின்
அணிகொண்ட பத்து மிசைபாடு பத்தர்
அகல்வானம் ஆள்வர் மிகவே.

அணிகொண்ட கோதை என்ற திருப்பெயருடைய இத்தலத்து அம்பிகை மிகவும் ஏத்தி வழிபட அவளுக்கு அருள் செய்த எந்தையாவர். பகைமை கொண்ட அசுரர்களின் வ–ய முப்புரங்களை எய்தழித்த வில்லை உடையவர். அப்பெருமான் எழுந்தருளிய திருமுல்லை வாயிலாகிய இத்தலத்தின் மீது தணித்த சிந்தை உடையவனும் காழிப்பதியில் தோன்றியவனுமாகிய ஞானம் மிக்க சம்பந்தன் பாடிய ஒண் தமிழ்ப் பாடல்களின் மாலையாக அமைந்த இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசையோடு பாடும் பக்தர்கள் அகன்ற வானுலகை மிகவும் அரசாள்வர்.

## 89. திருக்கொச்சைவயம்

பண் : பியந்தைக்காந்தாரம் | பதிக எண் : 89

**2432.** அறையும் பூம்புன லோடும்
ஆடர வச்சடை தன்மேற்
பிறையுஞ் சூடுவர் மார்பிற்
பெண்ணொரு பாக மமர்ந்தார்
மறையி னொல்லொ– யோவா
மந்திர வேள்வி யறாத
குறைவி லந்தணர் வாழும்
கொச்சை வயமமர்ந் தாரே.

வேதம் ஓதுவதால் உண்டாகும் ஒல்லென்னும் ஒ– நீங்காத மந்திரங்களோடு கூடிய வேள்விகள் நிகழ்வதும் குறைவற்ற அந்தணர்கள் வாழ்வதுமாய கொச்சை வயத்தில் எழுந்தருளியுள்ள இறைவர், ஒ–க்கின்ற அழகிய கங்கையோடு ஆடும் பாம்பையும் அணிந்துள்ள சடைமேல், பிறையையும் சூடியிருப்பவர். திருமேனியில் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2433.** சுண்ணத்தர் தோலொடு நூல்சேர்<br>மார்பினர் துன்னிய பூதக்<br>கண்ணத்தர் வெங்கன லேந்திக்<br>கங்குனின் றாடுவர் கேடில்<br>எண்ணத்தர் கேள்விநல் வேள்வி<br>யறாதவர் மாலெரி யோம்பும்<br>வண்ணத்த வந்தணர் வாழுங்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | வேதங்களை உணர்ந்தவர்களும், நல்ல வேள்விகளைத் தவறாது செய்பவரும், மேம்பட்ட எரியோம்பும் தன்மையர் என்று சொல்லத் தக்கவருமாகிய அந்தணர் வாழும் கொச்சை வயத்தில் எழுந்தருளிய இறைவர், திருநீறு அணிந்தவர். மான்தோலோடு முப்புரிநூலை அணிந்த மார்பினர். சூழ்ந்த பூதகணங்களை உடையவர். கொடிய கனலைக் கையில்ஏந்தி இரவில் நடனம் புரிபவர். குற்றமற்ற மனத்தில் உறைபவர். |
| **2434.** பாலை யன்னவெண் ணீறு<br>பூசுவர் பல்சடை தாழ<br>மாலை யாடுவர் கீத<br>மாமறை பாடுதன் மகிழ்வர்<br>வேலை மால்கட லோதம்<br>வெண்டிரை கரைமிசை விளங்குங்<br>கோல மாமணி சிந்துங்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | வேலை எனப்படும் பெரிய கடல் நீரின் வெள்ளமாகப் பெருகிய ஓதத்தின் அலைகள் அழகிய சிறந்த மணிகளைக் கரைமிசைச் சிந்தும் கொச்சை வயத்தில் எழுந்தருளிய இறைவர், பால் போன்ற திருவெண்ணீற்றைப் பூசியவர். சடைகள் பலவும் தாழ்ந்து தொங்க, மாலைக் காலத்தே நடனம் புரிபவர். வேதகீதங்கள் பாடுதலை விரும்புபவர். |
| **2435.** கடிகொள் கூவிள மத்தங்<br>கமழ்சடை நெடுமுடிக் கணிவர்<br>பொடிகள் பூசிய மார்பிற்<br>புனைவர்நன் மங்கையொர் பங்கர்<br>கடிகொ ணீடொ– சங்கி<br>னொ–யொடு கலையொ– துதைந்து<br>கொடிக ளோங்கிய மாடக்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | மணவீடுகளில் நீண்டு ஒ–க்கும் சங்குகளின் ஒ–யோடு, கலைகள் பலவற்றின் ஒ–களும் சேர்ந்து ஒ–ப்பதும் நீண்ட கொடிகள் விளங்கும் மாடங்களை உடையதுமான கொச்சை வயத்தில் விளங்கும் இறைவர். வில்வம், ஊமத்தை ஆகியவற்றின் மணம் கமழ்கின்ற சடையின்கண் நீண்ட கண்ணி சூடியவர். திருநீறு அணிந்துள்ள மார்பின்கண் கொண்டுள்ள உமையம்மைக்குத் தம் திருமேனியில் பாதியை வழங்கியவர். |
| **2436.** ஆடன் மாமதி யுடையார்<br>ஆயின பாரிடஞ் சூழ<br>வாடல் வெண்டலை யேந்தி<br>வையக மிடுப–க் குழல்வார்<br>ஆடன் மாமட மஞ்ஞை<br>யணிதிகழ் பேடையொ டாடிக்<br>கூடு தண்பொழில் சூழ்ந்த<br>கொச்சை வயமமர்ந் தாரே. | ஆடும் இளமயில்கள் அழகிய தம் பெண்ணினத்தோடு மகிழ்ந்து கூடும் தண்ணிய பொழில்கள் சூழ்ந்த கொச்சைவயத்தில் அமர்ந்துள்ள பெருமான், வானவெளியில் திரியும் சிறந்த மதியைச் சூடியவர். பொருந்திய பூதகணங்கள் சூழ ஊன்வற்றிய வெண்டலையைக் கையில் ஏந்தி உலகில் மகளிர் இடும் பிச்சைக்கு உழல்பவர். |

| | |
|---|---|
| **2437.** மண்டு கங்கையும் அரவும்<br>மல்கிய வளர்சடை தன்மேற்<br>றுண்ட வெண்பிறை யணிவர்<br>தொல்வரை வில்லது வாக<br>விண்ட தானவ ரரணம்<br>வெவ்வழ லெரிகொள விடைமேற்<br>கொண்ட கோலம துடையார்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | கொச்சைவயத்தில் அமர்ந்துள்ள பெருமான் நீர் செறிந்த கங்கையும் பாம்பும் தங்கிய நீண்ட சடைமுடியில், வெள்ளிய பிறைத் துண்டத்தை அணிந்தவர். பழமையான மேருமலையை வில்லாகக் கொண்டு பகைகொண்ட அசுரர்தம் மூவரணங்களும் கொடிய எரியில் வெந்தழியுமாறு செய்து, விடைமீது அருள் புரியும் கோலத்துடன் காட்சி தருபவர். |
| **2438.** அன்ற வானிழ லமர்ந்து<br>வறவுரை நால்வர்க் கருளிப்<br>பொன்றி னார்தலை யோட்டில்<br>உண்பது பொருகட –லங்கை<br>வென்றி வேந்தனை யொல்க<br>வூன்றிய விர–னர் வான்றோய்<br>குன்ற மன்னபொன் மாடக்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | வானில் தோயும் மலை போன்ற அழகிய மாட வீடுகளைக் கொண்ட கொச்சை வயத்தில் அமர்ந்துள்ள இறைவர், அக்காலத்தில் ஆல் நிழற்கீழ் இருந்து நால்வர்க்கு அறம் அருளியவர். இறந்த பிரமனது தலையோட்டில் உண்பவர். கடல் பொரும் இலங்கை மன்னன் இராவணனை வ–யழியுமாறு ஊன்றிய கால் விர–னர். |
| **2439.** சீர்கொண் மாமல ரானுஞ்<br>செங்கண்மா லென்றிவ ரேத்த<br>ஏர்கொள் வெவ்வழ லாகி<br>எங்கும் உறநிமிர்ந் தாரும்<br>பார்கொள் விண்ணழல் கானீர்ப்<br>பண்பினர் பான்மொழி யோடுங்<br>கூர்கொள் வேல்வல னேந்திக்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | பால் போன்று இனிய மொழி பேசுபவளாகிய உமையம்மையாரோடு கையில் கூரிய வேலை வெற்றிபெற ஏந்தியவராய்க் கொச்சை வயத்தில் விளங்கும் பெருமானார், சிறப்பமைந்த தாமரை மலர் மேல் உறையும் நான்முகனும் செங்கண் மாலும் போற்றித் துதிக்க அழகிய கொடிய அழலுருவாகி நிமிர்ந்தவர். நிலம் விண் முதலான ஐம் பூத வடிவினர். |
| **2440.** குண்டர் வண்டுவ ராடை<br>போர்த்ததொர் கொள்கை யினார்கள்<br>மிண்டர் பேசிய பேச்சு<br>மெய்யல மையணி கண்டன்<br>பண்டை நம்வினை தீர்க்கும்<br>பண்பின ரொண்கொடி யோடுங்<br>கொண்டல் சேர்மண மாடக்<br>கொச்சை வயமமர்ந் தாரே. | குண்டர்களாகிய சமணர்களும், செறிந்த துவர் ஊட்டப்பட்ட ஆடையைப் போர்த்துள்ள தனிக் கொள்கையுடைய புத்தர்களுமாகிய வ–யர்கள் பேசும் பேச்சுக்கள் மெய்யல்லாதவை. அவற்றைக் கருதாதவர்க்கு அருள்புரிபவர். நீலமணி போன்ற கண்டத்தை உடையவர். நாம் செய்த பழவினைகளைத் தீர்த்தருளும் பண்பினர். ஒளி பொருந்திய கொடி போன்ற உமையம்மையாரோடு மேகங்கள் தவழும் மணி மாடங்களை உடைய கொச்சை வயத்தில் எழுந்தருளியிருப்பவர். |

| | |
|---|---|
| **2441.** கொந்த ணிபொழில் சூழ்ந்த<br>கொச்சை வயநகர் மேய<br>அந்த ணன்அடி யேத்தும்<br>அருமறை ஞானசம் பந்தன்<br>சந்த மார்ந்தழ காய<br>தண்டமிழ் மாலைவல் லோர்போய்<br>முந்தி வானவ ரோடும்<br>புகவலர் முனைகெட வினையே. | கொத்தாக மலர்ந்த பூக்களுடன் கூடிய அழகிய பொழில் சூழ்ந்த கொச்சை வயம் என்னும் நகரில் மேவிய அந்தணனாகிய இறைவன் திருவடிகளை ஏத்தும் அருமறைவல்ல ஞானசம்பந்தன் பாடிய சந்தம் பொருந்திய அழகிய இத்தமிழ் மாலையை ஓதிப் பரவ வல்லவர், வினைகள் கெட முற்படச் சென்று வானவர்களோடு அவர்கள் உலகில் புகவல்லவர் ஆவர். |

## 90. திருநெல்வாயிலரத்துறை

பண் : பியந்தைக்காந்தாரம் பதிக எண் : 90

| | |
|---|---|
| **2442.** எந்தை யீசனெம் பெருமான்<br>ஏறமர் கடவுளென் றேத்திச்<br>சிந்தை செய்பவர்க் கல்லாற்<br>சென்றுகை கூடுவ தன்றால்<br>கந்த மாமல ருந்திக்<br>கடும்புன னிவாமல்கு கரைமேல்<br>அந்தண் சோலை நெல்வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | மணம் பொருந்திய மலர்களை உந்திக்கொண்டு பெருகிவரும் நீரை உடைய நிவாநதிக்கரைமேல் அழகிய குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருநெல்வாயில் அரத்துறை அடிகளின் திருவருள், எம் தந்தை, ஈசன், பெரியோன், ஆனேற்றை ஏறிவருவோன் என்று அவன் பெயர்களைப் பலமுறை சொல்– ஏத்தி மனம் பொருந்தி வழிபட வல்லவர்கட்கு அல்லால், ஏனையோர்க்குக் கைகூடாதது. |
| **2443.** ஈர வார்சடை தன்மேல்<br>இளம்பிறை யணிந்தவெம் பெருமான்<br>சீருஞ் செல்வமு மேத்தாச்<br>சிதடர்கள் தொழச்செல்வ தன்றால்<br>வாரி மாமல ருந்தி<br>வருபுன னிவாமல்கு கரைமேல்<br>ஆருஞ் சோலை நெல்வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | சிறந்த மலர்களை வாரிக்கொண்டு உந்திவரும் நீரை உடைய நிவாநதிக்கரைமேல் பொருந்திய சோலைகள் சூழ்ந்த நெல்வாயில் அரத்துறையில் விளங்கும் அடிகளின் திருவருள், குளிர்ந்த நீண்ட சடைமேல் இளம்பிறை அணிந்த எம்பெருமானே என்று கூறி அவன் சீரையும் செல்வத்தையும் ஏத்தாத பேதையர்கள் தொழுது பெறுதற்கு இயலாதது. |
| **2444.** பிணி கலந்தபுன் சடைமேற்<br>பிறையணி சிவனெனப் பேணிப்<br>பணி கலந்துசெய் யாத<br>பாவிகள் தொழச்செல்வ தன்றால்<br>மணி கலந்துபொன் னுந்தி<br>வருபுன னிவாமல்கு கரைமேல்<br>அணி கலந்தநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | மணிகளையும் பொன்னையும் உந்திக் கொண்டு வரும் நீரை உடைய நிவாநதிக் கரைமேல் அழகுற அமைந்த நெல் வாயில் அரத்துறை அடிகள் தம் திருவருள் பிணிப்போடு அமைந்த மென்மையான சடைமீது பிறையணிந்துள்ள சிவனே எனப் பக்தி செய்து அவன் திருத்தொண்டுகளை அன்போடு செய்யாத பாவிகள் தொழுது பெறுதற்கு இயலாதது. |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **2445.** துன்னவாடையொன் றுடுத்துத்<br>தூயவெண் ணீற்றின ராகி<br>உன்னி நைபவர்க் கல்லால்<br>ஒன்றுங்கை கூடுவ தன்றால்<br>பொன்னு மாமணி யுந்திப்<br>பொருபுன நிவாமல்கு கரைமேல்<br>அன்ன மாருநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | பொன்னையும் சிறந்த மணிகளையும் உந்திக் கொண்டுவரும் நீரை உடைய நிவா நதிக்கரை மேல் அன்னங்கள் தங்கி மகிழும் நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் திருவருள், தைத்த கோவண ஆடை ஒன்றைக் கட்டிக் கொண்டு தூய வெண்ணீறணிந்து திகழும் அவன் பெருமைகளை எண்ணி நைந்துருகுபவர்கட்கு அல்லால் ஏனையோருக்குக் கைகூடுவதன்று. |
| **2446.** வெருகு ரிஞ்சுவெங் காட்டில்<br>ஆடிய விமலனென் றுள்கி<br>உருகி நைபவர்க் கல்லால்<br>ஒன்றுங்கை கூடுவ தன்றால்<br>முருகு ரிஞ்சுபூஞ் சோலை<br>மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்<br>தருகு ரிஞ்சுநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | மணம் தவழும் பூஞ்சோலைகளில் பூத்த மணம் மொய்க்கும் மலர்களைச் சுமந்து ஓடிவரும் நிவா நதி அருகில் வந்து பொருந்திச் செல்லும் நெல்வாயில் அரத்துறையில் விளங்கும் அடிகளின் திருவருள், காட்டுப்பூனைகள் வாழும் கொடிய சுடுகாட்டில் ஆடும் விமலனே! என்று அழைத்து அவன் பெருமைகளை எண்ணி மனம் உருகுபவர்கட்கு அல்லால் ஏனையோர்க்கு ஒரு சிறிதும் கைகூடாதது. |
| **2447.** உரவு நீர்சடைக் கரந்த<br>வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்<br>பரவி நைபவர்க் கல்லாற்<br>பரிந்துகை கூடுவ தன்றால்<br>குரவ நீடுயர் சோலைக்<br>குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்<br>அரவ மாருநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | குராமரங்கள் நீண்டுயர்ந்த சோலைகளில் ஓடிவரும் குளிர்ந்த நீரை உடைய நிவா நதிக்கரை மேல் விளங்கும் நீர்ப்பாம்புகள் இளைப்பாறி மகிழ்வதான நெல்வாயில் அரத்துறை அடிகளின் திருவருள், வ–மை பொருந்திய கங்கை வெள்ளத்தைத் தன் சடைமிசை ஒளித்த ஒப்பற்றவனே என்று மனம் குளிர்ந்து ஏத்தி வணங்கி மனம் உருகுபவர்க்கு அல்லால் ஏனையோரிடத்து அவன் அன்புகாட்டுவதில்லை ஆத–ன் கைகூடாதது. |
| **2448.** நீல மாமணி மிடற்று<br>நீறணி சிவனெனப் பேணும்<br>சீல மாந்தர்கட் கல்லாற்<br>சென்றுகை கூடுவ தன்றால்<br>கோல மாமல ருந்திக்<br>குளிர்புன நிவாமல்கு கரைமேல்<br>ஆலுஞ் சோலைநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | அழகிய மலர்களை உந்திக் கொண்டு ஓடிவரும் குளிர்ந்த நீரை உடைய நிவாநதிக் கரைமேல் ஆரவாரிக்கும் சோலைகள் சூழ்ந்த நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் திரு அருள், நீலமணி போன்ற கண்டத்தினன், நீறணிந்த சிவன் என விரும்பி வழிபடும் சிவஞானியர்க்கு அல்லால் ஏனையோர்க்குக் கைகூடுவது அரிது. |

| | |
|---|---|
| 2449. செழுந்தண் மால்வரை யெடுத்த<br>செருவ– யிராவண னலற<br>அழுந்த வூன்றிய விரலான்<br>போற்றியென் பார்க்கல்ல தருளான்<br>கொழுங்க னிசுமந் துந்திக்<br>குளிர்புன னிவாமல்கு கரைமேல்<br>அழுந்துஞ் சோலைநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | கொழுமையான கனிகளைச் சுமந்து உந்திவரும் குளிர்ந்த நீரை உடைய நிவாநதிக்கரைமேல் அழுந்திய சோலைகள் சூழ்ந்த நெல்வாயில் அரத்துறை அடிகள்தம் திருவருளை, செழுமையான குளிர்ந்த பெரிய கயிலை மலையைப் பெயர்த்த போர் வ–மிக்க இராவணன் அலறுமாறு அழுந்த ஊன்றிய விரலை உடையவர் என்று போற்ற வல்லார்க்கு அல்லாமல் ஏனையோர்க்குத் தாரார். |
| 2450. நுணங்கு நூலயன் மாலும்<br>இருவரும் நோக்கரி யானை<br>வணங்கி நைபவர்க் கல்லால்<br>வந்துகை கூடுவ தன்றால்<br>மணங்க மழ்ந்துபொன் னுந்தி<br>வருபுன னிவாமல்கு கரைமேல்<br>அணங்குஞ் சோலைநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | மணம் கமழ்ந்து பொன்னுந்தி வரும் நீரை உடைய நிவாநதிக்கரை மேல் அழகு செய்யும் சோலைகள் சூழ்ந்த நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் திருவருள், நுட்பமான நூல்களை அறிந்துணர்ந்த பிரமன் மால் ஆகிய இருவராலும் காணுதற்கு அரிய பொருளாய் இருப்பவனை வணங்கி நைந்து வழிபடுவார்க்கு வாய்க்குமேயன்றி ஏனை யோர்க்குக் கைகூடாதது. |
| 2451. சாக்கி யப்படு வாருஞ்<br>சமண்படு வார்களும் மற்றும்<br>பாக்கி யப்பட கில்லாப்<br>பாவிகள் தொழச்செல்வ தன்றால்<br>பூக்க மழ்ந்துபொன் னுந்திப்<br>பொருபுன னிவாமல்கு கரைமேல்<br>ஆர்க்குஞ் சோலைநெல் வாயில்<br>அரத்துறை அடிகள்தம் அருளே. | மலர்களின் மணம் கமழ்ந்து பொன்னுந்திக் கரையை பொருது வரும் நீரை உடைய நிவா நதிக் கரைமேல் ஒ–க்கின்ற சோலைகளால் சூழப் பெற்று விளங்கும் நெல் வாயில் அரத்துறை அடிகள்தம், திருவருள் சாக்கிய மதத்தில் விழுபவர்களும் சமண சமயத்தைச் சார்பவரும் மற்றும் புறப்புறச் சமயங்களைத் தழுவுவார்களும் ஆகிய, சைவ நெறி சாரும் பாக்கியம் இல்லாத பாவிகளால், தொழுது பெறுவதற்கு இயலாதது. |
| 2452. கறையி னார்பொழில் சூழ்ந்த<br>காழியுண் ஞானசம் பந்தன்<br>அறையும் பூம்புனல் பரந்த<br>அரத்துறை அடிகள்தம் அருளை<br>முறைமை யாற்சொன்ன பாடல்<br>மொழியும் மாந்தர்தம் வினைபோய்ப்<br>பறையு மையுற வில்லைப்<br>பாட்டிவை பத்தும்வல் லார்க்கே. | கருமை நிறம் அமைந்த பொழில்கள் சூழ்ந்துள்ள சீகாழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன், ஒ–க்கின்ற அழகிய புனல் பரவிய நெல்வாயில் அரத்துறை அடிகளின் திருவருளை பெறுதற்குரிய நெறிகளை முறையோடு தெரிவித்துள்ள இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்கட்கு ஐயுறவின்றி வினைகள் நீங்கும். இஃது உறுதி. |

## 91. திருமறைக்காடு

பண் : பியந்தைக்காந்தாரம் — பதிக எண் : 91

**2453.** பொங்கு வெண்மணற் கானற்
பொருகடற் றிரைதவழ் முத்தம்
கங்கு லாரிருள் போழுங்
க–மறைக் காடமர்ந் தார்தாம்
திங்கள் சூடின ரேனுந்
திரிபுர மெரித்தன ரேனும்
எங்கு மெங்கள் பிரானார்
புகழல திகழ்பழி யிலரே.

பொங்கியது போன்ற வெண்மையான மணற் பரப்பில் அமைந்துள்ள சோலையில் கரையைப் பொரும் கடல் அலைகளில் தவழ்ந்து வரும் முத்துக்கள் கங்கு–ல் செறிந்த இருளைப் போழ்ந்து ஒளிதரும், ஒ–மிகுந்த திருமறைக் காட்டில் எழுந்தருளிய இறைவர் திங்கள் சூடினரேனும் திரிபுரத்தை எரித்தனரேனும் எவ்விடத்தும் எங்கள் பிரானார்க்குப் புகழ் ஆகுமேயொழிய, இகழும் பழி உளவாதல் இல்லை.

**2454.** கூனி எம்பிறை சூடிக்
கொடுவரித் தோலுடை யாடை
ஆனி லங்கிள ரைந்தும்
ஆடுவர் பூண்பது மரவம்
கான லங்கழி யோதங்
கரையொடு கதிர்மணி ததும்பத்
தேன லங்கமழ் சோலைத்
திருமறைக் காடமர்ந் தாரே.

கடற்கரைச் சோலைகளில் உப்பங்கழிகளின் வெள்ளம் கரையோடு மோதுதலால் ஒளிதரும் மணிகள் சுடர்விட, தேனின் மணம் கமழும் சோலைகள் சூழ்ந்துள்ள திருமறைக்காட்டில் எழுந்தருளியுள்ள ஈசர் வளைந்த பிறைமதியைச் சூடி வளைந்த கோடுகளைக் கொண்ட பு–த்தோலை ஆடையாக உடுத்து ஆனைந்து ஆடி மகிழ்பவர். அவர் அணிகலனாகப் பூண்டுள்ளது பாம்பாகும்.

**2455.** நுண்ணி தாய்வெளி தாகி
நூல்கிடந் திலங்குபொன் மார்பில்
பண்ணி யாழென முரலும்
பணிமொழி யுமையொரு பாகன்
தண்ணி தாயவெள் ளருவி
சலசல நுரைமணி ததும்பக்
கண்ணி தானுமொர் பிறையார்
க–மறைக் காடமர்ந் தாரே.

ஆரவாரம் மிக்க திருமறைக்காட்டில் எழுந்தருளிய இறைவர், நுண்மையான வெள்ளிய நூல் விளங்கும் அழகிய மார்பினை உடையவர். இசைதரும் யாழ் போல அடக்கமான இனிய மொழிபேசும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். தண்மையான வெள்ளிய அருவி சலசல என்னும் ஒ–யோடு பாய்வதால் பெருகிய கங்கை நுரைத்து மணிகள் ததும்புமாறு சடையிற் கொண்டதோடு இளம் பிறையாகிய முடிமாலையையும் சூடியிருப்பவர் ஆவார்.

**2456.** ஏழை வெண்குரு கயலே
யிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந்
தண்மறைக் காடமர்ந் தார்தாம்
மாழை யங்கய லொண்கண்
மலைமகள் கணவன தடியின்
நீழ லேசர ணாக
நினைபவர் வினைந– விலரே.

அறியாமையை உடைய வெண் குருகு அயலே விளங்கும் தாழை வெண்மடலைத்தன் துணைப் பேடை எனக் கருதிப் புல்கும் தண்ணிய திருமறைக்காட்டில் எழுந்தருளிய இறைவர் இளமையையும், கயல் போன்ற கண்களையும் உடைய மலைமகளின் கணவராவார். அவர் திருவடி நீழலையே சரணாக நினைபவர் வினைகளால் வரும் துன்பங்கள் இலராவர்.

| | |
|---|---|
| **2457.** அரவம் வீக்கிய அரையும்<br>அதிர்கழல் தழுவிய அடியும்<br>பரவ நாஞ்செய்த பாவம்<br>பறைதர வருளுவர் பதிதான்<br>மரவ நீடுயர் சோலை<br>மழலைவண் டியாழ்செயு மறைக்காட்<br>டிரவு மெல்–யும் பகலும்<br>ஏத்துதல் குணமென லாமே. | பாம்பைக் கச்சாகக் கட்டிய இடையையும், ஒ–க்கின்ற கழல் அணிந்த திருவடிகளையும், நாம் பரவினால் நாம் செய்த பாவங்கள் நீங்க அருள் புரியும் சிவபெருமான் எழுந்தருளிய பதி, குங்கும மரங்கள் நீண்டுயர்ந்த சோலைகளில் வண்டுகள் யாழ் போல இசைதரும் திருமறைக்காடாகும். அங்குள்ள பெருமானை இரவும் பகலும் ஏத்துதலே குணமாகும். |
| **2458.** பல்– லோடுகை யேந்திப்<br>பாடியு மாடியும் ப–தேர்<br>அல்லல் வாழ்க்கைய ரேனும்<br>அழகிய தறிவரெம் மடிகள்<br>புல்ல மேறுவர் பூதம்<br>புடைசெல வுழிதர்வர்க் கிடமாம்<br>மல்கு வெண்டிரை ஒத<br>மாமறைக் காடது தானே. | பல்–ல்லாத தலையோட்டைக் கையில் ஏந்திப் பாடியும் ஆடியும் ப–தேரும் அல்லல் பொருந்திய வாழ்க்கையை உடையவர் ஆயினும் அவருக்கு அது அழகியதேயாகும். அதனையும் அவரே அறிவார். எருதேறி வருவார். பூதங்கள் அருகே புடைசூழ்ந்து வரத் திரிவார். அத்தகைய பெருமானாருக்கு இடமாக விளங்குவது நிறைந்த வெண்மையான திரைகளை உடைய ஒத நீர் சூழ்ந்த திருமறைக்காடாகும். |
| **2459.** நாகந் தான்கயி றாக<br>நளிர்வரை யதற்குமத் தாகப்<br>பாகந் தேவரொ டசுரர்<br>படுகட லளறெழக் கடைய<br>வேக நஞ்செழ வாங்கே<br>வெருவொடு மிரிந்தெங்கு மோட<br>ஆகந் தன்னில்வைத் தமிர்தம்<br>ஆக்குவித் தான்மறைக் காடே. | வாசுகி என்னும் பாம்பு கயிறாகவும் செறிவான மந்தரமலை மத்தாகவும் கொண்டு, தலைவால் பாகங்களாகப் பகுத்துக் கொண்டு தேவாசுரர் ஆழமான கடலை அளறு எழுமாறு கடைந்த போது கொடிய நஞ்சு வெளிப்பட, அதனைக் கண்டு அவர்கள் அஞ்சி ஓடியபோது அந்நஞ்சை உண்டு தன் திருமேனி மிடற்றில் நிறுத்தி அமிர்தமாகக் கொண்டவன் எழுந்தருளிய தலம் திருமறைக் காடாகும். |
| **2460.** தக்கள் வேள்வியைத் தகர்த்தோன்<br>தனதொரு பெருமையை யோரான்<br>மிக்கு மேற்சென்று மலையை<br>யெடுத்தலு மலைமகள் நடுங்க<br>நக்குத் தன்றிரு விரலால்<br>ஊன்றலும் நடுநடுத் தரக்கன்<br>பக்க வாயும்விட் டலறப்<br>பரிந்தவன் பதிமறைக் காடே. | தக்கன் வேள்வியைத் தகர்த்தோனாகிய சிவபிரானது ஒப்பற்ற பெருமையை உணராத அரக்கனாகிய இராவணன் செருக்குடன் சென்று கயிலை மலையைப் பெயர்த்த அளவில் மலைமகள் அஞ்ச, பெருமான் அவனது அறியாமைக்குச் சிரித்துத் தன் கால்விரலை ஊன்றிய அளவில் நடுநடுங்கி அனைத்து வாய்களாலும் அவன் அலறி அழ அதனைக் கண்டு பரிந்து அருள் செய்தவனாகிய சிவபிரானது பதி மறைக்காடாகும். |

| | |
|---|---|
| **2461.** விண்ட மாமல ரோனும்<br>விளங்கொளி யரவணை யானும்<br>பண்டுங் காண்பரி தாய<br>பரிசின னவனுறை பதிதான்<br>கண்ட லங்கழி யோதங்<br>கரையொடு கதிர்மணி ததும்ப<br>வண்ட லங்கமழ் சோலை<br>மாமறைக் காடது தானே. | விரிந்த தாமரை மலரில் மேவிய பிரமனும், விளங்கும் ஒளியுடைய பாம்பணையில் துயிலும் திருமாலும், முற்காலத்தும் காணுதற்கு அரியனாய தன்மையனாகிய சிவபிரான் உறையும் பதி, தாழை மரங்கள் அடுத்துள்ள கழிகளில் பெருகிய ஓதநீர் ஒளிதரும் மணிகளோடு ததும்ப வண்டல் மண்ணில் மணம் கமழ்ந்து வளரும் சோலைகள் சூழ்ந்த சிறந்த திருமறைக்காடாகும். |
| **2462.** பெரிய வாகிய குடையும்<br>பீ–யும் அவைவெயிற் கரவாக்<br>கரிய மண்டைகை யேந்திக்<br>கல்லென வுழிதருங் கழுக்கள்<br>அரிய வாகவுண் டோது<br>மவர்திற மொழிந்துநம் மடிகள்<br>பெரிய சீர்மறைக் காடே<br>பேணுமின் மனமுடை யீரே. | பெரிய குடையும் மயிற்பீ–யும் வெயிலை மறைக்க, கரிதான மண்டை என்னும் உண்கலன் ஏந்திக் கல் என்ற ஆரவாரத்துடன் ப– ஏற்கும் கழுக்களாகிய சமண புத்தர்கள் உண்டாம் இல்லையாம் என ஓதித்திரிய அச்சமயத்தவரின் நீங்கி, நல்ல மனம் உடையவர்களே! நம் தலைவராக விளங்கும் பெருமைமிக்க திருமறைக்காட்டு இறைவனை வழிபடுவீர்களாக. |
| **2463.** மையு லாம்பொழில் சூழ்ந்த<br>மாமறைக் காடமர்ந் தாரைக்<br>கையி னாற்றொழு தெழுவான்<br>காழியுண் ஞானசம் பந்தன்<br>செய்த செந்தமிழ் பத்துஞ்<br>சிந்தையுட் சேர்க்கவல் லார்போய்ப்<br>பொய்யில் வானவ ரோடும்<br>புகவலர் கொளவலர் புகழே. | மேகங்கள் உலாவும் பொழில் சூழ்ந்த சிறந்த திருமறைக்காட்டில் எழுந்தருளிய இறைவரைக் கைகளால் தொழுது எழுவோனாகிய காழிப்பதிவாழ் ஞானசம்பந்தன் செய்த இச்செந்தமிழ் பத்தையும் சிந்தையில் பதித்துப் போற்றவல்லவர் பொய்மையற்ற வானவர் உலகில் அவரோடும் புகவல்லவர் ஆவர். புகழே கொள்ள வல்லவராய் விளங்குபவர். |

## 92. திருப்புகலூர்வர்த்தமானீச்சரம்

பண் : பியந்தைக்காந்தாரம் — பதிக எண் : 92

| | |
|---|---|
| **2464.** பட்டம் பால்நிற மதியம்<br>படர்சடைச் சுடர்விடு பாணி<br>நட்டம் நள்ளிரு ளாடும்<br>நாதன் நவின்றுறை கோயில்<br>புட்டம் பேடையொ டாடும்<br>பூம்புக லூர்த்தொண்டர் போற்றி<br>வட்டஞ் சூழ்ந்தடி பரவும்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | ஆண் பறவைகள் தம்பிணையோடு கூடி மகிழும் அழகிய புகலூரில் அடியவர்கள் வட்டமாகச் சூழ்ந்து திருவடிகளைப் போற்றிப் பரவும் வர்த்தமானீச்சரத்து இறைவர் திருமேனிமேல் உத்தரீயமும் விரிந்த சடைமேல் வெண்மதி ஒளிதரும் கங்கை ஆகியவற்றையும் கொண்டு நள்ளிருளில் நட்டமாடும் தலைவர் ஆவார். அவர் கோயில் திருப்புகலூர்வர்த்தமானீச்சரம் ஆகும். |

| | |
|---|---|
| **2465.** முயல்வ ளாவிய திங்கள்<br>வாண்முகத் தரிவையில் தெரிவை<br>இயல்வ ளாவிய துடைய<br>வின்னமு தெந்தையெம் பெருமான்<br>கயல்வ ளாவிய கழனிக்<br>கருநிறக் குவளைகள் மலரும்<br>வயல்வ ளாவிய புகலூர்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | கயல்கள் நிறைந்த கழனிகளில் கரிய நிறக் குவளைகள் மலரும் வயல்களை உடைய புகலூர் வர்த்தமானீச்சரத்து இறைவர், முயற்கறை பொருந்திய திங்கள் போன்ற ஒளிபொருந்திய முகத்தினை உடைய மங்கையரில் மேம்பட்ட தெரிவையாகிய உமையம்மையைப் பாகமாக உடைய இனிய அமுதம் போன்றவர். எமக்குத் தந்தையாகவும் தலைவராகவும் விளங்குபவர். |
| **2466.** தொண்டர் தண்கய மூழ்கித்<br>துணையலுஞ் சாந்தமும் புகையும்<br>கொண்டு கொண்டடி பரவிக்<br>குறிப்பறி முருகன்செய் கோலம்<br>கண்டு கண்டுகண் குளிரக்<br>களிபரந் தொளிமல்கு கள்ளார்<br>வண்டு பண்செயும் புகலூர்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | தொண்டர்கள் குளிர்ந்த நீர் நிலைகளில் மூழ்கி மலர்மாலை சாந்து, மணப்புகை கொண்டு திருவடி பரவி வழிபடக் கண்டு அவர்தம் குறிப்பறிந்து அவர்கட்கு உதவும் முருகநாயனார் தாமும் அவ்வாறே இறைவனை அலங்கரித்துக் கண்குளிரக் கண்டு மகிழுமாறு வண்டுகள் கள்ளுண்டு பண்செய்யும் ஒ–போல ஒ–க்கும் வர்த்தமானீச்சரத்துள் சிவபெருமான் உகந்தருளியுள்ளார். |
| **2467.** பண்ண வண்ணத்த ராகிப்<br>பாடலொ டாடல றாத<br>விண்ண வண்ணத்த ராய<br>விரிபுக லூரரொர் பாகம்<br>பெண்ண வண்ணத்த ராகும்<br>பெற்றியொ டாணிணை பிணைந்த<br>வண்ண வண்ணத்தெம் பெருமான்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | விரிந்த பரப்புடைய புகலூர் வர்த்தமானீச்சரத்து இறைவர், பாடல் ஆடல்களில் பயிலும் பண்ணிசை மயமானவரும், ஆகாய வடிவினராய் விளங்குபவரும், பெண்ணொர் பாகமான வடிவினரும், ஆணொடு இணைந்த அரி அர்த்த வடிவினருமானவர். |
| **2468.** ஈச னேறமர் கடவுள்<br>இன்னமு தெந்தையெம் பெருமான்<br>பூசு மாசில்வெண் ணீற்றர்<br>பொ–வுடைப் பூம்புக லூரில்<br>மூசு வண்டறை கொன்றை<br>முருகன்முப் போதுஞ்செய் முடிமேல்<br>வாச மாமல ருடையார்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | அழகிய புகலூரில் முருகநாயனார் வண்டுகள் மொய்க்கும் கொன்றை மலர் கொண்டு மூன்று பொழுதிலும் வழிபட அம்மண மலர்களோடு விளங்கும் வர்த்தமானீச்சரத்து இறைவர் எல்லோர்க்கும் தலைவர். விடையேறு உடையவர். இனிய அமுதம் போன்றவர். எந்தை, எம்பெருமான் குற்றம் அற்ற வெண்ணீறு பூசியவர். |

| | |
|---|---|
| **2469.** தளிரி ளங்கொடி வளரத்<br>தண்கய மிரியவண் டேறிக்<br>கிளரி ளம்முழை நுழையக்<br>கிழிதரு பொழிற்புக லூரில்<br>உளரி ளஞ்சுனை மலரு<br>மொளிதரு சடைமுடி யதன்மேல்<br>வளரி ளம்பிறை யுடையார்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | குளிர்ந்த நீர் நிலைகளை அடுத்து வளருங் இளங்கொடிகளின் தளிர்கள் கிழியுமாறு வண்டுகள் சரேலென எழுந்து முழைகள் தோறும் செல்லும் பொழில்கள் சூழ்ந்த புகலூரில் வாழ்பவர் சுனை நீரில் பூத்த மலர்கள் விளங்கும் சடைமுடியில் பிறை சூடியவராகிய வர்த்தமானீச்சரத்து இறைவர். |
| **2470.** தென்சொல் விஞ்சமர் வடசொற்<br>றிசைமொழி யெழினரம் பெடுத்துத்<br>துஞ்சு நெஞ்சிரு ணீங்கத்<br>தொழுதெழு தொல்புக லூரில்<br>அஞ்ச னம்பிதிர்ந் தனைய<br>வலைகடல் கடையவன் றெழுந்த<br>வஞ்ச நஞ்சணி கண்டர்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | அடியவர் தமிழிலும் வடமொழியிலும் திசை மொழிகளிலும் அழகிய யாழ் நரம்பை மீட்டித் தங்கள் மனத்திருள் நீங்கப் பாடித் தொழும் புகலூரில், அன்று அலைகடலைக் கடந்த போது, மை பிதிர்ந்தாற் போல எழுந்த வஞ்ச நஞ்சினை உண்ட அழகிய கண்டத்தினராய் விளங்குபவர் வர்த்தமானீச்சரத்து இறைவர். |
| **2471.** சாம வேதமொர் கீத<br>மோதியத் தசமுகன் பரவும்<br>நாம தேயம துடையார்<br>நன்குணர்ந் தடிகளென் றேத்தக்<br>காம தேவனை வேவக்<br>கனலெரி கொளுவிய கண்ணார்<br>வாம தேவர்தண் புகலூர்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | தண்மையான புகலூரில் விளங்கும் வர்த்தமானீச்சரத்து இறைவர், இராவணன் சாம வேதம் பாடிப் பரவும் பெயரையும் ஊரையும் உடையவர். நன்குணர்ந்து அடிகள் என்றேத்தும் பெயர்களை உடையவர். காமதேவனை எரித்த கண்ணையுடையவர்.<br>வாமதேவம் – ஈசானம், தத்புருடம், வாமதேவம், அகோரம், சத்யோசாதம் எனப்படும் ஐந்து சதாசிவ முகங்களுள் ஒன்று. |
| **2472.** சீர ணங்குற நின்ற<br>செருவுறு திசைமுக னோடு<br>நார ணன்கருத் தழிய<br>நகைசெய்த சடைமுடி நம்பர்<br>ஆர ணங்குறு முமையை<br>யஞ்சுவித் தருளுதல் பொருட்டால்<br>வார ணத்துரி போர்த்தார்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | வர்த்தமானீச்சரத்து இறைவர், சிறந்த தெய்வத் தன்மை உடையவர்களாய் யார் தலைவர் என்பதில் மாறுபட்டவர்களாய்த் தம்முட் செருச்செய்த திருமால் பிரமர்களின் கருத்தழியுமாறு அவர்களிடையே தோன்றி நகை செய்தவர். உமையம்மையை அஞ்சுவிக்கும் பொருட்டு அவள் எதிரே யானையை உரித்தவர். |

| | |
|---|---|
| **2473.** கையி லுண்டுழல் வாருங்<br>கமழ்துவ ராடையி னால்தம்<br>மெய்யைப் போர்த்துழல் வாரு<br>முரைப்பன மெய்யென விரும்பேல்<br>செய்யில் வாளைக ளோடு<br>செங்கயல் குதிகொளும் புகலூர்<br>மைகொள் கண்டத்தெம் பெருமான்<br>வர்த்தமா னீச்சரத் தாரே. | வாளைமீன்களோடு கயல்கள் குதித்து விளையாடும் வயல்களைக் கொண்ட புகலூரில் நீலகண்டராய் விளங்கும் வர்த்தமானீச்சரத்து இறைவர் புகழே மெய்ம்மையா னவை. கையில் உணவு ஏற்று உண்ணும் சமணரும் துவராடை போர்த்த புத்தரும் கூறும் உரைகளை மெய்யெனக் கருதேல். |
| **2474.** பொங்கு தண்புனல் சூழ்ந்து<br>போதணி பொழிற்புக லூரில்<br>மங்குன் மாமதி தவழும்<br>வர்த்தமா னீச்சரத் தாரைத்<br>தங்கு சீர்திகழ் ஞான<br>சம்பந்தன் றண்டமிழ் பத்தும்<br>எங்கு மேத்தவல் லார்கள்<br>எய்துவ ரிமையவ ருலகே. | மிகுதியான தண்ணிய நீராலும், மலர்பூத்த பொழில்களாலும் சூழப்பெற்று விளங்கும் புகலூரில் வானளாவிய வர்த்தமானீச்சரத் திருக்கோயி–ல் விளங்கும் இறைவரைப் புகழ்மிக்க ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய பாடல்கள் பத்தையும் எவ்விடத்தும் பாடி ஏத்துவார் இமையவர் உலகம் எய்துவர். |

## 93. திருத்தெங்கூர்

பண் : பியந்தைக்காந்தாரம் — பதிக எண் : 93

| | |
|---|---|
| **2475.** புரைசெய் வல்வினை தீர்க்கும்<br>புண்ணியர் விண்ணவர் போற்றக்<br>கரைசெய் மால்கடல் நஞ்சை<br>உண்டவர் கருதலர் புரங்கள்<br>இரைசெய் தாரழ லூட்டி<br>யுழல்பவ ரிடுப–டிக் கெழில்சேர்<br>விரைசெய் பூம்பொழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | மணம் கமழும் அழகிய பொழில் சூழ்ந்த தெங்கூரில் வெள்ளியங்குன்று எனப்பெறும் கோயி–ல் அமர்ந்த இறைவர் துன்பம் தரும் வ–ய வினைகளைப் போக்கும் புண்ணியர். விண்ணவர் போற்றக் கட–ல் தோன்றிய நஞ்சினை உண்டவர். முப்புரம் எரித்தவர். இடுப–க்கு உழல்பவர். |
| **2476.** சித்தந் தன்னடி நினைவார்<br>செடிபடு கொடுவினை தீர்க்கும்<br>கொத்தின் றாழ்சடை முடிமேற்<br>கோளெயிற் றரவொடு பிறையன்<br>பத்தர் தாம்பணிந் தேத்தும்<br>பரம்பரன் பைம்புனல் பதித்த<br>வித்தன் தாழ்பொழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | தாழ்ந்த பொழில் சூழ்ந்து விளங்கும் தெங்கூரில் வெள்ளியங்குன்றமர்ந்த இறைவர், மனம் ஒன்றி நினைக்கும் அடியவர்களின் கொடுவினைகளைத் தீர்ப்பவர். கொத்தாக விளங்கும் சடைமுடிமேல் அரவோடு பிறையைச் சூடியவர். பக்தர்கள் பணிந்தேத்தும் பரம்பரர். நீரில் பதித்த விதை போன்றவர். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2477.** அடையும் வல்வினை யகல<br>அருள்பவ ரனலுடை மழுவாட்<br>படையர் பாய்பு—த் தோலர்<br>பைம்புனற் கொன்றையர் படர்புன்<br>சடையில் வெண்பிறை சூடித்<br>தார்மணி யணிதரு தறுகண்<br>விடையர் வீங்கெழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | அழகுமிக்க தெங்கூரில் வெள்ளியங்குன்றில் விளங்கும் பெருமானார், நம்மை அடையும் வ—ய வினைகளைத் தீர்ப்பவர். அனல்போன்ற மழுப்படையை உடையவர். பு—த்தோல் உடுத்தவர். கொன்றையணிந்த சடைமேல் பிறைசூடி மணி கட்டிய விடைமீது வருபவர். |
| **2478.** **பண்டு நான்செய்த வினைகள்**<br>பறையவோர் நெறியருள் பயப்பார்<br>கொண்டல் வான்மதி சூடிக்<br>குரைகடல் விடமணி கண்டர்<br>வண்டு மாமல ரூதி<br>மதுவுண விதழ்மறி வெய்தி<br>விண்ட வார்பொழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | மது உண்ண வந்த வண்டுகளால் விரிந்த மலர்களை உடைய பொழில் சூழ்ந்த தெங்கூரில் வெள்ளியங்குன்றில் விளங்கும் இறைவர், முற்பிறவிகளில் நான்செய்த பழவினைகளைத் தீர்த்து நல்நெறியையும் அருளையும் தருபவர். வானத்து இளம் பிறையைச் சூடியவர். கட—ல் தோன்றி விடத்தை உண்ட நீலமணி போன்ற கண்டம் உடையவர். |
| **2479.** சுழித்த வார்புனற் கங்கை<br>சூடியொர் காலனைக் காலால்<br>தெழித்து வானவர் நடுங்கச்<br>செற்றவர் சிறையணி பறவை<br>கழித்த வெண்டலை யேந்திக்<br>காமன துடல்பொடி யாக<br>விழித்த வர்திருத் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | திருத்தெங்கூர் வெள்ளியங்குன்று அமர்ந்த இறைவர் கங்கையை முடிமிசைச் சூடி வானவர் நடுங்கக் காலனைக் காலால் செற்றவர். அன்னப் பறவையாய் வடிவெடுத்த பிரமனது தலையோட்டைக் கையில் தரித்தவர். காமனின் உடல் பொடியாகுமாறு விழித்தவர். |
| **2480.** தொல்லை வல்வினை தீர்ப்பார்<br>சுடலைவெண் பொடியணி சுவண்டர்<br>எல்— சூடிநின் றாடும்<br>இறையவ ரிமையவ ரேத்தச்<br>சில்லை மால்விடை யேறித்<br>திரிபுரந் தீயெழச் செற்ற<br>வில்— னார்திருத் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | திருத்தெங்கூர் வெள்ளியங்குன்றமர்ந்த இறைவர், பழவினை தீர்ப்பவர். சுடலைப் பொடி பூசியவர். திங்களை முடியில் சூடி நின்று ஆடுபவர். இமையவர் ஏத்த விடை மீது ஏறிச் சென்று திரிபுரம் எரித்த வில்—னர். |

| | |
|---|---|
| **2481.** நெறிகொள் சிந்தைய ராகி<br>நினைபவர் வினைகெட நின்றார்<br>முறிகொண் மேனிமுக் கண்ணர்<br>முளைமதி நடுநடுத் திலங்கப்<br>பொறிகொள் வாளர வணிந்த<br>புண்ணியர் வெண்பொடிப் பூசி<br>வெறிகொள் பூம்பொழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | வெண்ணீறணிந்தவராய் மணம் கமழும் பொழில் சூழ்ந்த திருத்தெங்கூரில் வெள்ளியங்குன்றில் எழுந்தருளிய இறைவர், நெறியான மனம் உடையவராய் நினைபவர் வினைகளைத் தீர்ப்பவர். தளிர்போலும் திருமேனியையும் மூன்று கண்களையும் உடையவர். பிறைகண்டு அஞ்சுமாறு சடைமிசைப் பாம்பைச் சூடிய புண்ணியர். |
| **2482.** எண்ணி லாவிறல் அரக்கன்<br>எழில்திகழ் மால்வரை யெடுக்கக்<br>கண்ணெ லாம்பொடிந் தலறக்<br>கால்விர லூன்றிய கருத்தர்<br>தண்ணு லாம்புனற் கண்ணி<br>தயங்கிய சடைமுடிச் சதுரர்<br>விண்ணு லாம்பொழில் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | விண்ணளாவிய பொழில் சூழ்ந்த தெங்கூரில் விளங்கும் வெள்ளியங்குன்றமர்ந்த இறைவர், அளவற்ற ஆற்றல் படைத்த இராவணன் கயிலை மலையை எடுக்க முற்பட்டபோது அவன் கண்களெல்லாம் பொடியாய், அவன் அலறி விழுமாறு கால் விரலால் ஊன்றிய தலைவர். தண்ணிய கங்கையாகிய கண்ணியைச் சூடியவர். |
| **2483.** தேடித் தானயன் மாலுந்<br>திருமுடி யடியிணை காணார்<br>பாடத் தான்பல பூதப்<br>படையினர் சுடலையிற் பலகால்<br>ஆடத் தான்மிக வல்லர்<br>அருச்சுனற் கருள்செயக் கருதும்<br>வேடத் தார்திருத் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | திருத்தெங்கூரில், அயனும் மாலும் முறையே திருமுடியையும் திருவடியையும் தேடிக் காணப் பெறாதவர். பூதப்படைகள் பாடச் சுடலையில் பலகாலும் ஆடும் இயல்பினர். அருச்சுனனுக்கு அருள் செய்யும் வேடத்தினர். |
| **2484.** சடங்கொள் சீவரப் போர்வைச்<br>சாக்கியர் சமணர்சொற் றவிர<br>இடங்கொள் வல்வினை தீர்க்கும்<br>ஏத்துமி னிருமருப் பொருகைக்<br>கடங்கொண் மால்களிற் றுரியர்<br>கடல்கடைந் திடக்கனன் றெழுந்த<br>விடங்கொள் கண்டத்தர் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரே. | திருத்தெங்கூரில் வெள்ளியங்குன்றமர்ந்த பெருமான் உட–ற்போர்த்திய சீவரப் போர்வையை உடைய சாக்கியர் சமணர் சொற்களை வெறுத்துச் சைவ நெறி சார்வோரின் வல்வினைகளைத் தீர்த்தருள் புரிபவர். இருமருப்புக்களையும் ஒரு கையையும் உடைய யானையின் தோலைப் போர்த்தியவர். கடல் கடைந்த போதெழுந்த விடம் பொருந்திய கண்டத்தினர். |

| | |
|---|---|
| **2485.** வெந்த நீற்றினர் தெங்கூர்<br>வெள்ளியங் குன்றமர்ந் தாரைக்<br>கந்த மார்பொழில் சூழ்ந்த<br>காழியுண் ஞானசம் பந்தன்<br>சந்த மாயின பாடல்<br>தண்டமிழ் பத்தும்வல் லார்மேல்<br>பந்த மாயின பாவம்<br>பாறுதல் தேறுதல் பயனே. | வெந்த வெண்ணீறணிந்த தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந்த இறைவரை மணம் பொருந்திய பொழில் சூழ்ந்த காழி ஞானசம்பந்தன் பாடிய சந்தப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர் மேல் பந்தமாக அமைந்த பாவங்கள் நீங்கும். அவர்கள் தெளிவு பெறுதல் வந்துறும் பயனாகும். |

## 94. திருவாழ்கொளிபுத்தூர்

பண் : பியந்தைக்காந்தாரம் — பதிக எண் : 94

| | |
|---|---|
| **2486.** சாகை யாயிர முடையார்<br>சாமமு மோதுவ துடையார்<br>ஈகை யார்கடை நோக்கி<br>யிரப்பதும் பலபல வுடையார்<br>தோகை மாமயி லனைய<br>துடியிடை பாகமு முடையார்<br>வாகை நுண்டுளி வீசும்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாகை மரங்கள் நுண் துளி சொரியும் வாழ்கொளிபுத்தூர் இறைவர் வேதப்பிரிவுகளான சாகைகள் பலவற்றை அருளியவர். சாமகானம் பாடுபவர். கொடுப்பவர் இல்லங்கட்குச் சென்று இரக்கும் வேடங்கள் கொள்பவர். மயில் போன்ற சாயலையும் துடி போன்ற இடையையும் உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். |
| **2487.** எண்ணி லீரமு முடையா<br>ரெத்தனை யோரிவ ரறங்கள்<br>கண்ணு மாயிர முடையார்<br>கையுமொ ராயிர முடையார்<br>பெண்ணு மாயிர முடையார்<br>பெருமையொ ராயிர முடையார்<br>வண்ண மாயிர முடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர், எண்ணற்ற வகைகளில் அன்பு காட்டுபவர். இவர் அறங்களைப் பெற்றோர் பலராவர். இவர் ஆயிரங்கண், கைகளை உடையவர். சக்தியின் அம்சமாகப் பலவற்றை உடையவர். பெருமைகள் பல உடையவர். இவர் வண்ணமும் பலவகைப் படுவனவாகும். |
| **2488.** நொடியொ ராயிர முடையார்<br>நுண்ணிய ராமவர் நோக்கும்<br>வடிவு மாயிர முடையார்<br>வண்ணமு மாயிர முடையார்<br>முடியு மாயிர முடையவர்<br>மொய்குழ லாளையு முடையார்<br>வடிவு மாயிர முடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர், நுட்பமான கால அளவுகளாய் விளங்குபவர். மிகவும் நுண்மையானவர். அவர் பார்வையும் பல்வேறு வகைப்பட்டவை. பலவேறு வண்ணங்கள் கொண்டவர். பலவாய முடிகளை உடையவர். உமையம்மையை இடப்பாகமாகக் கொண்டவர். பலவேறு வடிவங்கள் கொண்டவர்.<br>ஆற்றல் – பெண்மை;<br>ஆற்றலுடைமை – ஆண்மை. |

| | |
|---|---|
| **2489.** பஞ்சி நுண்டுகி லன்ன<br>பைங்கழற் சேவடி யுடையார்<br>குஞ்சி மேகலை யுடையார்<br>கொந்தணி வேல்வல னுடையார்<br>அஞ்சும் வென்றவர்க் கணியார்<br>ஆனையி னீருரி யுடையார்<br>வஞ்சி நுண்ணிடை யுடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வஞ்சிக்கொடி போன்ற நுண்ணிய இடையினை உடைய மகளிர் வாழும் வாழ்கொளிபுத்தூர் இறைவர். பஞ்சினால் இயன்ற துகில் போன்ற சேவடிகளை உடையவர். சடைமுடியில் ஆடையைத் தரித்தவர். பூங்கொத்துக்கள் சூடிய வேலை வெற்றிக்கு அடையாளமாகக் கொண்டவர். ஐம்பொறிகளை வென்றவர்க்கு அணிமையில் இருப்பவர். ஆனைத்தோல் போர்த்தவர். |
| **2490.** பரவு வாரையு முடையார்<br>பழித்திகழ் வாரையு முடையார்<br>விரவு வாரையு முடையார்<br>வெண்டலைப் ப–கொள்வ துடையார்<br>அரவம் பூண்பது முடையார்<br>ஆயிரம் பேர்மிக வுடையார்<br>வரமு மாயிர முடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர் பரவுவாரையும் பழித்து இகழ்வாரையும் உடையவர். தம்மோடு அன்பு கலந்து ஒன்றாகுபவரையும் உடையவர். பிரமனது வெள்ளிய தலையோட்டில் ப–கொள்பவர். அரவம் பூண்டவர். ஆயிரம் பேருடையவர். வரங்கள் பல அருள்பவர். |
| **2491.** தண்டுந் தாளமுங் குழலுந்<br>தண்ணுமைக் கருவியும் புறவில்<br>கொண்ட பூதமு முடையார்<br>கோலமும் பலபல வுடையார்<br>கண்டு கோடலு மரியார்<br>காட்சியு மரியதொர் கரந்தை<br>வண்டு வாழ்பதி யுடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | கரந்தைப் பூவில் வண்டுகள் வாழும் வளம் உடைய பதியான வாழ்கொளிபுத்தூர் இறைவர் தண்டு, தாளம், குழல், தண்ணுமை ஆகியவற்றுடன் காட்டில் வாழும் பூதப்படைகளையும் கொண்டவர். பல்வேறு கோலங்கள் கொண்டவர். காணுதற்கும் காட்சிக்கும் அரியவர். |
| **2492.** மான வாழ்க்கைய துடையார்<br>மலைந்தவர் மதிற்பரி சறுத்தார்<br>தான வாழ்க்கைய துடையார்<br>தவத்தொடு நாம்புகழ்ந் தேத்த<br>ஞான வாழ்க்கைய துடையார்<br>நள்ளிருண் மகளிர்நின் றேத்த<br>வான வாழ்க்கைய துடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர், பெருமை பொருந்திய வாழ்க்கையர். தம்மோடு மலைந்த அசுரர்களின் மும்மதில்களை அழித்தவர். அருட் கொடை வழங்கும் இயல்புடையவர். தவத்தோடு நாம் பரவ ஞானவாழ்வு அருள்பவர். நள்ளிருளில் அரமகளிர் நின்று ஏத்த வானநாட்டு வாழ்வினை உடையவர். |

| | |
|---|---|
| **2493.** ஏழு மூன்றுமொர் தலைகள்<br>உடையவ னிடர்பட வடர்த்து<br>வேழ்வி செற்றதும் விரும்பி<br>விருப்பவர் பலபல வுடையார்<br>கேழல் வெண்பிறை யன்ன<br>கெழுமணி மிடறுநின் றிலங்க<br>வாழி சாந்தமு முடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர், பத்துத்தலைகளை உடைய இராவணனைத் துன்புறுமாறு அடர்த்தவர். தக்கன் செய்த வேள்வியைச் செற்றவர். பலப்பல விருப்புடையவர். வெண்பிறை போன்ற பன்றிக் கொம்பை மணி மிடற்றில் தரித்தவர். சாந்தம் அணிந்தவர். |
| **2494.** வென்றி மாமல ரோனும்<br>விரிகடற் றுயின்றவன் றானும்<br>என்று மேத்துகை யுடையார்<br>இமையவர் துதிசெய விரும்பி<br>முன்றின் மாமலர் வாச<br>முதுமதி தவழ்பொழிற் றில்லை<br>மன்றி லாடல துடையார்<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | வாழ்கொளிபுத்தூர் இறைவர், தாமரை மலர் மேலுறையும் நான்முகனும் விரிந்த கட–டைத் துயிலும் திருமாலும் நாள்தோறும் துதித்து வணங்கப் பெறுபவர். இமையவர் துதித்தலை விரும்பி வானளாவிய மலர் மணம் கமழும் சோலைகள் சூழ்ந்த தில்லை மன்றில் ஆடுபவர். |
| **2495.** மண்டை கொண்டுழல் தேரர்<br>மாசுடை மேனிவன் சமணர்<br>குண்டர் பேசிய பேச்சுக்<br>கொள்ளன்மின் திகழொளி நல்ல<br>துண்ட வெண்பிறை சூடிச்<br>சுண்ணவெண் பொடியணிந் தெங்கும்<br>வண்டு வாழ்பொழில் சூழ்ந்த<br>வாழ்கொளி புத்தூ ருளாரே. | மண்டை என்னும் உண் கலன் ஏந்தித் திரியும் தேரர், அழுக்கேறிய உட–னராகிய சமணர்களாகிய குண்டர்கள் பேசும் பேச்சுக்களைக் கொள்ளாதீர். ஒளிமிக்க பிறை சூடி, திருநீற்றுப் பொடி பூசி வண்டுகள் வாழும் பொழில் சூழ்ந்த வாழ்கொளிபுத்தூர் இறைவனைப் போற்றுவீராக. |
| **2496.** நலங்கொள் பூம்பொழிற் காழி<br>நற்றமிழ் ஞானசம் பந்தன்<br>வலங்கொள் வெண்மழு வாளன்<br>வாழ்கொளி புத்தூ ருளானை<br>இலங்கு வெண்பிறை யானை<br>ஏத்திய தமிழிவை வல்லார்<br>நலங்கொள் சிந்தைய ராகி<br>நன்னெறி யெய்துவர் தாமே. | நன்மை நிறைந்த அழகிய பொழில் சூழ்ந்த சீகாழியில் தோன்றிய நற்றமிழ் ஞானசம்பந்தன் வெற்றிதரும் வெண்மழுவை ஏந்தி விளங்கும் வாழ்கொளிபுத்தூர் இறைவனாகிய பிறைசூடிய பெருமானை ஏத்திப் பாடிய இத்தமிழ் மாலையை ஓதவல்லவர். நலந்தரும் சிந்தையராய் நன்னெறி எய்துவர். |

## 95. திருவரசிலி

பண் : பியந்தைக்காந்தாரம் (ஒழிந்தியாப்பட்டு) பதிக எண் : 95

**2497.** பாடல் வண்டறை கொன்றை
பான்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை
மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை
மருவிட வல்–யந் தோண்மேல்
ஆடன் மாசுண மசைத்த
அடிகளுக் கிடமர சி–யே.

அரச மரத்தை இறைவன் இல்லாக உடைமையின் அரசி– எனப்படுகிறது.

செஞ்சடையில், இசைபாடும் வண்டுகள் சென்று சூழும் கொன்றை மலர், பால்போலும் பிறைமதி, பாய்ந்து வரும் புனலை உடைய கங்கை, வெண் காந்தள், வில்வ மாலை, ஊமத்தம் பூ ஆகியன குலவி விளங்க, கழுத்தில் தசை உலர்ந்த வெண்டலை மாலை மருவ, இடையில் பு–த்தோலை உடுத்தித் தோள்மேல் பாம்பைச் சுற்றிக் கொண்டுள்ள அடிகளாகிய சிவபிரானுக்கு உகந்த இடம் அரசி–யேயாகும்.

**2498.** ஏறு பேணிய தேறி
யிளமதக் களிற்றினை யெற்றி
வேறு செய்தத னுரிவை
வெண்புலால் கலக்கமெய் போர்த்த
ஊறு தேனவ னும்பர்க்
கொருவன்நல் லொளிகொளொண் சுடராம்
ஆறு சேர்தரு சென்னி
அடிகளுக் கிடமர சி–யே.

ஆணவ மலநாசஞ் செய்வதே யானைஉரி வரலாற்றின் தாற்பரியம்.

விடையேற்றினை விரும்பி ஏறி, இளமையும் மதமும் உடையதாய்த் தம்மை எதிர்த்து வரும் யானையை உதைத்துக் கொன்று அதன் தோலை வெண்புலால் உட–ற் கலக்குமாறு மேனிமீது போர்த்தவரும், அடியார் சிந்தனையுள் ஊறும் தேனாக விளங்குபவரும், தேவர்களால் போற்றப்படும் ஒருவரும், ஒளி பொருந்திய சுடராகத் திகழ்பவரும், கங்கை சூடிய சென்னியரும் ஆகிய சிவபிரானுக்கு உகந்த இடம் அரசி–யேயாகும்.

**2499.** கங்கை நீர்சடை மேலே
கதமிகக் கதிரிள வனமென்
கொங்கை யாளொரு பாகம்
மருவிய கொல்லைவெள் ளேற்றன்
சங்கை யாய்த்திரி யாமே
தன்னடி யார்க்கருள் செய்து
அங்கை யாலன லேந்து
அடிகளுக் கிடமர சி–யே.

வாமதேவ முனிவர் பூசித்துப் பேறு பெற்ற தலம்.

வேகத்தோடு வந்த கங்கை நீரைச் சடைமேல் தாங்கி ஒளியும் இளமையும் அழகும் பொருந்திய தனபாரங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரும் 'முல்லை' நிலத்துக்குரிய விடையேற்றை உடையவரும், ஐயுறவு கொண்டு வீண்பொழுது போக்காத தம்மடியவர்கட்கு அருள்புரிபவரும், அழகிய கையில் அனல் ஏந்தியவருமாகிய சிவபிரானுக்கு உகந்த இடம் திரு அரசி–யேயாகும்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **2500.** மிக்க காலனை வீட்டி<br>மெய்கெடக் காமனை விழித்துப்<br>புக்க வூரிடு பிச்சை<br>யுண்பது பொன்றிகழ் கொன்றை<br>தக்க நூல்திகழ் மார்பில்<br>தவளவெண் ணீறணிந் தாமை<br>அக்கி னாரமும் பூண்ட<br>அடிகளுக் கிடமர சி–யே. | அறநெறியோடு உயிர்களைக் கவரும் எமனை அழித்துக் காமன் உடல் நீறாகும்படி விழித்து, ஊரார் இடும் பிச்சையை ஏற்று உண்டு, மார்பில் பொன்போலத் திகழும் கொன்றை மாலை, பூணூல் ஆகியவற்றையும், திருவெண்ணீற்றையும் அணிந்து ஆமையோடு, என்புமாலை ஆகியவற்றைச் சூடிவரும் சிவபிரானுக்கு உகந்த இடம் திரு அரசி–யேயாகும். |
| **2501.** மானஞ் சும்மட நோக்கி<br>மலைமகள் பாகமு மருவித்<br>தானஞ் சாவரண் மூன்றுந்<br>தழலெழச் சரமது துரந்து<br>வானஞ் சும்பெரு விடத்தை<br>யுண்டவன் மாமறை யோதி<br>ஆனஞ் சாடிய சென்னி<br>அடிகளுக் கிடமர சி–யே. | மானும் கண்டு அஞ்சும் மடநோக்கினை உடைய மலைமகளை ஒருபாகமாக மருவியவரும், அஞ்சாது தன்னை எதிர்த்த முப்புரங்களைத் தழல் எழுமாறு அம்பெய்து அழித்தவரும், வானவரும் அஞ்சும் ஆலகாலப் பெருவிடத்தை உண்டருளியவரும், ஆனைந்தாடும் திருமுடியினரு மாகிய சிவபிரானுக்கு உகந்த இடம் திருஅரசி–யேயாகும். |

முப்புரம் எரித்தது – மும்மலகாரியம் எனக் கொள்ள வேண்டும்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **2502.** பரிய மாசுணங் கயிறாப்<br>பருப்பத மதற்குமத் தாகப்<br>பெரிய வேலையைக் கலங்கப்<br>பேணிய வானவர் கடையக்<br>கரிய நஞ்சது தோன்றக்<br>கலங்கிய வவர்தமைக் கண்டு<br>அரிய வாரமு தாக்கும்<br>அடிகளுக் கிடமர சி–யே. | அமுதை விரும்பிய வானவர் வாசுகி என்னும் பெரிய பாம்பைக் கயிறாகக் கொண்டு மந்தரம் என்னும் மலையை மத்தாக நாட்டிப் பெரிய கடலைக் கலங்குமாறு கடைந்த போது அதனிடை, கருநிறமான ஆலகால விடம் தோன்றக் கண்டு அஞ்சிய அவர்களைக் கண்டு இரங்கி அதனை எடுத்துவரச் செய்து அரிய அமுதாக உண்டு வானவரைக் காத்தருளிய அடிகளுக்கு உகந்த இடம் திரு அரசி–யேயாகும். |
| **2503.** வண்ண மால்வரை தன்னை<br>மறித்திட லுற்றவல் லரக்கன்<br>கண்ணுந் தோளுநல் வாயும்<br>நெரிதரக் கால்விர லூன்றிப்<br>பண்ணின் பாடல்கைந் நரம்பாற்<br>பாடிய பாடலைக் கேட்டு<br>அண்ண லாயருள் செய்த<br>அடிகளுக் கிடமர சி–யே. | அழகிய கயிலை மலையைக் கீழ் மேலாகுமாறு புரட்ட முற்பட்ட வ–ய அரக்கனாகிய இராவணனின் கண்களும் தோள்களும் வாய்களும் நெரியுமாறு அவனைக் கால்விரலை ஊன்றி அடர்த்துப் பின் அவன் கைநரம்பால் வீணை செய்து பண்ணொடு கூடிய பாடல்களைப் பாட அதனைக் கேட்டுப் பெருந்தன்மையோடு அவனுக்கு அருள்கள் பலவும் செய்த அடிகளுக்கு உகந்த இடம் திருஅரசி–யேயாகும். |

அண்ணல் – இன்னா செய்தவருக்கும் இனியவே செய்தவர்.

| | |
|---|---|
| **2504.** குறிய மாணுரு வாகிக்<br>குவலய மளந்தவன் றானும்<br>வெறிகொள் தாமரை மேலே<br>விரும்பிய மெய்த்தவத் தோனும்<br>செறிவொ ணாவகை யெங்குந்<br>தேடியுந் திருவடி காண<br>அறிவொ ணாவுரு வத்தெம்<br>அடிகளுக் கிடமர சி–யே. | குள்ளமான உருவமுடைய வாமனராய்த் தோன்றிப் பின் பேருரு எடுத்து உலகை அளந்த திருமாலும், மணம் கமழும் தாமரை மலரை விரும்பிய நான்முகனும் எங்கும் தேடியும் திருவடிகளை அடைய முடியாதவாறும் அறிய முடியாதவாறும், அழலுருவாய் ஓங்கி நிமிர்ந்த திருவுருவத்தைக் கொண்டருளிய எம் அடிகளுக்கு உகந்த இடம் திரு அரசி–யேயாகும். |
| **2505.** குருளை யெய்திய மடவார்<br>நிற்பவே குஞ்சியைப் பறித்துத்<br>திரளை கையிலுண் பவருந்<br>தேரருஞ் சொல்–ய தேறேல்<br>பொருளைப் பொய்யி– மெய்யெம்<br>நாதனைப் பொன்னடி வணங்கும்<br>அருளை யார்தர நல்கும்<br>அடிகளுக் கிடமர சி–யே. | இளமையான மகளிர் இருப்ப அவரோடு கூடி வாழாது தலைமயிரைப் பறித்து முண்டிதராய்ச் சோற்று உருண்டைகளை கையில் இரந்துண்டு பெற்று உண்பவர்களாகிய சமணரும் புத்தரும் சொல்லும் அவர்தம் சமயக் கொள்கைகளைக் கொள்ளல் வேண்டா. அடையத்தக்க பொருளானவரும், பொய்மையில்லாதவரும் உண்மையின் வடிவானவரும், தம் பொன்னடிகளை வணங்குவார்க்கு அருளை நிரம்ப நல்குபவரும் ஆகிய சிவபிரானுக்குகந்த இடம் திரு அரசி–யேயாகும். அத்தலத்தை எய்தி வழிபடுங்கள். |
| **2506.** அல்– நீள்வயல் சூழ்ந்த<br>அரசி– அடிகளைக் காழி<br>நல்ல ஞானசம் பந்தன்<br>நற்றமிழ் பத்திவை நாளும்<br>சொல்ல வல்லவர் தம்மைச்<br>சூழ்ந்தம ரர்தொழு தேத்த<br>வல்ல வானுல கெய்தி<br>வைகலு மகிழ்ந்திருப் பாரே. | நீர்ப் பூக்களை உடைய நீண்ட வயல்கள் சூழ்ந்த திரு அரசி– இறைவனைப் போற்றிச் சீகாழிப் பதியில் தோன்றிய நல்ல ஞானசம்பந்தர் பாடியருளிய இத் திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் நாள்தோறும் சொல்– வழிபடவல்லவர். வானுலகெய்தி அமரர்கள் தொழுது ஏத்த வைகலும் மகிழ்ந்து வாழ்வர். |

## 96. சீகாழி

பண் : பியந்தைக்காந்தாரம் | பதிக எண் : 96

| | |
|---|---|
| **2507.** பொங்கு வெண்புரி வளரும்<br>பொற்புடை மார்பனெம் பெருமான்<br>செங்க ணாடர வாட்டுஞ்<br>செல்வனெஞ் சிவனுறை கோயில்<br>பங்க மில்பல மறைகள்<br>வல்லவர் பத்தர்கள் பரவுந்<br>தங்கு வெண்டிரைக் கானல்<br>தண்வயற் காழிநன் னகரே. | வெண்மை மிக்க முப்புரிநூல் புரளும் அழகிய மார்பினனாகிய எம் பெருமானும், சிவந்த கண்களை உடைய ஆடும் பாம்பினைப் பிடித்து ஆட்டுபவனும், செல்வனும் ஆகிய எம் சிவபிரான் உறையும் கோயிலை உடையது, தோல்வியுறாத வேதங்களில் வல்லவர்களும் பத்தர்களும் பரவுவதும், வெண்மையான அலைகள் வீசும் கடற்கரைச் சோலைகளையும் வயல்களையும் உடையதும் ஆகிய சீகாழி நன்னகர் ஆகும். |

| | |
|---|---|
| **2508.** தேவர் தானவர் பரந்து<br>திண்வரை மால்கட னிறுவி<br>நாவ தாலமிர் துண்ண<br>நயந்தவ ரிரிந்திடக் கண்டு<br>ஆவ வென்றரு நஞ்ச<br>முண்டவ னமர்தரு மூதூர்<br>காவ லார்மதில் சூழ்ந்த<br>கடிபொழில் காழிநன் னகரே. | தேவர்களும், அசுரர்களும் கூடி, நாவினால் அமிர்தம் பெற்றுண்ணப் பெரிய கட–ல் வ–ய மந்தர மலையை மத்தாக நட்டுக் கடைந்த போது எழுந்த அரிய நஞ்சினைக் கண்டு ஆஆ என அலறி ஓடிச் சரண் அடைய, அந்நஞ்சினைத் திரட்டித் தானுண்டு தேவர்களைக் காத்தருளிய சிவபிரான் எழுந்தருளிய மூதூர், காவலாக அமைந்த மதில்கள் சூழ்ந்ததும் மணம் பொருந்திய பொழில்களை உடையதுமான சீகாழி நன்னகர் ஆகும். |
| **2509.** கரியின் மாமுக முடைய<br>கணபதி தாதைபல் பூதந்<br>திரிய வில்ப–க் கேகுஞ்<br>செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்<br>சரியின் முன்கைநன் மாதர்<br>சதிபட மாநட மாடி<br>உரிய நாமங்க ளேத்தும்<br>ஒ–புனற் காழிநன் னகரே. | யானைமுகத்தோனாகிய கணபதியின் தந்தையும், பூதங்கள் பல சூழ்ந்து வர மனைகள் தோறும் உண் ப–யேற்றுத் திரிபவரும், செழுமையான சுடர் போன்றவருமான சிவபிரான் எழுந்தருளிய மூதூர், வளையல்கள் அணிந்த முன்கைகளை உடைய அழகிய மகளிர் கா–ல் தாளத்தட்டு நிற்கச் சிறந்த நடனத்தை ஆடிக் கொண்டு உரிய சிவநாமங்களை ஓதிப்போற்றும் ஒ–புனல் சூழ்ந்த காழி நகராகும். |
| **2510.** சங்க வெண்குழைச் செவியன்<br>தண்மதி சூடிய சென்னி<br>அங்கம் பூணென வுடைய<br>வப்பனுக் கழகிய வூராந்<br>துங்க மாளிகை யுயர்ந்த<br>தொகுகொடி வானிடை மிடைந்து<br>வங்க வான்மதி தடவு<br>மணிபொழில் காழிநன் னகரே. | சங்கவெண்குழை அணிந்த செவியினனும், தண்மதி சூடிய சென்னியனும், எலும்புகளை மாலையாகக் கோத்து அணிந்த தலைவனுமாகிய சிவபிரானுக்கு அழகிய ஊராக விளங்குவது உயர்வான மாளிகைகளில் கட்டிய உயரிய கொடிகளின் தொகுதிகள் வானத்தில் சென்று, வெள்ளி போலத் திகழும் ஒளி பொருந்திய மதியைத் தடவும் அணி பொழில் காழி நன்னகராகும். |
| **2511.** மங்கை கூறமர் மெய்யான்<br>மான்மறி யேந்திய கையான்<br>எங்க ளீசனென் றெழுவார்<br>இடர்வினை கெடுப்பவற் கூராஞ்<br>சங்கை யின்றிநன் னியமந்<br>தாஞ்செய்து தகுதியின் மிக்க<br>கங்கை நாடுயர் கீர்த்தி<br>மறையவர் காழிநன் னகரே. | உமையம்மை ஒரு பாதியாக அமைந்த திருமேனியனும், மான்மறி ஏந்திய கையினனும், எங்கள் ஈசன் என்று எழுவார் துன்பங்கள் அவற்றுக்குக் காரணமான வினைகள் ஆகியவற்றைத் தீர்ப்பவனும் ஆகிய சிவபிரானுக்கு உரிய ஊர், ஐயம் இன்றி நல்ல நியமங்களை முறையே செய்து தகுதியால் கங்கை நாடு வரை பரவிய புகழுடைய மறையவர் வாழும் காழி நன்னகர் ஆகும். |

| பாடல் | பொருள் |
|---|---|
| **2512.** நாறு கூவிள மத்த<br>நாகமுஞ் சூடிய நம்பன்<br>ஏறு மேறிய ஈசன்<br>இருந்தினி தமர்தரு மூதூர்<br>நீறு பூசிய வுருவர்<br>நெஞ்சினுள் வஞ்சமொன் றின்றித்<br>தேறு வார்கள்சென் றேத்துஞ்<br>சீர்திகழ் காழிநன் னகரே. | மணம் வீசும் வில்வம், ஊமத்தை ஆகியவற்றோடு பாம்பையும் முடியில் சூடிய நம்பனும், விடை ஏற்றினை விரும்பி ஏறும் ஈசனும் ஆகிய சிவபிரான் மேவிய ஊர், திருநீறு பூசிய உருவினராய், நெஞ்சினில் வஞ்சம் சிறிதும் இன்றித் தெளிவு பெற்ற அடியவர்கள் சென்று தொழும் சீகாழிப் பதியாகும். |
| **2513.** நடம தாடிய நாதன்<br>நந்திதன் முழவிடைக் காட்டில்<br>விடம மர்ந்தொரு காலம்<br>விரித்தற முரைத்தவற் கூராம்<br>இடம தாமறை பயில்வார்<br>இருந்தவர் திருந்தியம் போதிக்<br>குடம தார்மணி மாடங்<br>குலாவிய காழிநன் னகரே. | நந்தி மத்தளம் வாசிக்கச் சுடலையில் நடனம் ஆடிய தலைவனும், விடத்தை விரும்பி உண்டு முன் ஒரு காலத்தில் அறம் விரித்துச் சனகாதியர்க்கு உரைத்தருளியவனும் ஆகிய சிவபிரானுக்கு உகந்த ஊர், விரிந்த மறைகளைப் பயின்ற அந்தணர்கள் வாழ்வதும் அழகிய போதிகையில் குடம் அமைந்தது போன்ற உறுப்புக்கள் திகழும் மணிமாடங்கள் விளங்குவதுமாகிய காழி நகராகும். |
| **2514.** கார்கொண் மேனியவ் வரக்கன்<br>றன்கடுந் திற–னைக் கருதி<br>ஏர்கொண் மங்கையு மஞ்ச<br>வெழின்மலை யெடுத்தவ னெரியச்<br>சீர்கொள் பாதத்தொர் விரலாற்<br>செறுத்தவெஞ் சிவனுறை கோயில்<br>தார்கொள் வண்டினஞ் சூழ்ந்த<br>தண்வயல் காழிநன் னகரே. | கரியமேனியனாகிய இராவணன் தன் வ–மையைப் பெரிதெனக் கருதி அழகிய உமைநங்கை அஞ்சுமாறு அழகிய கயிலை மலையை எடுத்தபோது அவன் நெரியுமாறு சிறப்புமிகு பாதத்தில் அமைந்த ஒரு சிறு விரலால் செற்ற சிவபிரான் உறையும் கோயில், மலர்களில் பொருந்திய தேனை உண்ண வண்டுகள் சூழ்ந்து விளங்குவதும் தண்வயல்களை உடையதுமான காழி நன்னகர் ஆகும். |
| **2515.** மாலு மாமல ரானும்<br>மருவிநின் றிக–ய மனத்தாற்<br>பாலுங் கண்பரி தாய<br>பரஞ்சுடர் தன்பதி யாகுஞ்<br>சேலும் வாளையுங் கயலுஞ்<br>செறிந்துதன் கிளையொடு மேய<br>ஆலுஞ் சா–நற் கதிர்கள்<br>அணிவயற் காழிநன் னகரே. | திருமாலும் பிரமனும் கூடி நின்று யார் பெரியர் என்று தம்முள் மாறுபட்ட மனத்தினராய் நிற்க, அவர்களிடையே தனது பக்கத்தையும் காண மாட்டாத வகையில் தோன்றி நின்ற பரஞ்சுடராகிய சிவபிரானது பதி, சேல், வாளை, கயல் ஆகியன தம் கிளையொடு செறிந்து வாழ்வதும், ஆலும் நெற்கதிர்களைக் கொண்டதுமான அணிவயல்களை உடைய காழி நன்னகராகும். |

| | |
|---|---|
| **2516.** புத்தர் பொய்மிகு சமணர்<br>பொ–கழ லடியிணை காணுஞ்<br>சித்த மற்றவர்க் கிலாமைத்<br>திகழ்ந்தநற் செழுஞ்சுடர்க் கூராஞ்<br>சித்த ரோடுநல் லமரர்<br>செறிந்தநன் மாமலர் கொண்டு<br>முத்த னேயரு ளென்று<br>முறைமைசெய் காழிநன் னகரே. | அழகிய கழலணிந்த திருவடிகளைக் காணும் மனமற்ற பொய்மைமிக்க புத்தர், சமணர் ஆகியவர்க்கு இல்லாதவாறு திகழ்கின்ற நற்செழுஞ்சுடர்க்கு ஊர், சித்தர்களும், அமரர்களும் முறையோடு செறிந்த நல்ல மலர்களைக் கொண்டு அருச்சித்து "முத்தனே அருள்'' என வேண்டி நிற்கும் காழி நன்னகராகும். |
| **2517.** ஊழி யானவை பலவு<br>மொழிந்திடுங் காலத்தி லோங்கு. | பல ஊழிக்காலங்கள் மாறிமாறி வந்துறும் காலங்களிலும் அழியாது ஓங்கி நிற்கும் சீகாழி. |

(மூலநூ–லேயே திருக்கடைக்காப்புப் பாடல் நிறைவடையவில்லை)

## நட்டராகம்

இது குறிஞ்சி என்னும் பெரும்பண்ணில் ஏழாந் திறமாகிய அரற்று என்னும் திறத்தின் புறநிலைப் பண்ணாக 62 என்ற எண் பெற்றுள்ளது. 62-ஆவது மேளம் சுபபந்துவராளியில் கிளைத்தது என்பார்கள். இது பாமர ரஞ்சகமான பண், எச்சரிக்கையாயில்லாவிட்டால் சாதாரி கலந்துவிடும் என்பார்கள். இதன் சுவை உவகையும் மருட்கையும். சம்பந்தரும் சுந்தரரும் இதைப் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 2.97-112, சுந்தரர் 17-30, ஆக 30 பதிகங்கள். இதற்கு கட்டளை 4 சம்பந்தர் இன்று நன்று நாளை நன்று, மிகவும் பிரசித்தமான என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே, சுந்தரர் நீளநினைந்தடியேன் என்று நெல்லை அகற்றுமாறு பாடிய பதிகம். "பொன்னார் மேனியனே", "சிம்மாந்து சிம்புளித்து" என்ற பதிகங்கள் இப்பண்ணுக்குரியவை. இது பகற்பண். இது பந்துவராளியிற் பாடப்படுமென்று சொல்வர். பந்துவராளி பழமையான இராகம். (வடநாட்டில் இப்போது ராமப்பிரிய என்று சொல்கிறார்கள்)

**நட்டராகப் பண்ணின் (இலக்கணம்)**

மோனை சீர்தரவு முதலன தழுவிப்.
பிரிய நட்புப் பெற்று வந்ததால்
நட்ட ராகம் என நவிலப் பெற்றது.

**பொருள்**

அடிகளில் மோனை தழுவி வருதலும், சிர்கள் முறையாக ஒன்றோடு ஒன்று பொருந்தும் தன்மையுடன் பிரியத்துடன் கூடிய நட்பினைப் பெற்றும் வந்துள்ளதால் இது நட்ட ராகம் என்று சொல்லப் பெற்றது.

## 97. சீகாழி

பண் : நட்டராகம் | (திருவிராகம்) | பதிக எண் : 97

| பாடல் | உரை |
|---|---|
| 2518. நம்பொருள் நம்மக்களென்று<br>நச்சியிச்சை செய்துநீர்<br>அம்பர மடைந்துசால<br>அல்லலுய்ப்ப தன்முனம்<br>உம்பர்நாத னுத்தமன்<br>ஒளிமிகுந்த செஞ்சடை<br>நம்பன்மேவு நன்னகர்<br>நலங்கொள்காழி சேர்மினே. | நம் பொருள், நம் மக்கள் என்று பற்றுச் செய்து நீர் அழிந்தொழிந்து அல்லல் உறுதற்கு முன்னரே, தேவர் தலைவன், உத்தமன், ஒளிமிக்க செஞ்சடையை உடைய நம்பன் எழுந்தருளிய நன்னகராகிய அழகிய காழிப்பதியை அடைவீர்களாக. |
| 2519. பாவமேவு முள்ளமோடு<br>பத்தியின்றி நித்தலும்<br>ஏவமான செய்துசாவ<br>தன்முனம்மி சைந்துநீர்<br>தீவமாலை தூபமுஞ்<br>செறிந்தகைய ராகிநம்<br>தேவதேவன் மன்னுமூர்<br>திருந்துகாழி சேர்மினே. | பாவங்களைச் செய்யும் உள்ளத்தோடு இறைவனிடம் பக்தி இன்றி நாள்தோறும் பயனற்றன செய்து இறப்பதன் முன்னம், நீர் சிவபிரானிடம் அன்பு கொண்டு, தீபம், மாலை, தூபம் முத–யன ஏந்திய கையராகித் தேவர் தலைவனாகிய அவ்விறைவன் எழுந்தருளிய ஊராகிய அழகிய காழிப்பதியை அடைவீர்களாக. |
| 2520. சோறுகூறை யின்றியே<br>துவண்டுதூர மாய்நுமக்<br>கேறுசுற்ற மெள்கவே<br>இடுக்கணுய்ப்ப தன்முனம்<br>ஆறுமோர் சடையினான்<br>ஆதியானை செற்றவன்<br>நாறுதேன் மலர்ப்பொழில்<br>நலங்கொள்காழி சேர்மினே. | உணவும், உடையும் இன்றித் துவண்டு, உற்ற சுற்றத்தினர் விலகிச் செல்லத் துன்பம் உறுவதன் முன்னம், கங்கை தங்கிய சடையினனும், நான்முகன் தலையைக் கொய்தவனும் ஆகிய சிவபெருமான் உகக்கும் தேன் மணம் கமழும் மலர்ப்பொழில் சூழ்ந்த அழகிய காழிப் பதியை அடைவீர்களாக. |
| 2521. நச்சிநீர் பிறன்கடை<br>நடந்துசெல்ல நாளையும்<br>உச்சிவம் மெனும்முரை<br>உணர்ந்துகேட்ப தன்முனம்<br>பிச்சர்நச் சரவரைப்<br>பெரியசோதி பேணுவார்<br>இச்சைசெய்யு மெம்பிரான்<br>எழில்கொள்காழி சேர்மினே. | பொருளை விரும்பிப் பிறர் மனைவாயிலை நடந்து சென்று அடையக்கண்டும் அச்செல்வர், 'நாளை நண்பகற்போதில் வருக' எனக் கூறும் உரையைக் கேட்டு வருந்துவதன் முன்னம் நம் மேல் ஈடுபாடுடையவரும், விடம் பொருந்திய பாம்பை அரையில் கட்டிய பெரிய ஒளி வடிவினரும், வழிபடுவாரிடம் அன்பு செய்யும் எம்பிரானாரும் ஆகிய சிவபிரானது அழகிய காழிப்பதியை அடைவீர்களாக. |

| | |
|---|---|
| **2522.** கண்கள்காண் பொழிந்துமேனி<br>கன்றியொன்ற லாதநோய்<br>உண்கிலாமை செய்துநும்மை<br>யுய்த்தழிப்ப தன்முனம்<br>விண்குலாவு தேவருய்ய<br>வேலைநஞ் சமுதுசெய்<br>கண்கள்மூன் றுடையவெம்<br>கருத்தர்காழி சேர்மினே. | கண்கள் காட்சி தவிர்ந்து உடல் கன்றி ஒன்றல்லாத பல நோய்கள் நும்மைத் தாக்கி அழிப்பதற்கு முன்னமே விண்ணகத்தேவர் உய்யக் கட–டைத் தோன்றிய நஞ்சினை உண்ட முக்கண்ணராகிய எம் தலைவர் விளங்கும் காழிப்பதியை அடைவீர்களாக. |
| **2523.** அல்லல்வாழ்க்கை யுய்ப்பதற்<br>கவத்தமே பிறந்துநீர்<br>எல்லையில் பிணக்கினிற்<br>கிடந்திடா தெழும்மினோ<br>பல்–ல்வெண் டலையினிற்<br>ப–க்கியங்கு பான்மையான்<br>கொல்லையேற தேறுவான்<br>கோலக்காழி சேர்மினே. | துன்பமயமான வாழ்க்கையை நடத்துதற்கு வீணாகப் பிறந்து, நீர் எல்லையில்லாத மாறுபாடுகளில் கிடந்திடாது புறப்படுவீர்களாக. பல்–ல்லாத வெண்டலையில் ப–யேற்கத் திரிதற்கு முல்லை நிலத்து ஆனேற்றில் ஏறிச் செல்வோனாகிய சிவபிரானது அழகிய காழிப்பதியை அடைவீர்களாக. |
| **2524.** பொய்மிகுத்த வாயராய்ப்<br>பொறாமையோடு சொல்லுநீர்<br>ஐமிகுத்த கண்டரா<br>யடுத்திரைப்ப தன்முனம்<br>மைமிகுத்த மேனிவா<br>ளரக்கனை நெரித்தவன்<br>பைமிகுத்த பாம்பரைப்<br>பரமர்காழி சேர்மினே. | மிகுதியாகப் பொய் பேசும் வாயினராய்ப் பொறாமையோடு பேசும் நீர், கோழைமிகுந்த கண்டத்தினராய் இரைப்பு அடைதற்கு முன்னரே, கரிய மேனியனாகிய இராவணனை மலையின்கீழ் நெரித்தவனும், படம் பொருந்திய பாம்பினை அரையில் கட்டிய பரமனும் ஆகிய சிவபிரானது காழியை அடைவீர்களாக. |
| **2525.** கா–னோடு கைகளுந்<br>தளர்ந்துகாம நோய்தனால்<br>ஏலவார் குழ–னா<br>ரிகழ்ந்துரைப்ப தன்முனம்<br>மா–னோடு நான்முகன்<br>மதித்தவர்கள் காண்கிலா<br>நீலமேவு கண்டனார்<br>நிகழ்ந்தகாழி சேர்மினே. | கைகால்கள் தளர்ந்து, விரும்பி உடலைப் பற்றிய நோயினால் அன்பொடு போற்றிய அழகிய மனைவியரும் இகழ்ந்து பேசுதற்கு முன்னமே, திருமால் பிரமர்கள் மதித்துக் காண ஒண்ணாத நீலகண்டர் எழுந்தருளிய காழிப்பதியை அடைவீர்களாக. |

| | |
|---|---|
| **2526.** நிலைவெறுத்த நெஞ்சமோடு<br>நேசமில் புதல்வர்கள்<br>முலைவெறுத்த பேர்தொடங்கி<br>யேமுனிவ தன்முனந்<br>தலைபறித்த கையர்தேரர்<br>தாந்தரிப் பரியவன்<br>சிலைபிடித் தெயிலெய்தான்<br>திருந்துகாழி சேர்மினே. | பலநாள்கள் நோயிற் கிடத்தலால் தந்தை என்ற முன்நிலையை வெறுத்த அன்பு அற்ற புதல்வர்கள், மனைவி முதலானோர் முனிவு கொள்ளுதற்கு முன்னரே, தலைபறித்து வாழும் சமணர், தேரர் ஆகியோர் நினைதற்கும் அரியவனும், சிலைபிடித்து முப்புரம் எரித்தவனும் ஆகிய சிவபிரானது அழகிய காழியை அடைவீர்களாக. |
| **2527.** தக்கனார் தலையரிந்த<br>சங்கரன் தனதரை<br>அக்கினோ டரவசைத்த<br>வந்திவண்ணர் காழியை<br>ஒக்கஞான சம்பந்தன்<br>உரைத்தபாடல் வல்லவர்<br>மிக்கவின்ப மெய்திவீற்<br>றிருந்துவாழ்தன் மெய்ம்மையே. | தக்கன் தலையை அரிந்தவனும், சங்கரனும், தனது இடையில் என்பு மாலையுடன் பாம்பு அணிந்த அந்தி வண்ணனும் ஆகிய சிவபிரானது காழிப்பதியைப் பொருந்துமாறு ஞானசம்பந்தன் உரைத்த இப்பதிகப் பாடல்களை வல்லவர்கள் மிக்க இன்பம் எய்தி வீற்றிருந்து வாழ்தல் உண்மையாகும். |

## 98. திருத்துருத்தி (திருவிராகம்)
## (இறைவனின் திருநாமம் – சொன்னவாரறிவார்)

பண் : நட்டராகம் பதிக எண் : 98

| | |
|---|---|
| **2528.** வரைத்தலைப் பசும்பொனோ<br>டருங்கலன்க ளுந்திவந்<br>திரைத்தலைச் சுமந்துகொண்<br>டெறிந்திலங்கு காவிரிக்<br>கரைத்தலைத் துருத்திபுக்<br>கிருப்பதே கருத்தினாய்<br>உரைத்தலைப் பொ–ந்துனக்<br>குணர்த்துமாறு வல்லமே. | மலைகளி–ருந்து பொன்னையும், அரிய அணிகளையும் உந்தி ஆரவாரம் செய்து அலை வீசி வரும் காவிரிக் கரையிலுள்ள திருத்துருத்தியில் எழுந்தருளும் விருப்புடைய இறைவனே! சொன்னவாறறித–ல் உனக்கு யாம் உணர்த்தும் வன்மை உடையோமோ?<br>துருத்தி – ஆற்றிடைக் குறை. |
| **2529.** அடுத்தடுத்த கத்தியோடு<br>வன்னிகொன்றை கூவிளம்<br>தொடுத்துடன் சடைப்பெய்தாய்<br>துருத்தியாயோர் காலனைக்<br>கடுத்தடிப் புறத்தினா<br>னிறத்துதைத்த காரணம்<br>எடுத்தெடுத் துரைக்குமாறு<br>வல்லமாகில் நல்லமே. | சடையில் அகத்திப்பூ, வன்னி, வில்வம், கொன்றை மலர் என்பவற்றை அடுத்தடுத்துத் தொடுத்தணிந்தவனே! திருத்துருத்தியில் எழுந்தருளியவனே! நீ காலனைச் சினந்து திருவடியால் அவன் மார்பில் உதைத்தழித்த காரணத்தைப் பலகாலும் எடுத்து எடுத்து உரைத்த–ல் வல்லமை உடையோமாயின் நாங்கள் நன்மை உறுவோம். |

| | |
|---|---|
| **2530.** கங்குல்கொண்ட திங்களோடு<br>கங்கைதங்கு செஞ்சடைச்<br>சங்கிலங்கு வெண்குழை<br>சரிந்திலங்கு காதினாய்<br>பொங்கிலங்கு பூணநூ<br>லுருத்திரா துருத்திபுக்<br>கெங்குநின் னிடங்களா<br>அடங்கிவாழ்வ தென்கொலோ. | கங்கு—ல் ஒளி வீசுதலைக் கொண்ட திங்களோடு கங்கையும் தங்கிய செஞ்சடையையும், சங்கால் இயன்று விளங்கும் வெண்குழை தொங்கும் காதினையும், பொங்கி விளங்கும் பூண நூலையும் உடைய உருத்திரமூர்த்தியே! எல்லா இடங்களும் உன் இடங்களாக இருக்க, திருத்துருத்தி என்ற இத்தலத்தில் புக்கு அடங்கி வாழ்வதற்குக் காரணம் யாதோ ? |
| **2531.** கருத்தினாலொர் காணியில்<br>விருத்தியில்லை தொண்டர்தம்<br>அருத்தியாற்றம் மல்லல்சொல்—<br>லையமேற்ப தன்றியும்<br>ஒருத்திபால் பொருத்திவைத்<br>துடம்புவிட்டு யோகியாய்<br>இருத்திநீ துருத்திபுக்<br>கிதென்னமாய மென்பதே. | கருதுமிடத்து ஒரு காணி நிலத்தில் பயிரிட்டு வரும் வருவாயும் உனக்கு இல்லை. தொண்டர்கள்மேல் உள்ள ஆசையால் தம் அல்லல் சொல்— ஐயம் ஏற்கின்றதன்றி, ஒரு பெண்ணைத் தன் உடம்பின் ஒரு பாகத்தே கொண்டிருந்தும் உடம்பின்மேல் உளதாம் பற்றை விடுத்து யோகியாய் இருந்து திருத்துருத்தியில் புகுந்து எழுந்தருளி யிருத்தற்குரிய மாயம் யாதோ ? |
| **2532.** துறக்குமா சொலப்படாய்<br>துருத்தியாய் **திருந்தடி**<br>**மறக்குமா றிலாதவென்னை**<br>**மையல்செய்திம் மண்ணின்மேல்**<br>**பிறக்குமாறு காட்டினாய்**<br>பிணிப்படு முடம்புவிட்<br>டிறக்குமாறு காட்டினாய்க்<br>கிழுக்குகின்ற தென்னையே.<br><br>திருஞானசம்பந்தரின் முற்பிறவி நிகழ்வுகளுக்கு இது ஒரு அகச் சான்றுப்பாடலாகும். | திருத்துருத்தியில் எழுந்தருளிய இறைவனே! பக—ல் யோகியாய்த் திருத்துருத்தியிலும், இரவில் மணவாளக் கோலத்தோடு வேள்விக் குடியிலும் எழுந்தருளியுள்ள நீ, துறக்கும் உபாயத்தைக் கூறினீர் இல்லை. அழகிய திருவடியின்பத்தில் திளைத்து அதனை மறவாதிருந்த என்னை மயக்குறுத்திடும் மண்ணுலகில் பிறக்குமாறும், நோய்க்கு இடமான இவ்வுடம்பை விடுத்து இறக்குமாறும் செய்தருளினாய். யான் உனக்குச் செய்த இழுக்கு யாதோ ? சொல்வாயாக. |
| **2533.** வெயிற்கெதிர்ந் திடங்கொடா<br>தகங்குளிர்ந்த பைம்பொழில்<br>துயிற்கெதிர்ந்த புள்ளினங்கள்<br>மல்குதண் துருத்தியாய்<br>மயிற்கெதிர்ந் தணங்குசாயன்<br>மாதொர்பாக மாகமூ<br>வெயிற்கெதிர்ந் தொரம்பினால்<br>எரித்தவில்— யல்லையே. | வெயிலை எதிர்த்து அதற்கு இடம் கொடாது அகம் குளிர்ந்த பைம் பொழி—ல் துயிலாதனவாய்ப் பறவை இனங்கள் நிறைந்து வாழும் தண்மையான திருத்துருத்தியில் எழுந்தருளிய இறைவனே! மயிலொடு மாறுபட்டு அழகால் அதனை வருந்தச் செய்யும் அழகினை உடைய உமைபாகராக மூவெயில்களை எதிர்த்து அவற்றை ஓரம்பினால் எரித்த சிறந்த வில்லாளியல்லையோ நீ! |

| | |
|---|---|
| **2534.** கணிச்சியம் படைச்செல்வா<br>கழிந்தவர்க் கொழிந்தசீர்<br>துணிச்சிரக் கிரந்தையாய்<br>கரந்தையாய் துருத்தியாய்<br>அணிப்படுந் தனிப்பிறைப்<br>பனிக்கதிர்க் கவாவுநல்<br>மணிப்படும்பை நாகநீ<br>மகிழ்ந்தவண்ண லல்லையே. | மழுப்படையினை உடைய செல்வரே! பல்லூழிக் காலங்களில் அழிந்தொழிந்த சிறப்பினராகிய திருமால், பிரமர்களுடைய தலையோடுகளைக் கட்டிய முடிச்சுடையவரே! கரந்தை சூடியவரே, திருத்துருத்தியில் உறைபவரே! அழகியதும் ஒப்பற்றதுமான இளம்பிறையின் குளிர்ந்த நிலவொளியை அவாவும், நல்ல மணியை உடைய படப்பாம்பை ஒருங்கே அணிந்த தலைமையாளர் அல்–ரோ நீர். |
| **2535.** சுடப்பொடிந் துடம்பிழந்<br>தநங்கனாய மன்மதன்<br>இடர்ப்படக் கடந்திடந்<br>துருத்தியாக வெண்ணினாய்<br>கடற்படை யுடையவக்<br>கட–லங்கை மன்னனை<br>அடற்பட வடுக்க–ல்<br>லடர்த்தவண்ண லல்லையே. | நெற்றிவிழி சுடுதலால் பொடியாய் உடம்பு அழிந்த மன்மதன் இடர்ப்பட, அவனை வென்று தமக்கு இடமாகத் திருத்துருத்தியைக் கொண்டவரே! கடற்படையை உடைய இலங்கை மன்னன் இராவணன் துன்புறுமாறு மலையின் கீழ் அகப்படுத்தி அடர்த்த தலைமையாளர் அல்–ரோ நீர்.<br>சுந்தரமூர்த்தி சுவாமிகளின் உடல் நோய் தீர்த்த "வடகுளம்" இங்குள்ளது. |
| **2536.** களங்குளிர்ந் திலங்குபோது<br>காதலானு மாலுமாய்<br>வளங்கிளம்பொ னங்கழல்<br>வணங்கிவந்து காண்கிலார்<br>துளங்கிளம்பி றைச்செனித்<br>துருத்தியாய் திருந்தடி<br>உளங்குளிர்ந்த போதெலா<br>முகந்துகந் துரைப்பனே. | தேன் உடையதாய்க் குளிர்ந்து இலங்கும் தாமரைப் போதில் எழுந்தருளிய பிரமனும் திருமாலும் வந்து வணங்கி அழகிய திருவடிகளைக் காணாதவராயினர். ஒளி துளங்கும் இளம் பிறையைச் சூடிய சென்னியினராய திருத்துருத்தி இறைவரே! உம் திருவடிப் பெருமைகளை உளம் குளிர்ந்த போதெல்லாம் உவந்து உரைத்து மகிழ்கிறேன். |
| **2537.** புத்தர்தத் துவமிலாச்<br>சமணுரைத்த பொய்தனை<br>உத்தம மெனக்கொளா<br>துகந்தெழுந்து வண்டினம்<br>துத்தநின்று பண்செயுஞ்<br>சூழ்பொழில் துருத்தியெம்<br>பித்தர்பித்த னைத்தொழப்<br>பிறப்பறுத்தல் பெற்றியே. | புத்தர்களும் தத்துவங்கள் அற்ற நெறியாகிய சமண மதத்தினரும் உரைத்த பொய்களை உண்மை எனக் கொள்ளாது, வண்டினங்கள் மகிழ்வோடு எழுந்து, துத்தம் என்னும் சுருதியில் பாடும் பைம்பொழில் சூழ்ந்த திருத்துருத்தியில் விளங்கும் பக்தர்களிடம் அன்பு செய்யும் பரமனைத் தொழப் பிறப்பறுத்தல் பயனாய் விளையும். |

குத்தாலம் என்னும் ஒருவகை ஆத்தி மரத்தைத் தல மரமாகப் பெற்றிருப்பதால் குத்தாலம் – குற்றாலம் என வழங்கப்படுகிறது.

| | |
|---|---|
| 2538. கற்றுமுற்றி னார்தொழுங்<br>கழுமலத் தருந்தமிழ்<br>சுற்றுமுற்று மாயினா<br>னவன்பகர்ந்த சொற்களால்<br>பெற்றமொன் றுயர்த்தவன்<br>பெருந்துருத்தி பேணவே<br>குற்றமுற்று மின்மையிற்<br>குணங்கள்வந்து கூடுமே. | கல்விகற்று நிறைவு பெற்றவர்களால் தொழப் பெறும் கழுமலத்துள் தோன்றிய, அருந்தமிழை முற்றிலுமாக அறிந்துணர்ந்த ஞானசம்பந்தன் அருளிய இப்பதிகப் பாடல்களால் விடைக்கொடியை ஏந்திய சிவபிரானது திருத்துருத்தியை விரும்பி வழிபடுவோர் குற்றமற்றவர் ஆவர். அவரிடம் நற்குணங்கள் வந்து பொருந்தும். |

## 99. திருக்கோடிகா

பண் : நட்டராகம் பதிக எண் : 99

| | |
|---|---|
| 2539. இன்றுநன்று நாளைநன்<br>றென்றுநின்ற விச்சையால்<br>பொன்றுகின்ற வாழ்க்கையைப்<br>போகவிட்டுப் போதுமின்<br>மின்றயங்கு சோதியான்<br>வெண்மதி விரிபுனல்<br>கொன்றைதுன்று சென்னியான்<br>கோடிகாவு சேர்மினே. | இன்றைய நாள் நல்லது. நாளைய நாள் நல்லது என்று இச்சையால் காலங் கடத்திப் பெருமானை வழிபடாது அழிந்தொழியும் வாழ்க்கையைப் போக்கி மெய் வாழ்வினைஅடைய வாருங்கள். மின்னல் போன்ற ஒளியினனும், வெண்மதி, கங்கை, கொன்றை ஆகியவற்றை முடியில் சூடியவனுமாகிய சிவபிரான் உறையும் திருக்கோடிகாவைச் சென்றடைவீர்களாக. |
| 2540. அல்லன்மிக்க வாழ்க்கையை<br>யாதரித் திராதுநீர்<br>நல்லதோர் நெறியினை<br>நாடுதுந் நடம்மினோ<br>வில்லையன்ன வாணுதல்<br>வெள்வளையொர் பாகமாங்<br>கொல்லைவெள்ளை யேற்றினான்<br>கோடிகாவு சேர்மினே. | அல்லல் மயமான வாழ்க்கையை விரும்பியிராது நீர் நற்கதியை அடையும் நெறியை நாடுதற்குப் புறப்படுவீர்களாக. வில் போன்ற ஒளி பொருந்திய நுதலை உடையவளும், வெண்மையான வளையல்களை அணிந்தவளுமாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு, முல்லை நிலத்து வெள்ளை ஆனேற்றை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமானுடைய திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| 2541. துக்கமிக்க வாழ்க்கையின்<br>சோர்வினைத் துறந்துநீர்<br>தக்கதோர் நெறியினைச்<br>சார்தல்செய்யப் போதுமின்<br>அக்கணிந் தரைமிசை<br>யாறணிந்த சென்னிமேல்<br>கொக்கிற கணிந்தவன்<br>கோடிகாவு சேர்மினே. | துக்கம்மிகுந்த வாழ்க்கையினால் வரும் இளைப்பை நீக்கி, நீர்தக்கதொரு நெறியை அடைய வாருங்கள். அரைமிசை என்பு மாலையை அணிந்தவனாய், கங்கை சூடிய சடைமுடியில் கொக்கிறகு அணிந்துள்ள சிவபிரான் உறையும் திருக்கோடிகாவைச் சேருங்கள். |

| | |
|---|---|
| 2542. பண்டுசெய்த வல்வினை<br>பற்றறக் கெடும்வகை<br>உண்டுமக் குரைப்பனா<br>னொல்லை நீ ரெழுமினோ<br>மண்டுகங்கை செஞ்சடை<br>வைத்துமாதொர் பாகமாக்<br>கொண்டுகந்த மார்பினான்<br>கோடிகாவு சேர்மினே. | முற்பிறவிகளில் செய்த வ–ய வினைகள் முழுவதும் அழிந்தொழிதற்குரிய வழி ஒன்றுண்டு. அதனை உங்கட்குக் கூறுகிறேன். விரைந்து நீங்கள் புறப்படுவீர்களாக. செஞ்சடையில் கங்கையைச் சூடி உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டுள்ள மார்பினனாய சிவபிரானது திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| 2543. முன்னைநீர்செய் பாவத்தான்<br>மூர்த்திபாதஞ் சிந்தியா<br>தின்னநீரி டும்பையின்<br>மூழ்கிறீ ரெழும்மினோ<br>பொன்னைவென்ற கொன்றையான்<br>பூதம்பாட வாடலான்<br>கொன்னவிலும் வே–னான்<br>கோடிகாவு சேர்மினே. | முற்பிறவியில் நீர், செய்த பாவத்தால் சிவமூர்த்தியின் திருவடிகளை நினையாது இன்னமும் நீங்கள் துன்பங்களில் மூழ்கித் துயருறுகின்றீர்களே, புறப்படுவீர்களாக. பொன்னையும் வென்ற அழகிய கொன்றை சூடியவனாய்ப் பூதங்கள் பாட ஆடும் இயல்பினனும், கொல்லும்தன்மை வாய்ந்த வே–னை உடையவனும் ஆகிய சிவபிரான் உறையும் திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| 2544. ஏவமிக்க சிந்தையோ<br>டின்பமெய்த லாமெனப்<br>பாவமெத் தனையுநீர்<br>செய்தொரு பயனிலைக்<br>காவன்மிக்க மாநகர்<br>காய்ந்துவெங் கனல்படக்<br>கோவமிக்க நெற்றியான்<br>கோடிகாவு சேர்மினே. | பெருமையற்ற உலக வாழ்க்கையை இன்பம் உடையது என்று நினைத்திருந்து நீர் மாண்பு அற்ற மூப்பினால் வருந்துதற்கு முன்னரே வருவீர்களாக. வெண்மையான என்புமாலையை அணிகலனாகப் பூண்டு, பொன்போலத் திகழும் சடைமுடியில் வளைந்த வெண்பிறையைச் சூடிய சிவபிரானின் திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| 2545. ஏணழிந்த வாழ்க்கையை<br>யின்பமென் றிருந்துநீர்<br>மாணழிந்த மூப்பினால்<br>வருந்தன்முன்னம் வம்மினோ<br>பூணல்வெள் ளெலும்பினான்<br>பொன்றிகழ் சடைமுடிக்<br>கோணல்வெண் பிறையினான்<br>கோடிகாவு சேர்மினே. | பெருமையற்ற உலக வாழ்க்கையை இன்பம் உடையது என்று நினைத்திருந்து நீர் மாண்பு அற்ற மூப்பினால் வருந்துதற்கு முன்னரே வருவீர்களாக. வெண்மையான என்புமாலையை அணிகலனாகப் பூண்டு, பொன்போலத் திகழும் சடைமுடியில் வளைந்த வெண்பிறையைச் சூடிய சிவபிரானின் திருக்கோடிகாவை அடைவீர்களாக. |

| | |
|---|---|
| **2546.** மற்றிவாழ்க்கை மெய்யெனும்<br>மனத்தினைத் தவிர்ந்துநீர்<br>பற்றிவாழ்மின் சேவடி<br>பணிந்துவந் தெழுமினோ<br>வெற்றிகொள் தசமுகன்<br>விறல்கெட விருந்ததோர்<br>குற்றமில் வரையினான்<br>கோடிகாவு சேர்மினே. | இல்வாழ்க்கையை மெய்யென்று கருதும் எண்ணத்தை விடுத்துச் சிவபிரான் திருவடிகளைப் பணிந்து பற்றி வாழ்வீர்களாக. வெற்றியையே பெற்று வந்த இராவணனின் வ–மையை அழித்த குற்றமற்ற கயிலை மலைக்கு உரியவனாகிய அச்சிவபிரானின் திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| **2547.** மங்குநோ யுறும்பிணி<br>மாயும்வண்ணஞ் சொல்லுவன்<br>செங்கண்மால் திசைமுகன்<br>சென்றளந்துங் காண்கிலா<br>வெங்கண்மால் விடையுடை<br>வேதியன் விரும்புமூர்<br>கொங்குலாம் வளம்பொழிற்<br>கோடிகாவு சேர்மினே. | வாழ்வை மங்கச் செய்யும் நோய்க்குக் காரணமான வினைகள் அழிதற்குரிய உபாயம் ஒன்றைச் சொல்லுவேன், கேளுங்கள். செங்கண் மாலும் நான்முகனும் சென்று அளந்தும் காணுதற்கியலாத பெருமையனும், வெவ்விய கண்களைக் கொண்ட பெரிய விடையூர்தியை உடைய வேதியனுமாகிய சிவபிரான் விரும்பும் தேன் நிறைந்த பொழில் சூழ்ந்த திருக்கோடிகாவை அடைவீர்களாக. |
| **2548.** தட்டொடு தழைமயிற்<br>பீ–கொள் சமணரும்<br>பட்டுடை விரிதுகி–<br>னார்கள்சொற் பயனிலை<br>விட்டபுன் சடையினான்<br>மேதகும் முழவொடும்<br>கொட்டமைந்த வாடலான்<br>கோடிகாவு சேர்மினே. | தட்டோடு, தழைத்த மயிற் பீ–யை ஏந்தித்திரியும் சமணர்களும், பட்டால் ஆகிய விரிந்த ஆடையைப் போர்த்த புத்தர்களும் சொல்வன பயனற்ற சொற்களாகும். தொங்க விட்ட சடையினனாய் மேதகு முழவு கொட்ட ஆடுபவனாய் விளங்கும் சிவபிரானின் கோடிகாவை அடைவீர்களாக. |
| **2549.** கொந்தணி குளிர்பொழிற்<br>கோடிகாவு மேவிய<br>செந்தழ லுருவனைச்<br>சீர்மிகு திறலுடை<br>அந்தணர் புக–யு<br>ளாயகேள்வி ஞானசம்<br>பந்தன தமிழ்வல்லார்<br>பாவமான பாறுமே. | பூங்கொத்துக்களை உடைய குளிர்ந்த பொழில் சூழ்ந்த திருக்கோடிகாவில் எழுந்தருளிய செந்தழல் உருவனை, சிறப்புமிக்க திறனுடைய அந்தணர்கள் வாழும் புக–யுள் தோன்றிய வேதங்களில் வல்ல ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகத்தமிழை வல்லவர்களின் பாவங்கள் நீங்கும். |

## 100. திருக்கோவலூர்வீரட்டம்

பண் : நட்டராகம் (திருவிராகம்) பதிக எண் : 100

2550. படைகொள்கூற்றம் வந்துமெய்ப்
பாசம்விட்ட போதின்கண்
இடைகொள்வா ரெமக்கிலை
யெழுகபோது நெஞ்சமே
குடைகொள்வேந்தன் மூதாதை
குழகன்கோவ லூர்தனுள்
விடையதேறுங் கொடியினான்
வீரட்டானஞ் சேர்துமே.

கோவலூர் – ஊரின் பெயர், வீரட்டம் – கோயி–ன் பெயர்.

படைகளைக் கொண்ட கூற்றுவன் வந்து உடலைப் பிரித்து உயிரைக் கொள்வதற்குப் பாசக்கயிற்றை வீசும் நேரத்தில் இடையில் வந்து தடுப்பார் எவரும் எமக்கு இல்லை. நெஞ்சே! எழுக. என்னோடு போதுக. வெண்கொற்றக் குடையைக் கொண்ட மலையமானின் முதிய தாதையாக விளங்கும் குழகனும் விடைக் கொடியினனுமாய்க் கோவலூரில் விளங்கும் சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம்.

2551. கரவலாளர் தம்மனைக்
கடைகடோறுங் கானிமிர்த்
திரவலாழி நெஞ்சமே
யினியதெய்த வேண்டிநீ
குரவமேறி வண்டினங்
குழலொடியாழ்செய் கோவலூர்
விரவிநாறு கொன்றையான்
வீரட்டானஞ் சேர்துமே.

நெஞ்சே! கரப்பவர் இல்லங்கள் தோறும் சென்று இரவாதே. இனியதை நீ எய்த வேண்டின், வண்டினங்கள் குரா மரங்களில் ஏறிக் குழலும் யாழும் போல ஒ–செய்யும் கோவலூரில் மணம் விரவி வீசும் கொன்றைமாலையை அணிந்த சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம்.

வீரட்டதலங்கள் – எட்டு.

2552. உள்ளத்தீரே போதுமின்
னுறுதியாவ தறிதிரேல்
அள்ளற்சேற்றிற் கா–ட்டிங்
கவலத்துள் எழுந்தாதே
கொள்ளப்பாடு கீதத்தான்
குழகன்கோவ லூர்தனுள்
வெள்ளந்தாங்கு சடையினான்
வீரட்டானஞ் சேர்துமே.

நல்ல உள்ளம் உடையவர்களே! உயிருக்கு உறுதியானதை நீர் அறிய விரும்புவீராயின் நரகத்தில் அழுந்தித் துயருறாமல், செவி ஏற்கும் பாடல்களைப் பாடுபவனும் குழகனும் கோவலூரில் கங்கை தங்கிய சடையினனாக விளங்குவோனும் ஆகிய பெருமான் உறையும் வீரட்டானத்தை அடைவோம் வருக.

2553. கனைகொளிருமல் சூலைநோய்
கம்பதாளி குன்மமும்
இனையபலவு மூப்பினோ
டெய்திவந்து ந–யாமுன்
பனைகளுலவு பைம்பொழிற்
பழனஞ்சூழ்ந்த கோவலூர்
வினையைவென்ற வேடத்தான்
வீரட்டானஞ் சேர்துமே.

மூப்புக் காலத்தில் கனைத்தலைக் கொண்ட இருமல், சூலை நோய், நடுக்கம், குன்மம் முத–யன வந்து ந–வு செய்தற்கு முன்னே, பனைகள் மிக்க பசிய பொழில் வயல் ஆகியன சூழ்ந்த கோவலூரில், இருவினைகளும் அற்ற வடிவினனாய் விளங்கும் சிவபிரானது வீரட்டானத்தை அடைவோமாக.

இது அந்தகாசுரனைக் காய்ந்த இடம்.

| | |
|---|---|
| **2554.** உளங்கொள்போக முய்த்திடா<br>ருடம்பிழந்த போதின்கண்<br>துளங்கிநின்று நாடொறுந்<br>துயரலாழி நெஞ்சமே<br>வளங்கொள்பெண்ணை வந்துலா<br>வயல்கள்சூழ்ந்த கோவலூர்<br>விளங்குகோவ ணத்தினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | ஆழமான சிந்தனையை உடைய நெஞ்சமே! உடலற்ற காலத்தில் மனத்தால் விரும்பியவற்றை எய்துதல் இயலாது. நாள் தோறும் துளங்கித் துயருறாதே. வளமான பெண்ணையாறு வந்து பாயும் வயல்கள் சூழ்ந்த கோவலூரில், விளங்கிய கோவணத்தினனாய்ச் சிவபிரான் வீற்றிருந்தருளும் வீரட்டானத்தை அடைவோம். |
| **2555.** கேடுமூப்புச் சாக்காடு<br>கெழுமிவந்து நாடொறும்<br>ஆடுபோல நரைகளா<br>யாக்கைபோக்க தன்றியும்<br>கூடிநின்று பைம்பொழிற்<br>குழகன்கோவ லூர்தனுள்<br>வீடுகாட்டு நெறியினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | நம் உடல் நரையுடையதாய், ஆடுபோல அலைதலால் கேடு, முதுமை, சாக்காடு ஆகியன நெருங்கி வந்து அழிதலை உடையது. பசுமையான பொழில்கள் செறிந்து நின்று அணி செய்யும் கோவலூரில் விளங்கும் குழகனும், வீடுகாட்டும் நெறியினனும் ஆகிய சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம். நெஞ்சே! வருக.<br><br>இது மெய்ப்பொருள் நாயனார் அவதாரத்தலம். |
| **2556.** உரையும்பாட்டுந் தளர்வெய்தி<br>யுடம்புமூத்த போதின்கண்<br>நரையுந்திரையுங் கண்டெள்கி<br>நகுவர் நமர்க ளாதலால்<br>வரைகொள்பெண்ணை வந்துலா<br>வயல்கள்சூழ்ந்த கோவலூர்<br>விரைகொள்சீர்வெண் ணீற்றினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | பேச்சும், பாட்டும் தளர்ந்து நம் உடல் மூத்த போதில் நம் உறவினர் நரைதிரை கண்டு இகழ்ந்து சிரிப்பர். ஆதலால், மலையி—ருந்து இழிந்து வரும் பெண்ணையாறு பாய்ந்துலாவும் வயல்கள் சூழ்ந்த கோவலூரில் மணம் கமழும் சிறப்புமிக்க வெண்ணீறணிந்தவனாய் விளங்கும் சிவபிரானின் வீரட்டானத்தைச் சென்றடைவோம்.<br><br>இத்தலம் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ளது. |
| **2557.** ஏதமிக்க மூப்பினோ<br>டிருமலீளை யென்றிவை<br>ஊதலாக்கை யோம்புவீ<br>ருறுதியாவ தறிதிரேல்<br>போதில்வண்டு பண்செயும்<br>பூந்தண்கோவலூர்தனுள்<br>வேதமோது நெறியினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | துன்பம்மிக்க மூப்போடு இருமல் ஈளை ஆகியனவற்றுக்கு இடனாய பருத்த உடலைப் பேணித் திரிபவர்களே! உயிர்க்கு உறுதியாவதை அறிவீராயின், மலர்களில் வண்டுகள் பண் பாடும் அழகிய கோவலூரில், வேதங்களை ஓதும் நெறியினன் ஆகிய சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம். வருக. |

| | |
|---|---|
| **2558.** ஆறுபட்ட புன்சடை<br>அழகனாயி மைக்கொரு<br>கூறுபட்ட மேனியான்<br>குழகன்கோவ லூர்தனுள்<br>நீறுபட்ட கோலத்தான்<br>நீலகண்ட னிருவர்க்கும்<br>வேறுபட்ட சிந்தையான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | கங்கை தங்கிய மென்மையான சடைகளை உடைய அழகனும், உமையம்மைக்குத் தன் மேனியில் ஒரு கூற்றை அளித்தவனும் ஆகிய குழகன் விளங்கும் கோவலூரில் நீறணிந்த கோலத்தினனாய், நீலகண்டனாய், திருமால் பிரமர்க்கு வேறான சிந்தையனாய் விளங்கும் சிவபிரானின் வீரட்டானத்தை அடைவோம் வருக. |
| **2559.** குறிகொளாழி நெஞ்சமே<br>கூறைதுவரிட் டார்களும்<br>அறிவிலாத வமணர்சொல்<br>லவத்தமாவ தறிதிரேல்<br>பொறிகொள்வண்டு பண்செயும்<br>பூந்தண்கோவ லூர்தனுள்<br>வெறிகொள்கங்கை தாங்கினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | ஆழமாகப் பலவற்றை எண்ணும் நெஞ்சமே! துவரூட்டிய ஆடையினர்களாகிய புத்தர்களும் அறிவிலாத சமணர்களும் கூறும் சொற்கள் பயனற்றவை ஆதலை உணர்வாயேயானால், பொறிகளை உடைய வண்டுகள் இசைபாடும் அழகிய கோவலூரில் மணம் கமழும் கங்கையை அணிந்த சடையினனாகிய சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம் வருக. |
| **2560.** கழியொடுலவு கானல்சூழ்<br>காழிஞான சம்பந்தன்<br>பழிகள்தீரச் சொன்னசொற்<br>பாவநாச மாதலால்<br>அழிவிலீர்கொண் டேத்துமின்<br>அந்தண்கோவ லூர்தனுள்<br>விழிகொள்பூதப் படையினான்<br>வீரட்டானஞ் சேர்துமே. | வீணே அழிதல் இல்லாதவர்களே! உப்பங் கழிகளோடு கூடிய கடற்கரைச் சோலைகள் சூழ்ந்த காழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன், பழிகள் நீங்கப்பாடிய இப்பதிகச் செஞ்சொல், பாவங்களை நீக்கும் தன்மையன ஆத–ன் இவற்றை ஓதி வழிபடுங்கள். அழகிய தண்ணிய கோவலூரில் பெரிய விழிகளைக் கொண்ட பூதப்படைகளை உடைய சிவபிரானது வீரட்டானத்தை அடைவோம். வருக. |

## 101. திருவாரூர்

பண் : நட்டராகம் (திருவிராகம்) பதிக எண் : 101

| | |
|---|---|
| **2561.** பருக்கையானை மத்தகத்<br>தரிக்குலத் துகிர்ப்புக<br>நெருக்கிவாய நித்திலந்<br>நிரக்குநீள் பொருப்பனூர்<br>கருக்கொள்சோலை சூழநீடு<br>மாடமாளி கைக்கொடி<br>அருக்கன்மண்ட லத்தணாவு<br>மந்தணாரூ ரென்பதே. | பருத்த கையை உடைய யானையோடு போரிடும் சிங்கத்தின் கை நகங்கள் அதன் மத்தகத்தைக் கீறலால், மத்தகம் முத்துக்களைச் சிந்தும் கயிலை மால்வரையைத் தனக்கு இடமாகக் கொண்ட சிவபிரானது ஊர் பசுமையான சோலைகளால் சூழப்பெற்றுக் கதிரோன் மண்டலத்தைக் கிட்டும் கொடிகள் கட்டப்பட்ட மாட மாளிகைகளை உடைய திருவாரூர். |

| | |
|---|---|
| **2562.** விண்டவெள் ளெருக்கலர்ந்த<br>வன்னிகொன்றை மத்தமும்<br>இண்டைகொண்ட செஞ்சடை<br>முடிச்சிவ னிருந்தவூர்<br>கெண்டைகொண் டலர்ந்தகண்ணி<br>னார்கள்கீத வோசைபோய்<br>அண்டரண்ட மூடறுக்கு<br>மந்தணாரூ ரென்பதே. | 'மலர்ந்த வெள்ளெருக்குமலர், விரிந்த வன்னியிலை, கொன்றை மலர், ஊமத்தம் மலர் ஆகிய இவற்றால் இயன்ற இண்டை மாலையைச் சூடிய செஞ்சடை முடியினை உடைய சிவனது ஊர், கெண்டைமீன் போன்ற விரிந்த கண்களை உடைய மகளிர் பாடும் கீத ஒ– மேலுலகைச் சென்றளாவும் திருவாரூர்'. |
| **2563.** கறுத்தநஞ்ச முண்டிருண்ட<br>கண்டர்கால னின்னுயிர்<br>மறுத்தமாணி தன்றனாகம்<br>வண்மைசெய்த மைந்தனூர்<br>வெறித்துமேதி யோடிமூசு<br>வள்ளைவெள்ளை நீள்கொடி<br>அறுத்துமண்டி யாவிபாயு<br>மந்தணாரூ ரென்பதே. | கொடிய ஆலகால விடத்தை உண்டு இருண்ட கண்டத்தை உடையவரும், காலன் உயிரைக் கவரவந்த போது மார்க்கண்டேயரைக் காத்து அவரது உடல் என்றும் இளமையோடு திகழும் பேற்றை வழங்கியவருமான இளமையும் வ–மையும் உடைய சிவன் ஊர். எருமைகள் மயங்கியோடி வெள்ளிய வள்ளைக் கொடிகளை அறுத்துக் குளங்களில் பாயும் குளிர்ந்த திருவாரூர். |
| **2564.** அஞ்சுமொன்றி யாறுவீசி<br>நீறுபூசி மேனியில்<br>குஞ்சியார வந்திசெய்ய<br>வஞ்சலென்னி மன்னுமூர்<br>பஞ்சியாரு மெல்லடிப்<br>பணைத்தகொங்கை நுண்ணிடை<br>அஞ்சொலார் அரங்கெடுக்கு<br>மந்தணாரூ ரென்பதே. | காமம், குரோதம் முத–ய அறுபகைகளை விடுத்து, ஐம்புலன்களும் ஒன்றி நிற்கத் தலையாரக் கும்பிட்டு வழிபடும் அடியவர்களுக்கு அஞ்சாதீர் என்று அபயமளிக்கும் சிவன் மன்னிய ஊர், பஞ்சுபோன்ற மென்மையான அடிகளையும், பருத்த தனங்களையும், நுண்ணிடையையும், அழகிய இனிய சொற்களையும் உடைய மகளிர் அரங்கில் ஏறி நடஞ்செயும் ஆரூர். |
| **2565.** சங்குலாவு திங்கள்சூடி<br>தன்னையுன்னு வார்மனத்<br>தங்குலாவி நின்றவெங்க<br>ளாதிதேவன் மன்னுமூர்<br>தெங்குலாவு சோலைநீடு<br>தேனுலாவு செண்பகம்<br>அங்குலாவி யண்டநாறு<br>மந்தணாரூ ரென்பதே. | சங்கு போன்ற வெண்மையான பிறைமதியைத் தலையில் சூடி, தன்னை நினைப்பவர் மனத்தில் நிலைத்துநிற்கும் எங்கள் ஆதிதேவன் மன்னிய ஊர், தென்னஞ்சோலைகளையும், வானுலகம் வரை மணம் வீசும் உயர்ந்த செண்பக மரங்களையும் உடைய திருவாரூர். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **2566.** கள்ளநெஞ்ச வஞ்சகக்<br>கருத்தைவிட் டருத்தியோ<br>டுள்ளமொன்றி யுள்குவா<br>ருளத்துளா னுகந்தவூர்<br>துள்ளிவாளை பாய்வயற்<br>சுரும்புலாவு நெய்தல்வாய்<br>அள்ளல்நாரை யாரல்வாரு<br>மந்தணாரூ ரென்பதே. | கள்ள நெஞ்சத்தையும் அது காரணமாகச் செய்யும் வஞ்சகச் செயல்களையும், தீய எண்ணங்களையும் கைவிட்டு, அன்போடு மனமொன்றி வழிபடும் அடியவர் உள்ளத்தில் விளங்கும் இறைவன் ஊர், வாளை மீன்கள் துள்ளிப்பாயும் வயல்களையும், சுரும்புகள் உலாவும் நெய்தல் மலர்களையும், நாரைகள் ஆரல் மீன்களைக் கவர்ந்து உண்ணும் சேற்று நிலங்களையும் உடைய ஆரூர். |
| **2567.** கங்கைபொங்கு செஞ்சடைக்<br>கரந்தகண்டர் காமனை<br>மங்கவெங்க ணால்விழித்த<br>மங்கைபங்கன் மன்னுமூர்<br>தெங்கினூடு போகிவாழை<br>கொத்திறுத்து மாவின்மேல்<br>அங்கண்மந்தி முந்தியேறு<br>மந்தணாரூ ரென்பதே. | பொங்கி வந்த கங்கையைச் சடையிற் கரந்த, சருவவியாபகரும், காமன் பொடிபட அனற்கண்ணைத் திறந்தவரும், மங்கைபங்கரும் ஆகிய சிவன் மன்னிய ஊர், அழகிய கண்களை உடைய மந்திகள் தென்னை மரத்தின் வழியே ஏறி வாழைக் குலைகளை ஒடித்து மாமரத்தின் மேல் ஏறும் சோலை வளம் சான்ற திருவாரூர். |
| **2568.** வரைத்தலம் மெடுத்தவன்<br>முடித்தலம் முரத்தொடும்<br>நெரித்தவன் புரத்தைமுன்<br>னெரித்தவன் னிருந்தவூர்<br>நிரைத்தமாளி கைத்திருவி<br>னேரனார்கள் வெண்ணகை<br>அரத்தவாய் மடந்தைமார்க<br>ளாடுமாரூ ரென்பதே. | திருக்கயிலைமலையை எடுத்த இராவணனுடைய தலைகளையும் மார்பினையும் நெரித்தவனும், திரிபுரங்களை எரித்தவனும் ஆகிய சிவபிரான் ஊர், வரிசையாயமைந்த மாளிகைகளில் திருமகளை ஒத்த அழகும், வெண்ணகையும் செவ்வாயுமுடைய மகளிர் நடனமாடி மகிழும் ஆரூர். |
| **2569.** இருந்தவன் கிடந்தவன்<br>னிடந்துவிண் பறந்துமெய்<br>வருந்தியு மளப்பொணாத<br>வானவன் மகிழ்ந்தவூர்<br>செருந்திஞாழல் புன்னைவன்னி<br>செண்பகஞ் செழுங்குரா<br>அரும்புசோலை வாசநாறு<br>மந்தணாரு ரென்பதே. | தாமரை மலரில் இருந்த நான்முகனும், பாம்பணையில் கிடந்த திருமாலும் விண்பறந்தும் மண்ணிடந்து வருந்தியும் அளந்து காணமுடியாத முடியையும் அடியையும் உடைய பெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் ஊர், செருந்தி, ஞாழல், புன்னை, வன்னி செண்பகம், குரா ஆகியன மலர்ந்து மணம்வீசும் சோலைகள் உடைய திருவாரூர். |

| | |
|---|---|
| **2570.** பறித்தவெண் டலைக்கடுப்<br>படுத்தமேனி யார்தவம்<br>வெறித்தவேடன் வேலைநஞ்ச<br>முண்டகண்டன் மேவுமூர்<br>மறித்துமண்டு வண்டல்வாரி<br>மிண்டுநீர் வயற்செந்நெல்<br>அறுத்தவா யசும்புபாயு<br>மந்தணாரூ ரென்பதே. | பறித்த வெள்ளிய தலையையும் கடுக்காய்ப் பொடி பூசிய மேனியையும், உடைய சமணர், மெய்யில்லாத தவம் மேற்கொண்டு கண்டு அஞ்சும் வேடமுடையவனும், நஞ்சுண்ட கண்டனும் ஆகிய சிவபெருமான் மேவும் ஊர், மீண்டும் மீண்டும் தோன்றும் வண்டலை வாரி நீரைத்தடுத்து, செந்நெல்லை அறுத்த வயல்களில் ஊற்று வழியே நீர்ப்பொசிவு தோன்றும், மண்வளமும், நீர் வளமும் உடைய திருவாரூர். |
| **2571.** வல்–சோலை சூதநீடு<br>மன்னுவீதி பொன்னுலா<br>அல்–மா தமர்ந்திருந்த<br>வந்தணாரூ ராதியை<br>நல்லசொல்லு ஞானசம்<br>பந்தன்நாவின் இன்னுரை<br>வல்லதொண்டர் வானமாள<br>வல்லர்வாய்மை யாகவே. | கொடிகள் அடர்ந்த சோலைகளால் சூழப்பெற்று மாமரங்களைக் கொண்டு விளங்கும் திருவீதிகளை உடைய அழகு பொருந்திய அல்–யங்கோதையம்மையோடு எழுந்தருளி விளங்கும் ஆரூர் இறைவனை ஞானநெறிகளை உணர்த்தும் சொற்களைக்கூறும் ஞானசம்பந்தன்தன் நாவினால் பாடிப் போற்றிய இன்னுரைகளை ஓதும் தொண்டர்கள் வானம் ஆள்வர்; இஃது உண்மை. |

## 102. திருச்சிரபுரம்

பண் : நட்டராகம் — பதிக எண் : 102

| | |
|---|---|
| **2572.** அன்னமென்னடை யரிவையோ டினிதுறை<br>யமரர்தம் பெருமானார்<br>மின்னு செஞ்சடை வெள்ளெருக் கம்மலர்<br>வைத்தவர் வேதந்தாம்<br>பன்னு நன்பொருள் பயந்தவர் பருமதிற்<br>சிரபுரத் தார்சீரார்<br>பொன்னின் மாமல ரடிதொழு மடியவர்<br>வினையொடும் பொருந்தாரே. | அன்னம் போன்ற மெல்–ய நடையினை உடைய உமையம்மையோடு இனிதாக உறையும் அமரர் தலைவரும், ஒளி விடும் செஞ்சடையில் வெள்ளெருக்கமலர் சூடியவரும், வேதங்களின் முடிபாய் விளங்கும் உபநிடதங்கள் வழியே நன் பொருள்களை அருளியவரும் பெரிய மதில்களால் சூழப்பட்ட சிரபுரத்தில் எழுந்தருளியிருப்பவரும் ஆகிய புகழாளர்தம் அழகிய மலர் போன்ற திருவடிகளைத் தொழுது எழும் அடியவர் வினையொடும் பொருந்தார். |
| **2573.** கோல மாகரி யுரித்தவ ரரவொடு<br>மேனக்கொம் பிளவாமை<br>சாலப் பூண்டுதண் மதியது சூடிய<br>சங்கர னார்தம்மைப்<br>போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர்<br>பொருகடல் விடமுண்ட<br>நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந்<br>தொழவினை நில்லாவே. | அழகிய பெரிய யானையை உரித்தவரும், பாம்பு, பன்றிப்பல், இளஆமையோடு இவற்றை மிகுதியாகப் புனைந்து தண் மதிசூடிய சங்கரனாரும், தம்மைப் போலத் தம் அடியார்க்கும் இன்பம் அளிப்பவரும், பெரிய கட–டைத் தோன்றிய விடத்தை உண்ட நீலகண்டரும் ஆகிய சிரபுரத்து இறைவனைத் தொழ வினைகள் நாசமாகும். |

| | |
|---|---|
| 2574. மானத் திண்புய வரிசிலைப் பார்த்தனைத்<br>தவங்கெட மதித்தன்று<br>கானத் தேதிரி வேடனா யமர்செயக்<br>கண்டருள் புரிந்தார்பூந்<br>தேனைத் தேர்ந்துசேர் வண்டுகள் திரிதருஞ்<br>சிரபுரத் துறையெங்கள்<br>கோனைக் கும்பிடு மடியரைக் கொடுவினை<br>குற்றங்கள் குறுகாவே. | பெருமைமிக்க தோள்வ–மையோடு வில்திறனில் சிறந்திருந்த அருச்சுனனை அவன்தவம் கெடுமாறு செய்து அவனை மதித்துக் கானகத்தில் ஒரு வேடனாய்ச் சென்று அவனை எதிர்த்து போர் செய்யும் அவன் ஆற்றலைக் கண்டு அருள்புரிந்தவரும், வண்டுகள் பூந் தேனைத் தேர்ந்து திரியும் மலர்வனம் சூழ்ந்த சிரபுரத்துறை எங்கள் தலைவரும் ஆகிய பெருமானாரைக் கும்பிடும் அடியவரைக் கொடுவினைக் குற்றங்கள் குறுகா. |
| 2575. மாணி தன்னுயிர் மதித்துண வந்தவக்<br>காலனை யுதைசெய்தார்<br>பேணி யுள்குமெய் யடியவர் பெருந்துயர்ப்<br>பிணக்கறுத் தருள்செய்வார்<br>வேணி வெண்பிறை யுடையவர் வியன்புகழ்ச்<br>சிரபுரத் தமர்கின்ற<br>ஆணிப் பொன்னினை யடிதொழு மடியவர்க்<br>கருவினை யடையாவே. | மார்க்கண்டேயர் உயிரை மதித்துத் தானே கவர வந்த தென்திசைக்கோனாகிய காலனை உதைத்தவரும், தம்மை விரும்பி நினையும் மெய்யடியார் படும் பெருந்துயர்ப் பிணக்கை நீக்கி அருள்புரிபவரும், சடையில் வெண்பிறை அணிந்தவரும் ஆகிய விரிந்த புகழை உடைய சிரபுரத்தில் அமர்கின்ற மாற்றுயர்ந்த ஆணிப் பொன் போன்றவரை அடிதொழும் அடியவர்களை அருவினைகள் அடையா. |
| 2576. பாரு நீரொடு பல்கதி ரிரவியும்<br>பனிமதி யாகாசம்<br>ஒரும் வாயுவு மொண்கனல் வேள்வியிற்<br>றலைவனு மாய்நின்றார்<br>சேருஞ் சந்தன மகிலொடு வந்திழி<br>செழும்புனற் கோட்டாறு<br>வாருந் தண்புனல் சூழ்சிர புரந்தொழு<br>மடியவர் வருந்தாரே. | மண், நீர், பல கதிர்களை உடைய இரவி, தண்மதி, ஆகாயம், வாயு, ஒளிபொருந்திய கனல் வேள்வித் தலைவனாகிய உயிர் ஆகிய அட்டமூர்த்தங் களாய் விளங்குபவர் எழுந்தருளிய, ஆற்றுநீர் கொணரும் சந்தனம் அகில் ஆகியவற்றோடு வந்திழியும் செழும்புனலை உடைய கோட்டாறுபாயும் தண்புனல் சூழ்ந்த சிரபுரத்தைத் தொழும் அடியவர்கள் வருந்தார். |
| 2577. ஊழி யந்தத்தி லொ–கட லோட்டந்திவ்<br>வுலகங்க ளவைமூட<br>ஆழி யெந்தையென் றமரர்கள் சரண்புக<br>வந்தரத் துயர்ந்தார்தாம்<br>யாழி னேர்மொழி யேழையோ டினிதுறை<br>யின்பனெம் பெருமானார்<br>வாழி மாநகர்ச் சிரபுரந் தொழுதெழ<br>வல்வினை யடையாவே. | ஊழி முடிவில் ஒ–க்கும் கடல் அலைகள் ஓடி வந்து உலகங்களை மூடிய காலத்தில் அமரர்கள் ஓடிவந்து "அருட்கடலே! எந்தையே" என்று சரண்புக அதுபோது ஊழி வெள்ளத்தில் தோணிபுரத்தை மிதக்கச் செய்து அமரரைக் காத்தருளிய, யாழ்போலும் மொழியினை உடைய உமையம்மையோடு இனிதாக உறையும் இன்பனும் எம்பெருமானும் ஆகிய சிவபிரானின் மாநகராகிய சிரபுரம் தொழுதெழ வல்வினைகள் அடையா. |

| பாடல் | பொருள் |
|---|---|
| **2578.** பேய்கள் பாடப்பல் பூதங்கள் துதிசெயப்<br>பிணமிடு சுடுகாட்டில்<br>வேய்கொள் தோளிதான் வெள்கிட மாநட<br>மாடும்வித் தகனாரொண்<br>சாய்க டான்மிக வுடையதண் மறையவர்<br>தகுசிர புரத்தார்தாந்<br>தாய்க ளாயினார் பல்லுயிர்க் குந்தமைத்<br>தொழுமவர் தளராரே. | பேய்கள் பாடவும், பலபூதங்கள் துதிக்கவும், பிணங்கள் எரிக்கும் சுடுகாட்டில், மூங்கில் போலும் தோளினை உடைய காளி நாண மாநடம் ஆடும் வித்தகனாரும் புகழ்மிகவுடைய மறையவர் வாழும் தக்க சிரபுரத்தில் உறைபவரும், பல்வகை உயிர்கட்கும் அவ்வவற்றிற்குரிய தாய்களாக விளங்குபவரும் ஆகிய சிவபிரானைத் தொழுபவர் தளர்ச்சியுறார். |
| **2579.** இலங்கு பூண்வரை மார்புடை யிராவண<br>னெழில்கொள்வெற் பெடுத்தன்று<br>கலங்கச் செய்தலுங் கண்டுதங் கழலடி<br>நெரியவைத் தருள்செய்தார்<br>புலங்கள் செங்கழு நீர்மலர்த் தென்றல்மன்<br>றதனிடைப் புகுந்தாருங்<br>குலங்கொண் மாமறை யவர்சிர புரந்தொழு<br>தெழவினை குறுகாவே. | விளங்கிய அணிகலன்களைப் பூண்டவனாய் மலை போலும் மார்பினனாய் விளங்கும் இராவணன் அழகிய கயிலை மலையை நிலைகுலையச் செய்து பெயர்த்தபோது அதனைக் கண்டு தம் திருவடி விரலால் நெரியச் செய்து பின் அவன் தன் பிழைக்கு வருந்திய போது அருள்செய்தவர் ஆகிய சிவபிரான் வீற்றிருப்பதும் வயல்களில் முளைத்த செங்கழுநீர் மலர் மணத்துடன் தென்றல் மன்றினிடைப்புகுந்து இளைப்பாற்றும் சிறப்புடையதும் உயர்குலத்தில் தோன்றிய மறையவர் வாழ்வதுமான சிரபுரத்தைத் தொழ வினைகள் குறுகா. |
| **2580.** வண்டு சென்றணை மலர்மிசை நான்முகன்<br>மாயனென் றிவரன்று<br>கண்டு கொள்ளவோ ரேனமோ டன்னமாய்க்<br>கிளறியும் பறந்துந்தாம்<br>பண்டு கண்டது காணவே நீண்டவெம்<br>பசுபதி பரமேட்டி<br>கொண்ட செல்வத்துச் சிரபுரந் தொழுதெழ<br>வினையவை கூடாவே. | வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர்மிசை விளங்கும் நான்முகனும் திருமாலும் ஆகிய இருவரும் சிவபிரானைக் கண்டறியும் முயற்சியில் முறையே அன்னமாகவும் பன்றியாகவும் பறந்தும் கிளறியும் தேடியபோது அவர்கள் முன்பு கண்ட அத்துணை அளவே காணுமாறு அழலுருவாய் நீண்ட எம் பசுபதியும், பரமேட்டியும் ஆகிய சிவபிரான் விளங்கும் செல்வவளம் உடைய சிரபுரம் தொழுதுஎழ வினைகள் கூடா. |
| **2581.** பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணரும்<br>பார்மிசைத் துவர்தோய்ந்த<br>செறித்த சீவரத் தேரருந் தேர்கிலாத்<br>தேவர்கள் பெருமானார்<br>முறித்து மேதிகள் கரும்புதின் றாவியின்<br>மூழ்கிட விளவாளை<br>வெறித்துப் பாய்வயற் சிரபுரந் தொழவினை<br>விட்டிடு மிகத்தானே. | மயிர் பறித்த புன்தலையையும், குண்டிகை ஏந்திய கையையும் உடைய சமணரும், உலகில் துவர் தோய்ந்த சீவரம் என்னும் ஆடையை அணிந்த தேரரும், அறியமுடியாத தேவர் தலைவர் எழுந்தருளிய, எருமைகள் கரும்பை முறித்துத் தின்று குளங்களில் மூழ்க அதனைக் கண்டு அங்குள்ள இள வாளைகள் வெறித்துப் பாயும் வயல்கள் சூழ்ந்த சிரபுரம் தொழ மிகுதியான வினைகள் நீங்கும். |

| | |
|---|---|
| **2582.** பரசு பாணியைப் பத்தர்க ளத்தனைப்<br>பையர வோடக்கு<br>நிரைசெய் பூண்டிரு மார்புடை நிமலனை<br>நித்திலப் பெருந்தொத்தை<br>விரைசெய் பூம்பொழிற் சிரபுரத் தண்ணலை<br>விண்ணவர் பெருமானைப்<br>பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லவர்<br>பரமனைப் பணிவாரே. | மழுவேந்திய கையனை, பக்தர்கள் தலைவனை, படப்பாம்பு, என்புமாலை ஆகியன அணிந்த அழகிய மார்புடைய நிமலனை, முத்துக்களின் கொத்தாக விளங்குவோனை, மணம் தரும் மலர்களை உடைய பொழில் சூழ்ந்த சிரபுரத்து அண்ணலை, தேவர் பெருமானைப் பரவிய ஞானசம்பந்தரின் செந்தமிழ்ப்பாடல்கள் பத்தையும் வல்லவர் பரமனைப் பணிபவர் ஆவார். |

## 103. திருஅம்பர்மாகாளம்

பண் : நட்டராகம் பதிக எண் : 103

| | |
|---|---|
| **2583.** புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப்<br>போழிள மதிசூடிப்<br>பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும்<br>பிணையல்செய் தவர்மேய<br>மல்கு தண்டுறை யரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>அல்லு நண்பக லுந்தொழு மடியவர்க்<br>கருவினை யடையாவே. | பொன்னிறம் பொருந்திய சடைமுடியில் இளம் பிறையையும் தேன் பொருந்திய கொன்றை மலரையும் பிணைத்துச் சூடிய பெருமான் எழுந்தருளிய அரிசிலாற்றின் வடகரையில் உள்ள அம்பர் மாகாளத்தை இரவும் பகலும் தொழும் அடியவர்களை அருவினைகள் அடையா.<br>அம்பன், அம்பாசுரன் என்ற அரக்கர்களைக் கொன்ற பாவம் நீங்கக் காளி பூசித்த பதியாகும். |
| **2584.** அரவ மாட்டுவ ரந்துகில் பு–யதள்<br>அங்கையி லனலேந்தி<br>இரவு மாடுவ ரிவையிவர் சரிதைகள்<br>இசைவன பலபூதம்<br>மரவந்தோய்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>பரவி யும்பணிந் தேத்தவல் லாரவர்<br>பயன்றலைப் படுவாரே. | பாம்பினைப் பிடித்து ஆட்டுபவர், பு–த்தோலை ஆடையாக உடுப்பவர். அழகிய கையில் அனலேந்தி இரவுப் பொழுதில் ஆடுபவர். அவர்தம் சரிதைகளாகிய இவற்றைப் பல பூதங்கள் பாடித் துதிக்கின்றன. வெண்கடம்ப மரச்சோலைகளை உடையதும் அரிசிலாற்றின் வடகரையிலுள்ளது மாகிய திருமா காளத்தில் உறையும் அப்பெருமானைப் பரவிப் பணிந்து ஏத்த வல்லவர் விழுமிய பயனை அடைவர். |
| **2585.** குணங்கள் கூறியுங் குற்றங்கள் பரவியுங்<br>குரைகழ லடிசேரக்<br>கணங்கள் பாடவுங் கண்டவர் பரவவுங்<br>கருத்தறிந் தவர்மேய<br>மணங்கொள் பூம்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>வணங்கு முள்ளமோ டணையவல் லார்களை<br>வல்வினை யடையாவே. | அவன் குணங்களைக் கூறியும் தம் குற்றங்களை எடுத்துரைத்தும் அவன் திருவடிகளை அடைய முற்படின், பூதகணங்கள் பாடவும், அன்பர்கள் பரவித் துதிக்கவும் வீற்றிருக்கும் அப்பெருமான் நம் கருத்தறிந்து அருள் செய்யும் இயல்பின னாவான். அவ்விறைவன் மேவிய திருமாகாளத்தை வணங்கும் உள்ளத்தோடு அத்தலத்திற்குச் செல்லவல்லவர்களை வல்வினைகள் அடையா. |

| | |
|---|---|
| **2586.** எங்கு மேதுமோர் பிணியிலர் கேடிலர்<br>இழைவளர் நறுங்கொன்றை<br>தங்கு தொங்கலுந் தாமமுங் கண்ணியுந்<br>தாமகிழ்ந் தவர்மேய<br>மங்குல் தோய்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>கங்கு லும்பக லுந்தொழு மடியவர்<br>காதன்மை யுடையாரே. | மேகங்கள் தோயும் பொழில் சூழ்ந்ததும், அரிசிலாற்றின் வடகரையில் உள்ளதும் ஆகிய திருமாகாளத்தில் இழையால் கட்டிய மணம் கமழும் கொன்றைமாலை, தாமம், கண்ணி ஆகியவற்றை அணிந்த இறைவரை இரவும் பகலும் தொழும் அன்புடை அடியவர் எவ்விடத்தும் ஒரு சிறிதும் பிணியிலராவர். |
| **2587.** நெதிய மென்னுள போகமற் றென்னுள<br>நிலமிசை நலமாய<br>கதிய மென்னுள வானவ ரென்னுளர்<br>கருதிய பொருள்கூடில்<br>மதியந் தோய்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>புதிய பூவொடு சாந்தமும் புகையுங்கொண்<br>டேத்துதல் புரிந்தோர்க்கே. | திங்கள் தோயும் பொழில்களால் சூழப்பெற்றதும், அரிசிலாற்றின் வடகரையில் விளங்குவதுமாகிய திருமாகாளத்து இறைவரைப் பூக்கள் சந்தனம் நறுமணப் புகைகளைக் கொண்டு ஏத்தி வழிபடும் சிவபுண்ணியம் உடையோருக்கு அச்சிவபூசையால் எய்தும் திருவருளினும் வேறுநிதியம், சுகபோகம் அடையத்தக்க வேறு கதிகள் உலகில் உண்டோ ? |
| **2588.** கண்ணு லாவிய கதிரொளி முடிமிசைக்<br>கனல்விடு சுடர்நாகம்<br>தெண்ணி லாவொடு திலதமு நகுதலை<br>திகழவைத் தவர்மேய<br>மண்ணு லாம்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>உண்ணி லாநினைப் புடையவ ரியாவரிவ்<br>வுலகினி லுயர்வாரே. | கதிரொளி பொருந்திய முடிமிசைப் பாம்பு திங்கள் தலைமாலை ஆகியவற்றை அணிந்த பெருமான் எழுந்தருளிய பொழில் சூழ்ந்த அரிசிலாற்று வடகரையில் விளங்கும் திருமாகாளத்தை உள்ளத்தே கொண்டு வழிபடுபவர் யாவரோ ? அவர் இவ்வுலகில் உயர்வெய்துவர். |
| **2589.** தூசு தானரைத் தோலுடைக் கண்ணியஞ்<br>சுடர்விடு நறுங்கொன்றை<br>பூசு வெண்பொடிப் பூசுவ தன்றியும்<br>புகழ்புரிந் தவர்மேய<br>மாசு லாம்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>பேசு நீர்மையரி யாவரிவ் வுலகினிற்<br>பெருமையைப் பெறுவாரே. | தோலே அவர் இடையில் கட்டியுள்ள ஆடையாகும். கொன்றையே அவர்தம் கண்ணி, பூசுவது வெண்பொடி. புகழை விரும்புபவர். அவர்தம் திருமாகாளத்தைப் பேசும் தன்மையர் யாவரோ அவர் இவ்வுலகில் பெருமையைப் பெறுவர். |

| | |
|---|---|
| **2590.** பவ்வ மார்கட –லங்கையர் கோன்றனைப்<br>பருவரைக் கீழூன்றி<br>எவ்வந் தீரவன் றிமையவர்க் கருள்செய்த<br>விறையவ னுறைகோயில்<br>மவ்வந் தோய்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>கவ்வை யாற்றொழு மடியவர் மேல்வினை<br>கன–டைச் செதிளன்றே. | கடல் சூழ்ந்த இலங்கை மன்னன் இராவணனைக் கயிலை மலையின்கீழ் அகப்படுத்தி அடர்த்து, இமையவர்க்குத் துன்பங்கள் தீர அருள் செய்தவர். அவ்விறைவர் உறையும் கோயில் அம்பர் மாகாளம். அத்தலத்தைத் தோத்திர ஆரவாரத்தோடு வழிபடும் அடியவர்களின் வினைகள் அழ–ற்பட்ட தூசு போலக் கெடும். |
| **2591.** உய்யுங் காரண முண்டென்று கருதுமி<br>னொளிகிளர் மலரோனும்<br>பைகொள் பாம்பணைப் பள்ளிகொ ளண்ணலும்<br>பரவநின் றவர்மேய<br>மையுலாம்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>கையி னாற்றொழு தவலமும் பிணியுந்தங்<br>கவலையுங் களைவாரே. | கடைத்தேறுதற்கு ஒருவழி உண்டென்று கருதுங்கள். நான்முகனும் திருமாலும் பரவ நின்றவராகிய இறைவர் பொழில்சூழ்ந்த அரிசிலாற்றின் கரையில் உள்ள திருமாகாளத்தில் உள்ளார். அவரைக் கையினால் தொழுவாரே அவலமும் பிணியும் கவலையும் இலராவர். |
| **2592.** பிண்டி பாலரு மண்டைகொ டேரரும்<br>பீ–கொண் டுழல்வாரும்<br>கண்ட நூலருங் கடுந்தொழி லாளாருங்<br>கழறநின் றவர்மேய<br>வண்டு லாம்பொழி லரிசி–ன் வடகரை<br>வருபுனன் மாகாளம்<br>பண்டு நாஞ்செய்த பாவங்கள் பற்றறப்<br>பரவுதல் செய்வோமே. | மாவுக்கஞ்சி உண்டு தம்மைப் பசியி–ருந்து காப்பவரும், மண்டை என்னும் பிச்சைப் பாத்திரத்தை ஏந்தி நிற்பவரும், பீ–கொண்டு உழல்வோரும், கண்டநூல்களை வேதங்களாகக் கொண்டு கூறுவோரும், கடுந்தொழில் புரிவோரும் ஆகிய சமணர் புத்தர் ஆகியோர் புறங்கூறும் பொய்யுரைகளைக் கேளாது மாகாளம் மேவிய பெருமானை முற்பிறவிகளில் நாம் செய்த பாவங்களின் தொடர்ச்சி நீங்கப் பரவுதல் செய்வோம். |
| **2593.** மாறு தன்னொடு மண்மிசை யில்லது<br>வருபுனன் மாகாளத்<br>தீறு மாதியு மாகிய சோதியை<br>யேறமர் பெருமானை<br>நாறு பூம்பொழிற் காழியுண் ஞானசம்<br>பந்தன தமிழ்மாலை<br>கூறு வாரையுங் கேட்கவல் லாரையுங்<br>குற்றங்கள் குறுகாவே. | இவ்வுலகில் தன்னொடு ஒப்புக்கூறத்தக்க தலம் ஒன்றும் இல்லாத மாகாளத்தில் உறையும் ஆதியும் அந்தமும் இல்லாத சோதியை, விடை ஏறும் பெருமானை, ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய தமிழ்மாலையைக் கூறி வழிபடுவோரையும், கேட்போரையும் குற்றங்கள் குறுகா. |

| | |
|---|---|
| **2594.** பொடிகொண் மேனிவெண் னூ–னர் தோ–னர்<br>புயுரி யதளாடை<br>கொடிகொ ளேற்றினர் மணிகிணி னெனவரு<br>குரைகழல் சிலம்பார்க்கக்<br>கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்<br>துறையுங்கற் பகத்தைத்தம்<br>முடிகள் சாய்த்தடி வீழ்தரும் அடியரை<br>முன்வினை மூடாவே. | திருநீறணிந்த மேனியராய், வெண்ணூல் அணிந்தவராய், பு–த்தோலுடுத்தவராய், யானைத் தோலைப் போர்த்தியவராய், விடைக்கொடி உடையவராய், கட்டப்பட்ட மணிகள் கிணின் என ஒ–க்கக், கால்களில் கழல் சிலம்பு ஆகியன ஒ–க்க மணம் கமழும் அழகிய பொழில் சூழ்ந்த கடிக்குளத்தில் உறையும் கற்பகத்தைத் தம் முடிசாய்த்து அடிகளில் வீழ்ந்து வணங்கும் அடியவரைப் பழவினைகள் தொடரா. |
| **2595.** விண்க ளார்தொழும் விளக்கினைத் துளக்கிலா<br>விகிர்தனை விழவாரும்<br>மண்க ளார்துதித் தன்பரா யின்புறும்<br>வள்ளலை மருவித்தம்<br>கண்க ளார்தரக் கண்டுநங் கடிக்குளத்<br>துறைதரு கற்பகத்தைப்<br>பண்க ளார்தரப் பாடுவார் கேடிலர்<br>பழியிலர் புகழாமே. | தேவர்கள் தொழும் திருவிளக்கை, தளர்ச்சியுறாத விகிர்தனை, விழாக்கள் பலவும் நிகழ்த்தும் மண்ணுலகில் உள்ளார் துதித்து அன்புடையவர்களாய் மகிழும் வள்ளலை, சென்றடைந்து தம் கண்களாரக் கண்டு மகிழும் நம் கடிக்குளத்து உறையும் கற்பகத்தை, பண்களோடு பாடல்களைப் பாடிப் போற்றுவார் கேடிலர். பழியிலர் அவரைப் புகழ் வந்தடையும். |
| **2596.** பொங்கு நற்கரி யுரியது போர்ப்பது<br>பு–யத ளழனாகம்<br>தங்க மங்கையைப் பாகம துடையவர்<br>தழல்புரை திருமேனிக்<br>கங்கை சேர்தரு சடையினர் கடிக்குளத்<br>துறைதரு கற்பகத்தை<br>எங்கு மேத்திநின் றின்புறு மடியரை<br>யிடும்பைவந் தடையாவே. | சினந்துவந்த நல்ல யானையின் தோலைப் போர்த்து, பு–த்தோலை உடுத்து, கொடிய பாம்பு திருமேனியில் விளையாட, உமை நங்கையைப் பாகமாகக் கொண்டு, தழல் போன்ற சிவந்த திருமேனியராய்க் கங்கை சேர்ந்த சடையினராய் விளங்கும் கடிக்குளத்து உறையும் கற்பகத்தை எவ்விடத்தும் ஏத்தி நின்று இன்புறும் அடியாரைத் துன்பம் வந்து அடையமாட்டா. |
| **2597.** நீர்கொ ணீள்சடை முடியனை நித்திலத்<br>தொத்தினை நிகரில்லாப்<br>பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவளத்தைப்<br>பசும்பொனை விசும்பாரும்<br>கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்<br>துறையுங்கற் பகந்தன்னைச்<br>சீர்கொள் செல்வங்க ளேத்தவல் லார்வினை<br>தேய்வது திணமாமே. | கங்கை தங்கிய நீண்ட சடைமுடியினனை, முத்துக்களின் கொத்தாய் விளங்குவோனை, உலகில் பல இடங்களிலும் உள்ள மக்கள் வந்து தொழும் பவளத்தை, பசும் பொன்னை, வானளாவிய மேகங்கள் தங்கியவாய் விளங்கும் அழகிய பொழில்கள் சூழ்ந்த கடிக்குளத்தில் உறையும் கற்பகத்தின் சிறப்புமிக்க அருட் செல்வங்களை ஏத்த வல்லவர்களின் வினைகள் தேய்வது திண்ணம். |

| | |
|---|---|
| 2598. சுரும்பு சேர்சடை முடியினன் மதியொடு<br>துன்னிய தழனாகம்<br>அரும்பு தாதவிழ்ந் தலர்ந்தன மலர்பல<br>கொண்டடி யவர்போற்றக்<br>கரும்பு கார்ம– கொடிமிடை கடிக்குளத்<br>துறைதரு கற்பகத்தை<br>விரும்பு வேட்கையொ டுளமகிழ்ந் துரைப்பவர்<br>விதியுடை யவர்தாமே. | வண்டுகள் மொய்க்கும் மலர்களை அணிந்த சடையினனும், கொடிய பாம்பினை மதியோடு பகை நீக்கிப் பொருத்திவைத்த முடியினனும், அரும்புகளையும் மகரந்தம் விரிந்து அலர்ந்த மலர்களையும் கொண்டு அடியவர் போற்ற, கரும்புகளும் உயர்ந்து வளர்ந்த கொடிகளும் பின்னி வளர்ந்த கடிக்குளத்தில் உறையும் கற்பகத்தை அன்போடு விரும்பி உளம் மகிழ்ந்து போற்றுபவர் நல்லூழ் உடையவர் ஆவர். |
| 2599. மாதி லங்கிய பாகத்தன் மதியமொ<br>டலைபுன லழனாகம்<br>போதி லங்கிய கொன்றையு மத்தமும்<br>புரிசடைக் கழகாகக்<br>காதி லங்கிய குழையினன் கடிக்குளத்<br>துறைதரு கற்பகத்தின்<br>பாதங் கைதொழு தேத்தவல் லார்வினை<br>பற்றறக் கெடுமன்றே. | உமைமாது விளங்கும் பாகத்தினனும், திங்கள், கங்கை, சினம் மிக்க பாம்பு, கொன்றை மலர், ஊமத்தை மலர் ஆகியனவற்றை வளைந்த சடையின் மேல், அழகுறச் சூடியவனும் காதிலங்கு குழையினனும் ஆகிய கடிக்குளத்தில் உறையும் கற்பகத்தின் பாதங்களைக் கைகளால் தொழுது ஏத்த வல்லார் வினைகள் அடியோடு கெடும். |
| 2600. குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள்<br>குழாம்பல குளிர்பொய்கை<br>புலவு புள்ளின மன்னங்க ளா–டும்<br>பூவைசே ருங்கூந்தல்<br>கலவை சேர்தரு கண்ணியன் கடிக்குளத்<br>துறையுங்கற் பகத்தைச்சீர்<br>நிலவி நின்றுநின் றேத்துவார் மேல்வினை<br>நிற்கநில் லாதானே. | விளங்கும் அழகினை உடையனவான கொடிகள் கட்டப்பட்ட உயரிய மாடவீடுகளையும் மகளிர் குழாம் நீராடும் குளிர்ந்த பொய்கைகளையும் உடையதும் புலாலுண்ணும் நாரை முத–ய பறவைகளும், அன்னங்களும் விளையாடும் சிறப்பினதுமான கடிக்குளத்தில் மலர்கள் பொருந்திய கூந்த–னளாகிய உமையம்மையோடு கூடிக் கண்ணிமிலைந்து விளங்கும் கற்பகத்தைப் புகழ்ந்து போற்றி ஏத்துவார்மேல் வினைநில்லா. |
| 2601. மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேன்<br>மதியிலா மையிலோடி<br>எடுத்த லும்முடி தோள்கர நெரிந்திற<br>விறையவன் விரலூன்றக்<br>கடுத்து வாயொடு கையெடுத் தலறிடக்<br>கடிக்குளந் தனின்மேவிக்<br>கொடுத்த பேரருட் கூத்தனை யேத்துவார்<br>குணமுடை யவர்தாமே. | பகைவரைக் கொல்லும் வாட்படையை உடைய இராவணன் அறிவின்றிக் கயிலைமலையைப் பெயர்த்த அளவில் அவனுடைய முடி, தோள், கை ஆகியன நெரிந்து அழியுமாறு சிவபிரான் கால் விரலை ஊன்றிய அளவில், அவன் தன் குற்றத்திற்கு வருந்தி கை கூப்பி அலற, பேரருள் கொடுத்த ஆனந்தக் கூத்தனைக் கடிக்குளத்தை, அடைந்து ஏத்துபவர் நல்ல குணமுடையவர் ஆவர். |

| | |
|---|---|
| **2602.** நீரினார் கடற் றுயின்றவ னயனொடு<br>நிகழடி முடிகாணார்<br>பாரி னார்விசும் புறப்பரந் தெழுந்ததோர்<br>பவளத்தின் படியாகிக்<br>காரினார் பொழில் சூழ்தரு கடிக்குளத்<br>துறையுங்கற் பகத்தின்றன்<br>சீரினார்கழ லேத்தவல் லார்களைத்<br>தீவினை யடையாவே. | நீர்நிறைந்த கட–டைத் துயிலும் திருமாலும், பிரமனும் அடிமுடி காணாராய் எய்த்த காலத்து, மண்ணுலகில் அடித்தளம், விசும்பின் எல்லைவரை எழுந்து பவளம் போன்ற நிறம் உடையவராய்த் தோன்றி, மேகம் தவழும் பொழில் சூழ்ந்த கடிக் குளத்தில் உறையும் கற்பகத்தின் சிறப்புமிக்க திருவடிகளை ஏத்த வல்லார்களைத் தீவினை அடையா. |
| **2603.** குண்டர் தம்மொடு சாக்கியர் சமணருங்<br>குறியினி னெறிநில்லா<br>மிண்டர் மிண்டுரை கேட்டவை மெய்யெனக்<br>கொள்ளன்மின் விடமுண்ட<br>கண்டர் முண்டநன் மேனியர் கடிக்குளத்<br>துறைதரு மெம்மீசர்<br>தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள்<br>தூநெறி யெளிதாமே. | குண்டர்களாகிய சாக்கியர் சமணர்கள் ஆகியோர் தாம் கூறும் குறிகளின் நெறிநில்லாமிண்டர்கள். அவர்தம் பொய்யுரைகளைக் கேட்டு அவற்றை மெய்யெனக் கருதாதீர். விடம் உண்ட கண்டரும் திரிபுண்டரம் அணிந்த நன்மேனியரும் ஆகிய கடிக்குளத்தில் உறையும் எம் ஈசர்தம் தொண்டர் தொண்டரைத் தொழுது அடிபணிமின். தூய சிவநெறி எளிதாம். |
| **2604.** தனம– புகழ் தயங்குபூந் தராயவர்<br>மன்னன்நற் சம்பந்தன்<br>மனம– புகழ் வண்டமிழ் மாலைகள்<br>மாலதாய் மகிழ்வோடும்<br>கனம– கட லோதம் வந்துலவிய<br>கடிக்குளத் தமர்வானை<br>இனம –ந்திசை பாடவல் லார்கள்போ<br>யிறைவனோ டுறைவாரே. | செல்வவளம் மிக்க புகழ் விளங்கும் பூந்தராய் மக்களின் மன்னனாகத் திகழும் ஞானசம்பந்தன் மனநிறைவோடு புகழ்ந்துரைத்த வண்டமிழ் மாலைகள் மீது அன்பு கொண்டு, மகிழ்வோடு, கடல் ஓதம் வந்துலவும் கடிக்குளத்து அமரும் இறைவனை அடியவர்களோடு கூடி அவற்றை இசையோடு பாடவல்லார்கள் போய் இறைவனோடு உறைவார்கள். |

## 105. கீழ்வேளூர்

பண் : நட்டராகம்      பதிக எண் : 105

| | |
|---|---|
| **2605.** மின்னு லாவிய சடையினர் விடையினர்<br>மிளிர்தரு மரவோடும்<br>பன்னு லாவிய மறையொ– நாவினர்<br>கறையணி கண்டத்தர்<br>பொன்னு லாவிய கொன்றையந் தாரினர்<br>புகழ்மிகு கீழ்வேளூர்<br>உன்னு லாவிய சிந்தையர் மேல்வினை<br>யோடிட வீடாமே. | மின்னலைப் போல ஒளிவிடும் சடையினரும், விடைஊர்தியரும், அரவாபரணரும் இசையமைப்புடைய வேதங்களை ஓதிய நாவினரும், நீலகண்டரும் பொன்போன்ற கொன்றைத் தாரினரும் ஆகிய புகழ்மிக்க கீழ்வேளூர் இறைவரை நினைக்கும் நெஞ்சினர்க்கு வினைகள் நீங்க வீடு கிட்டும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2606.** நீரு லாவிய சடையிடை யரவொடு<br>மதிசிர நிரைமாலை<br>வாரு லாவிய வனமுலை யவளொடு<br>மணிசிலம் பவையார்க்க<br>ஏரு லாவிய விறைவன துறைவிட<br>மெழில்திகழ் கீழ்வேளூர்<br>சீரு லாவிய சிந்தைசெய் தணைபவர்<br>பிணியொடு வினைபோமே. | கங்கை சூடிய சடையின்கண், அரவு, மதி, தலைமாலை ஆகியவற்றை அணிந்து, கச்சணிந்த தனங்களை உடைய உமையம்மையோடு கூடி அழகிய சிலம்புகள் ஆர்க்க விளங்கும் இறைவனது உறைவிடம் கீழ்வேளூராகும். இத்தலத்தைச் சிந்திப்பவர்கட்குப் பிணிகளும் வினைகளும் போகும். |
| **2607.** வெண்ணி லாமிகு விரிசடை யரவொடு<br>வெள்ளெருக் கலர்மத்தம்<br>பண்ணி லாவிய பாடலோ டாடலர்<br>பயில்வுறு கீழ்வேளூர்ப்<br>பெண்ணி லாவிய பாகனைப் பெருந்திருக்<br>கோயிலெம் பெருமானை<br>உண்ணி லாவிநின் றுள்கிய சிந்தையா<br>ருலகினி லுள்ளாரே. | வெள்ளிய நிலவைத்தரும் பிறையை அணிந்த விரிசடையின் அரவு, வெள்ளெருக்க மலர் ஊமத்தை ஆகியவற்றை அணிந்து, இசைப்பாடல்களைப் பாடியும் ஆடியும் மகிழ்வுறும் மக்கள் நிறைந்த கீழ்வேளூர்ப் பெருந் திருக்கோயி—ல் விளங்கும் பெண்ணொரு பாகனை உள்கும் பயிற்சி உடையார் உலகில் நிலை பெற்றிருப்பர். |
| **2608.** சேடு லாவிய கங்கையைச் சடையிடைத்<br>தொங்கவைத் தழகாக<br>நாடு லாவிய ப—கொளு நாதனார்<br>நலமிகு கீழ்வேளூர்ப்<br>பீடு லாவிய பெருமையர் பெருந்திருக்<br>கோயிலுட் பிரியாது<br>நீடு லாவிய நிமலனைப் பணிபவர்<br>நிலைமிகப் பெறுவாரே. | பெருமைமிக்க கங்கையை முடியில் சூடி, மிக அழகாக நாடு முழுதும் சென்று ப—யேற்கும் நாதரும் நன்மைகள் நிறைந்த கீழ்வேளூர்ப் பெருந்திருக்கோயிலுள் வ—மைமிக்க பெருமையோடு திகழ்பவருமாகிய சிவபிரானை இடைவிடாது வழிபடுவோர் நிலையான பேரின்ப வாழ்வு பெறுவர். |
| **2609.** துன்று வார்சடைச் சுடர்மதி நகுதலை<br>வடமணி சிரமாலை<br>மன்று லாவிய மாதவ ரினிதியன்<br>மணமிகு கீழ்வேளூர்<br>நின்று நீடிய பெருந்திருக் கோயி—ன்<br>நிமலனை நினைவோடும்<br>சென்று லாவிநின் றேத்தவல் லார்வினை<br>தேய்வது திணமாமே. | நெருக்கமாக நீண்டு வளர்ந்த சடையில் திங்கள், பிரம கபாலம், கயிறு, மணிகள், தலைமாலை முத—யவற்றை அணிந்து, மன்றத்தில் மாதவத்தோர் உலாவும் சிறப்புமிக்க கீழ்வேளூர்ப் பெருந்திருக்கோயிலுள் விளங்கும் நிமலனை நினைவோடு சென்று ஏத்த வல்லவரின் வினைகள் தேய்வது திண்ணம். |

| | |
|---|---|
| **2610.** கொத்து லாவிய குழல்திகழ் சடையனைக்<br>கூத்தனை மகிழ்ந்துள்கித்<br>தொத்து லாவிய நூலணி மார்பினர்<br>தொழுதெழு கீழ்வேளூர்ப்<br>பித்து லாவிய பத்தர்கள் பேணிய<br>பெருந்திருக் கோயின்மன்னு<br>முத்து லாவிய வித்தினை யேத்துமின்<br>முடுகிய விடர்போமே. | பூங்கொத்துக்கள் அணிந்துள்ள சடைமுடியனும், கூத்தனும், நூலணிந்த அந்தணர் பக்தர்கள் ஆகியோர் நினைந்துருகி வழிபடும் கீழ்வேளூர்ப் பெருந்திருக்கோயி–ல் விளங்குபவனும், முத்துப் போல்பவனும் எல்லாவற்றுக்கும் வித்தாகத் திகழ்பவனும் ஆகிய பெருமானை ஏத்துமின். வ–ந்துவரும் இடர்போகும். |
| **2611.** பிறைநி லாவிய சடையிடைப் பின்னலும்<br>வன்னியுந் துன்னாரும்<br>கறைநி லாவிய கண்டரெண் டோளினர்<br>காதல்செய் கீழ்வேளூர்<br>மறைநி லாவிய வந்தணர்ம–தரு<br>பெருந்திருக் கோயின்மன்னு<br>நிறைநி லாவிய வீசனை நேசத்தால்<br>நினைபவர் வினைபோமே. | பிறையணிந்த சடைமுடியில் கங்கை, வன்னி ஆகியவற்றை அணிந்தவனும், கறைக் கண்டனும், எண்தோளினனும் ஆகிய இறைவன் விரும்புவதும் மறைவல்ல அந்தணர் நிறைந்ததும் ஆகிய கீழ்வேளூர்ப் பெருந்திருக்கோயி–ல் குறைவிலா நிறைவினனாய் விளங்கும் ஈசனை அன்போடு நினைபவர் வினைகள் போகும். |
| **2612.** மலைநி லாவிய மைந்தன்அம் மலையினை<br>யெடுத்தலு மரக்கன்றன்<br>தலையெ லாம்நெரிந் தலறிட வூன்றினான்<br>உறைதரு கீழ்வேளூர்க்<br>கலைநி லாவிய நாவினர்கா தல்செய்<br>பெருந்திருக் கோயிலுள்<br>நிலைநி லாவிய வீசனை நேசத்தா<br>னினையவல் வினைபோமே. | திருக்கயிலாய மலையில் விளங்கும் பெருவீரனும், அம்மலையை எடுத்த இராவணன் தலை நெரிந்து அலறக் கால் விரலை ஊன்றியவனும் ஆகிய சிவபெருமான் உறைவதும், கலைகள் அனைத்தையும் ஓதிய நாவினர் அன்பு செய்வதும் ஆகிய கீழ்வேளூர்ப் பெருந்திருக்கோயி–ல் நிலைபெற்று விளங்கும் ஈசனை நினைய வல்வினை போகும். |
| **2613.** மஞ்சு லாவிய கடற்கிடந் தவனொடு<br>மலரவன் காண்பொண்ணாப்<br>பஞ்சு லாவிய மெல்லடிப் பார்ப்பதி<br>பாகனைப் பரிவொடும்<br>செஞ்சொலார்பலர் பரவிய தொல்புகழ்<br>மல்கிய கீழ்வேளூர்<br>நஞ்சு லாவிய கண்டனை நணுகுமின்<br>நடலைகள் நணுகாவே. | மேகங்கள் உலாவும் கட–ல் துயில்கொள்ளும் திருமாலும், தாமரை மலரில் உறையும் நான்முகனும் காண இயலாதவனும், பஞ்சு போன்ற மென்மையான அடிகளை உடைய பார்வதி பாகனும், செஞ்சொற் புலவோர் பரவும் புகழ்மிக்க கீழ் வேளூரில் விளங்கும் நஞ்சணிந்த கண்டனும் ஆகிய பெருமானைச் சென்றடையுங்கள். துன்பங்கள் நம்மை அடையா. |

| | |
|---|---|
| **2614.** சீறு லாவிய தலையினர் நிலையிலா<br>வமணர்கள் சீவரார்<br>வீறி லாதவெஞ் சொற்பல விரும்பன்மின்<br>சுரும்பமர் கீழ்வேளூர்<br>ஏறு லாவிய கொடியனை யேதமில்<br>பெருந்திருக் கோயின்மன்னு<br>பேறு லாவிய பெருமையன் றிருவடி<br>பேணுமின் தவமாமே. | மழித்த தலையினரும், நிலையற்ற சொல் செயல் உடையவரும் துவரூட்டிய ஆடையரும் ஆகிய சமண புத்தர்களின் பெருமையற்ற சொற்களை விரும்பாதீர். வண்டுகள் ஒ-க்கும் சோலைகள் சூழ்ந்த கீழ்வேளூர்ப் பெருங்கோயி-ல் விடைக்கொடியனாய் விளங்குபவனும் அந்தமில்லாத ஆனந்தத்தை அருளும் பெரியவனுமாகிய சிவபெருமான் திருவடிகளை வழிபடுங்கள். அதுவே சிறந்த தவமாகும். |
| **2615.** குருண்ட வார்குழற் சடையுடைக் குழகனை<br>யழகமர் கீழ்வேளூர்த்<br>திரண்ட மாமறை யவர்தொழும் பெருந்திருக்<br>கோயிலெம் பெருமானை<br>இருண்ட மேதியி னினமிகு வயன்மல்கு<br>புக-மன் சம்பந்தன்<br>தெருண்ட பாடல்வல் லாரவர் சிவகதி<br>பெறுவது திடமாமே. | கடைசுருண்ட சடையினனும், இளைஞனும் அழகிய கீழ்வேளூர்ப் பெருங்கோயி-ல் விளங்குபவனும் ஆகிய பெருமான் மீது கரிய எருமைகள் மிக்கதும், வயல்கள் நிறைந்தது மாகிய புக-யின் மன்னன் ஞானசம்பந்தன் அருளிய தெளிந்த பாடல்களை ஓதுபவர் சிவகதி பெறுதல் உறுதி. |

## 106. திருவலஞ்சுழி

பண் : நட்டராகம் — பதிக எண் : 106

| | |
|---|---|
| **2616.** என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே<br>யிருங்கடல் வையத்து<br>முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை<br>முழுமணித் தரளங்கள்<br>மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி<br>வாணனை வாயாரப்<br>பன்னி யாதரித் தேத்தியும் பாடியும்<br>வழிபடு மதனாலே. | முழுமையான மணிகளும், முத்துக்களும் நிறைந்த நிலையான காவிரியாறு சூழ்ந்த திருவலஞ்சுழி இறைவனைப் போற்றியும், அன்பு செய்தும், பாடியும் வழிபடும் வாய்ப்புக் கிடைத்திருத்தலால், கடல் சூழ்ந்த இவ்வுலகத்து நாம் செய்த நல்வினைப் பயன்களில், நெஞ்சே! நீ! எத்தகைய புண்ணியத்தைச் செய்துள்ளாய்? |
| **2617.** விண்டொ ழிந்தன நம்முடை வல்வினை<br>விரிகடல் வருநஞ்சம்<br>உண்டி றைஞ்சுவா னவர்தமைத் தாங்கிய<br>விறைவனை யுலகத்தில்<br>வண்டு வாழ்குழன் மங்கையொர் பங்கனை<br>வலஞ்சுழி யிடமாகக்<br>கொண்ட நாதன்மெய்த் தொழில்புரி தொண்டரோ<br>டினிதிருந் தமையாலே. | கட-டைத் தோன்றிய நஞ்சை உண்டு அமரர்களைக் காத்தருளிய இறைவனை, உமைகேள்வனை, இவ்வுலகில் வலஞ்சுழியை இடமாகக் கொண்டு விளங்கும் இறைவனை வணங்கி அவ்விறைவனின் உண்மைத் தொண்டு புரியும் தொண்டர்களோடு கூடி உறையும் பேறு பெற்றதால் நிச்சயம் நம் வினைகள் விண்டொழிந்தனவாகும். |

| | |
|---|---|
| **2618.** திருந்த லார்புரந் தீயெழச் செறுவன<br>விற–ன்கண் அடியாரைப்<br>பரிந்து காப்பன பத்தியில் வருவன<br>மத்தமாம் பிணிநோய்க்கு<br>மருந்து மாவன மந்திர மாவன<br>வலஞ்சுழி யிடமாக<br>இருந்த நாயக னிமையவ ரேத்திய<br>விணையடித் தலந்தானே. | திருவலஞ்சுழியை இடமாகக் கொண்டு எழுந்தருளியுள்ளவனும், இமையவர் ஏத்தும் பெருமையாளனும் ஆகிய பெருமான் திருவடிகள் பகைவரான அசுரர்களின் முப்புரங்களைத் தீ எழச் செய்து அழித்தன. அடியவர்களை அன்புடன் காப்பன. பக்தி செய்வார்க்குக் காட்சி தருவன. உன்மத்தம் முதலான நோய்களுக்கு மருந்தும் மந்திரமும் ஆவன. |
| **2619.** கறைகொள் கண்டத்தர் காய்கதிர் நிறத்தினர்<br>அறத்திற முனிவர்க்கன்<br>றிறைவ ரா–டை நீழ– –ருந்துகந்<br>தினிதருள் பெருமானார்<br>மறைக ளோதுவர் வருபுனல் வலஞ்சுழி<br>யிடமகிழ்ந் தருங்கானத்<br>தறைக ழல்சிலம் பார்க்கநின் றாடிய<br>வற்புத மறியோமே. | நீலகண்டரும், செம்மேனியரும் அன்று ஆ–ன் கீழ் இருந்து நால்வர்க்கு அறம் உபதேசித்தவரும் வேதங்களை அருளியவரும் ஆகிய இறைவர் திருவலஞ்சுழியை இடமாகக் கொண்டு சிலம்பு ஆர்க்க நின்று ஆடும் அற்புதத்தை யாம் இன்னதென அறியேம். |
| **2620.** மண்ணர் நீரர்விண் காற்றின ராற்றலா<br>மெரியுரு வொருபாகம்<br>பெண்ண ராணெனத் தெரிவரும் வடிவினர்<br>பெருங்கடற் பவளம்போல்<br>வண்ண ராகிலும் வலஞ்சுழி பிரிகிலார்<br>பரிபவர் மனம்புக்க<br>எண்ண ராகிலு மெனைப்பல வியம்புவ<br>ரிணையடி தொழுவாரே. | சிவபிரான் மண், விண் முதலான ஐம்பூதங்களின் வடிவினராயிருப்பவர். பெண்ணும், ஆணும் கலந்த திருவுருவினர். கடற்பவளம் போலும் திருமேனியர். வலஞ்சுழியில் நீங்காது உறைபவர். தம்மை வழிபடும் அடியவர்களின் மனத்தில் புகுந்து எண்ணத்தில் நிறைபவர். அவர்தம் இணையடி தொழுபவர் இவ்வாறான பல பெருமைகளை இயம்புவர். |
| **2621.** ஒருவ ராலுவ மிப்பதை யரியதோர்<br>மேனியர் மடமாதர்<br>இருவ ராதரிப் பார்பல பூதமும்<br>பேய்களு மடையாளம்<br>அருவ ராததோர் வெண்டலை கைப்பிடித்<br>தகந்தொறும் ப–க்கென்று<br>வருவ ரேலவர் வலஞ்சுழி யடிகளே<br>வரிவளை கவர்ந்தாரே. | அகப்பொருட்டுறை, தலைவி கூற்று. ஒருவராலும் உவமிக்க ஒண்ணாததொரு திருமேனியர். உமை, கங்கை இருவர் பால் அன்பு செய்பவர். பூதங்களும் பேய்களும் பாடி ஆட வெண்டலையைக் கையில் ஏந்தி வீடுகள் தோறும் ப– ஏற்க வருபவர். வலஞ்சுழியில் வாழும் அவரே என் வரிவளைகளைக் கவர்ந்தவர். |

| | |
|---|---|
| **2622.** குன்றி யூர்குட மூக்கிடம் வலம்புரங்<br>குலவிய நெய்த்தானம்<br>என்றிவ் வூர்களி லோமென்று மியம்புவ<br>ரிமையவர் பணிகேட்பார்<br>அன்றி யூர்தமக் குள்ளன வறிகிலோம்<br>வலஞ்சுழி யரனார்பால்<br>சென்ற வூர்தனிற் றலைப்பட லாமென்று<br>சேயிழை தளர்வாமே. | அகப்பொருட்டுறை; தோழி கூற்று. குன்றியூர் குடமூக்கு முத–ய தலங்களைத் தமது ஊர் எனச் சொல்– வருபவர். இமையவர் அவர்தம் ஏவலைக் கேட்கின்றனர். மேற்குறித்த ஊர்களைத் தவிர அவர் வாழும் ஊர் யாதென அறிகிலோம். பல ஊர்களுக்கும் உரிய அவரைத் திருவலஞ்சுழி சென்றால் சேரலாம் என்று கூறித் தலைவி தளர்கின்றாள். |
| **2623.** குயி– னேர்மொழிக் கொடியிடை வெருவுறக்<br>குலவரைப் பரப்பாய<br>கயிலை யைப்பிடித் தெடுத்தவன் கதிர்முடி<br>தோளிரு பதுமூன்றி<br>மயி– னேரன சாயலோ டமர்ந்தவன்<br>வலஞ்சுழி யெம்மானைப்<br>பயில வல்லவர் பரகதி காண்பவர்<br>அல்லவர் காணாரே. | குயில் மொழியும் கொடியிடையும் மயி–ன் சாயலும் உடைய உமை வெருவக் கயிலை மலையைப் பெயர்த்த இராவணனின் இருபது தோள்களையும் ஊன்றி அடர்த்து அம்மையோடு உடனுறையும் வலஞ்சுழி எம்மானைப் பாடிப் பழக வல்லவர் பரகதி பெறுவர். அல்லவர் காணார். |
| **2624.** அழல தோம்பிய வலர்மிசை யண்ணலு<br>மரவணைத் துயின்றானும்<br>கழலுஞ் சென்னியுங் காண்பரி தாயவர்<br>மாண்பமர் தடக்கையில்<br>மழலை வீணையர் மகிழ்திரு வலஞ்சுழி<br>வலங்கொடு பாதத்தால்<br>சுழலு மாந்தர்கள் தொல்வினை யதனொடு<br>துன்பங்கள் களைவாரே. | நான்முகனும், திருமாலும் திருமுடியையும், திருவடிகளையும் காண இயலாதவாறு சோதிப் பிழம்பாய் நின்றவர் சிவபெருமான். மழலைபோல இனிய இசைதரும் வீணையைக் கையில் ஏந்தியவர். அவர் எழுந்தருளிய திருவலஞ்சுழியை அடைவார் தொல்வினைகளும் துன்பங்களும் நீங்கப்பெறுவர். |
| **2625.** அறிவி லாதவன் சமணர்கள் சாக்கியர்<br>தவம்புரிந் தவஞ்செய்வார்<br>நெறிய லாதன கூறுவர் மற்றவை<br>தேறன்மின் மாறாநீர்<br>மறியு லாந்திரைக் காவிரி வலஞ்சுழி<br>மருவிய பெருமானைப்<br>பிறிவி லாதவர் பெறுகதி பேசிடி<br>லளவறுப் பொண்ணாதே. | அறிவில்லாத சமணரும் சாக்கியரும் தவம் புரிந்து கொண்டே அவம்பல செய்கின்றனர். அவர் கூறும் நெறியலா உரைகளைக் கேளாதீர். வலஞ்சுழி இறைவனைப் பிரியாத அடியவர் பெறும் கதிகளைப் பேசினால் வரும் பயன்கள் அளத்தற்கு அரியனவாகும். |

| | |
|---|---|
| **2626.** மாதொர் கூறனை வலஞ்சுழி மருவிய<br>மருந்தினை வயற்காழி<br>நாதன் வேதியன் ஞானசம் பந்தன்வாய்<br>நவிற்றிய தமிழ்மாலை<br>ஆத ரித்திசை கற்றுவல் லார்சொலக்<br>கேட்டுகந் தவர்தம்மை<br>வாதி யாவினை மறுமைக்கு இம்மைக்கும்<br>வருத்தம்வந் தடையாவே. | மாதொருகூறனை, திருவலஞ்சுழியில் விளங்கும் மருந்து போல்வானை, காழி ஞானசம்பந்தன் பாடி ஏத்திய இத்திருப்பதிகத்தை அன்போடு இசை கூட்டிப் பாடுவார் அதனை கேட்பார் ஆகிய அடியவர்களை வினைகள் சாரா. இம்மை, மறுமை எப்போதும் வருத்தம் வந்து அவர்களை அணுகா. |

## 107. திருக்கேதீச்சுரம்

பண் : நட்டராகம் — பதிக எண் : 107

| | |
|---|---|
| **2627.** விருது குன்றமா மேருவில் நாணர<br>வாஅனல் எரிஅம்பாப்<br>பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின்<br>றுறைபதி யெந்நாளும்<br>கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ்<br>பொழிலணி மாதோட்டம்<br>கருத நின்றகே தீச்சரங் கைதொழக்<br>கடுவினை யடையாவே.<br><br>மாதோட்டம் – தலப்பெயர். ஈழ நாட்டில் உள்ளது.<br>கேதீச்சரம் – திருக்கோயில் பெயர். | வெற்றிக்கு அடையாளமாக, பெரிய மேரு மலையை வில்லாகக் கொண்டு அரவை நாணாகப்பூட்டி அனல் எரியை அம்பாகக் கொண்டு பொருது முப்புரங்களை எரித்த சிவபிரான் பற்றி நின்று உறையும் பதியாக அடியவர் எந்நாளும் கருதுகின்ற ஊர், ஆரவாரிக்கின்ற கடலால் சூழப்பட்ட, மணம் கமழும் பொழில்கள் அணிசெய்யும் மாதோட்டத்தில் பலரும் கருதி வழிபாடு செய்யாநின்ற திருக்கேதீச்சரமாகும். அதனைக் கைதொழின் கடுவினைகள் நம்மை அடையா. |
| **2628.** பாடல் வீணையர் பலபல சரிதையர்<br>எருதுகைத் தருநட்டம்<br>ஆடல் பேணுவர் அமரர்கள் வேண்டநஞ்<br>சுண்டிருள் கண்டத்தர்<br>ஈட மாவது விருங்கடற் கரையினில்<br>எழில்திகழ் மாதோட்டம்<br>கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக்<br>கெடுமிடர் வினைதானே. | வீணையை மீட்டிக்கொண்டு பாடுபவர். பற்பலவான புராண வரலாறுகளைக் கொண்டவர். எருது உகைத்து அரிய நடனங்களாகிய ஆடல்களைப் புரிபவர். அமரர் வேண்ட நஞ்சினை உண்டு இருண்ட கண்டத்தினை உடையவர். அவருக்குரிய இடம், கரிய கடற்கரையில் உள்ள அழகிய மாதோட்டம் என்னும் ஊரின்கண் விளங்கும் கேடில்லாத கேதீச்சரம் ஆகும். அதனைத் தொழ இடர்வினை கெடும். |
| **2629.** பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையினர்<br>அறைகழல் சிலம்பார்க்கச்<br>சுண்ண மாதரித் தாடுவர் பாடுவர்<br>அகந்தொறும் இடுபிச்சைக்<br>குண்ண லாவதோர் இச்சையி னுழல்பவர்<br>உயர்தரு மாதோட்டத்<br>தண்ணல் நண்ணுகே தீச்சரம் அடைபவர்க்<br>கருவினை யடையாவே. | உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவர். பிறை தவழ் சடையினர். திருநீற்றை விரும்பிப் பூசி, கழலும் சிலம்பும் ஆர்க்க ஆடுபவர். பாடுபவர். உண்ணும் இச்சை உடையவர் போல வீடுகள்தோறும் இடும் பிச்சைக்கு உழல்பவர். அவ்விறைவர் எழுந்தருளிய உயரிய மாதோட்டத்தில் விளங்கும் கேதீச்சரத்தை அடைபவரை இருவினைகள் அடையா. |

| | |
|---|---|
| **2630.** பொடிகொள் மேனியர் பு–யத ளரையினர்<br>விரிதரு கரத்தேந்தும்<br>வடிகொள் மூவிலை வே–னர் நூ–னர்<br>மறிகடல் மாதோட்டத்<br>தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம்<br>பரிந்தசிந் தையராகிய<br>முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேல்<br>மொய்த்தெழும் வினைபோமே. | திருநீறணிந்த திருமேனியர். பு–த்தோலை உடுத்தவர். விரிந்த கையினில் ஏந்திய கூரிய முத்தலைச்சூலத்தை உடையவர். முப்புரி நூல் அணிந்தவர். மறித்துவரும் அலைகளைக் கொண்ட கடல் சூழ்ந்த மாதோட்ட நகரில் எழுந்தருளி விளங்கும் அடிகள். அவர் விரும்பி எழுந்தருளிய கேதீச்சரத்தை அன்புகொண்ட மனத்தராய் வணங்கும் அடியவர்மேல் பற்றித் திரண்டு வரும் வினைகள் நீங்கிப்போகும். |
| **2631.** நல்ல ராற்றவும் ஞானநன் குடையர்தம்<br>மடைந்தவர்க் கருளீய<br>வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர்<br>ம–கடல் மாதோட்டத்<br>தெல்லை யில்புக ழெந்தைகே தீச்சரம்<br>இராப்பகல் நினைந்தேத்தி<br>அல்லல் ஆசறுத் தரனடி யிணைதொழும்<br>அன்பராம் அடியாரே. | மிகவும் நல்லவர். ஞானம் நன்கு உடையவர். தம்மை அடைந்தவர்கட்கு அருளிய வல்லவர். மண்ணுலகிலும் விண்ணுலகிலும் பிறத்தல் இறத்தல் இல்லாதவர். நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட மாதோட்டத்து எல்லையில்லாத புகழை உடைய எந்தையாகிய அவரது கேதீச்சரத்தை இரவும் பகலும் நினைந்து போற்றித் துன்பம் குற்றம் அற்றவர்களாய் அவ் அரனடியினை தொழும் அன்புடையவரே அடியவர் ஆவர். |
| **2632.** பேழை வார்சடைப் பெருந்திரு மகள்தனைப்<br>பொருந்தவைத் தொருபாகம்<br>மாழை யங்கயற் கண்ணிபா லருளிய<br>பொருளினர் குடிவாழ்க்கை<br>வாழை யம்பொழின் மந்திகள் களிப்புற<br>மருவிய மாதோட்டக்<br>கேழல் வெண்மருப் பணிந்தநீள் மார்பர்கே<br>தீச்சரம் பிரியாரே. | பெருமை பொருந்திய நீண்ட சடையின்கண் பெருந்திருவினளாகிய கங்கையை மறைத்து வைத்து, தம் திருமேனியின் ஒரு பாகமாகிய அழகிய கயல் போலும் கண்ணினள் ஆகிய உமையம்மைபால் கருணை காட்டும் இயல்பினராகிய இறைவர் வாழைத் தோட்டங்களில் பழுத்த பழத்தினை உண்ண மந்திகள் களிப்புற்று மருவிய மாதோட்டத்தில், பன்றியின் வெண்மையான கொம்பினை அணிந்துள்ள அகன்ற மார்பினராய்ச் சூடிக் கொண்டு வாழும் இடமாகக் கொண்டு கேதீச்சரத்தில் பிரியாது உறைகின்றார். |
| **2633.** பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல்<br>லுலகினில் உயிர்வாழ்க்கை<br>கண்ட நாதனார் கட–டங் கைதொழக்<br>காத–த் துறைகோயில்<br>வண்டு பண்செயு மாமலர்ப் பொழின்மஞ்ஞை<br>நடமிடு மாதோட்டம்<br>தொண்டர் நாடொறுந் துதிசெய வருள்செய்கே<br>தீச்சர மதுதானே. | முற்காலத்தில் நால்வர்க்கு அறம் உரைத்தருளிப் பல உலகங்களிலும் பிறந்துள்ள உயிர்களின் வாழ்க்கைக்குரிய ஊழை அமைத்தருளிய நாதனார், கடல் சூழ்ந்த இவ்வுலகிலுள்ளோர் கண்டு கைதொழுமாறு விரும்பி உறையும் கோயில், வண்டுகள் பண்ணிசைக்கும், சிறந்த மலர்கள் நிறைந்த பொழில்களில் மயில்கள் நடனமாடும் மாதோட்டத்தின்கண் தொண்டர்கள் நாள்தோறும் துதிக்க அருள் புரியும் கேதீச்சரமாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2634.** தென்னி லங்கையர் குலபதி மலைந–ந்<br>தெடுத்தவன் முடிதிண்தோள்<br>தன்ன லங்கெட அடர்த்தவற் கருள்செய்த<br>தலைவனார் கடல்வாயப்<br>பொன்னி லங்கிய முத்துமா மணிகளும்<br>பொருந்திய மாதோட்டத்<br>துன்னி யன்பொடு அடியவ ரிறைஞ்சுகே<br>தீச்சரத் துள்ளாரே. | தென்னிலங்கை மன்னனாகிய இராவணன் கயிலைமலையை நெருக்கி எடுத்தபோது அவன் முடி, தோள் ஆகியன அழகிழக்குமாறு அடர்த்துப் பின் அவனது பாடல்கேட்டு அருள் செய்த தலைவனார், பொன், முத்து, மாணிக்கம், மணிகள் நிறைந்த மாதோட்ட நன்னகரை அடைந்து அன்பர்கள் இறைஞ்சி வழிபடும் கேதீச்சரத்து உள்ளார். |
| **2635.** பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும்<br>புவியிடந் தெழுந்தோடி<br>மேவி நாடிநின் அடியிணை காண்கிலா<br>வித்தக மென்னாகும்<br>மாவும் பூகமுங் கத–யும் நெருங்குமா<br>தோட்டநன் னகர்மன்னித்<br>தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத்<br>திருந்தளம் பெருமானே. | மா, கமுகு, வாழை ஆகியன செறிந்த மாதோட்ட நன்னகரில் நிலையாக, தேவியோடும் அழகிய கேதீச்சரத்து விளங்கும் எம்பெருமானே! தாமரை மலரில் உறையும் நான்முகனும், கடல் வண்ணனாகிய திருமாலும் நிலத்தை அகழ்ந்து சென்றும் வானில் பறந்து ஓடியும் உன் திருவடி இணைகளைக் காணாதவாறு உயர்ந்து நின்ற உன் திறமை யாதோ ? இஃது எதிர் நிரல் நிறை. |
| **2636.** புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர்<br>புறனுரைச் சமணாதர்<br>எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய<br>ஏழைமை கேளேன்மின்<br>மத்த யானையை மறுகிட வுரிசெய்து<br>போர்த்தவர் மாதோட்டத்<br>தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே<br>தீச்சரம் அடைமின்னே. | புனையப்பட்ட துகிலை உடையவராய்ப் புறம் பேசும் புத்தர்களாகிய அறிவிலாரும், ஏமாற்றும் இயல்பினராய் நின்றுண்ணும் மரபினர்களாகிய சமணரும் கூறும் அறியாமை உரைகளைக் கேளாதீர். மதம் பொருந்திய யானையை அஞ்சுமாறு செய்து அதன் தோலை உரித்துப் போர்த்தவர் ஆகிய மாதோட்டத்துள் பாலாவியின் கரைமேல் விளங்கும் கேதீச்சரத்து அத்தரை அடையுங்கள். |
| **2637.** மாடெ லாமண முரசெனக் கட–ன<br>தொ–கவர் மாதோட்டத்<br>தாட லேறுடை யண்ணல் கேதீச்சரத்<br>தடிகளை யணிகாழி<br>நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொல்<br>நவின்றெழு பாமாலைப்<br>பாட லாயின பாடுமின்ப த்தர்கள்<br>பரகதி பெறலாமே. | அருகிலெல்லாம் மணமுரசு ஒ–ப்பதுபோலக் கடல் ஒ– நிரம்பப் பெற்றமாதோட்டத்தில், வ–ய ஏற்றினை உடைய தலைவராகிய கேதீச்சரத்துப் பெருமானை அழகிய காழி நாட்டினர்க்குத் தலைவனாகிய ஞானசம்பந்தன் சொல் நவின்றதால் தோன்றிய இப்பாமாலையைப் பக்தர்களே! பாடி வழிபடுமின். பரகதி பெறலாம். |

## 108. திருவிற்குடி வீரட்டம்

பண் : நட்டராகம் பதிக எண் : 108

| | |
|---|---|
| **2638.** வடிகொள் மேனியர் வானமா மதியினர்<br>நதியினர் மதுவார்ந்த<br>கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடியினர்<br>உடைபு– யதளார்ப்பர்<br>விடைய தேறும்எம் மானமர்ந் தினிதுறை<br>விற்குடி வீரட்டம்<br>அடிய ராகிநின் றேத்தவல் லார்தமை<br>அருவினை யடையாவே. | தெளிவான திருமேனியினரும், வானத்துப்பிறை மதியைச் சூடியவரும், கங்கையை அணிந்தவரும் தேன் நிறைந்த மணமுடைய கொன்றை மலரைச் சூடிய சடையினரும், கொடிபோன்ற உமையம்மை மணாளரும் பு–த்தோலை உடுத்தவரும் ஆகிய விடைஏறும் எம்பெருமான் இனிதாக அமர்ந்துறையும் விற்குடி வீரட்டத்தை அடியவராய் நின்று ஏத்தவல்லார்களை அரிய வினைகள் அடையா. |
| **2639.** களங்கொள் கொன்றையுங் கதிர்விரி மதியமுங்<br>கடிகமழ் சடைக்கேற்றி<br>உளங்கொள் பத்தர்பால் அருளிய பெருமையர்<br>பொருகரி யுரிபோர்த்து<br>விளங்கு மேனியர் எம்பெரு மானுறை<br>விற்குடி வீரட்டம்<br>வளங்கொள் மாமல ரால்நினைந் தேத்துவார்<br>வருத்தம தறியாரே. | களர் நிலத்துப் பூக்கும் கொன்றை மலரையும், கதிர்விரியும் மதியத்தையும், மணம் கமழும் சடையில் ஏற்றி, மனம் பொருந்த வழிபடும் அன்பர்கட்கு அருள் செய்துவரும் பெருமையரும், யானையை உரித்து அதன் தோலைப் போர்த்து விளங்கும் திருமேனியை உடையவரும் ஆகிய எம்பெருமானார் உறையும் திருவிற்குடி வீரட்டத்தைச் செழுமையான மலர்களைக் கொண்டு தூவி நினைந்து ஏத்துவார் வருத்தம் அறியார். |
| **2640.** கரிய கண்டத்தர் வெளியவெண் பொடியணி<br>மார்பினர் வலங்கையில்<br>எரியர் புன்சடை யிடம்பெறக் காட்டகத்<br>தாடிய வேடத்தர்<br>விரியும் மாமலர்ப் பொய்கைசூழ் மதும–<br>விற்குடி வீரட்டம்<br>பிரிவி லாதவர் பெருந்தவத் தோரெனப்<br>பேணுவ ருலகத்தே. | கரிய கண்டத்தினரும், வெண்மையான திருநீற்றை அணிந்த மார்பினரும், வலக்கையில் எரியேந்தியவரும், மெல்–ய சடைகள் நிலத்தில் புரளச் சுடுகாட்டகத்தே ஆடிய கோலத்தினரும் ஆகிய சிவபிரான் உறையும் மலர்ப்பொய்கை சூழ்ந்த விற்குடி வீரட்டத்தைப் பிரியாது தொழுபவரைப் பெருந்தவத்தோர் என உலகில் பேணுவர். |
| **2641.** பூதஞ் சேர்ந்திசை பாடலர் ஆடலர்<br>பொ–தர நலமார்ந்த<br>பாதஞ் சேரிணைச் சிலம்பினர் கலம்பெறு<br>கடலெழு விடமுண்டார்<br>வேதம் ஓதிய நாவுடை யானிடம்<br>விற்குடி வீரட்டம்<br>சேரு நெஞ்சினர்க் கல்லதுண் டோபிணி<br>தீவினை கெடுமாறே. | பூதகணங்களோடு சேர்ந்து பாடுபவர், ஆடுபவர், அழகுபொ–ந்த திருவடிகளைச் சேர்ந்த சிலம்புகளை அணிந்தவர். மரக்கலங்கள் உலாவும் கட–டையே தோன்றிய விடத்தை உண்டவர் வேதம் ஓதும் நாவினர். அப்பெருமானுக்குரிய இடமாக விளங்கும் விற்குடி வீரட்டத்தைச் சேரும் நெஞ்சினர்க்கன்றிப் பிறருக்குத் தீவினை, பிணி கெடும் வழி உண்டோ ? |

| | |
|---|---|
| **2642.** கடிய ஏற்றினர் கனலன மேனியர்<br>அனலெழ வூர்மூன்றும்<br>இடிய மால்வரை கால்வளைத் தான்றன<br>தடியவர் மேலுள்ள<br>வெடிய வல்வினை வீட்டுவிப் பானுறை<br>விற்குடி வீரட்டம்<br>படிய தாகவே பரவுமின் பரவினாற்<br>பற்றறும் அருநோயே. | விரைந்து செல்லும் விடைஏற்றை உடையவர். கனல் போன்ற மேனியர். திரிபுரங்களில் அனல் எழுமாறு பெரிய மேருமலையைக் கால் ஊன்றி வளைத்தவர். தம் அடியவர் மேலுள்ள தீய வல்வினைகளைப் போக்குபவர். அவரது உறைவிடமாகிய விற்குடி வீரட்டத்தைப் பண்போடு பரவுமின். பரவினால் அரிய நோய்கள் பற்றறும். |
| **2643.** பெண்ணொர் கூறினர் பெருமையர் சிறுமறிக்<br>கையினர் மெய்யார்ந்த<br>அண்ண லன்புசெய் வாரவர்க் கெளியவர்<br>அரியவர் அல்லார்க்கு<br>விண்ணி லார்பொழின் மல்கிய மலர்விரி<br>விற்குடி வீரட்டம்<br>எண்ணி லாவிய சிந்தையி னார்தமக்<br>கிடர்கள்வந் தடையாவே. | மாதொருபாகத்தர். பெருமை உடையவர். சிறிய மான் கன்றை ஏந்திய கையினர். உண்மையான தலைவர். அன்பு செய்பவர்க்கு எளியவர். அல்லாதவர்க்கு அரியவர். அவர் உறையும் இடமாகிய, விண்ணுற ஓங்கிய மலர்மல்கிய பொழில்கள் சூழ்ந்த விற்குடி வீரட்டத்தை எண்ணிய சிந்தையர்க்கு இடர்கள் வந்தடையா. |
| **2644.** இடங்கொள் மாகடல் இலங்கையர் கோன்தனை<br>யிகலழி தரவூன்று<br>திடங்கொள் மால்வரை யானுரை யார்தரு<br>பொருளினன் இருளார்ந்த<br>விடங்கொள் மாமிட றுடையவ னுறைபதி<br>விற்குடி வீரட்டம்<br>தொடங்கு மாறிசை பாடிநின் றார்தமைத்<br>துன்பநோ யடையாவே. | இடமகன்ற பெரிய கடலால் சூழப்பட்ட இலங்கையர் மன்னனை அவனது பகைமை அழியுமாறு ஊன்றிய திடமான பெரிய கயிலாய மலைக்கு உரியவர். சொற்களின் பொருளாய் விளங்குபவர். இருளார்ந்த விடமுண்ட கண்டத்தார். அவர் உறையும் பதியாகிய விற்குடி வீரட்டத்தை எண்ணும் வகையில் இசைபாடி நிற்பவர்களைத் துன்பம் நோய்கள் அடையா. |
| **2645.** செங்கண் மாலொடு நான்முகன் தேடியுந்<br>திருவ டியறியாமை<br>எங்கு மாரெரி யாகிய இறைவனை<br>யறைபுனன் முடியார்ந்த<br>வெங்கண் மால்வரைக் கரியுரித் துகந்தவன்<br>விற்குடி வீரட்டம்<br>தங்கை யால்தொழு தேத்தவல் லாரவர்<br>தவமல்கு குணத்தாரே. | திருமாலும் நான்முகனும் தேடியும் திருவடி மற்றும் திருமுடியைக் காண இயலாதவாறு எரியுருவாக நின்ற இறைவனை, கங்கை சூடிய முடியோடு, சினம் மிக்க யானையின் தோ–னை உரித்துப் போர்த்து உகந்தவனை, விற்குடி வீரட்டத்துள் கண்டு தம்கையால் தொழுது ஏத்த வல்லவர்கள் தவம் மல்கு குணத்தோர் ஆவர். |

| | |
|---|---|
| **2646.** பிண்ட முண்டுழல் வார்களும் பிரிதுவ<br>ராடைய ரவர்வார்த்தை<br>பண்டு மின்றுமோர் பொருளெனக் கருதன்மின்<br>பரிவுறு வீர்கேண்மின்<br>விண்ட மாமலர்ச் சடையவ னிடமெனில்<br>விற்குடி வீரட்டம்<br>கண்டு கொண்டடி காதல்செய் வாரவர்<br>கருத்துறுங் குணத்தாரே. | அன்புடையவர்களே! கேளுங்கள். சோற்றுத் திரளை உண்டு திரியும் சமணர்களையும் துவர் ஆடை உடுத்த புத்தர்களையும், பண்டும் இன்றும் ஒரு பொருள் எனக் கருதாதீர். விரிந்த மலர்களைச் சூடிய சடைகளை உடைய சிவபிரான் உறையும் இடம் எது எனில் விற்குடி வீரட்டமாகும். அதனைக் கண்டு காதல் செய்வார் கருதத்தக்க குணமுடையோர் ஆவர். |
| **2647.** விலங்க லேசிலை யிடமென வுடையவன்<br>விற்குடி வீரட்டத்<br>திலங்கு சோதியை யெம்பெரு மான்றனை<br>எழில்திகழ் கழல்பேணி<br>நலங்கொள் வார்பொழிற் காழியுள் ஞானசம்<br>பந்தனற் றமிழ்மாலை<br>வலங்கொ டேயிசை மொழியுமின் மொழிந்தக்கால்<br>மற்றது வரமாமே. | மேருமலையே வில். கயிலாய மலையே தங்குமிடம் எனக் கொண்ட விற்குடி வீரட்டத்தில் விளங்கும் சோதியை, எம்பெருமானை, அவனது அழகிய திருவடிகளை விரும்பி அழகிய சோலைகள் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் அருளிய நற்றமிழ் மாலையை உறுதியாகப் பற்றி இசையோடு மொழியுங்கள். மொழிந்தால் அதுவே நன்மைகளைத் தரும். |

## 109. திருக்கோட்டூர்

பண் : நட்டராகம் பதிக எண் : 109

| | |
|---|---|
| **2648.** நீல மார்தரு கண்டனே நெற்றியோர்<br>கண்ணனே யொற்றைவிடைச்<br>சூல மார்தரு கையனே துன்றுபைம்<br>பொழில்கள் சூழ்ந்தழகாய<br>கோல மாமலர் மணங்கமழ் கோட்டூர்நற்<br>கொழுந்தேயென் றெழுவார்கள்<br>சால நீடல மதனிடைப் புகழ்மிகத்<br>தாங்குவர் பாங்காவே. | நீலகண்டனே, நெற்றிக்கண்ணனே, ஒற்றைவிடை மீது ஏறி வருபவனே, முத்தலைச் சூலம் ஏந்திய கையனே, செறிந்த பொழில்களால் சூழப்பட்டதும் அழகிய மலர்களின் மணம் கமழ்வதுமாகிய கோட்டூரில் விளங்கும் கொழுந்தே என்று கூறி அவனை வணங்க எழுபவர் மிகப்பெரிதாய சிவலோகத்தில் பெருமானுக்கு அருகில் புகழ் பெறத் தங்குவர். |
| **2649.** பங்க யம்மலர்ச் சீறடிப் பஞ்சுறு<br>மெல்விர லரவல்குல்<br>மங்கை மார்பலர் மயில்குயில் கிளியென<br>மிழற்றிய மொழியார்மென்<br>கொங்கை யார்குழாங் குணலைசெய் கோட்டூர்நற்<br>கொழுந்தேயென் றெழுவார்கள்<br>சங்கை யொன்றில ராகிச்சங் கரன்திரு<br>அருள்பெறல் எளிதாமே. | தாமரை மலர் போன்ற அழகிய சிறிய கால்களையும் பஞ்சு போன்ற மென்மையான விரல்களையும், அரவு போன்ற அல்குலையும் உடையவரும், மயில் குயில், கிளி போன்ற மொழியினரும், மென்மையான தனங்களையுடை யாருமாகிய மங்கையர் குணலைக்கூத்து ஆடி மகிழும் கோட்டூரில் விளங்கும் நற்கொழுந்தே என்று கூறிச் சங்கரனை வணங்க எழுவார் ஐயமின்றி அவன் திருவருளைப் பெறுவர். |

| | |
|---|---|
| **2650.** நம்ப னார்நல மலர்கொடு தொழுதெழும்<br>அடியவர் தமக்கெல்லாம்<br>செம்பொ னார்தரும் எழில்திகழ் முலையவர்<br>செல்வமல் கியநல்ல<br>கொம்ப னார்தொழு தாடிய கோட்டூர்நற்<br>கொழுந்தே யென்றெழுவார்கள்<br>அம்பொ னார்தரு முலகினில் அமரரோ<br>டமர்ந்தினி திருப்பாரே. | நல்ல மலர்களைக் கொண்டு தொழுது எழும் அடியவர்கட்கு நம்பனாரும், செம்பொன் போன்ற மேனியையும் அழகிய நகில்களையும் உடைய பூங்கொம்பு போன்ற மகளிர் ஆடிப் பாடித் தொழுபவரும், செம்மை மல்கிய கோட்டூரில் விளங்குபவருமாகிய இறைவரைக் கொழுந்தீசரே என்று வணங்கிட எழுவார். பொன்னுலகில் தேவரோடும் இனிதிருப்பர். |
| **2651.** பலவு நீள்பொழில் தீங்கனி தேன்பலா<br>மாங்கனி பயில்வாய<br>கலவ மஞ்ஞைகள் நிலவுசொற் கிள்ளைகள்<br>அன்னஞ்சேர்ந் தழகாய<br>குலவும் நீள்வயற் கயலுகள் கோட்டூர்நற்<br>கொழுந்தேயென்றெழுவார்கள்<br>நிலவு செல்வத்த ராகிநீள் நிலத்திடை<br>நீடிய புகழாரே. | பலாச்சுளை, மாங்கனி முத–ய தீங்கனிகளையும் தேனையும் உண்ட தோகைமயில்களும் கிளிகளும் அன்னங்களும் விளையாடும் மரஞ்செடி கொடிகள் பலவும் நிறைந்த பொழில்களையும், கயல்கள் உகளும் அழகிய வயல்களையும் உடைய கோட்டூரில் விளங்கும் நற்கொழுந்தே என்று போற்றியவர் அழியாத செல்வமுடையவராய் இவ்வுலகில் புகழோடு வாழ்வர். |
| **2652.** உருகு வாருள்ளத் தொண்சுடர் தனக்கென்றும்<br>அன்பராம் அடியார்கள்<br>பருகும் ஆரமு தெனநின்று பரிவொடு<br>பத்திசெய் தெத்திசையும்<br>குருகு வாழ்வயல் சூழ்தரு கோட்டூர்நற்<br>கொழுந்தேயென் றெழுவார்கள்<br>அருகு சேர்தரு வினைகளும் அகலும்போய்<br>அவனருள் பெறலாமே. | உள்ளம் உருகுவார்க்கு ஒண்சுடராகவும், என்றும் தன்மேல் அன்புடையடியார்க்கு ஆரமுதாகவும் விளங்குபவனே என்றும் கூறிப் பரிவும் பக்தியும் செய்து, குருகுகள் வாழும் கோட்டூர் நற்கொழுந்தே என்று விளித்து வழிபடப்புகும் அடியவர்களின் வினைகள் நீங்கும். அவனது திருவருளைப் பெறலாம். |
| **2653.** துன்று வார்சடைத் தூமதி மத்தமுந்<br>துன்னெருக் கார்வன்னி<br>பொன்றி னார்தலைக் கலனொடு பரிகலம்<br>பு–யுரி யுடையாடை<br>கொன்றை பொன்னென மலர்தரு கோட்டூர்நற்<br>கொழுந்தே யென்றெழுவாரை<br>என்று மேத்துவார்க் கிடரிலை கேடிலை<br>ஏதம்வந் தடையாவே. | நெருங்கி நீண்டு வளர்ந்த சடைமுடியில் பிறைமதி, ஊமத்தை, வெள்எருக்கமலர், வன்னியிலை ஆகியவற்றைச் சூடியும், தலைமாலைகளை மேனியில் அணிந்தும், கையில் கபாலத்தை உண்கலனாக ஏந்தியும், பு–த்தோலை இடையில் உடுத்தும், கொன்றை மரங்கள் பொன் போல மலரும் கோட்டூரில் எழுந்தருளி விளங்கும் கொழுந்தீசரின் திருப்பெயரை விளித்து அவரை வழிபட எழும் அடியவரை என்றும் வழிபடுவார்க்கு இடரும், கேடும் ஏதமும் இல்லை. |

| | |
|---|---|
| **2654.** மாட மாளிகை கோபுரங் கூடங்கண்<br>மணியரங் கணிசாலை<br>பாடு சூழ்மதிற் பைம்பொன்செய் மண்டபம்<br>பரிசொடு பயில்வாய<br>கூடு பூம்பொழில் சூழ்தரு கோட்டூர்நற்<br>கொழுந்தேயென் றெழுவார்கள்<br>கேட தொன்றில ராகிநல் லுலகினிற்<br>கெழுவுவர் புகழாலே. | மாடமாளிகை, கூடகோபுரம், மணிஅரங்கம், அழகியசாலை, புகழ்தற்குரியமதில், பொன் மண்டபம் ஆகியவற்றோடு அழகிய பொழில்கள் சூழ்ந்த கோட்டூரில் விளங்கும் நற்கொழுந்தே என்று எழுவார் கேடில்லாதவராய் உலகெலாம் விளங்கிய புகழ் உடையவராவர். |
| **2655.** ஒளிகொள் வாளெயிற் றரக்கனவ் வுயர்வரை<br>யெடுத்தலும் உமையஞ்சிச்<br>சுளிய வூன்றலுஞ் சோர்ந்திட வாளொடு<br>நாளவற் கருள்செய்த<br>குளிர்கொள் பூம்பொழில் சூழ்தரு கோட்டூர்நற்<br>கொழுந்தினைத் தொழுவார்கள்<br>தளிர்கொள் தாமரைப் பாதங்கள் அருள்பெறுந்<br>தவமுடை யவர்தாமே. | ஒளியும் கூர்மையுமுடைய பற்களைக் கொண்ட இராவணன் கயிலைமலையை எடுத்தபோது உமையம்மை அஞ்ச, இறைவன் தனது திருக்கால் பெருவிரலைச் சிறிதே சுளித்து ஊன்றிய அளவில் அவ்விராவணன் நெரிந்து, வருந்தி வேண்ட, அவனுக்கு வாளும் நாளும் அருள் செய்தருளிய, பொழில் சூழ்ந்த கோட்டூர்க் கொழுந்தீசனைத் தொழுவார் இறைவன் திருவடித் தாமரைகளை அடையும் தவமுடையவராவர். |
| **2656.** பாடி யாடும்மெய்ப் பத்தர்கட் கருள்செயும்<br>முத்தினைப் பவளத்தைத்<br>தேடி மாலயன் காணவொண் ணாதவத்<br>திருவினைத் தெரிவைமார்<br>கூடி ஆடவர் கைதொழு கோட்டூர்நற்<br>கொழுந்தேயென் றெழுவார்கள்<br>நீடு செல்வத்த ராகியிவ் வுலகினில்<br>நிகழ்தரு புகழாரே. | பாடி ஆடுகின்ற உண்மை அடியார்க்கு அருளும் முத்தும் பவளமும் போன்றவனை, திருமாலும் நான்முகனும் தேடியறிய முடியாத திருவை, மகளிரும் ஆடவரும் கூடித்தொழும் கோட்டூரில் விளங்கும் கொழுந்தை வழிபட எழுபவர் நீடிய செல்வமும், உலகெலாம் நிகழும் புகழும் அடைவர். |
| **2657.** கோணல் வெண்பிறைச் சடையனைக் கோட்டூர்நற்<br>கொழுந்தினைச் செழுந்திரளைப்<br>பூணல் செய்தடி போற்றுமின் பொய்யிலா<br>மெய்யன்நல் லருளென்றும்<br>காண லொன்றிலாக் காரமண் தேரர்குண்<br>டாக்கர்சொற் கருதாதே<br>பேணல் செய்தர னைத்தொழும் அடியவர்<br>பெருமையைப் பெறுவாரே. | வளைந்த வெண்பிறையை அணிந்த சடைமுடியினராகிய கோட்டூரில் விளங்கும் கொழுந்தீசராகிய செழுமையின் திரட்சியை, மலர்களால் அலங்கரித்து, அவர்தம் திருவடிகளைப் போற்றுமின், பொய்யில்லாத மெய்யராகிய அவர்தம் நல்லவருளைக் காணும் நல்லூழில்லாத சமண புத்தர்களின் உரைகளைக் கேளாது அவ்விறைவரை விரும்பித்தொழும் அடியவர் பெருமையைப் பெறுவர். |

| | |
|---|---|
| **2658.** பந்து லாவிரற் பவளவாய்த் தேன்மொழிப்<br>பாவையோ டுருவாரும்<br>கொந்து லாமலர் விரிபொழிற் கோட்டூர்நற்<br>கொழுந்தினைச் செழும்பவளம்<br>வந்து லாவிய காழியுள் ஞானசம்<br>பந்தன்வாய்ந் துரைசெய்த<br>சந்து லாந்தமிழ் மாலைகள் வல்லவர்<br>தாங்குவர் புகழாலே. | பந்தாடும் மெல் விரலையும், பவள வாயையும், தேன்மொழியையும் உடைய உமையம்மையோடு அழகிய மலர்கள் நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட கோட்டூரில் விளங்கும் கொழுந்தீசரை, கடல் அலைகள் பவளங்களைக் கொண்டு வந்து சேர்க்கும் காழியில் தோன்றிய திருஞானசம்பந்தர் போற்றிப் பாடிய இச்செந்தமிழ் மாலையை ஓதவல்லவர் புகழ்பெறுவர். |

## 110. திருமாந்துறை

பண் : நட்டராகம் — பதிக எண் : 110

| | |
|---|---|
| **2659.** செம்பொ னார்தரு வேங்கையும் ஞாழலுஞ்<br>செருந்திசெண் பகமானைக்<br>கொம்பும் ஆரமும் மாதவி சுரபுனை<br>குருந்தலர் பரந்துந்தி<br>அம்பொன் நேர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைகின்ற<br>எம்பி ரானிமை யோர்தொழு பைங்கழல்<br>ஏத்துதல் செய்வோமே. | வேங்கை, ஞாழல், செருந்தி, செண்பக மலர்களையும் ஆனைக் கொம்பையும், சந்தனமரம், மாதவி மலர், சுரபுன்னை மலர், குருந்து மலர் ஆகியவற்றையும் உந்திவரும் காவிரி வடகரையில் உள்ள மாந்துறையில் உறையும் எம்பிரானின் இமையோர் வணங்கும் திருவடிகளை ஏத்துவோம். |
| **2660.** விளவு தேனொடு சாதியின் பலங்களும்<br>வேய்மணி நிரந்துந்தி<br>அளவி நீர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைவானத்<br>துளவ மான்மக னைங்கணைக் காமனைச்<br>சுடவிழித் தவனெற்றி<br>அளக வாணுதல் அரிவைதன் பங்கனை<br>யன்றிமற் றறியோமே. | விள முத–ய பயன்தரும் மரங்களின் பழங்களோடு முத்துக்களையும் அடித்துவரும் காவிரி வடகரையில் உள்ள மாந்துறையில், மால் மகனாகிய காமனைக் கனல் விழியால் எரித்து விளங்கும் இறைவனை, அம்பிகைபாகனை அன்றி உலகில் வேறொன்றையும் அறியோம். |
| **2661.** கோடு தேன்சொரி குன்றிடைப் பூகமுங்<br>கூந்த–ன் குலைவாரி<br>ஓடு நீர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைநம்பன்<br>வாடி னார்தலை யிற்ப– கொள்பவன்<br>வானவர் மகிழ்ந்தேத்துங்<br>கேடி லாமணி யைத்தொழல் அல்லது<br>கெழுமுதல் அறியோமே. | தேன் சொரியும் குன்றிடைத் தோன்றிக் கமுகு முத–ய மரங்களின் இலைகளை வாரிவரும் காவிரி வடகரையில் மாந்துறையில் விளங்கும் கேடிலாமணியைத் தொழுதலையல்லது வேறொருவரைத் தொழுதல் அறியோம். |

| | |
|---|---|
| **2662.** இலவ ஞாழலும் ஈஞ்சொடு சுரபுன்னை<br>யிளமரு திலவங்கம்<br>கலவி நீர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைகண்டன்<br>அலைகொள் வார்புனல் அம்பு– மத்தமும்<br>ஆடர வுடன்வைத்த<br>மலையை வானவர் கொழுந்தினை அல்லது<br>வணங்குதல் அறியோமே. | இலவம் முத–ய மரங்களை அடித்துவரும் காவிரி வடகரையில் உள்ள மாந்துறை உறை தலைவனும் கங்கை, பிறை, அரவு முத–வற்றைத் தலையில் சூடியவனும் ஆகிய வானோர் தலைவனையன்றி வணங்குதலறியோம். |
| **2663.** கோங்கு செண்பகங் குருந்தொடு பாதிரி<br>குரவிடை மலருந்தி<br>ஓங்கி நீர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைவானைப்<br>பாங்கி னா–டுந் தூபமும் தீபமும்<br>பாட்டவி மலர்சேர்த்தித்<br>தாங்கு வாரவர் நாமங்கள் நாவினில்<br>தலைப்படுந் தவத்தோரே. | கோங்கு, செண்பகம் முத–ய மரங்களை அடித்துவரும் காவிரி வடகரை மாந்துறையில் உறைவானை, தூபம் தீபம் தோத்திரம் நிவேதனம் ஆகியவற்றால் மலர் தூவி வழிபட்டு அவன் திருநாமங்களைச் சொல்லுவார் மேலான தவமுடையோராவர். |
| **2664.** பெருகு சந்தனங் காரகில் பீ–யும்<br>பெருமரம் நிமிர்ந்துந்திப்<br>பொருது காவிரி வடகர மாந்துறைப்<br>புனிதனெம் பெருமானைப்<br>பரிவி னா–ருந் திரவியும் மதியமும்<br>பார்மன்னர் பணிந்தேத்த<br>மருத வானவர் வழிபடு மலரடி<br>வணங்குதல் செய்வோமே. | சந்தனம் அகில் முத–ய மரங்களை அடித்துவரும் காவிரி வடகரை மாந்துறைப் புனிதனின் இரவி, மதி, மன்னர்கள், மருத்துக்கள் அன்போடு வழிபடும் திருவடிகளை வணங்குவோம். |
| **2665.** நறவம் மல்–கை முல்லையும் மௌவலும்<br>நாண்மல ரவைவாரி<br>இறவில் வந்தெறி காவிரி வடகரை<br>மாந்துறை யிறையன்றங்<br>கறவ னாகிய கூற்றினைச் சாடிய<br>அந்தணன் வரைவில்லால்<br>நிறைய வாங்கி வ–த்தெயி லெய்தவன்<br>நிரைகழல் பணிவோமே. | மல்–கை முல்லை முத–ய மலர்களை மிகுதியாக வாரி வரும் காவிரி வடகரை மாந்துறை இறைவனும் காலனைக் காய்ந்தவனும், மேருவில்லால் முப்புரம் எரித்தவனும் ஆகிய பெருமானின் திருவடிகளைப் பணிவோம். |

| | |
|---|---|
| **2666.** மந்த மார்பொழின் மாங்கனி மாந்திட<br>மந்திகள் மாணிக்கம்<br>உந்தி நீர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யுறைவானை<br>நிந்தி யாஎடுத் தார்த்தவல் லரக்கனை<br>நெரித்திடு விரலானைச்<br>சிந்தி யாமனத் தாரவர் சேர்வது<br>தீநெறி யதுதானே. | மந்திகள் மாங்கனிகளை உண்டு மகிழுமாறு அடர்ந்து வளர்ந்த மாமரங்களை உடைய மாந்துறையில் எழுந்தருளிய இறைவனை, நிந்தித்து அவனை மலையோடு எடுத்து ஆரவாரித்த இராவணனைக் கால் விரலால் நெரித்தவனைச் சிந்தியாதவர் தீநெறி சேர்வர். |
| **2667.** நீலமாமணி நித்திலத் தொத்தொடு<br>நிரைமலர் நிரந்துந்தி<br>ஆ– யாவரு காவிரி வடகரை<br>மாந்துறை யமர்வானை<br>மாலும் நான்முகன் தேடியுங் காண்கிலா<br>மலரடி யிணைநாளும்<br>கோல மேத்திநின் றாடுமின் பாடுமின்<br>கூற்றுவன் ந–யானே. | நீல மணிகளையும், முத்துக்களையும், மலர்களையும் அடித்து வரும் காவிரி வடகரை மாந்துறையில் திருமாலும் பிரமனும் தேடிக் காண முடியாதவாறு எழுந்தருளிய இறைவனின் திருவடிகளைப் பாடி வழிபடுங்கள். நம்மைக் கூற்றுவன் ந–யான். |
| **2668.** நின்று ணுஞ்சமண் தேரரும் நிலையிலர்<br>நெடுங்கழை நறவேலம்<br>நன்று மாங்கனி கத–யின் பலங்களு<br>நாண–ன் நுரைவாரி<br>ஒன்றி நேர்வரு காவிரி வடகரை<br>மாந்துறை யொருகாலம்<br>அன்றி யுள்ளழிந் தெழும்பரி சழகிது<br>அதுவவர்க் கிடமாமே. | சமணரும் தேரரும் நிலையற்ற உரையினராவர். நீண்ட மூங்கில், தேன் பொருந்திய வேலமரம், மாங்கனி, வாழைக்கனி, நாண–ன் நுரையை அடித்துக் கொண்டு வரும் காவிரியின் வடகரையிலுள்ள திருமாந்துறை இறைவனை எக்காலத்தும் நெஞ்சுருகி வழிபடும் பரமானந்த நிலையே மேலானது. |
| **2669.** வரைவ ளங்கவர் காவிரி வடகரை<br>மாந்துறை யுறைவானைச்<br>சிரபு ரம்பதி யுடையவன் கவுணியன்<br>செழுமறை நிறைநாவன்<br>அரவெ னும்பணி வல்லவன் ஞானசம்<br>பந்தன்அன் புறுமாலை<br>பரவி டுந்தொழில் வல்லவர் அல்லலும்<br>பாவமும் இலர்தாமே. | மலைவளங்களைக் கொணர்ந்து தரும் காவிரி வடகரையில் – மாந்துறையில் உறைபவன் மீது கவுணிய கோத்திரத்தனாய், சிறந்த வேதங்கள் நிறைந்த நாவினனும் சிவனுக்குத் திருத்தொண்டு செய்வதில் வல்லவனுமாகிய காழி ஞானசம்பந்தன் பாடிய அன்புறு பாமாலைகளை ஓதி வழிபடுவோர் அல்லல் பாவம் ஆகியன நீங்கப் பெறுவர். |

## 111. திருவாய்மூர்

பண் : நட்டராகம் பதிக எண் : 111

| | |
|---|---|
| 2670. தளிரிள வளரென வுமைபாடத்<br>தாளம் மிடவோர் கழல்வீசிக்<br>கிளரிள மணியர வரையார்த்<br>தாடும் வேடக் கிறிமையார்<br>விளரிள முலையவர்க் கருணல்கி<br>வெண்ணீ றணிந்தோர் சென்னியின்மேல்<br>வளரிள மதியமொ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | தளிர்களோடு கூடிய இளங்கொம்புபோல, உமையம்மை அருகிருந்து பாடவும், தாளம் இடவும் ஒப்பற்ற தழலை உடைய கையை வீசி, விளங்கும் மாணிக்க மணியை உடைய பாம்பை இடையிலே கட்டி ஆடும் பொய்வேடத்தை உடையவர். தம்மை விரும்பும் பருத்த தனபாரங்களை உடைய மகளிர்க்கு அருள் நல்கித் திருநீறுபூசி, முடிமேல் பிறையணிந்து காட்சி தருபவர். வாய்மூரடி களாகிய அவர் வருவார் காணீர். |
| 2671. வெந்தழல் வடிவினர் பொடிப்பூசி<br>விரிதரு கோவண வுடைமேலோர்<br>பந்தஞ்செய் தரவசைத் தொ–பாடிப்<br>பலபல கடைதொறும் ப–தேர்வார்<br>சிந்தனை புகுந்தெனக் கருள்நல்கிச்<br>செஞ்சுடர் வண்ணர்தம் அடிபரவ<br>வந்தனை பலசெய இவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | தழல் போன்ற திருமேனியராய், திருநீறு பூசி, விரித்தணிந்த கோவண ஆடை மீது பாம்பை அரைநாணாகக் கட்டிக் கொண்டு வேதஒ– இசைத்துக் கொண்டு பலபல வீடுகளுக்கும் சென்று ப–யேற்பவர். செஞ்சுடர் வண்ணராகிய வாய்மூரடிகள் என் சிந்தனை புகுந்து எனக்கு அருளை நல்கிப் புறத்தே தம் அடியைப் பரவி வழிபாடு செய்யுமாறு வருவார் காணீர். |
| 2672. பண்ணிற் பொ–ந்த வீணையர்<br>பதினெண் கணமு முணராநஞ்<br>சுண்ணப் பொ–ந்த மிடற்றினார்<br>உள்ளம் உருகில் உடனாவார்<br>சுண்ணப் பொடிநீ றணிமார்பர்<br>சுடர்பொற் சடைமேற் றிகழ்கின்ற<br>வண்ணப் பிறையோ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | பண்ணிசை பொருந்திய வீணையை உடையவர். பதினெட்டுத் தேவர் கணத்தினரும் உணராத வகையில் நஞ்சுண்டு விளங்கும் திருமிடற்றை உடையவர். திருநீற்றுச் சுண்ணம் அணிந்த மார்பினர். அழகிய சடைமீது இளம்பிறை சூடியவர். வாய்மூரில் விளங்கும் அவ்அடிகள் வருவார் காணீர். |
| 2673. எரிகிளர் மதியமொ டெழினுதன்மேல்<br>எறிபொறி யரவினொ டாறுமூழ்க<br>விரிகிளர் சடையினர் விடையேறி<br>வெருவவந் திடர்செய்த விகிர்தனார்<br>புரிகிளர் பொடியணி திருவகலம்<br>பொன்செய்த வாய்மையர் பொன்மிளிரும்<br>வரியர வரைக்கசைத் திவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | சடைமுடி மீது நெருப்புப்போல விளங்கும் பிறைமதியையும், அழகிய நுத–ன் மேற்பகுதியில் பாம்பையும், கங்கையையும் அணிந்த விடையேறி வந்து மகளிராகிய எங்கட்கு இடர் செய்த விகிர்தர். திருநீறணிந்த மார்பினர். சத்திய வடிவினர். வாய்மூரில் விளங்கும் அவ்வடிகள் அழகியதொரு அரவை அரைக்கசைத்து வருவார். காணீர். |

| | |
|---|---|
| **2674.** அஞ்சன மணிவணம் எழில்நிறமா<br>வகமிட றணிகொள வுடல்திமில<br>நஞ்சினை யமரர்கள் அமுதமென<br>நண்ணிய நறுநுதல் உமைநடுங்க<br>வெஞ்சின மால்களி யானையின்தோல்<br>வெருவுறப் போர்த்ததநிறமு மஃதே<br>வஞ்சனை வடிவினொ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | நஞ்சினைக் கண்டு தேவர்கள் உடல் நடுங்கி வேண்டியபோது நீலமணிபோலும் அழகிய நிறத்தினைப் பெறவும் கழுத்திடம் அழகுபெறவும் அமுதம்போல அதனை உண்டவரும் நறு நுதலை உடைய உமையம்மை நடுங்க யானையின் தோலைக் கண்டோர் அஞ்சுமாறு உரித்துப் போர்த்தவரும் ஆகிய வாய்மூர் அடிகள் பெண்களின் மனம் கவர வஞ்சனை வடிவோடு வருவார். அவரைக் காணீர். |
| **2675.** அல்–ய மலர்புல்கு விரிகுழலார்<br>கழ–ணை யடிநிழ லவைபரவ<br>எல்–யம் போதுகொண் டெரியேந்தி<br>யெழிலொடு தொழிலவை யிசையவல்லார்<br>சொல்–ய அருமறை யிசைபாடிச்<br>சூடிள மதியினர் தோடுபெய்து<br>வல்–யந் தோலுடுத் திவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | அடுக்கடுக்கான இதழ்களை உடைய மலர்களைச் சூடிய விரிந்த கூந்தலை உடைய மகளிர் தம் திருவடிகளைப் பரவ இராப்போதில் எரியேந்தி ஆடும் அவ்விறைவர் அம் மகளிரது பரவுதலை ஏற்றருளுபவர். வேதங்களைப் பாடிக்கொண்டு, இளமதி சூடிய ஒரு காதில் தோடணிந்து பு–த்தோலுடுத்து வருவார். அவ்வாய்மூர் இறைவரைக் காணீர். |
| **2676.** கடிபடு கொன்றைநன் மலர்திகழுங்<br>கண்ணியர் விண்ணவர் கனமணிசேர்<br>முடிபில்கும் இறையவர் மறுகின்நல்லார்<br>முறைமுறை ப–பெய முறுவல்செய்வார்<br>பொடியணி வடிவொடு திருவகலம்<br>பொன்னென மிளிர்வதொர் அரவினொடும்<br>வடிநுனை மழுவினொ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | மணம் கமழும் கொன்றை மலர் மாலையைத் தலையில் அணிந்தவர். தேவர்கள் தலையில் சூடிய முடிகளில் பதித்த முழு மணிகளின் ஒளி சிதறும் திருவடியினர். வீதிகளில் பெண்கள் ப–யிடலைக் கண்டு முறுவல் செய்பவர். திருநீறு அணிந்த வடிவோடும், பொன்போல் மிளிரும் பாம்பணிந்த மார்போடும், கூரிய மழுவை ஏந்தி அவ்வாய்மூர் இறைவர் வருவார். காணீர். |
| **2677.** கட்டிணை புதுமலர்க் கமழ்கொன்றைக்<br>கண்ணியர் வீணையர் தாமுமஃதே<br>எட்டுணை சாந்தமொ டுமைதுணையா<br>இறைவனா ருறைவதொர் இடம்வினவில்<br>பட்டிணை யகலல்குல் விரிகுழலார்<br>பாவையர் ப–யெதிர் கொணர்ந்துபெய்ய<br>வட்டணை யாடலொ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | இணை இணையாகக் கட்டப்பட்ட புதிய கொன்றை மலர்மாலையைத் தலையில் அணிந்தவர். வீணை வாசிப்பவர். அவ்விறைவர் சந்தனமணிந்து உமையம்மை துணையாக உறையுமிடம் வாய்மூராகும். பட்டாடை அணிந்த தாருகாவன மகளிரிடம் ப– கேட்டு அவர்களை மயங்குமாறு செய்து தாளமிட்டுச் சதிராடும் வாய்மூர் இறைவராகிய அப்பெருமானார் வருவார். காணீர். |

| | |
|---|---|
| **2678.** ஏனம ருப்பினொ டெழிலாமை<br>யிசையப் பூண்டோ ரேறேறிக்<br>கானம திடமா வுறைகின்ற<br>கள்வர் கனவிற் றுயர்செய்து<br>தேனுண மலர்கள் உந்திவிம்மித்<br>திகழ்பொற் சடைமேல் திகழ்கின்ற<br>வானநன் மதியினொ டிவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | பன்றிக் கொம்போடு ஆமை ஓட்டையும் அணிந்து எருதேறிக் காட்டை இடமாகக் கொண்டு உறையும் இவர் நம் உள்ளங்களைக் கவரும் கள்வராவர். கனவிடைத் தோன்றி நமக்குத் துயர் விளைத்துத் தேன்பொருந்திய மலர்களை அணிந்த அழகிய சடைமீது பிறையணிந்து அவ்வாய்மூர் இறைவர் வருவார். காணீர். |
| **2679.** சூடல்வெண் பிறையினர் சுடர்முடியர்<br>சுண்ணவெண் ணீற்றினர் சுடர்மழுவர்<br>பாடல்வண் டிசைமுரல் கொன்றையந்தார்<br>பாம்பொடு நூலவை பசைந்திலங்கக்<br>கோடனன் முகிழ்விரல் கூப்பிநல்லார்<br>குறையுறு ப–யெதிர் கொணர்ந்துபெய்ய<br>வாடல்வெண் டலைபிடித் திவராணீர்<br>வாய்மூ ரடிகள் வருவாரே. | பிறைசூடியவரய், சுடர்முடியவராய், திருநீறு பூசியவராய், மழுவேந்தியவராய், கொன்றைமாலை சூடியவராய், பாம்பும் முப்புரி நூலும் அணிந்தவராய், காந்தள் போன்று முகிழ்த்த கையினராகி, தாருகாவன முனி பன்னியர் ப– பெய்யுமாறு பிரமகபாலத்தை ஏந்தியவராய் வாய்மூர் இறைவர் வருவார். காணீர். |
| **2680.** திங்களொ டருவரைப் பொழிற்சோலைத்<br>தேனலங் கானலந் திருவாய்மூர்<br>அங்கமொ டருமறை யொ–பாடல்<br>அழல்நிற வண்ணர்தம் மடிபரவி<br>நங்கள்தம் வினைகெட மொழியவல்ல<br>ஞானசம் பந்தன் தமிழ்மாலை<br>தங்கிய மனத்தினால் தொழுதெழுவார்<br>தமர்நெறி யுலகுக்கோர் தவநெறியே. | சந்திரனைச் சென்று தொடும் மதில்களையும் சோலைகளையும் உடைய திருவாய்மூரிலுள்ள, வேதங்கள், வேதாங்கங்கள் ஆகிய பாடல்களின் பொருளாயுள்ள தீ வண்ணரின் திருவடிகளைப் பரவி நம்வினை கெடுமாறு ஞானசம்பந்தன் மொழிந்த இத்தமிழ் மாலை தங்கிய மனத்தோடு அவரைத் தொழும் அடியவர் நெறி, உலகில் மேலான தவநெறியாகும். |

## 112. திருவாடானை

பண் : நட்டராகம் பதிக எண் : 112

| | |
|---|---|
| **2681.** மாதோர்கூறுகந் தேறதேறிய<br>ஆதியானுறை யாடானை<br>போதினாற்புனைந் தேத்துவார்தமை<br>வாதியாவினை மாயுமே. | அம்பிகையை ஒருபாகமாக உகந்து கொண்டு விடைமேல் ஏறியருளும் முதல்வன் எழுந்தருளிய திருவாடானையை அடைந்து அவ்விறைவனை மலர்களால் அலங்கரித்தும் அர்ச்சித்தும் வழிபடுபவர்களின் வினைகள் அவர்களை வருத்தமாட்டாதனவாய் மாய்ந்துவிடும். |

| | |
|---|---|
| **2682.** வாடல்வெண்டலை யங்கையேந்திநின்<br>றாடலானுறை யாடானை<br>தோடுலாமலர் தூவிக்கைதொழ<br>வீடுநுங்கள் வினைகளே. | உலர்ந்த பிரமகபாலத்தைக் கையில் ஏந்தி நின்று ஆடுதலை உடைய சிவபிரானது திருவாடானையை அடைந்து அவ்விறைவனை மலர் தூவித் தொழுதால் உங்கள் வினைகள் யாவும் அழியும். |
| **2683.** மங்கைகூறினன் மான்மறியுடை<br>அங்கையானுறை யாடானை<br>தங்கையாற்றொழு தேத்தவல்லவர்<br>மங்குநோய்பிணி மாயுமே. | மங்கை பங்கனும் மான் கன்றைக் கையில் ஏந்தியவனுமாகிய சிவபிரான் உறையும் திருவாடானையை அடைந்து அவ்விறைவனைத் தம் கைகளைக் கூப்பிப் போற்றவல்லவர்களின் நோய்கள் கெடும். பிணிகள் (வினைகள்) மாயும். |
| **2684.** சுண்ணநீறணி மார்பிற்றோல்புனை<br>அண்ணலானுறை யாடானை<br>வண்ணமாமலர் தூவிக்கைதொழ<br>எண்ணுவாரிட ரேகுமே. | சந்தனச் சுண்ணமும் திருநீறும் அணிந்த மார்பில் பூணநூ–ன்கண் மான்தோலைப் புனைந்துள்ள தலைமைக் கடவுளாகிய சிவபிரானுறையும் திருவாடானையை அடைந்து, அவ்விறைவனை அழகும் மணமும் கூடிய மலர்களைத் தூவிக் கைதொழ எண்ணுபவர்களின் இடர் ஏகும். |
| **2685.** கொய்யணிம்மலர்க் கொன்றைசூடிய<br>ஐயன்மேவிய வாடானை<br>கையணிம்மல ரால்வணங்கிட<br>வெய்யவல்வினை வீடுமே. | கொய்யப் பெற்றதும், அழகியதுமாகிய கொன்றை மலர்மாலையைச் சூடிய தலைவன் எழுந்தருளிய திருவாடானையை அடைந்து அவ்விறைவனைக் கைகளால் மலர்தூவித் தொழுது வணங்குபவர்களின் கொடிய வல்வினைகள் அவர்களை விட்டொழியும். |
| **2686.** வானிளம்மதி மல்குவார்சடை<br>ஆனஞ்சாடல னாடானை<br>தேனணிம்மலர் சேர்த்தமுன்செய்த<br>ஊனமுள்ள வொழியுமே.<br><br>துர்வாசரின் சாபத்தால் ஆட்டுத்தலையும், ஆனை உடலும் பெற்ற வருணனுடைய புதல்வனான வாருணி இங்கு வழிபட்டு மீண்டும் தேவ சரீரம் பெற்றதால் ஆடானை என்பது தலப் பெயராயிற்று. | வானில் விளங்கும் இளம்பிறையைத் தமது திருமுடியில் சூடியவரும் நீண்ட சடைமுடியை உடையவரும், ஆனைந்தை விரும்பி ஆடுபவருமாகிய சிவபெருமான் எழுந்தருளிய திரு ஆடானையை அடைந்து அவ்விறைவர் திருவடிகளில் தேன் பொருந்திய அழகிய மலர்களைச் சேர்ப்பவர்களின் முன்வினைகளாக உள்ளனயாவும் ஒழியும். |

| | |
|---|---|
| **2687.** துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை<br>அலங்கலானுறை யாடானை<br>நலங்கொண்மாமலர் தூவிநாடொறும்<br>வலங்கொள்வார்வினை மாயுமே. | விளங்குகின்ற வெண்மழுவைக் கையில் ஏந்தி, சுற்றிய சடைமுடிமீது கொன்றை வில்வ மாலைகளை அணிந்துள்ள சிவபெருமான் உறையும் திருவாடானையை அடைந்து அவ்விறைவனை அழகும் மணமும் கொண்ட மலர்களைத் தூவித் தொழுது நாள்தோறும் அவன் திருக்கோயிலை வலம்வருவார் வினைகள் மாயும். |
| **2688.** வெந்தநீறணி மார்பிற்றோல்புனை<br>அந்தமில்லவ னாடானை<br>கந்தமாமலர் தூவிக்கைதொழும்<br>சிந்தையார்வினை தேயுமே. | தீயிடைவெந்த திருநீற்றை அணிந்தவரும் மார்பின் கண் மான்தோலை அணிந்தவரும், தோற்றக்கேடு இல்லாதவருமான சிவபெருமான் உறையும் திருவாடானையை அடைந்து அவ்விறைவரை மணமலர்களைத் தூவி வழிபடும் சிந்தனையை உடையவர்களின் வினைகள் தேயும். |
| **2689.** மறைவலாரொடு வானவர்தொழு<br>தறையுந்தண்புன லாடானை<br>உறையும்ஈசனை யேத்தத்தீவினை<br>பறையுநல்வினை பற்றுமே. | வேதங்களில் வல்ல அந்தணர்களோடு விண்ணில் உறையும் தேவர்களும் வந்து வணங்கும் நீர்வளம்சான்ற திருவாடானையில் உறையும் ஈசனை ஏத்தத் தீவினைகள் அழியும். நல்வினைகள் வந்து சேரும். |
| **2690.** மாயனும்மல ரானுங்கைதொழ<br>ஆயவந்தண னாடானை<br>தூயமாமலர் தூவிக்கைதொழத்<br>தீயவல்வினை தீருமே. | மாயவனாகிய திருமாலும், தாமரை மலர் மேலுறையும் நான்முகனும் கைகளால் தொழுது வழிபடுதற்குரியவனாகிய அந்தணன் உறையும் திருவாடானையை அடைந்து அவ்விறைவனைத் தூய மலர்களைத் தூவிக்கைகளால் தொழுபவர்களின் தீய வல்வினைகள் தீரும். |
| **2691.** வீடினார்ம– வெங்கடத்துநின்<br>றாடலானுறை யாடானை<br>நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்<br>பாடநோய்பிணி பாறுமே. | ஊழிக்காலத்து இறந்தவர்களின் உடல்கள் நிறைந்து எரிந்து வேகும் சுடுகாட்டுள் நின்று உருத்திர தாண்டவமாடும் இறைவன் உறையும் திருவாடானையை அடைந்து ஞானசம்பந்தன் அருளிய இச்செந்தமிழ் மாலையைப் பாடி வழிபடுபவர்களின் நோய்களும் பிணிகளும் நீங்கும். |

## செவ்வழி

இது நான்கு பெரும்பண்களுள் ஒன்று. நெய்தல் யாழ் என்றும் சொல்லப்பெறும் ஆகவே இரங்கலுக்குரியது. 103 பண் வரிசையில் இது 13-ஆவது. செவ்வழி யாழ்த்திறன்கள் 16. இரங்கல் இதன் பொருளாதல் பற்றி இது மாலைக்குரியது. இதன் சுவை மருட்கை எனப்படும். இது மிகவும் பழமையான பண் என்பதைப் புறநானூற்றால் அறியலாம். செவ்வழிப் பண் சீறியாழில் செய்யத்தக்கது. புறம் 144, 146, 147 ஆகிய பாடல்கள், ''சீறியாழ் செவ்வழி பண்ணி'' என்று சொல்கின்றன. நள்ளியின் கொடைச்சிறப்பால் பாணர், காலை மருதமும் மாலைச் செவ்வழியும் பாடும் மரபை மறந்தும் விட்டார்கள் என்ற 149-ஆம் பாடல் கூறுகிறது. இப்பண்ணில் சம்பந்தர் மட்டுமே 10 பதிகம் பாடியுள்ளார். (2.113 - 122). "தொண்டரஞ்சு களிறும் மடக்கி" என்ற பிரசித்தமான கேதாரப் பாசுரம் செவ்வழிப் பண்ணில் உள்ளது. இப்பண்ணுக்கு ஒரே கட்டளைதான் உள்ளது. சம்பந்தர் தமது திருவீழிமிழலைப் பதிகத்தில், "சேறாடு செங்கழுநீர்த் தாதாடிச் சிவந்த வண்டு, வேறாய உருவாகிச் செவ்வழி நற்பண்பாடும் மிழலை" என்று செவ்வழிப் பண்ணைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். இக்காலம் இது எதுகுலகாம்போதிக்கு இணையாகப் பாடப்பட்டு வருகிறது. இது 28 ஆவது மேளம் அரிகாம்போதியில் ஜன்னியம். செவ்வழி பகல் இரவு எக்காலத்திலும் பாடத்தக்க பண் எனக் கொள்ளப்படுகிறது.

**செவ்வழிப் பண்ணின் (இலக்கணம்)**

காயுங் கனியு மாயிரு மருங்கும்
கவின்மிகச் சோலை கனிந்து நெருங்க
நடைகொளு மருங்கில் நறும்பூ சிந்த
செல்வழி யென்னச் செவ்வழி தோன்றலால்
செவ்வழிப் பண்ணெனச் செப்பப் பெற்றது.

**பொருள்**

ஒரு பக்கம் காயும், ஒரு பக்கம் கனியும் காய்த்துக் கனிந்து தோன்ற கண்ணுக்கினிய சோலை பொலிந்து நெருங்க மக்கள் நடந்து செல்லும் பாதைகளில் நறும்பூ சிந்தச் செல்வழியானது செவ்வையாகத் தோன்றுதல் போல் இந்தப்பண் இருப்பதால் இது செவ்வழிப்பண் எனப்படுகிறது.

பண்ணமைந்த பாடலில் முதல்சீர் காய்ச்சீராகவும், இறுதிச்சீர் கனிச்சீராகவும், நடுவில் உள்ள சீர் நறும்பூச் சீராகவும் பாடுவது அரிய செயலாம். இங்ஙனம் அரிய செயல் புரிந்தமை கருதியே ''முதிரும் முத்தமிழ் விரகர்'' என்று சொல்லப் பெறுகிறார் காழி வேந்தரான திருஞானசம்பந்தர்.

**உதாரணம்**

பதிகம் - பொடியிலங்கும் - முதல் அடி
பொடியிலங்கும் திருமே னியாளர் புலியதளினர்
பொடியிலங்கும் - கருவிளங்காய்
திருமேனியாளர் - புளி மாநறும்பூ
புலியதளினர் - கருவிளங்கனி

இந்த அடியில் முதற்சீர் - காய்ச்சீர், நடுவில் - நறும் பூச்சீர், மூன்றாஞ்சீர் - கனிச்சீர், இரண்டு பக்கமும் காயமும், கனியும் அமைய நடுவில் வருஞ்சீர். நறும்பூச்சீராக அமைகிறது. எனவே இது செவ்வழிப் பண்.

## 113. சீகாழி

பண் : செவ்வழி

பதிக எண் : 113

| | பாடல் | பொருள் |
|---|---|---|
| 2692. | பொடியிலங்குந் திருமேனி<br>யாளர் பு–யதளினர்<br>அடியிலங்குங் கழலார்க்க<br>ஆடும் மடிகள்ளிடம்<br>இடியிலங்குங் குரலோதம்<br>மல்கவ் வெறிவார்திரைக்<br>கடியிலங்கும் புனல்முத்<br>தலைக்குங்கடற் காழியே. | திருநீறணிந்த திருமேனியர். பு–த்தோல் உடுத்தவர். திருவடிகளில் விளங்கும் கழல்கள் ஆர்க்க ஆடுபவர். அவர் உறையுமிடம், இடிபோல் முழங்கும் கடல் அலைகளின் நீர்ப் பெருக்கு முத்துக்களை மிகுதியாகக் கொண்டு வந்து கரையில் சேர்க்கும் காழிப்பதியாகும். |
| 2693. | மய–லங்குந் துயர்மா<br>சறுப்பானருந் தொண்டர்கள்<br>அய–லங்கப் பணிசெய்ய<br>நின்றவ் வடிகள்ளிடம்<br>புய–லங்குங் கொடையாளர்<br>வேதத்தொ– பொ–யவே<br>கய–லங்கும் வயற்கழனி<br>சூழுங்கடற் காழியே. | மயக்கம் தரும் பிறவித்துயராகிய மாசினைப் போக்க எண்ணிய தொண்டர்கள் தான் வாழும் இடங்கள் எங்கும் பணி செய்ய நின்ற சிவபிரான் உறையுமிடம், மேகம் போல வரையாது கொடுக்கும் கொடையாளர்களுடன் வேத ஒ–பரவும் சிறப்பினதாய, கயல்மீன்கள் தவழும் வயல்கள் சூழ்ந்த காழிப் பதியாகும். |
| 2694. | கூர்விளங்குந் திரிசூல<br>வேலர்குழைக் காதினர்<br>மார்விலங்கும் புரிநூலு<br>கந்தமண வாளனூர்<br>நேர்விலங்கல் லனதிரை<br>கள்மோதந் நெடுந்தாரைவாய்க்<br>கார்விலங்கல் லெனக்கலந்<br>தொழுகுங்கடற் காழியே. | கூரிய முத்தலைச் சூலத்தை ஏந்தியவர். குழையணிந்த செவியினர். மார்பில் முப்புரிநூல் விளங்கும் மணவாளக் கோலத்தினர். அவருக்குரிய ஊர், மலை போலக் கடல் அலைகள் வந்தலைக்கும் காழிப் பதியாகும். |
| 2695. | குற்றமில்லார் குறைபாடு<br>செய்வார் பழிதீர்ப்பவர்<br>பெற்றநல்ல கொடிமுன்<br>னுயர்த்த பெருமானிடம்<br>மற்றுநல்லார் மனத்தா<br>–னியார் மறைகலையெலாங்<br>கற்றுநல்லார் பிழைதெரிந்<br>தளிக்குங்கடற் காழியே. | குற்றம் இல்லாதவர். தம் குறைகளைக் கூறி வேண்டுபவருக்கு வரும் பழிகளைத் தீர்ப்பவர். விடைக்கொடியை உயர்த்தியவர். அப்பெருமானுக்குரிய இடம், நல்லவர், மனத்தால் இனியவர். வேதங்களைக் கற்றுணர்ந்து நல்லோர் செய்யும் பிழை தெரிந்து போக்கித் தலையளி செய்வோர் ஆகியவர்கள் வாழும் கடற்காழியாகும். |

| | | |
|---|---|---|
| **2696.** | விருதிலங்குஞ் சரிதைத்<br>தொழிலார் விரிசடையினார்<br>எருதிலங்கப் பொ–ந்தேறும்<br>எந்தைக் கிடமாவது<br>பெரிதிலங்கும் மறைகிளைஞர்<br>ஓதப் பிழைகேட்டலாற்<br>கருதுகிள்ளைக் குலந்தெரிந்து<br>தீர்க்குங்கடற் காழியே. | வெற்றியமைந்த புராண வரலாறுகளை உடையவர். விரிந்த சடையினர். எருது விளங்க அதன்மேல் பொ–வோடு அமரும் எந்தை. அவருக்குரிய இடம், பெருமை பொருந்திய வேதங்களைப் பயில்வோர் ஓதக்கேட்டு அதிலுள்ள பிழைகளைப் பலகாலும் கேட்டுப் பழகிய வாசனையால் கிளிக் குலங்கள் தெரிந்து தீர்க்கும் காழிப்பதியாகும். |
| **2697.** | தோடிலங்குங் குழைக்காதர்<br>தேவர்சுரும் பார்மலர்ப்<br>பீடிலங்குஞ் சடைப்பெருமை<br>யாளர்க் கிடமாவது<br>கோடிலங்கும் பெரும்பொழில்<br>கள்மல்கப் பெருஞ்செந்நெ–ன்<br>காடிலங்கும் வயல்பயிலும்<br>அந்தண்கடற் காழியே. | தோடும் குழையும் விளங்கும் காதினர். வேதங்களை அருளியவர். வண்டுகள் மொய்க்கும் மலர்களை அணிந்து பெருமையோடு இலங்கும் சடைமிசைக் கங்கையைச் சூடியவர். அவ்வடிகட்கு இடம் பெரிய கிளைகளோடு கூடிய மரங்கள் செறிந்த பொழில்கள் நிறைந்துள்ளதும் செந்நெற்காடுகளை உடைய வயல்களை உடையதுமான காழிப்பதியாகும். |
| **2698.** | மலையிலங்குஞ் சிலையாக<br>வேகம்மதில் மூன்றெரித்<br>தலையிலங்கும் புனற்கங்கை<br>வைத்தவ்வடி கட்கிடம்<br>இலையிலங்கும் மலர்க்கைதை<br>கண்டல்வெறி விரவலாற்<br>கலையிலங்குங் கணத்தினம்<br>பொ–யுங்கடற் காழியே. | மேருமலையை வில்லாகக் கொண்டு முப் புரங்களை எரித்து, அலைகளோடு கூடிய கங்கையை முடிமிசை வைத்துள்ள அடிகட்கு இடம், இலைகளோடு பூத்து விளங்கும் தாழை நீர்முள்ளி ஆகியவற்றின் மணத்துடன் வேதம் வல்லமறையவர் கணம் வாழும் காழிப்பதியாகும். |
| **2699.** | முழுதிலங்கும் பெரும்பாருள்<br>வாழும்முரண் இலங்கைக்கோன்<br>அழுதிரங்கச் சிரமுர<br>மொடுங்கவ் வடர்த்தாங்கவன்<br>தொழுதிரங்கத் துயர்தீர்த்<br>துகந்தார்க் கிடமாவது<br>கழுதும்புள்ளும் மதிற்புறம<br>தாருங்கடற் காழியே. | உலகில் மாறுபாடுடையவனாய் வாழ்ந்த இராவணன் அழுது இரங்க, அவன் தலை மார்பு ஆகியன ஒடுங்க அடர்த்துப் பின் அவன் தொழுது இரங்கிய அளவில் அவனது துயர் தீர்த்தருளிய இறைவற்கு இடம் வண்டும் பறவைகளும் மதிற்புறத்தே வாழும் கடற்காழியாகும். |

| | | |
|---|---|---|
| 2700. | பூவினானும் விரிபோதின்<br>மல்குந்திரு மகடனை<br>மேவினானும் வியந்தேத்த<br>நீண்டா ரழலாய்நிறைந்<br>தோவியங்கே யவர்க்கருள்<br>புரிந்தவ் வொருவர்க்கிடங்<br>காவியங்கண் மடமங்கையர்<br>சேர்கடற் காழியே. | நான்முகனும், தாமரை மலரில் வாழும் திருமகளை மருவிய திருமாலும் வியந்து போற்ற, அழலுருவாய் நீண்டுப்பின் அதனின் நீங்கி அவர்களுக்கு அருள்புரிந்த இறைவற்கு இடம், குவளை மலர் போலும் கண்களை உடைய அழகிய மகளிர் வாழும் கடற்காழியாகும். |
| 2701. | உடைநவின் றாருடைவிட்<br>டுழல்வார் இருந்தவத்தார்<br>முடைநவின் றம்மொழி<br>யொழித்துகந்தம் முதல்வன்னிடம்<br>மடைநவின்ற புனற்கெண்டை<br>பாயும்வயல் ம–தரக்<br>கடைநவின்றந் நெடுமாடம்<br>ஓங்குங்கடற் காழியே. | உடையோடும், உடையின்றியும் திரிபவரும், கடுமையான விரதங்களைத் தவமாக மேற்கொள்பவருமான புத்தர் சமணர்களின் நாற்றமுடைய மொழிகளையொழித்து உகந்த முதல்வன் இடம், கெண்டை மீன்கள் துள்ளிப் பாயும் நீர் நிறைந்த மடைகளோடு கூடிய வயல்கள் சூழ்ந்ததும், வாயில்களை உடைய உயர்ந்த மாட வீடுகளைக் கொண்டுள்ளதுமான காழிப் பதியாகும். |
| 2702. | கருகுமுந்நீர் திரையோத<br>மாருங் கடற்காழியுள்<br>உரகமாருஞ் சடையடி<br>கள்தம்பா லுணர்ந்துறுதலாற்<br>பெருகமல்கும் புகழ்பேணுந்<br>தொண்டர்க்கிசை யார்தமிழ்<br>விரகன்சொன்ன இவைபாடி<br>யாடக்கெடும் வினைகளே. | கரிய கடல் அலைகளின் ஓதநீர் நிறைந்த காழிப்பதியுள், பாம்பணிந்தவராய் விளங்கும் சடைகளை உடைய அடிகளின் அருளை உணர்ந்து ஓதுதலால் புகழ் பெருக வாழ்ந்து அன்பு செய்யும் தொண்டர்கள் தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தன் சொன்ன இப்பதிகப் பாடல்களைப் பாடி ஆட அவர்களுடைய பாவங்கள் கெடும். |

## 114. திருக்கேதாரம்

பண் : செவ்வழி (வடநாட்டு தேவாரத்தலம்) பதிக எண் : 114

| | | |
|---|---|---|
| 2703. | தொண்டரஞ்சு களிறும்<br>அடக்கிச் சுரும்பார்மலர்<br>இண்டைகட்டி வழிபாடு<br>செய்யு மிடமென்பரால்<br>வண்டுபாட மயிலால<br>மான்கன்று துள்ளவரிக்<br>கெண்டைபாயச் சுனைநீல<br>மொட்டலருங் கேதாரமே. | அடியவர் ஐம்புலக்களிறுகளையும் அடக்கி ஆண்டு, நாண்மலர்களைக் கொண்டு இண்டைகட்டிச் சார்த்தி வழிபாடு செய்யுமிடம், வண்டுகள் பாடவும், மயில்கள் ஆர்ப்பரிக்கவும், மான் கன்றுகள் துள்ளவும், சுனைகளில் கெண்டைகள் பாய்வதால் நீலமலர் மொட்டுக்கள் அலரவும் விளங்கும் திருக்கேதாரமாகும். |

| | |
|---|---|
| **2704.** பாதம்விண்ணோர் பலரும்<br>பரவிப் பணிந்தேத்தவே<br>வேதநான்கும் பதினெட்டொ<br>டாறும் விரித்தார்க்கிடம்<br>தாதுவிண்ட மதுவுண்டு<br>மிண்டிவரு வண்டினம்<br>கீதம்பாட மடமந்தி<br>கேட்டுகளுங் கேதாரமே. | விண்ணோர் பலரும் பாதம் பரவித் தொழ நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் பதினெண் புராணங்களையும் விரித்துரைத்த சிவபிரானுக்கு இடம், மலரின் மது உண்ட வண்டுகள் கீதம்பாட மந்திகள் கேட்டு மகிழும் திருக்கேதாரமாகும். |
| **2705.** முந்திவந்து புரோதாய<br>மூழ்கி முனிகள்பலர்<br>எந்தைபெம்மா னெனநின்றி<br>றைஞ்சும் மிடமென்பரால்<br>மந்திபாயச் சரேலச்<br>சொரிந்தும் முரிந்துக்கபூக்<br>கெந்தநாறக் கிளருஞ்<br>சடையெந்தை கேதாரமே. | முனிவர்கள் உதயத்துக்கு முன் எழுந்து நீராடி எந்தைபெருமான் என இறைஞ்சச் சடாதாரியான சிவபிரானுக்குரிய இடம், மந்திகள் பாய்தலால் சரேலெனத் தேனைச் சொரிந்து முரிந்து வீழ்ந்த மலர்களின் மணங்கமழும் திருக்கேதாரமாகும். |
| **2706.** உள்ளமிக்கார் குதிரைம்<br>முகத்தார் ஒருகாலர்கள்<br>எள்க–ல்லா இமையோர்கள்<br>சேரும் மிடமென்பரால்<br>பிள்ளைதுள்ளிக் கிள்ளைபயில்வ<br>கேட்டுப் பிரியாதுபோய்க்<br>கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து<br>வாய்ப்பெய்யுங் கேதாரமே. | தியான பலம் உடையோரும், குதிரை முகமுடைய கின்னரரும், ஒற்றைக் காலுடைய பிரமதகணத்தவரும் இமையவரும் சிவபிரானை வழிபடக் கூடுமிடம், தம் குஞ்சுகள் பசியோடு தம்மை அழைப்பதைக் கேட்டுக் கிளிகள் ஏனற் கதிர்களைக் கொய்து வந்து அவற்றின் வாயிற் பெய்யும் திருக்கேதாரமாகும். |
| **2707.** ஊழியூழி யுணர்வார்கள்<br>வேதத்தினொண் பொருள்களால்<br>வாழியெந்தை யெனவந்தி<br>றைஞ்சும் இடமென்பரால்<br>மேழிதாங்கி யுழுவார்கள்<br>போலவ்விரை தேரிய<br>கேழல்பூழ்தி கிளைக்க<br>மணிசிந்துங் கேதாரமே. | பல்லூழிக்காலம் வேதப் பொருள்களை உணரும் அடியவர் சிவபெருமானை வாழ்த்தி இறைஞ்சிச் சேரும் இடம், உணவு பெற விரும்பிக் கலப்பையால் உழுவார்க்கு அந்நிலத்தில் மாணிக்கமணிகள் கிடைக்கும் திருக்கேதாரமாகும். |

| | | |
|---|---|---|
| 2708. | நீறுபூசி நிலத்துண்டு<br>நீர்மூழ்கி நீள்வரைதன்மேல்<br>தேறுசிந்தை யுடையார்கள்<br>சேரும் இடமென்பரால்<br>ஏறிமாவின் கனியும்பலா<br>வின்இருஞ் சுளைகளும்<br>கீறிநாளும் முசுக்கிளையோ<br>டுண்டுகளுங் கேதாரமே. | நீரில் மூழ்கித் திருநீற்றை அணிந்து, நிலத்திடை உண்டு, நீண்ட மலையின்மேல் தெளிந்த சிந்தை உடையவர்களான தாபதர்கள் வாழும் இடம், குரங்குகள் மா, பலா மரங்களில் ஏறி அவற்றின் கனிகளைக் கீறி உண்டு மகிழ்ந்து வாழும் திருக்கேதாரமாகும். |
| 2709. | மடந்தைபாகத் தடக்கிம்<br>மறையோதி வானோர்தொழத்<br>தொடர்ந்தநம்மேல் வினைதீர்க்க<br>நின்றார்க் கிடமென்பரால்<br>உடைந்தகாற்றுக் குயர்வேங்கை<br>பூத்துதிரக்கல் லறைகண்மேல்<br>கிடந்தவேங்கை சினமாமுகஞ்<br>செய்யுங் கேதாரமே. | சிவபிரான் வானோர் தொழுமாறு மறை ஓதியும், மங்கை பங்கராகியும், வேதாகமங்களை அருளியும், அடியவர் வினைகளைத் தீர்த்தற்கு எழுந்தருளி விளங்கும் இடம், காற்றடிக்கப் பூத்த வேங்கை மலர்கள் பாறைகளின் மேல் உதிர்ந்து கிடந்து பு–யென மற்ற பு–களை மருள்விக்கும் திருக்கேதாரமாகும். |
| 2710. | அரவமுந்நீர் அணியிலங்கைக்<br>கோனையரு வரைதனால்<br>வெருவவூன்றி விரலா<br>லடர்த்தார்க் கிடமென்பரால்<br>குரவங்கோங்கங் குளிர்பிண்டி<br>ஞாழல்சுர புன்னைமேல்<br>கிரமமாக வரிவண்டு<br>பண்செய்யுங் கேதாரமே. | கடல்சூழ்ந்த இலங்கை மன்னன் இராவணன் கயிலை மலையைப் பெயர்த்த போது அம்மலைக்கீழ் அகப்படுத்திக் கால்விரலை ஊன்றி அடர்த்த இறைவனுக்கு இடம், குரவம், கோங்கு, அசோகு, ஞாழல், சுரபுன்னை ஆகிய மரங்களில் பூத்த மலர்களில் முறையாக வண்டு பண்செய்து தேனுண்ணும் கேதாரமாகும். |
| 2711. | ஆழ்ந்துகாணா ருயர்ந்தெய்த<br>கில்லார் அலமந்தவர்<br>தாழ்ந்துதந்தம் முடிசாய<br>நின்றார்க் கிடமென்பரால்<br>வீழ்ந்துசெற்றுந் நிழற்கிரங்கும்<br>வேழத்தின்வெண் மருப்பினைக்<br>கீழ்ந்துசிங்கங் குருகுண்ண<br>முத்துதிருங் கேதாரமே. | பன்றியுருக் கொண்டு மண் இடந்தும் காணாத திருமாலும், அன்னப்புள்ளாய் விண் பறந்தும் காணாத பிரமனும் தாழ்ந்து தம் முடிசாய்த்து வணங்க நின்றவனாகிய சிவபிரானுக்கு உரிய இடம், சிங்கம் யானை மேல் வீழ்ந்து அழித்து அதன் மருப்பைப் பிளந்து குருத்தை உண்ணும்போது முத்துக்கள் மருப்பி–ருந்து உதிரும் கேதாரமாகும். |

| | | |
|---|---|---|
| 2712. | கடுக்கள்தின்று கழிமீன்<br>கவர்வார்கண் மாசுடம்பினர்<br>இடுக்கணுய்ப்பா ரவரெய்த<br>வொண்ணா விடமென்பரால்<br>அடுக்கநின்றவ் வறவுரைகள்<br>கேட்டாங் கவர்வினைகளைக்<br>கெடுக்கநின்ற பெருமான்<br>உறைகின்ற கேதாரமே. | துவர்க்காய்களைத் தின்று கழிமீன்களை யாரும் அறியாமல் கவர்ந்து உண்பவரும், மாசு பொருந்திய உடலினரும் மக்களைத் துன்பநெறியில் செலுத்துவோருமாகிய சமணர்கள் சாராத இடம், அருகில் இருந்து அறநெறியான வார்த்தைகளைக் கேட்டு அடியவர் வினைகளைக் கெடுக்கும் பெருமான் உறையும் கேதாரமாகும். |
| 2713. | வாய்ந்தசெந்நெல் விளைகழனி<br>மல்கும்வயற் காழியான்<br>ஏய்ந்தநீர்க்கோட் டிமையோர்<br>உறைகின்ற கேதாரத்தை<br>ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள்<br>பத்தும்மிசை வல்லவர்<br>வேந்தராகி யுலகாண்டு<br>வீடுகதி பெறுவரே. | வயல்வளம் உடைய காழிநகரில் தோன்றிய ஞானசம்பந்தன், நீர் அருவிகளை உடையதும், இமையோர்கள் உறைவதுமாகிய கேதாரத்து இறைவர் மீது ஆய்ந்து சொன்ன அருந்தமிழ் பத்தையும் இசையோடு பாடி வழிபட வல்லவர் வேந்தராய் உலகை ஆண்டு முடிவில் வீடுகதி பெறுவார்கள். |

## 115. திருப்புகலூர்

பண் : செவ்வழி | பதிக எண் : 115

| | | |
|---|---|---|
| 2714. | வெங்கள்விம்மு குழலிளைய<br>ராடவ்வெறி விரவுநீர்ப்<br>பொங்குசெங்கட் கருங்கயல்கள்<br>பாயும்புக லூர்தனுள்<br>திங்கள்சூடித் திரிபுரம்ஓர்<br>அம்பால்எரி யூட்டிய<br>எங்கள்பெம்மான் அடிபரவ<br>நாளும்இடர் கழியுமே. | விரும்பத்தக்க தேன் விம்மும் மலர்கள் கூடிய கூந்தலினராகிய இளம்பெண்கள் ஆட, மணம் விரவும் நீர்நிலையில் வாழும் செம்மைமிக்க கண்களை உடைய கரிய கயல்மீன்கள் துள்ளிப் பாயும் புகலூரில் விளங்கும் திங்கள் சூடித் திரிபுரங்களை ஓரம்பால் எரியூட்டிய எங்கள் பெருமான் திருவடிகளைப் பரவ இடர் கெடும். |
| 2715. | வாழ்ந்தநாளும் இனிவாழு<br>நாளும்இவை யறிதிரேல்<br>வீழ்ந்தநாளெம் பெருமானை<br>யேத்தாவிதி யில்லிகாள்<br>போழ்ந்ததிங்கட் புரிசடையி<br>னான்றன் புகலூரையே<br>சூழ்ந்தவுள்ளம் முடையீர்கள்<br>உங்கள்துயர் தீருமே. | இதுவரை வாழ்ந்த நாளையும் இனி வாழும் நாளையும் அறிவீரேயானால் எம்பெருமானை ஏத்தாத நாள்கள் வீழ்ந்த நாட்கள் என்றறிந்தும், எம்பெருமானை ஏத்தும் நல்லூழாகிய விதி இல்லாதவர்களே! பிறை மதிசூடிய சடையினான்தன் புகலூரை மறவாது நினையும் உள்ளம் உடையீர்களாயின் உங்கள் துயர் தீரும். |

| | | |
|---|---|---|
| 2716. | மடையின்நெய்தல் கருங்குவளை<br>செய்யமலர்த் தாமரை<br>புடைகொள்செந்நெல் விளைகழனி<br>மல்கும்புக லூர்தனுள்<br>தொடைகொள்கொன்றை புனைந்தானொர்<br>பாகம்மதி சூடியை<br>அடையவல்லவர் அமருலகம்<br>ஆளப்பெறு வார்களே. | மடைகளில் நெய்தல், குவளை, செந்தாமரை மலர் ஆகியன விளங்க, அருகில் செந்நெல் விளையும் வயல்களை உடைய புகலூரில் தன்பாகத்தே கொன்றை மாலை சூடி மதிபுனைந்து உமையோடு விளங்கும் சிவபிரானை அடைய வல்லவர் அமருலகு ஆள்வர். |
| 2717. | பூவுநீரும் ப–யுஞ்<br>சுமந்து புகலூரையே<br>நாவினாலே நவின்றேத்த<br>லோவார்செவித் துளைகளால்<br>யாவுங்கேளார் அவன்பெருமை<br>யல்லால்அடி யார்கடாம்<br>ஓவும்நாளும் உணர்வொழிந்த<br>நாளென் றுள்ளங்கொள்ளவே. | பூவும், நீரும், நிவேதனப் பொருள்களும் எடுத்து வந்து புகலூரை அடைந்து, அங்குள்ள பெருமானை நாவினால் நவின்று, ஏத்த வல்லவராய், செவிகளால் அவன் பெருமையல்லால் யாதும் கேளாதவராய்த் தொண்டுபூண்ட அடியவர்களே இறைவனை நினைதல் பேசுதல் இல்லாத நாள்களைப் பயனின்றிக் கழிந்த நாள் என்றும் உணர்வு ஒழிந்த நாள் என்றும் கருதுவர். |
| 2718. | அன்னங்கன்னிப் பெடைபுல்கி<br>யொல்கியணி நடையவாய்ப்<br>பொன்னங்காஞ்சி மலர்ச்சின்ன<br>மாலும்புக லூர்தனுள்<br>முன்னம்மூன்று மதிலெரித்த<br>மூர்த்திதிறங் கருதுங்கால்<br>இன்னரென்னப் பெரிதரியர்<br>ஏத்தச் சிறிதெளியரே. | அன்னங்கள் கன்னிப் பெடைகளைத் தழுவி ஒதுங்கி அழகிய நடையினவாய்ப் பொன்போன்று அலரும் காஞ்சி மரங்களின் நிழ–ல் ஆரவாரிக்கும் புகலூரில், முன்நாளில் முப்புரங்களை எரித்த மூர்த்தியின் இயல்புகளைக் கருதுமிடத்து இத்தகையவர் என்னப் பெரிதும் அரியராய் அடியார்கள் ஏத்த மிக எளியவர் ஆவர். |
| 2719. | குலவராகக் குலமிலரும்<br>மாகக்குணம் புகழுங்கால்<br>உலகினல்ல கதிபெறுவ<br>ரேனும்மலர் ஊறுதேன்<br>புலவமெல்லாம் வெறிகமழும்<br>அந்தண்புக லூர்தனுள்<br>நிலவமல்கு சடையடிகள்<br>பாதம் நினைவார்களே. | உயர் குலத்தினராயினும் அல்லாதவ ராயினும் அவருடைய குணங்களைப் புகழுமிடத்து அவர் நற்கதி பெறுவர். ஆத–ன், அடியவர்கள் மலர்களில் விளைந்த தேனால், புலால் நாறும் இடங்களிலும் மணம் வீசுகின்ற, அழகிய புகலூரில் பிறையணிந்த சடையுடைய அடிகளின் திருவடிகளையே நினைவார்கள். |

| | | |
|---|---|---|
| 2720. | ஆணும்பெண்ணும் மெனநிற்ப<br>ரேனும்அர வாரமாப்<br>பூணுமேனும் புகலூர்தனக்<br>கோர்பொரு ளாயினான்<br>ஊணும்ஊரார் இடுபிச்சை<br>யேற்றுண்டுடை கோவணம்<br>பேணுமேனும் பிரானென்ப<br>ரால்எம்பெரு மானையே. | புகலூரைத் தமக்குரிய இடமாகக் கொண்ட இறைவர் ஆணும் பெண்ணுமான வடிவுடையரேனும், பாம்புகளை உடல் முழுதும் அணிகலன்களாகப் பூண்பவ ரேனும், ஊரார் இடும் பிச்சையை ஏற்று உண்பவரேனும், கோவணம் ஒன்றையே உடையாகக் கொண்டவரேனும், அடியவர் அவரையே பிரான் என்பர். |
| 2721. | உய்யவேண்டில் எழுபோத<br>நெஞ்சேயுயர் இலங்கைக்கோன்<br>கைகளொல்கக் கருவரை<br>யெடுத்தானை யோர்விர–னால்<br>செய்கைதோன்றச் சிதைத்தருள<br>வல்லசிவன் மேயபூம்<br>பொய்கைசூழ்ந்த புகலூர்<br>புகழப் பொருளாகுமே. | நெஞ்சே! உய்தி பெற வேண்டில் எழுக, போதுக: உயரிய இலங்கைக்கு அரசனாகிய இராவணனை, கைகளால் கயிலை மலையைப் பெயர்த்தவனை ஓர் விரலால் தன் வன்மை தோன்றச் சிதைத்து அருளவல்ல சிவன் மேவிய, பூம் பொய்கை சூழ்ந்த புகலூரைப் புகழ்ந்து போற்ற அதுவே அடைதற்குரிய மெய்ப்பொருள் ஆகும். |
| 2722. | நேமியானும் முகநான்<br>குடையந்நெறி யண்ணலும்<br>ஆமிதென்று தகைந்தேத்தப்<br>போயாரழ லாயினான்<br>சாமிதாதை சரணாகு<br>மென்றுதலை சாய்மினோ<br>பூமியெல்லாம் புகழ்செல்வம்<br>மல்கும் புகலூரையே. | சக்கராயுதம் உடைய திருமாலும், நான்முகனும் இதுவே ஏற்ற வழி எனக் கூறுபடுத்திப் பன்றியாயும் அன்னமாயும் வடிவு கொண்டு தேட அழலுரு ஆனவனும் முருகனின் தந்தையும் ஆகிய புகலூர்ப் பெருமானே நாம் சரண் அடைதற்குரியவன் ஆவன் என்று தலைதாழ்த்தி வணங்குமின். உலகம் புகழும் செல்வமும் நலமும் நிறையும். |
| 2723. | வேர்த்தமெய்யர் உருவத்<br>துடைவிட் டுழல்வார்களும்<br>போர்த்தகூறைப் போதிநீழ<br>லாரும் புகலூர்தனுள்<br>தீர்த்தமெல்லாஞ் சடைக்கரந்த<br>தேவன்திறங் கருதுங்கால்<br>ஓர்த்துமெய்யென் றுணராது<br>பாதந்தொழு துய்ம்மினே. | வியர்வை தோன்றிய உட–னோரும், உட–ல் உடையின்றித் திரிபவரும், ஆடையைப் போர்த்திக் கொண்டு அரச மரநிழ–ல் உறைவாரும் ஆகிய சமணரும் புத்தரும் கூறும் நெறிகளை விடுத்து, புகலூரில் கங்கைசூடிய பெருமான் திருவடிகளைக் கருதி வழிபடுமிடத்து அவனுடைய இயல்புகளை ஆராய முற்படாமல் அவன் திருவடிகளை வணங்கி உய்மின். |

2724. புந்தியார்ந்த பெரியோர்கள்
ஏத்தும் புகலூர்தனுள்
வெந்தசாம்பற் பொடிப்பூச
வல்லவிடை யூர்தியை
அந்தமில்லா அனலாட
லானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடி
யாடக்கெடும் பாவமே.

அறிவார்ந்த பெரியோர்கள் ஏத்தும் புகலூரில் நன்கு வெந்த திருநீற்றுப் பொடியைப் பூசவல்லவனும், விடையூர்தியனும், அழிவற்ற அன–ல் நின்று ஆடுபவனும் ஆகிய பெருமானை ஞானசம்பந்தன் சொன்ன இத்தமிழ் மாலையைப் பாடி, ஆடிப் போற்ற, பாவம் கெடும்.

## 116. திருநாகைக்காரோணம்

பண் : செவ்வழி

பதிக எண் : 116

2725. கூனல்திங்கட் குறுங்கண்ணி
கான்றந்நெடு வெண்ணிலா
ஏனற்பூத்தம் மராங்கோதை
யோடும்விரா வுஞ்சடை
வானநாடன் அமரர்பெரு
மாற்கிட மாவது
கானல்வே– கழிசூழ்
கடல்நாகைக் காரோணமே.

வளைந்த பிறையாகிய சிறிய தலைமாலை, ஒளி உமிழும் வெண்ணிலவில் குறிஞ்சி நிலத்தில் தினைக்கொல்லையில் பூத்த கடம்பமலர்மாலை ஆகியவற்றைப் புனைந்த சடையை உடைய வானநாடனும், அமரர் பெருமானும் ஆகிய இறைவற்கு இடமாவது சோலைகளை வே–யாகக் கொண்டதும் உப்பங்கழிகளை உடையதுமாகிய கடல்நாகைக் காரோணமாகும்.

2726. விலங்கலொன்று சிலையாமதில்
மூன்றுடன் வீட்டினான்
இலங்குகண்டத் தெழிலாமை
பூண்டாற் கிடமாவது
மலங்கியோங்கிவ் வருவெண்டிரை
மல்கிய மால்கடல்
கலங்கலோதங் கழிசூழ்
கடல்நாகைக் காரோணமே.

மேருமலை ஒன்றை வில்லாகக் கொண்டு மும்மதில்களை அழித்தவனும் அழகிய கழுத்தில் ஆமை ஓட்டைப் பூண்டவனும் ஆகிய இறைவனுக்கு இடம், கலங்கி ஓங்கி வரும் வெண் திரைகளை உடைய கட–ன் கரையில் கலங்கிய நீர்ப்பெருக்கோடு கூடிய கழிகள் சூழ்ந்த கடல் நாகைக்காரோணமாகும்.

2727. வெறிகொளாருங் கடற்கைதை
நெய்தல்விரி பூம்பொழில்
முறிகொண்ஞாழல் முடப்புன்னை
முல்லைமுகை வெண்மலர்
நறைகொள்கொன்றைந் நயந்தோங்கு
நாதற் கிடமாவது
கறைகொளோதங் கழிசூழ்
கடல்நாகைக் காரோணமே.

தளிர்களோடு கூடிய ஞாழல்மலர், வளைந்த புன்னை மரத்தில் பூத்தமலர்கள், வெள்ளிய முல்லையரும்புகள், தேன் நிறைந்த கொன்றைமலர் ஆகியவற்றை விரும்பி அணியும் பெருமானுக்கு இடம், மணம் கமழும் தாழைமலர், நெய்தல்மலர் ஆகியவை நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட கரிய ஓதம் பரவி விளங்கும் கடல் நாகைக்காரோணமாகும்.

| | | |
|---|---|---|
| 2728. | வண்டுபாட வளர்கொன்றை<br>மாலைமதி யோடுடன்<br>கொண்டகோலங் குளிர்கங்கை<br>தங்குங்குருள் குஞ்சியுள்<br>உண்டுபோலும் மெனவைத்து<br>கந்தவொரு வற்கிடம்<br>கண்டல்வே– கழிசூழ்<br>கடல்நாகைக் காரோணமே. | வண்டுகள் பாடுமாறு மலர்ந்த கொன்றை மலர் மாலையை இளம்பிறையோடு ஒருசேர அணிந்து, சுருண்ட சடையுள் குளிர்ந்த கங்கையை ஐயப்படுமாறு மறைத்துவைத்து மகிழ்ந்த இறைவனுக்கு இடம், தாழை வே– சூழ்ந்ததும் உப்பங்கழிகள் நிறைந்ததும் ஆகிய கடல் நாகைக்காரோணமாகும். |
| 2729. | வார்கொள்கோலம் முலைமங்கை<br>நல்லார்மகிழ்ந் தேத்தவே<br>நீர்கொள்கோலச் சடைநெடு<br>வெண்திங்கள் நிகழ்வெய்தவே<br>போர்கொள்சூலப் படைபுல்கு<br>கையார்க் கிடமாவது<br>கார்கொளோதங் கழிசூழ்<br>கடல்நாகைக் காரோணமே. | நல்லவர் மகிழ்ந்தேத்த, கச்சணிந்த தனங்களை உடைய உமையம்மையோடு கூடிய அழகோடு, தண்மையான அழகிய சடையில் நீண்ட நிலாக்கதிர்களைப் பரப்பும் இளம்பிறை விளங்கப் போருடற்றும் சூலப்படையைக் கையின்கண் கொண்டு விளங்கும் சிவபிரானுக்குரிய இடம் ஓதம் பெருகும் கரிய கழிகள் சூழ்ந்த கடல் நாகைக் காரோணமாகும். |
| 2730. | விடையதேறிவ் விடவர<br>வசைத்தவ் விகிர்தரவர்<br>படைகொள்பூதம் பலபாட<br>ஆடும்பர மரவர்<br>உடைகொள்வேங்கை யுரிதோ<br>லுடையார்க் கிடமாவது<br>கடை கொள்செல்வங் கழிசூழ்<br>கடல்நாகைக் காரோணமே. | விடைமீது ஏறி வருபவனும், விடம்பொருந்திய பாம்பை இடையில் கட்டிய விகிர்தனும், பூதப்படைகள் பாட ஆடும் பரமனும், பு–த்தோலை உடையாக உடுத்தவனும் ஆகிய சிவபெருமானுக் குரிய இடம், மீன்களாகிய செல்வங்கள் நிறைந்த கழிசூழ்ந்த கடல்நாகைக் காரோணமாகும். |
| 2731. | பொய்துவாழ்வார் மனம்பாழ்<br>படுக்கும் மலர்ப்பூசனை<br>செய்துவாழ்வார் சிவன்சேவடிக்கே<br>செலுஞ் சிந்தையார்<br>எய்தவாழ்வார் எழில்நக்க<br>ரெம்மாற் கிடமாவது<br>கைதல்வே– கழிசூழ்<br>கடல்நாகைக் காரோணமே. | மனத்தைப் பாழ்படுத்தி வாழும் பொய்ம்மை வாழ்வுடையாரும் சிவன் சேவடிக்கே செல்லும் சிந்தையராய் மலர் தூவிப் பூசனை செய்து வாழ் அடியவரும் தம்மை எய்தவாழ்வாராகிய அழகிய பெருமானுக்கு இடம், தாழை வே–யையும் உப்பங் கழிகளையும் உடைய கடல் நாகைக் காரோணமாகும். |

| | | |
|---|---|---|
| 2732. | பத்திரட்டி திரடோ<br>ளுடையான் முடிபத்திற<br>வத்திரட்டி விரலா<br>லடர்த்தார்க் கிடமாவது<br>மைத்திரட்டிவ் வருவெண்டிரை<br>மல்கிய மால்கடல்<br>கத்திரட்டுங் கழிசூழ்<br>கடனாகைக் காரோணமே. | இருபது தோள்களை உடைய இராவணனுடைய பத்துத் தலைகளும் நெரியச் சிவந்த கால் விரல்களால் அடர்த்த பெருமானுக்குரிய இடம், கரிய மணலைத் திரட்டி வரும் வெண்திரைகளை உடைய பெரிய கடலைச் சூழ்ந்துள்ள கழிகள் ஒளி சிறந்து ஒ–யெழுப்பும் கடல் நாகைக் காரோணமாகும். |
| 2733. | நல்லபோதில் லுறைவானு<br>மாலுந் நடுக்கத்தினால்<br>அல்லராவ ரெனநின்ற<br>பெம்மாற் கிடமாவது<br>மல்லலோங்கிவ் வருவெண்டிரை<br>மல்கிய மால்கடல்<br>கல்லலோதங் கழிசூழ்<br>கடனாகைக் காரோணமே. | நல்ல தாமரை மலரில் உறையும் நான்முகனும், திருமாலும் நடுக்கத்தால் இவரே சிவப்பரஞ்சுடர் எனவும் அல்லர் எனவும் ஐயுற நின்ற பெருமானுக்குரிய இடம், வளமோங்கிவரும் வெள்ளிய அலைகள் நிரம்பிய பெரிய கட–னது ஒ–க்கும் ஓதங்களையுடைய கழிகள் சூழ்ந்த கடல் நாகைக்காரோணமாகும்.<br>புண்டரீக முனிவரைக் காயமாகிய உடலோடு ஆரோகணம் செய்து கொண்டமையால் காயாரோகணம் எனப்படுகிறது. |
| 2734. | உயர்ந்தபோதின் னுருவத்<br>துடைவிட் டுழல்வார்களும்<br>பெயர்ந்தமண்டை யிடுபிண்ட<br>மாவுண் டுழல்வார்களும்<br>நயந்துகாணா வகைநின்ற<br>நாதர்க் கிடமாவது<br>கயங்கொளோதங் கழிசூழ்<br>கடல்நாகைக் காரோணமே. | தாமரை மலர் போன்ற சிவந்த கல்லாடையை உடுத்தவர்களும் உடையின்றித் திரிபவர்களும் கையில் ஏந்திய மண்டையில் பிறர் இடும் பிச்சையை உணவாகக் கொண்டு உழல்பவரும் ஆகிய புத்தர்களும் சமணர்களும் விரும்பிக் காணாதவாறு நின்ற பெருமானுக்கு உரிய இடம் ஆழமும் நீர்ப் பெருக்கும் உடைய கழிகள் சூழ்ந்து விளங்கும் கடல்நாகைக் காரோணமாகும். |
| 2735. | மல்குதண்பூம் புனல்வாய்ந்<br>தொழுகும்வயற் காழியான்<br>நல்லகேள்வித் தமிழ்ஞான<br>சம்பந்தன்நல் லார்கள்முன்<br>வல்லவாறே புனைந்தேத்துங்<br>காரோணத்து வண்தமிழ்<br>சொல்லுவார்க்கும் இவைகேட்ப<br>வர்க்குந்துய ரில்லையே. | நீர்நிறைந்த வயல்களால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றியவரும் நல்ல கேள்வியை உடையவரும் ஆகிய தமிழ் ஞானசம்பந்தர் நல்லோர்கள்முன் வல்லவாறு பாடிய காரோணத்துத் திருப்பதிகமாகிய இவ்வண்தமிழைச் சொல்பவர்கட்கும் கேட்பவர்கட்கும் துன்பம் இல்லை. |

## 117. திருவிரும்பைமாகாளம்

**(ஊர் –இரும்பை; கோயில் – மாகாளம்)**

பண் : செவ்வழி

பதிக எண் : 117

| | | |
|---|---|---|
| 2736. | மண்டுகங்கை சடையிற்<br>கரந்தும் மதிசூடிமான்<br>கொண்டகையாற் புரமூன்<br>றெரித்த குழகன்னிடம்<br>எண்டிசையும் புகழ்போய்<br>விளங்கும் இரும்பைதனுள்<br>வண்டுகீதம் முரல்பொழில்<br>சுலாய்நின்ற மாகாளமே. | கங்கையைச் சடையில் கரந்து, பிறைமதியைச் சூடி, மான் ஏந்திய கையால் கணைதொடுத்து முப்புரங்களை எரித்த குழகனது இடம், எண்திசையும் புகழ்பெற்று விளங்கும் திருஇரும்பை நகரில் உள்ளதும் வண்டுகள் இசைபாடி முரலும் பொழில் சூழ்ந்து விளங்குவதுமாகிய திரு மாகாளமாகும். |
| 2737. | வேதவித்தாய் வெள்ளைநீறு<br>பூசி வினையாயின<br>கோதுவித்தா நீறெழக்<br>கொடிமா மதிலாயின<br>ஏதவித்தா யினதீர்க்<br>கும்மிடம் இரும்பைதனுள்<br>மாதவத்தோர் மறையோர்<br>தொழநின்ற மாகாளமே. | வேதவித்தாய், வெண்ணீறுபூசி, வினைகள் யாவற்றையும் அழித்து, கொடிய திரிபுரங்களை நீறெழச் செய்து, குற்றங்களுக்கு விதையானவற்றைத் தீர்த்து, அருள்புரியும் சிவபிரானது இடம், திருஇரும்பை நகரில் உள்ளதும், மாதவத் தோரும் மறையோரும் தொழ நின்றதுமான திருமாகாளமாகும். |
| 2738. | வெந்தநீறும் எலும்பும்<br>அணிந்த விடையூர்தியான்<br>எந்தைபெம்மா னிடம்எழில்<br>கொள்சோலை யிரும்பைதனுள்<br>கந்தமாய பலவின்<br>கனிகள் கமழும்பொழில்<br>மந்தியேறிக் கொணர்ந்துண்<br>டுகள்கின்ற மாகாளமே. | திருவெண் ணீற்றையும், எலும்பையும் அணிந்தவனும், விடைஊர்தியனும், எந்தையும், தலைவனுமாகிய இறைவனது இடம், அழகிய சோலைகள் சூழ்ந்ததும் மணம் கமழும் பலாக்கனிகளை மந்திகள் ஏறிப் பறித்து உண்டு திரியும் பொழில்கள் சூழ்ந்ததுமாகிய திருஇரும்பை நகரில் உள்ள திருமாகாளம் ஆகும். |
| 2739. | நஞ்சுகண்டத் தடக்கி<br>நடுங்கும் மலையான்மகள்<br>அஞ்சவேழம் உரித்த<br>பெருமான் அமரும்மிடம்<br>எஞ்ச–ல்லாப் புகழ்போய்<br>விளங்கும் இரும்பைதனுள்<br>மஞ்சிலோங்கும் பொழில்சூழ்ந்<br>தழகாய மாகாளமே. | நஞ்சைக் கண்டத்தில் அடக்கியவரும், மலைமகள் அஞ்சி நடுங்க யானையை உரித்தவருமான பெருமான் அமரும் இடம், குன்றாத புகழ் விளங்கும் திருஇரும்பை நகரில் உள்ளதும் மேகங்கள் தோயும் பொழில்கள் சூழ்ந்ததுமாகிய அழகிய திருமாகாளமாகும். |

| | | |
|---|---|---|
| 2740. | பூசுமாசில் பொடியான்<br>விடையான் பொருப்பான்மகள்<br>கூசவானை யுரித்தபெரு<br>மான்குறை வெண்மதி<br>ஈசனெங்கள் இறைவன்<br>னிடம்போல் இரும்பைதனுள்<br>மாசிலோர்கண் மலர்கொண்<br>டணிகின்ற மாகாளமே. | குற்றமற்ற திருநீற்றுப் பொடியைப் பூசியவனும், விடையூர்தியனும், மலைமகள் கூசுமாறு யானையை உரித்த பெருமானும், பிறைமதி சூடிய ஈசனும் ஆகிய எங்கள் இறைவனது இடம், திரு இரும்பையில் உள்ளதும், அடியவர் மலர் கொண்டு அணிவித்து மகிழ்வதுமாகிய திருமாகாளம் ஆகும். |
| 2741. | குறைவதாய குளிர்திங்கள்<br>சூடிக் குனித்தான்வினை<br>பறைவதாக்கும் பரமன்<br>பகவன் பரந்தசடை<br>இறைவனெங்கள் பெருமான்<br>இடம்போல் இரும்பைதனுள்<br>மறைகள்வல்லார் வணங்கித்<br>தொழுகின்ற மாகாளமே. | கலைகள் குறைந்த பிறைமதியைச் சூடிக் கூத்தாடியவரும், வினைகளை அழிக்கும் பரமரும், தூயதான ஆறு குணங்களை உடையவரும், பரவலான சடைகளை உடைய இறைவரும், எங்கள் பெருமானுமாகிய இறைவரது இடம் திரு இரும்பை நகரில் வேத வித்துக்கள் வழிபடும் திருமாகாளமாகும். |
| 2742. | பொங்குசெங்கண் அரவும்<br>மதியும் புரிபுன்சடைத்<br>தங்கவைத்த பெருமானென<br>நின்றவர் தாழ்விடம்<br>எங்குமிச்சை யமர்ந்தான்<br>இடம்போல் இரும்பைதனுள்<br>மல்குல்தோயும் பொழில்சூழ்ந்<br>தழகாய மாகாளமே. | சடையில் பாம்பையும் பிறையையும் பகை நீக்கித் தங்க வைத்த பெருமானும், எவ்விடத்தும் விருப்போடு எழுந்தருளி விளங்குபவனுமாகிய இறைவனது இடம் திருஇரும்பையூரில் வானளாவிய பொழில்கள் சூழ்ந்து விளங்கும் திருமாகாளம் ஆகும். |
| 2743. | நட்டத்தோடு நரியாடு<br>கானத்தெரி யாடுவான்<br>அட்டமூர்த்தி யழல்போ<br>லுருவான் அழகாகவே<br>இட்டமாக இருக்கும்<br>இடம்போல் இரும்பைதனுள்<br>வட்டஞ்சூழ்ந்து பணிவார்<br>பிணிதீர்க்கும் மாகாளமே. | நரிகள் விளையாடும் இடுகாட்டில் எரியேந்தி நடனம் புரிபவரும், அட்டமூர்த்தி வடிவினரும், அழல் உருவினரும் ஆகிய இறைவர் விருப்போடு எழுந்தருளிய இடம் திருஇரும்பை நகரில் உள்ளதும் வலம் வந்து தொழுவார் பிணிகளைத் தீர்ப்பதுமாகிய திருமாகாளமாகும். |

| | | |
|---|---|---|
| 2744. | அட்டகாலன் றனைவவ்<br>வினான்அவ் வரக்கன்முடி<br>எட்டுமற்றும் மிருபத்திரண்<br>டும்இற வூன்றினான்<br>இட்டமாக விருப்பா<br>னவன்போல இரும்பைதனுள்<br>மட்டுவார்ந்த பொழில்சூழ்ந்<br>தெழிலாரும் மாகாளமே. | மார்க்கண்டேயரோடு போராடிய காலனுயிரைக் கவர்ந்தவரும், இராவணன் பத்துத் தலைகளும் இருபது தோள்களும் நெரியுமாறு திருவடியை ஊன்றியவரும் ஆகிய சிவபிரான் இட்டமாக இருக்குமிடம் திருஇரும்பை நகரில் விளங்குவதும் தேனார்ந்த பொழில் சூழ்ந்துள்ளதுமான திருமாகாளமாகும். |
| 2745. | அரவமார்த்தன் றனலங்கை<br>யேந்தி யடியும்முடி<br>பிரமன்மாலும் அறியாமை<br>நின்ற பெரியோனிடம்<br>குரவமாரும் பொழிற்குயில்கள்<br>சேரும் இரும்பைதனுள்<br>மருவிவானோர் மறையோர்<br>தொழுகின்ற மாகாளமே. | பாம்பைத் தம் இடையில் கட்டிக் கொண்டு, அனலை அங்கையில் ஏந்தி, பிரமன், மால் ஆகியோர் அடிமுடி அறியாதவாறு ஓங்கி நின்ற பெரியோன் இடம், குயில்கள் வாழும் குரா மரங்கள் நிறைந்த பொழில் சூழ்ந்த திரு இரும்பை நகரில் உள்ள வானோரும் மறையோரும் தொழும் திருமாகாளமாகும். |
| 2746. | எந்தையெம்மான் இடம்எழில்<br>கொள்சோலை யிரும்பைதனுள்<br>மந்தமாய பொழில்சூழ்ந்<br>தழகாரு மாகாளத்தில்<br>அந்தமில்லா அனலாடு<br>வானையணி ஞானசம்<br>பந்தன்சொன்ன தமிழ்பாட<br>வல்லார்பழி போகுமே. | எந்தையும் எங்கள் தலைவனும் ஆகிய சிவபிரான் விளங்குவதும் திரு இரும்பையில் விளங்கும் தென்றல் வந்துலவும் பொழில்கள் சூழ்ந்ததுமாகிய திருமாகாளத்தில் முடிவற்ற நிலையில் அனலாடும் இறைவன் மீது ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத் தமிழை ஓதுபவர்களின் பழிகள் போகும். |

## 118. திருத்திலதைப்பதி

பண் : செவ்வழி — பதிக எண் : 118

இராம லக்குவர்கள் தந்தையாகிய தசரதனுக்கு, எள்ளும், புனலும் இறைத்த (திலதர்ப்பணஞ்செய்த) பதியாத–ன் இப்பெயர் பெற்றது.

| | | |
|---|---|---|
| 2747. | பொடிகள்பூசிப் பலதொண்டர்<br>கூடிப் புலர்காலையே<br>அடிகளாரத் தொழுதேத்த<br>நின்ற அழகன்னிடம்<br>கொடிகளோங்கிக் குலவும்<br>விழவார் திலதைப்பதி<br>வடிகொள்சோலைம் மலர்<br>மணங்கமழும் மதிமுத்தமே. | வைகறைப் போதில் தொண்டர்கள் பலரும் கூடி நியமங்களை முடித்துத் திருநீற்றுப் பொ–வோடு திருவடிகளை மனமாரத் தொழுதேத்த நின்ற அழகனது இடம், கொடிகள் ஓங்கி அசைந்தாடுவதும் திருவிழாக்கள் இடையறாமல் நிகழ்வதுமாகிய திருத்திலதைப்பதியிலுள்ள அழகிய சோலைகளின் மலர்கள் மணம் கமழ்ந்து விளங்கும் மதிமுத்தம் கோயிலாகும். |

| | பாடல் | விளக்கம் |
|---|---|---|
| 2748. | தொண்டர்மிண்டிப் புகைவிம்மு<br>சாந்துங்கமழ் துணையலும்<br>கொண்டுகண்டார் குறிப்புணர<br>நின்ற குழகன்னிடம்<br>தெண்டிரைப்பூம் புனலரிசில்<br>சூழ்ந்த திலதைப்பதி<br>வண்டுகெண்டுற் றிசைபயிலுஞ்<br>சோலைம் மதிமுத்தமே. | தெளிந்த நீரையுடைய அரிசிலாற்றங்கரை யிலமைந்த திலதைப்பதியில் விளங்குவதும், வண்டுகள் கெண்டி இசை பயிலும் மலர்களை உடைய சோலைகளால் சூழப் பெற்றதுமாகிய மதிமுத்தம், நெருங்கி வந்து நறுமணப் புகையும் சாந்தமும் மாலைகளும் கொண்டு வழிபடும் அடியார்களின் கருத்தறிந்து அவர்கட்கு அருள்புரியும் குழகன் இடமாகும். |
| 2749. | அடலுளேறுய்த் துகந்தான்<br>அடியார் அமரர்தொழக்<br>கடலுள்நஞ்ச அமுதாக<br>வுண்ட கடவுள்ளிடம்<br>திடலடங்கச் செழுங்கழனி<br>சூழ்ந்த திலதைப்பதி<br>மடலுள்வாழைக் கனிதேன்<br>பி–ற்றும் மதிமுத்தமே. | திடல்களைச் சுற்றி வயல்கள் சூழ்ந்து விளங்குவதும், மடல்வழியாக வாழைக் கனிசாறு ஒழுகுவதும் ஆகிய வளங்களை உடைய திலதைப்பதியிலுள்ள மதிமுத்தம், வ–ய விடையை ஏறிச் செலுத்தி மகிழ்பவரும், அடியார்களும் அமரர்களும் தொழுமாறு கடலுள் எழுந்த நஞ்சை அமுதாக உண்டருளியவருமாகிய கடவுள் விரும்பி உறையுமிடமாகும். |
| 2750. | கங்கைதிங்கள் வன்னிதுன்<br>எருக்கின்னொடு கூவிளம்<br>வெங்கண்நாகம் விரிசடையில்<br>வைத்த விகிர்தன்னிடம்<br>செங்கயல்பாய் புனலரிசில்<br>சூழ்ந்த திலதைப்பதி<br>மங்குல்தோயும் பொழில்சூழ்ந்<br>தழகார் மதிமுத்தமே. | கயல்மீன்கள் பாய்ந்து விளையாடும் நீரை உடைய அரிசிலாறு சூழ்ந்ததும், மேகம் தோயும் பொழில்கள் சூழ்ந்ததுமாகிய திலதைப்பதியில் விளங்கும் அழகிய மதிமுத்தம், கங்கை, பிறை, வன்னி, எருக்கு, கூவிளம், நாகம் ஆகியவற்றைத் தம் விரிசடையில் வைத்த விகிர்தனின் இடமாகும். |
| 2751. | புரவியேழும் மணிபூண்<br>டியங்குங்கொடித் தேரினான்<br>பரவிநின்று வழிபாடு<br>செய்யும்பர மேட்டியூர்<br>விரவிஞாழல் விரிகோங்கு<br>வேங்கைசுர புன்னைகள்<br>மரவமவ்வல் மலருந்<br>திலதைம் மதிமுத்தமே. | ஞாழல், கோங்கு, வேங்கை, சுரபுன்னை, கடம்பு, முல்லை ஆகியன மலரும் பூங்காவை உடைய திலதைப்பதியிலுள்ள மதிமுத்தம், மணிகள் கட்டிய ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட கொடித் தேரைச் செலுத்தும் சூரியன் நின்று வழிபாடு செய்யும் இறைவனது ஊராகும். |

| | | |
|---|---|---|
| 2752. | விண்ணர்வேதம் விரித்தோத<br>வல்லார் ஒருபாகமும்<br>பெண்ணார்எண்ணார் எயில்<br>செற்றுகந்த பெருமானிடம்<br>தெண்ணிலாவின் ஒளிதீண்டு<br>சோலைத் திலதைப்பதி<br>மண்ணுளார்வந் தருள்பேண<br>நின்றம் மதிமுத்தமே. | விண்ணுலகிலுள்ளவரும், வேதங்களை அருளியவரும், ஒரு பாகமாக உமையம்மையை உடையவரும், தம்மை எண்ணாத திரிபுரத்தசுரர்களின் கோட்டைகளை அழித்துப்பின் அவர்கட்கு அருள்செய்தவரும் ஆகிய பெருமான் உறையும் இடம், தெளிந்த நிலாவொளி வீசும் சோலைகள் சூழ்ந்ததும் மண்ணுலகில் உள்ளவர் அருள் பெற வழிபடுவதுமாகிய திலதைப்பதியிலுள்ள மதி முத்தமாகும். |
| 2753. | ஆறுசூடி யடையார்புரஞ்<br>செற்றவர் பொற்றொடி<br>கூறுசேரும் முருவர்க்<br>கிடமாவது கூறுங்கால்<br>தேறலாரும் பொழில்<br>சூழ்ந்தகார் திலதைப்பதி<br>மாறிலாவண் புனலரிசில்<br>சூழ்ந்தம் மதிமுத்தமே. | கங்கையைத் தலையில் சூடியவர். திரிபுரப் பகைவருடைய கோட்டைகளை அழித்தவர். மாதொரு கூறர். அவ் விறைவர்க்குரிய இடம், தேன் பொருந்திய பொழில்கள் சூழ்ந்ததும், அழகியதும், நீர்வற்றாத அரிசிலாற்றினால் சூழப் பெற்றதுமாகிய திலதைப்பதியிலுள்ள மதிமுத்தமாகும். |
| 2754. | கடுத்துவந்த கனன்மேனி<br>யினான்கரு வரைதனை<br>எடுத்தவன்றன் முடிதோள்<br>அடர்த்தாற் கிடமாவது<br>புடைக்கொள்பூகத் திளம்பாளை<br>புல்கும் மதுப்பாயவாய்<br>மடுத்துமந்தி யுகளுந்<br>திலதைம் மதிமுத்தமே. | சினத்தோடு வந்த கார்மேகம் போலும் நிறத்தை உடைய இராவணன் வ–ய கயிலைமலையை எடுக்க, அவனுடைய முடிதோள் ஆகியவற்றை அடர்த்த இறைவனது இடம், தழைத்து வளர்ந்த பாக்குமரத்தின் இளம்பாளை வழியாகப் பாயும் தேனை உண்டு மந்திகள் விளையாடும் திலதைப்பதியிலுள்ள மதிமுத்தமாகும். |
| 2755. | படங்கொணாகத் தணையானும்<br>பைந்தா மரையின்மிசை<br>இடங்கொணால்வே தனுமேத்த<br>நின்ற இறைவன்னிடம்<br>திடங்கொள்நாவின் இசைதொண்டர்<br>பாடுந் திலதைப்பதி<br>மடங்கல்வந்து வழிபாடு<br>செய்யும் மதிமுத்தமே. | ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடனைத் தன் படுக்கையாகக் கொண்ட திருமாலும், புதிய தாமரை மலரில் விளங்கி வேதங்களை ஓதும் நான்முகனும் வழிபட எழுந்தருளிய இறைவன் இடம். தொண்டர்கள் திண்மையான நாவினால் இசைபாடித் தொழும் திலதைப்பதியுள் சிங்கம் வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தமாகும். |

| | | |
|---|---|---|
| 2756. | புத்தர்தேரர் பொறியில்<br>சமணர்களும் வீறிலாப்<br>பித்தர்சொன்னம் மொழிகேட்கி<br>லாத பெருமானிடம்<br>பத்தர்சித்தர் பணிவுற்<br>றிறைஞ்சுந் திலதைப்பதி<br>மத்தயானை வழிபாடு<br>செய்யும் மதிமுத்தமே. | புத்தர், தேரர், அறிவற்ற சமணர், பெருமையில்லாத பித்தர் ஆகிய புறச்சமயத்தார் கூறும் மொழிகளைக் கேளாத பெருமானது இடம், அன்பர்களும் அறிஞர்களும் பணிந்து வழிபடும் திலதைப் பதியில் மதயானை வந்து வழிபட்ட சிறப்புடைய மதிமுத்தமாகும். |
| 2757. | மந்தமாரும் பொழில்<br>சூழ்திலதைம் மதிமுத்தமேற்<br>கந்தமாருங் கடற்காழி<br>யுள்ளான் தமிழ்ஞானசம்<br>பந்தன்மாலை பழிதீர<br>நின்றேத்த வல்லார்கள்போய்ச்<br>சிந்தைசெய்வார் சிவன்சேவடி<br>சேர்வது திண்ணமே. | தென்றற்காற்று வீசும் சோலை சூழ்ந்த திலதைப் பதியுள் விளங்கும் மதிமுத்தத்தில் எழுந்தருளிய இறைவன் மீது நறுமணம் கமழும் கடற்கரையில் விளங்கும் காழி ஞானசம்பந்தன் பாடிய பாமாலையைப் பழிதீர ஓதி வழிபடுவர் சிவன் சேவடிகளைச் சிந்தை செய்பவராய் அவ்வடிகளை அடைவது உறுதி. |

## 119. திருநாகேச்சுரம்

பண் : செவ்வழி

பதிக எண் : 119

| | | |
|---|---|---|
| 2758. | தழைகொள்சந் தும்மகிலும்<br>மயிற்பீ– யுஞ்சாதியின்<br>பழமும்உந்திப் புனல்பாய்<br>பழங்காவிரித் தென்கரை<br>நழுவில்வானோர் தொழநல்கு<br>சீர்மல்கு நாகேச்சரத்<br>தழகர்பாதந் தொழுதேத்த<br>வல்லார்க் கழகாகுமே. | தழைகளோடு கூடிய சந்தன மரங்கள், அகில் மரங்கள், மயிற்பீ–, நல்ல பழங்கள் ஆகியவற்றைப் புன–ல் உந்தி வந்து பாயும் பழமையான காவிரியின் தென்கரையில் வானோர் விலகாது தொழ அருள் நல்கும் சிறப்புமிக்க நாகேச்சுரத்தில் விளங்கும் அழகர் பாதங்களைத் தொழுது போற்றவல்லார்க்கு அழகு நலம் வாய்க்கும். |
| 2759. | பெண்ணொர்பாகம் அடையச்<br>சடையிற் புனல்பேணிய<br>வண்ணமான பெருமான்<br>மருவும் இடம்மண்ணுளார்<br>நண்ணிநாளுந் தொழுதேத்தி<br>நன்கெய்து நாகேச்சரம்<br>கண்ணினாற் காணவல்லா<br>ரவர்கண் ணுடையார்களே. | ஒருபாகத்தே உமையையும், சடையில் நீர் வடிவான கங்கையையும் கொண்ட அழகிய பெருமான் அமரும் இடம் ஆகிய, மண்ணுலகத்தோர் நாள்தோறும் வந்து வணங்கி நன்மைகள் பெறும் நாகேச்சுரத்தைக் கண்ணால் காண்பவரே கண்ணுடையராவர். |

| | | |
|---|---|---|
| 2760. | குறவர்கொல்லைப் புனங்கொள்ளை<br>கொண்டும் மணிகுலவுநீர்<br>பறவையாலப் பரக்கும்<br>பழங்காவிரித் தென்கரை<br>நறவநாறும் பொழில்சூழ்ந்<br>தழகாய நாகேச்சரத்<br>திறைவர்பாதந் தொழுதேத்த<br>வல்லார்க்கிட ரில்லையே. | குறவர் வாழும் குறிஞ்சிப்புனம், முல்லை நிலம் ஆகியவற்றைக் கொள்ளை கொண்டு மணிகள் குலாவும் நீரைப் பரவச் செய்யும் காவிரித் தென்கரையில் தேன்மணம் கமழும் பொழில் சூழ்ந்து அழகியதாய் விளங்கும் நாகேச்சுரத்து இறைவர் பாதங்களைத் தொழுது ஏத்த வல்லார்க்கு இடர் இல்லை. |
| 2761. | கூசநோக்காதுமுன் சொன்ன<br>பொய்கொடு வினைகுற்றமும்<br>நாசமாக்கும் மனத்தார்கள்<br>வந்தாடு நாகேச்சரம்<br>தேசமாக்குந் திருக்கோயி<br>லாக்கொண்ட செல்வன்கழல்<br>நேசமாக்குந் திறத்தார்<br>அறத்தார் நெறிப்பாலரே. | ஆராயாது பிறர் மனம் கூசுமாறு சொல்லும் பொய் கொடிய வினைகளால் வந்த குற்றங்கள் ஆகியவற்றைச் செய்யாத நன்மனம் உடைய அடியவர்கள் வந்து மகிழும் நாகேச்சுரத்தை ஒளி விளங்கும் கோயிலாகக் கொண்ட செல்வன் திருவடிகளில் அன்புடையவர் அறநெறிப் பாலராவர். |
| 2762. | வம்புநாறும் மலரும்மலைப்<br>பண்டமுங் கொண்டுநீர்<br>பைம்பொன்வாரிக் கொழிக்கும்<br>பழங்காவிரித் தென்கரை<br>நம்பன்நாளும் அமர்கின்ற<br>நாகேச்சர நண்ணுவார்<br>உம்பர்வானோர் தொழச்<br>சென்றுடனாவதும் உண்மையே. | மணம் கமழும் மலர்களையும், மலைப் பொருள்களையும் வாரிக்கொண்டு, பைம் பொன் கொழித்து வரும் நீரையுடைய பழங்காவிரித் தென்கரையில் நம்பன் நாளும் அமர்கின்ற நாகேச்சரத்தை நண்ணுபவர் உம்பர் வானவர் தொழச் சிவபிரானோடு ஒன்றாவர். |
| 2763. | காளமேகந் நிறக்கால<br>னோடந்தகன் கருடனும்<br>நீளமாய்நின் றெய்தகாமனும்<br>பட்டன நினைவுறின்<br>நாளுநாதன் அமர்கின்ற<br>நாகேச்சர நண்ணுவார்<br>கோளுநாளுந் தீயவேனும்<br>நன்காங் குறிக்கொண்மினே. | கரிய நிறமுடைய காலன், அந்தகன், கருடன், விலகி நின்று கணை எய்த காமன் ஆகியோரை இறைவன் செற்றதை நினைந்து நாள்தோறும் சிவபிரான் உறையும் நாகேச்சுரத்தை நண்ணி வழிபடுபவர்க்குக் கோள்களும் நாள்களும் தீயவேனும் நல்லன ஆகும். அதனை மனத்தில் கொள்மின். |

| | | |
|---|---|---|
| 2764. | வேயுதிர்முத் தொடுமத்த<br>யானை மருப்பும்விராய்ப்<br>பாய்புனல்வந் தலைக்கும்<br>பழங்காவிரித் தென்கரை<br>நாயிறுந்திங் களுங்கூடி<br>வந்தாடு நாகேச்சரம்<br>மேயவன்றன் அடிபோற்றி<br>யென்பார் வினைவீடுமே. | மூங்கில் முத்துக்கள், யானைமருப்பு ஆகியவற்றுடன் வந்து வளம் செயும் காவிரியாற்றின் தென்கரையில், நாயிறு, திங்கள் இரண்டும் வந்து வழிபடும் நாகேச்சுரத்தில் எழுந்தருளிய இறைவன் திருவடிகளைப் போற்றி என வணங்குவார் வினைகள் கெடும். |
| 2765. | இலங்கைவேந்தன் சிரம்பத்தி<br>ரட்டியெழிற் றோள்களும்<br>மலங்கிவீழம் மலையால்<br>அடர்த்தா னிடமல்கிய<br>நலங்கொள்சிந்தை யவர்நாள்தொறும்<br>நண்ணும் நாகேச்சரம்<br>வலங்கொள்சிந்தை யுடையார்<br>இடராயின மாயுமே. | இலங்கை வேந்தனாகிய இராவணனின் பத்துத் தலைகள் இருபது தோள்கள் ஆகியன சிதையுமாறு மலையினால் அடர்த்த இறைவன் இடம் ஆகிய நன்மைகெழுமிய மனமுடையோர் நாள்தோறும் எண்ணி வழிபடும் நாகேச்சுரத்தை வலம் வந்து வழிபடும் சிந்தை உடையவர்களின் இடர்கள் கெடும். |
| 2766. | கரியமாலும் மயனும்<br>மடியும்முடி காண்பொணா<br>எரியதாகிந் நிமிர்ந்தான்<br>அமரும்இட மீண்டுகா<br>விரியின்நீர்வந் தலைக்குங்<br>கரைமேவு நாகேச்சரம்<br>பிரிவிலாதவ் வடியார்கள்<br>வானிற் பிரியார்களே. | கருநிறமுடைய திருமாலும், பிரமனும் அடிமுடி காண இயலாதவாறு எரியுருவாக நிமிர்ந்த இறைவன் அமரும் இடம் ஆகிய பெருகிவரும் காவிரி நீர் வந்தலைக்கும் தென் கரையில் அமைந்த நாகேச்சுரத்தைப் பிரிவிலாத அடியவர் சிவலோகத்தைப் பிரியார். |
| 2767. | தட்டிடுக்கி யுறிதூக்கி<br>யகையினர் சாக்கியர்<br>கட்டுரைக்கும் மொழிகொள்ளலும்<br>வெள்ளி லங்காட்டிடை<br>நட்டிருட்கண் நடமாடிய<br>நாதன் நாகேச்சுரம்<br>மட்டிருக்கும் மலரிட்<br>டடிவீழ்வது வாய்மையே. | தட்டைக் கக்கத்தில் இடுக்கி உறிதூக்கிய கையினராய்த் திரியும் சமணர், சாக்கியர், புனைந்து சொல்லும் மொழிகளைக் கொள்ளாது, இடுகாட்டில் நள்ளிருளில் நடனமாடும் நாகேச்சுரத்து இறைவனைத் தேன் நிறைந்த மலர்களைத் தூவி அடி வீழ்ந்து வணங்குவது உண்மைப் பயனைத் தரும். |
| 2768. | கந்தநாறும் புனற்காவிரித்<br>தென்கரைக் கண்ணுதல்<br>நந்திசேருந் திருநாகேச்<br>சரத்தின் மேன்ஞானசம்<br>பந்தனாவிற் பனுவல்<br>–வைபத்தும் வல்லார்கள்போய்<br>எந்தையீசன் இருக்கும்<br>உலகெய்த வல்லார்களே. | மணம் கமழும் நீரை உடைய காவிரித் தென்கரையில், கண்ணுதற் கடவுளாகிய நந்தி எழுந்தருளிய திருநாகேச்சுரத்தின் மேல் ஞானசம்பந்தன் நாவினால் போற்றிய இப்பனுவல் பத்தையும் வல்லவர் மறுமையில் எந்தையீசன் இருக்கும் சிவலோகம் எய்துவர். |

## 120. திருமூக்கீச்சரம்

பண் : செவ்வழி

பதிக எண் : 120

கரிகால் பெருவளத்தான் ஒரு சமயம் சேனையுடன் திருச்சிராப்பள்ளி கடந்து போகையில் ஒரு கோழி வந்து அவன் ஏறியிருந்த பட்டத்து யானையின் மத்தகத்தை கொத்த அது பின் வாங்கியது. மிகச்சிறிய கோழி மிகப்பெரிய யானையையே எதிர்த்ததால் இந்த இடம் வன்மை அளிக்க வல்லது–சிறப்பானது என்று உணர்ந்து அங்கே ஒரு நகரங்கண்டு அங்கே உறைவானான். இத்தலமே உறையூர். கோழியினால் இவ்விடம் அறியப்பட்டமையால் உறையூர்கோழியென்றும், கோழியின் மூக்கால் யானை கொத்தப் பெற்ற விடத்தி–ருப்பது பற்றி இத்தலம் மூக்கீச்சரம் என்றும் வழங்கலாயின.

✱ சிலப்பதிகாரத்திலும் இச்செய்தி காணப்பெறுகிறது.

முரஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ் சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்

(நாடுகாண் காதை – 247–8)

ஒரு பணிக்காக ஒரு இடம் சிறந்ததா என்று தேர்வு செய்ய முயற்சிக்கும் போது சிவபரம்பொருளை தியானித்தால் இயற்கையின் மூலம் அதற்கு ஒரு தீர்வு கிடைக்கு.ம்.

பாண்டிய மன்னன் கடம்ப வனத்தில் சிவ–ங்க தரிசனம் முடிந்தவுடன் சிவாலயத்தை எவ்வளவு விரிவாக எப்படி அமைப்பது என்று சோமசுந்தரக் கடவுளைப்பிரார்த்தித்தபோது ஒரு பெரிய பாம்பு தலையில் ஆரம்பித்து உடலை வளைத்துச் சுற்றி வட்டமாக வாலைக் கொண்டுபோய் வாலும் வாயும் ஒன்றுபடும்படி வைத்ததாம். அது தான் ஆலவாய். அந்த இடத்தில்தான் மதுரைக்கோயில் அமைந்துள்ளது.

அண்ணாமலைச் செட்டியார் 1940 ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தை நிறுவ இடம் தேர்வு செய்தபோது சிதம்பரத்துக்குப் புறத்தே நின்று அண்ணாந்து பார்த்து எங்கு கழுகு வட்டமிட்டதோ அதிலேதான் பல்கலைக்கழகத்தை அமைத்ததாகச் செவிவழிச் செய்தியுண்டு.

2769. சாந்தம்வெண்ணீ றெனப்பூசி
வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை
யொடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந்
நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள்
செய்கின்றதோர் மெய்ம்மையே.

சந்தனம்போலத் திருநீற்றை உடல் முழுவதும் பூசி, கங்கையைச் சடைமீது வைத்துள்ளவராகிய சிவபிரான், காந்தள் போன்ற கைவிரல்களை உடைய உமையம்மையோடு கூடியிருந்ததற்குரிய காரணத்தை ஆராய்ந்தறிந்தவர்கள் யார்? கோச்செங்கட்சோழனால் கட்டப்பட்ட மூக்கீச்சரத்துள் விளங்கும் இறைவன் செய்யும் மெய்ம்மை இதுவாகும்.

| | | |
|---|---|---|
| 2770. | வெண்டலையோர் கலனாப்<br>ப–தேர்ந்து விரிசடைக்<br>கொண்டலாரும் புனல்சேர்த்<br>துமையாளொடுங் கூட்டமா<br>விண்டவர்தம் மதிலெய்தபின்<br>வேனில் வேள்வெந்தெழக்<br>கண்டவர் மூக்கீச்சரத்தெம்<br>அடிகள் செய்கன்மமே. | வெண்தலையை உண்கலனாகக் கையில் ஏந்திப் ப–தேர்தல், விரிந்த சடையில் கங்கையைத் தாங்குதல், உமையம்மை யோடு கூடியிருத்தல், பகைவர்தம் முப்புரங்களை எய்து அழித்தல், மன்மதனை நெற்றிவிழியால் வெந்தழியச் செய்தல் ஆகியன மூக்கீச்சரத்தில் விளங்கும் எம் அடிகள் செய்த செயல்களாகும். |
| 2771. | மருவலார்தம் மதிலெய்த<br>துவும்மான் மதலையை<br>உருவிலாரவ் வெரியூட்டி<br>யதும்உல குண்டதால்<br>செருவிலாரும் பு–செங்<br>கயலானை யினான்செய்த<br>பொருவின் மூக்கீச்சரத்தெம்<br>அடிகள் செயும்பூசலே. | போர்க்கருவியாகிய வில், பு–, கயல் ஆகிய மூவிலச்சினைகளுக்கும் உரிய சேர, சோழ, பாண்டிய மண்டலங்களுக் குரியவனாய் விளங்கிய கோச்செங்கட் சோழனால் கட்டப்பட்ட ஒப்பற்ற மூக்கீச்சரத்தில் உறையும் எம் அடிகள் செய்த போர்களில் மும்மதில்களை எய்தது, மால்மகனாகிய காமனை எரித்தது ஆகியன உலகறிந்தனவாம். |
| 2772. | அன்னமன்னந் நடைச்சாய<br>லாளோ டழகெய்தவே<br>மின்னையன்ன சடைக்கங்கை<br>யாள்மேவிய காரணம்<br>தென்னன்கோழி யெழில்வஞ்சியும்<br>ஓங்கு செங்கோ–னான்<br>மன்னன்மூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்ற தோர்மாயமே. | தென்நாட்டின் உறையூர் வஞ்சி ஆகிய சோழ, சேர மண்டலங்களுக்கும் உரியவனாய்ப் புகழ்மிக்க செங்கோ–னனாய் விளங்கிய கோச்செங்கட்சோழ மன்னன் கட்டிய முக்கீச்சரத்துக் கோயி–ல் விளங்கும் அடிகள், அன்னம் போன்ற நடையினை உடைய உமையம்மையாரோடு அழகுற விளங்கி, மின்னல் போன்ற சடையில் கங்கையைக் கொண்டுள்ள காரணம் யாதோ ? |
| 2773. | விடமுனாரவ் வழல்வாய<br>தோர் பாம்பரை வீக்கியே<br>நடமுனாரவ் வழலாடுவர்<br>பேயொடு நள்ளிருள்<br>வடமன்நீடு புகழ்ப்பூழி<br>யன்றென்ன வன்கோழிமன்<br>அடன்மன்மூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்ற தோரச்சமே. | வடதிசையில் புகழ்மிக்கு விளங்கும் பாண்டியனாகவும் உறையூருக்குரிய சோழனாகவும் விளங்கிய வ–மை பொருந்திய கோச்செங்கட்சோழ மன்னன் கட்டிய முக்கீச்சரத்துறையும் அடிகள் அச்சம் தரும் முறையில் அழல் போன்ற வாயில் நஞ்சுடைய பாம்பை அரையில் கட்டியவர். நள்ளிருளில் பேயோடு, ஆரழ–ல் நடனம் ஆடுபவர். |

| | | |
|---|---|---|
| 2774. | வெந்தநீறு மெய்யிற்<br>பூசுவராடுவர் வீங்கிருள்<br>வந்தெனாரவ் வளைகொள்வதும்<br>இங்கொரு மாயமாம்<br>அந்தண்மா மானதன்னேரியன்<br>செம்பிய னாக்கிய<br>எந்தைமூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்ற தோரேதமே. | அகத்துறைப்பாடல் : பகைவரின் மானத்தை அழிக்கும் பெருவீரனும் நேரியன் செம்பியன் என்ற பெயர்களை உடையவனுமான கோச்செங்கட்சோழன் கட்டிய முக்கீச்சரத்தில் விளங்கும் அடிகள் செய்த ஏதமான செயல் திருநீற்றை மேனியில் பூசிய சுந்தரத் திருமேனியராய், ஆடல் வல்லவராய், மிக்க இருளில் வந்து என் அரிய வளையல்களை மாயமான முறையில் கவர்ந்து சென்றதாகும். |
| 2775. | அரையிலாருங் கலையில்ல<br>வனாணொடு பெண்ணுமாய்<br>உரையிலாரவ் வழலாடு<br>வரொன்றலர் காண்மினோ<br>விரவலார்தம் மதின்மூன்<br>றுடன்வெவ்வழ லாக்கினான்<br>அரையன்மூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்ற தோரச்சமே. | இடையில் பொருந்தும் உடை இல்லாதவன். ஆணும், பெண்ணுமாய் விளங்குபவன். அழ–ல் நின்று ஆடுபவன். ஒன்றாயின்றிப் பலபலவேடம் கொள்பவன். பகைவரின் முப்புரங்களை அழல்எழச் செய்து அழித்தவன். கோச்செங்கணான் கட்டிய முக்கீச்சரக் கோயி–ல் விளங்கும் அப்பெருமான் செய்யும் அச்சமான செயல்கள் இவையாகும். |
| 2776. | ஈர்க்குநீர்ச்செஞ் சடைக்கேற்<br>றதுங்கூற்றை யுதைத்ததும்<br>கூர்க்குநன்மூ விலைவேல்வல<br>னேந்திய கொள்கையும்<br>ஆர்க்கும்வாயான் அரக்கன்<br>னுரத்தை நெரித்தவ்வடல்<br>மூர்க்கன்மூக்கீச் சரத்தடிகள்<br>செய்யாநின்ற மொய்ம்பதே. | மூக்கீச்சரத்து அடிகள் செய்த வ–ய செயல்கள் ஈர்க்கும் தன்மையை உடைய கங்கையைச் சடைமிசை ஏற்றது. கூரிய முத்தலைச்சூலத்தை வெற்றிக்கு அடையாளமாகப் பிடித்துள்ளது. ஆரவாரிக்கும் வாயினனும் வ–ய மூர்க்கனும், அரக்கனும் ஆகிய இராவணன் உடலை நெரித்தது முத–யனவாகும். |
| 2777. | நீருளாரும் மலர்மேல்<br>உறைவான் நெடுமாலுமாய்ச்<br>சீருளாருங் கழல்தேட<br>மெய்த்தீத் திரளாயினான்<br>சீரினாலங் கொளிர்தென்ன<br>வன்செம்பி யன்வில்லவன்<br>சேருமூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்ற தோர்செம்மையே. | சிறப்புமிக்க தென்னவன், செம்பியன், வில்லவன் ஆகிய மூவேந்தரும் வந்து வழிபடும் மூக்கீச்சரத்தில் உறையும் பெருமான் நீருள் தோன்றிய தாமரையில் விளங்கும் நான்முகனும், நெடியமாலும் புகழிற் பொருந்திய திருவடிகளைத் தேட முற்பட்ட போது தீத்திரளாய் நின்றவன். |

| | | |
|---|---|---|
| 2778. | வெண்புலான்மார் பிடுதுகி—னர்<br>வெற்றரை யுழல்பவர்<br>உண்பினாலே யுரைப்பார்<br>மொழி யூனமதாக்கினான்<br>ஒண்புலால்வேன் மிகவல்லவ<br>னோங்கெழிற் கிள்ளிசேர்<br>பண்பின்மூக்கீச் சரத்தடிகள்<br>செய்கின்றதோர் பச்சையே. | வெண்மையான புலால் நாற்றம் வீசும் ஆடையை மார்பிற் கொண்டவரும், வெற்றுடம்போடு திரிபவரும் ஆகிய புத்தர்களும் சமணரும் உண்ணும் பொருட்டு உரைக்கும் மொழிகளைக் குறையுடைய தாக்கினான். புலால் மணக்கும் வேல் வென்றி உடையவன். சோழமன்னன் எடுப்பித்த மூக்கிச்சரத்து அப்பெருமான் செய்யும் புதுமையான செயல் இதுவாகும். |
| 2779. | மல்லையார்மும் முடிமன்னர்<br>மூக்கீச்சரத் தடிகளைச்<br>செல்வராக நினையும்படி<br>சேர்த்திய செந்தமிழ்<br>நல்லராய்வாழ் பவர்காழி<br>யுள்ஞான சம்பந்தன<br>சொல்லவல்லா ரவர்வானுல<br>காளவும் வல்லரே. | மற்போரில் வல்லவராய முடிமன்னர் மூவரானும் தொழப் பெறும் மூக்கீச்சரத்து அடிகளை நல்லவர் வாழும் காழியுள் மேவிய ஞானசம்பந்தன் செல்வராக நினையும்படிப் பாடிய இச் செந்தமிழைச் சொல்ல வல்லவர் வானுலகையும் ஆளவல்லவர் ஆவர். |

## 121. திருப்பாதிரிப்புலியூர்

பண் : செவ்வழி — பதிக எண் : 121

| | | |
|---|---|---|
| 2780. | முன்னநின்ற முடக்கான்<br>முயற்கருள் செய்துநீள்<br>புன்னைநின்று கமழ்பா<br>திரிப்பு— யூருளான்<br>தன்னைநின்று வணங்குந்<br>தனைத்தவ மில்—கள்<br>பின்னைநின்ற பிணியாக்<br>கையைப்பெறு வார்களே. | முடங்கிய கால்களை உடைய முயலுருவத்தைப் பெற்றுத் தன்னை வணங்கி முன்னே நின்ற மங்கண முனிவருடைய சாபத்தைப் போக்கி அவருக்கு அருள் செய்து, நீண்ட புன்னை மரங்கள் மணம் கமழும் திருப்பாதிரிப் பு—யூரில் எழுந்தருளி இருக்கும் இறைவனை வணங்கும் மேலான தவம் இல்லாதவர்கள் நோயால் ந—யும் யாக்கையைப் பெறுவார்கள். |
| 2781. | கொள்ளிநக்க பகுவாய<br>பேய்கள் குழைந்தாடவே<br>முள்ளிலவம் முதுகாட்<br>டுறையும் முதல்வன்இடம்<br>புள்ளினங்கள் பயிலும்<br>பாதிரிப் பு—யூர்தனை<br>உள்ள நம்மேல்<br>வினையாயின ஒழியுங்களே. | நகும் போது தீயை உமிழும் திறந்த வாயை உடைய பேய்கள் குழைந்தாட முள்ளிலவ மரங்கள் நிறைந்த சுடுகாட்டில் உறையும் இறைவன் இடமாகிய, அன்னம், மயில் முத—ய பறவையினங்கள் வாழும் திருப்பாதிரிப்பு—யூரை நினைந்து வழிபட்டு நம்மேலுள்ளன ஆகிய வினைகளை ஒழியுங்கள். |

| | | |
|---|---|---|
| 2782. | மருளினல்லார் வழிபாடு<br>செய்யும் மழுவாளர்மேல்<br>பொருளினல்லார் பயில்<br>பாதிரிப் பு–யூருளான்<br>வெருளின்மானின் பிணை<br>நோக்கல்செய்து வெறிசெய்தபின்<br>அருளிஆகத் திடைவைத்<br>ததுவும் மழகாகவே. | மெய்ப்பொருளை அறிந்தவரும் மயக்கமற்ற ஞானியரும் வழிபாடு செய்து வாழும் திருப்பாதிரிப்பு–யூரில் வாழும் மழுவாளரைக் கண்டு மருளும் பெண்மான் போன்ற பார்வையை உடைய பார்வதியை நோக்கி, அவளைத் தம்மீது காதல் கொள்ளச் செய்து, தம் ஆகத்திடை வைத்து அருள்பவராய் உள்ள அப்பெருமான் செயல் மிக்க அழகானதாகும். |
| 2783. | போதினாலும் புகையாலும்<br>உய்த்தே அடியார்கள்தாம்<br>போதினாலே வழிபாடு<br>செய்யப் பு–யூர் தனுள்<br>ஆதிநாலும் அவலம்<br>மிலாதஅடி கள்மறை<br>ஓதிநாளும் இடும்பிச்சை<br>யேற்றுண் டுணப்பாலதே. | மலர்கள் தூவியும் தசாங்கம் முத–ய மணமுடைய பொருள்களைப் புகைத்தும் அடியவர்கள் காலந்தவறாமல் வழிபாடு செய்யப் பாதிரிப்பு–யூரில் உறையும் அவலம் இலாத அடிகள் நாள்தோறும் வேதங்களை ஓதிக் கொண்டு சென்று அன்பர்கள் இடும் பிச்சையை ஏற்று உண்ணும் இயல்பினர். |
| 2784. | ஆகநல்லார் அமுதாக்க<br>வுண்டான் அழலைந்தலை<br>நாகநல்லார் பரவந்நயந்<br>தங்கரை யார்த்தவன்<br>போகநல்லார் பயிலும்<br>பாதிரிப் பு–யூர் தனுள்<br>பாகநல்லா ளொடுநின்ற<br>எம்பர மேட்டியே. | நுகர்ச்சிக்குரிய இளமகளிர் பயிலும் பாதிரிப்பு–யூரில் பெரிய நாயகியாரை இடப்பாகமாகக் கொண்டுள்ள பரமேட்டி உட–ன் இடப்பாதியிலே உறையும் உமையம்மை அமுது ஆக்கிக் கொடுக்க நஞ்சை உண்டவன். நல்லோர் பரவ நச்சு வெப்பத்தை உடைய ஐந்தலைப் பாம்பை விரும்பி அரையில் கட்டியவன். |
| 2785. | மதியமொய்த்த கதிர்போ<br>லொளிம்மணற் கானல்வாய்ப்<br>புதியமுத்தந் திகழ்<br>பாதிரிப் பு–யூரெனும்<br>பதியில்வைக்கப் படுமெந்தை<br>தன்பழந் தொண்டர்கள்<br>குதியுங்கொள்வர் விதியுஞ்<br>செய்வர் குழகாகவே. | பழமையான அடியார்கள் அழகாக ஆகம விதிகளின்படி வழிபாடு செய்யவும் ஆனந்தக் கூத்தாடவும் நிலவொளி போன்ற வெண்மணல் பரவிய கடற்கரைச் சோலை இடத்தே புதிய முத்துக்கள் திகழும் திருப்பாதிரிப்பு–யூரில் எழுந்தருளி உள்ளார் இறைவர். |

| | | |
|---|---|---|
| 2786. | கொங்கரவப் படுவண்<br>டறைகுளிர் கானல்வாய்ச்<br>சங்கரவப் பறையின்<br>னொ–யவை சார்ந்தெழப்<br>பொங்கரவம் முயர்<br>பாதிரிப் பு–யூர்தனுள்<br>அங்கரவம் அரையில்<br>அசைத்தானை அடைமினே. | பூந்தாதுகளின் வண்டுகள் செய்யும் ஒ–கடற்கரைச் சோலைகளில் சங்குகளின் ஒ–, பறை, முழவு ஆகிய ஒ–கள் கூடி ஆரவாரம் மிகுந்து தோன்றும் திருப்பாதிரிப் பு–யூரில் இடையிலே பாம்பைக் கச்சாக அணிந்து எழுந்தருளிய பரமனை அடையுங்கள். |
| 2787. | வீக்கமெழும் மிலங்கைக்<br>கிறை விலங்கல்–டை<br>ஊக்கமொழிந் தலறவ்<br>விரலா–றை யூன்றினான்<br>பூக்கமழும் புனற்<br>பாதிரிப் பு–யூர்தனை<br>நோக்கமெ–ந் தணுகா<br>வினைநுணு குங்களே. | பெருமை மிக்க இலங்கைக்கு அரசனாகிய இராவணன் கயிலை மலையிடைத் தனது செருக்கழிந்து அலறுமாறு கால்விரலை ஊன்றிய இறைவன் எழுந்தருளிய மலர் மணம் கமழும் நீர்வளம் சான்ற பாதிரிப் பு–யூரை நோக்க வினைகள் மெ–ந்து நுணுகி ஒழியும். |
| 2788. | அன்னந்தாவும் மணியார்<br>பொழின்மணியார் புன்னை<br>பொன்னந் தாதுசொரி<br>பாதிரிப் பு–யூர்தனுள்<br>முன்னந்தாவி அடிமூன்<br>றளந்தவன் நான்முகன்<br>தன்னந்தாளுற் றுணராத<br>தோர்தவ நீதியே. | அன்னங்கள் விளையாடும் அழகிய சோலைகளில் முத்துமணி போன்ற புன்னை மலர்கள் பொன்போலும் தாதுக்களைச் சொரியும் திருப்பாதிரிப் பு–யூரில் முற்காலத்தே எல்லா உலகங்களையும் தாவி மூன்றடியால் அளந்த திருமாலும், நான்முகனும், சிறிதேனும் திருத்தாளையும் திருமுடியையும் அறிய முடியாதவராய்த் தவத்தின் நேரிய நீதி வடிவினராய்ப் பெருமான் விளங்குகிறார். |
| 2789. | உரிந்தகூறை யுருவத்<br>தொடுதெரு வத்திடைத்<br>திரிந்துதின்னுஞ் சிறுநோன்<br>பரும்பெருந் தேரும்<br>எரிந்துசொன்னவ் வுரைகொள்<br>ளாதேயெடுத் தேத்துமின்<br>புரிந்தவெண் ணீற்றண்ணல்<br>பாதிரிப்பு– யூரையே. | ஆடையின்றித் தெருவில் திரிந்து தின்னும் அற்பவிரதத்தை உடைய சமணரும், புத்தரும் எரிவினால் சொல்லும் உரைகளைக் கொள்ளாது திருவெண்ணீறு அணிந்த திருப்பாதிரிப்பு–யூர் அண்ணலைப் புகழ்ந்து போற்றுங்கள். |

| | | |
|---|---|---|
| 2790. | அந்தண்நல் லாரகன்<br>காழியுள் ஞானசம்<br>பந்தன்நல் லார்பயில்<br>பாதிரிப் பு–யூர்தனுள்<br>சந்தமாலைத் தமிழ்பத்தி<br>வைதரித் தார்கண்மேல்<br>வந்துதீயவ் வடையாமை<br>யால்வினை மாயுமே. | அந்தணர்கள் நிறைந்து வாழும் அகன்ற சீகாழிப்பதியில் திருஞானசம்பந்தன், நல்லவர் வாழும் திருப்பாதிரிப்பு–யூரில் எழுந்தருளிய இறைவர் மீது பாடிய இசை மாலை ஆகிய இத்திருப்பதிகத்தை ஓதி வழிபடுவாரைத் தீமைகள் அணுகா. அவர்தம் வினைகள் மாயும். |

## 122. திருப்புகலி

பண் : செவ்வழி

பதிக எண் : 122

| | | |
|---|---|---|
| 2791. | விடைய தேறி வெறிஅக் கரவார்த்த<br>விமலனார்<br>படைய தாகப் பரசு தரித்தார்க்<br>கிடமாவது<br>கொடை யிலோவார் குலமும் உயர்ந்தம்<br>மறையோர்கள்தாம்<br>புடைகொள் வேள்விப் புகையும்ப ருலாவும்<br>புக–யே. | விடைமீதுஏறி, முடைநாறும் எலும்பு, பாம்பு இவற்றை மாலையாக அணிந்துவரும் விமலரும், மழுவைப் படைக்கலனாகக் கொண்டவரும் ஆகிய சிவபிரானுக்குரிய இடம், கொடை வண்மை, குன்றா மரபினரும் ஆகிய, உயரிய, வேதங்களில் வல்ல அந்தணர் வேட்கும் வேள்விப்புகை வானத்து உலாவும் புக–ப் பதியாகும். |
| 2792. | வேலை தன்னின் மிகுநஞ்சினை யுண்டிருள்<br>கண்டனார்<br>ஞால மெங்கும் ப–கொண் டுழல்வார்<br>நகராவது<br>சால நல்லார் பயிலும் மறைகேட்டுப்<br>பதங்களைச்<br>சோலை மேவுங் கிளித்தான் சொற்பயிலும்<br>புக–யே. | கட–ல் தோன்றிய மிக்க நஞ்சினை உண்டு இருண்ட கண்டத்தினரும், உலகெங்கும் ப–யேற்றுத் திரிபவருமான சிவபிரானுக்குரிய நகர், மிகவும் நல்லவர் பயிலும் வேதப் பதங்களைக் கேட்டு, சோலைகளில் வாழும் கிளிகள் அச்சொற்களை மீண்டும் கூறும் புக–யாகும். |
| 2793. | வண்டு வாழுங் குழல்மங்கை யோர்கூ<br>றுகந்தார்மதித்<br>துண்ட மேவுஞ் சுடர்த்தொல் சடையார்க்<br>கிடமாவது<br>கெண்டை பாய மடுவில் லுயர்கேதகை<br>மாதவி<br>புண்ட ரீகம் மலர்ப்பொய்கை நிலாவும்<br>புக–யே. | வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய உமை நங்கையை தன் மேனியின் ஒரு கூறாக உகந்தவரும், பிறைமதி அணிந்த ஒளிமயமான தொல்சடை முடியினரும், ஆகிய சிவபெருமானுக்கு இடமாக விளங்குவது கெண்டை மீன்கள் துள்ளி ஆடும் மடுக்களையும், தாழை, மாதவி மரங்களையும், தாமரை மலரும் பொய்கைகளையும் கொண்ட புக–யாகும். |

| | | |
|---|---|---|
| 2794. | திரியு மூன்று புரமும் எரித்துத்<br>திகழ்வானவர்க்<br>கரிய பெம்மான் அரவக் குழையார்க்<br>கிடமாவது<br>பெரிய மாடத் துயருங் கொடியின்<br>மிடைவால்வெயிற்<br>புரிவி லாத தடம்பூம் பொழில்சூழ்<br>தண்புக–யே. | வானத்தில் திரிந்து இடர்விளைத்த முப்புரங்களை எரித்தவனும், வானவர்க்கு அரியவனாய் விளங்குவோனும், அரவக்குழை அணிந்தவனுமாகிய சிவபெருமானுக்கு இடமாக விளங்குவது, பெரிய மாடவீடுகளில் விளங்கும் கொடிகளால் வெண்மையான வெயிலொளி புகாததாய், தடம் பொய்கைகள் சூழ்ந்ததாய் விளங்கும் புக–யாகும். |
| 2795. | ஏவி லாருஞ் சிலைப்பார்த் தனுக்கின்<br>றருள்செய்தவர்<br>நாவி னாண்மூக் கரிவித்த நம்பர்க்<br>கிடமாவது<br>மாவி லாருங் கனிவார் கிடங்கில்<br>விழவாளைபோய்ப்<br>பூவி லாரும் புனற்பொய்கை யில்வைகும்<br>புக–யே. | கணை பொருந்திய வில்–ல் வல்ல அருச்சுனனுக்கு அருள் செய்தவரும், கலைமகளின் மூக்கை அரிவித்தவரும் ஆகிய சிவபிரானுக்குரிய இடம், மாங்கனிகள் பெரிய மடுக்களில் வீழ்வதைக் கண்டு வாளை மீன்கள் பூக்கள் நிறைந்த அப்பொய்கை மடுக்களைச் சென்றடையும் புக–ப்பதியாகும். |
| 2796. | தக்கன் வேள்வி தகர்த்த தலைவன்<br>தையலாளொடும்<br>ஒக்க வேயெம் முரவோ னுறையும்<br>மிடமாவது<br>கொக்கு வாழை பலவின் கொழுந்தண்<br>கனிகொன்றைகள்<br>புக்க வாசப் புன்னை பொன்றிரள் காட்டும்<br>புக–யே. | தக்கன் வேள்வியைத் தகர்த்தவனும், எம் உரவோனும் ஆகிய சிவபிரான் தையலாளொடு உறையும் இடம் மா, வாழை, பலா ஆகிய கனிகளின் மணத்துடன் கொன்றை, புன்னை இவற்றின் மகரந்தம் பொன்திரள் போலத் தோன்றும் புக–யாகும். |
| 2797. | தொலைவி லாத அரக்கன் உரத்தைத்<br>தொலைவித்தவன்<br>தலையுந் தோளுந் நெரித்த சதுரர்க்<br>கிடமாவது<br>கலையின் மேவும் மனத்தோர் இரப்போர்க்குக்<br>கரப்பிலார்<br>பொ–யு மந்தண் பொழில்சூழ்ந் தழகாரும்<br>புக–யே. | அழிவற்ற இராவணனின் ஆற்றலை அழித்து அவனது தலை, தோள் ஆகியவற்றை நெரித்த சதுரப்பாடுடைய சிவபிரானுக்குரிய இடம், கலை உள்ளம் கொண்டோர், இரப்போர்க்கு இல்லை என்னாத வண்மையுடையோர் விளங்கும் பொழில் சூழ்ந்த புக–ப் பதியாகும். |

| | | |
|---|---|---|
| 2798. | கீண்டு புக்கார் பறந்தார் அயர்ந்தார்<br>கேழலன்னமாய்க்<br>காண்டு மென்றார் கழல்பணிய நின்றார்க்<br>கிடமாவது<br>நீண்ட நாரை யிரையாரல் வாரநிறை<br>செறுவினிற்<br>பூண்டு மிக்கவ் வயல்காட்டும் அந்தண்<br>புக–யே. | பன்றியாய் நிலத்தை அகழ்ந்து சென்ற திருமால், அன்னமாய்ப் பறந்து உயர்ந்து சென்ற நான்முகன் ஆகியோர் அடிமுடி காண்போம் எனச் சூளுரைத்து முயன்று தோற்றுக் கழல்பணிய நின்றார்க்கு இடமாக விளங்குவது, நாரைக்கு இரையாகிய ஆரல் மீன்கள் ஒழுகி ஓட, நிறைந்த சேற்றோடு விளங்கும் வயல்கள் உடைய அழகிய புக–ப்பதியாகும். |
| 2799. | தடுக்கு டுத்துத் தலையைப் பறிப்பாரொடு<br>சாக்கியர்<br>இடுக்க ணுய்ப்பா ரிறைஞ்சாத வெம்மாற்<br>கிடமாவது<br>மடுப்ப டுக்குஞ் சுருதிப்பொருள் வல்லவர்<br>வானுளோர்<br>அடுத்த டுத்துப் புகுந்தீண்டு மந்தண்<br>புக–யே. | ஓலையால் இயன்ற தடுக்கைக் கட்டிக் கொண்டும் தலையைப் பறித்துக் கொண்டும் வாழும் சமணர்களும், சாக்கியர்களும் இடுக்கண்பட்டவராய் இறைஞ்சாது நிற்குமாறு செய்த எம் பெருமானுக்குரிய இடமாக விளங்குவது, வேதம் வல்ல அந்தணரும் வானுலகில் வாழும் தேவர்களும் அடுத்தடுத்து வந்து வழிபடும் புக–ப்பதியாகும். |
| 2800. | எய்த வொண்ணா இறைவன் னுறைகின்ற<br>புக–யைக்<br>கைதவ மில்லாக் கவுணியன் ஞான<br>சம்பந்தன்சீர்<br>செய்த பத்தும் மிவைசெப்ப வல்லார்<br>சிவலோகத்தில்<br>எய்தி நல்ல விமையோர்க ளேத்த<br>இருப்பார்களே. | உயிர் தம் அறிவால் எய்த ஒண்ணாத இறைவன் உறையும் புக–யை, வஞ்சனையற்ற கவுணியர்குடியில் தோன்றிய ஞானசம்பந்தன் சிறப்புடன் பாடிய பத்துப் பாடல்களாகிய இவற்றை செப்பவல்லவர் சிவலோகத்தை அடைந்து நல்ல தேவர்கள் ஏத்தப் புகழுடன் இருப்பர். |

திருச்சிற்றம்பலம்.

## இரண்டாம் திருமுறை

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# தல அட்டவணை

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிக தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | அகத்தியான்பள்ளி | 76 | வாடியவெண் |
| 2. | அம்பர்மாகாளம் | 103 | புல்குபொன் |
| 3. | அரசி- | 95 | பாடல்வண் |
| 4. | அரிசிற்கரைப்புத்தூர் | 63 | மின்னுஞ்சடை |
| 5. | அழுந்தூர் | 20 | தொழுமாறு |
| 6. | அறையணிநல்லூர் | 77 | பீடினாற் |
| 7. | அனேகதங்காவதம் | 5 | நீடன்மேவு |
| 8. | ஆக்கூர் | 42 | அக்கிருந்த |
| 9. | ஆடானை | 112 | மாதோர்கூறு |
| 10. | ஆமாத்தூர் | 44 | துன்னம்பெய் |
| 11. | ஆமாத்தூர் | 50 | குன்றவார் |
| 12. | ஆரூர் | 79 | பவனமாய்ச் |
| 13. | ஆரூர் | 101 | பருக்கையா |
| 14. | ஆலவாய் | 66 | மந்திரமா |
| 15. | ஆனைக்கா | 23 | மழையார் |
| 16. | இடைமருதூர் | 56 | பொங்குநூன் |
| 17. | இந்திரநீலப்பருப்பதம் | 27 | குலவுபாரி |
| 18. | இரும்பூளை | 36 | சீரார்கழலே |
| 19. | இரும்பை மாகாளம் | 117 | மண்டுகங்கை |
| 20. | ஐயாறு | 6 | கோடல்கோங் |
| 21. | ,, | 32 | திருத்திகழ் |
| 22. | கச்சி ஏகம்பம் | 12 | மறையானை |
| 23. | கடம்பூர் | 68 | வானமர் |
| 24. | கடவூர் மயானம் | 80 | வரியமறை |
| 25. | கடிக்குளம் | 104 | பொடிகொண் |
| 26. | கருப்பறியலூர் | 31 | சுற்றமொடு |
| 27. | கருவூரானிலை | 28 | தொண்டே |
| 28. | கழிப்பாலை | 21 | புனலாடிய |
| 29. | களர் | 51 | நீருளார் |
| 30. | காழி - பிரமபுரம் | 40 | எம்பிரானெ |
| 31. | ,, | 65 | கறையணி |
| 32. | காழி - வேணுபுரம் | 17 | நிலவும்புன |
| 33. | ,, | 81 | பூதத்தின் |
| 34. | காழி - புக- | 25 | உக-யாழ் |
| 35. | ,, | 29 | முன்னிய |
| 36. | ,, | 54 | உருவார்ந்த |
| 37. | ,, | 122 | விடையதேறி |
| 38. | காழி - பூந்தராய் | 1 | செந்நெலங் |

